# உரிமை உரை



பெண்ணொரு பாகனை எண்ணிய திறத்தான்
வள்ளுவர் வாய்மையை உள்ளிய நலத்தான்
ஏற்றனன் இல்லறம் ஆற்ற நல்லறம்
மங்கல மனைக்குத் திங்க ளெனப்பொலி
நன்கலச் சேய்பெறல் இன்பச் செல்வமே ;
பிறந்தன சிலசில மறைந்தன மறைந்தன
சிதைந்த நெஞ்சால் வதைந்த மனைவியும்
நாதனை நாளும் நோதலும் கண்டு
நஞ்செயல் ஒன்றிலைச் செஞ்சடை அண்ணல்
வேண்டுவ அறிந்து வேண்டுவ அருள்வன்
இறைவழிப் பெறுதல் கறையில தாகும்'
என்று கூறுவன் நன்று தெளிகுவள் ;
நாளுங் கூத்தன் தாளிணை ஏத்தி
ஒழுக ஒழுக விழுமிய பெண்கொழுந்
தமிழ்தெனத் தோன்றித் தமிழென வளர்ந்து
மூவாண் டுற்று நாவான் செயலான்
எங்களுக் கினிமை பொங்க வழங்கும்
திருவினைத் தந்த திருவருள் வாழி
வாழி சகுந்தலை வாழி மகட்குச்
சுந்தரர் மொழிசால் இந்தநற் பதிப்பை
ஆக்கினன் உரிமை ஆக்கினன்
ஆழிசூழ் உலகம் வாழ இனிதே.

இங்ஙனம் :

அ. சோமசுந்தரம்.

உ
சிவமயம்

# பதிப்புரை

சைவசமயாசாரியர்கள் நால்வருள் ஒருவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச் செய்த தேவாரப் பதிகங்களின் அடக்கவிலைச் சுத்தப் பதிப்பு முதன்முறை நமது சமாஜ வெளியீடாக சுக்கிலஸு ஆடிமீ சுவாதி நன்னாளில் (11-8-1929) பதிப்பிக்கப்பட்டது. அந்தப் பதிப்பு செலவாகி ஓராண்டு கழிந்தது. இப்போது சேக்கிழார் சுவாமிகள் அருளிச் செய்த சரித்திர முறையை யொட்டி இத்தேவாரம் வரிசைப்படுத்தப்பட்டு வெளிவருகின்றது. பண்முறை, தலமுறை என்ற இரண்டு முறைகளிலும் தேவாரம் இதுகாறும் வெளிவந்துள்ளது. ஆனால், சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய முறை சரித்திர முறையே என்பது வெளிப்படை. எனவே, தேவாரம் இயற்கையில் வெளிவந்த முறையைப் பின்பற்றி இப்பதிப்பு வெளியிடப்படுகின்றது. இப்பதிப்பில் பைகா என்ற பெரிய எழுத்தில் பாடல்கள் அச்சிடப்பெற்றிருப்பதோடு முக்கிய பகுதிகள் தடித்த எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளன. அருஞ்சொற் குறிப்பு, நுண்பொருள் விளக்கம், சரித்திரத் தொடர்ச்சி, பெரியபுராணச் செய்யுட்கோவை முதலிய சிறப்புக்களும் இப்பதிப்பின் உயர்வை நன்கு விளக்கும்.

இப்பதிப்புக்குரிய முழுச் செலவையும் ஏற்றுக் குறிப்புகள் முதலியவற்றை எழுதி யுதவிய முழுப்பொறுப்பையும் ஏற்றுக்கொண்டவர் சைவத் திருவாளர் - அ. சோமசுந்தரம் செட்டியார் எம். ஏ., அவர்களேயாவர். இப்பதிப்பின் ஏற்றத்தாழ்வுகட்கு அவரே உரியராவர். இப்பதிப்பில் ஏவையேனும் குறைபாடுகள் பிழைகள் உளவேல் அவற்றை அன்பர்கள் அவர்க்குத் தெரிவிப்பின் அடுத்த பதிப்பு திருத்தமாக வருதற்குத் துணைபுரியும் புண்ணியம் அவர்களைச் சாரும்.

வழக்கம்போல் கண்கவர் வனப்போடு இப்பதிப்பு வெளிவரத் துணை புரிந்த சாது அச்சுக்கூடத்தினருக்குச் சைவநன்மக்கள் நன்றி பெரிதும் உரித்து.

இப்பதிப்பைச் சைவ உலகம் ஆதரிப்பதாக; பரவை மணாளன்சீர் பாரெங்கும் பரவுவதாக.

“ திருவருளகம் ”
22-ஏ. கல்லுக்காரத்தெரு,
மயிலாப்பூர்
யுவஸு சித்திரைமீ கஉ
(14-4-1935)

இங்ஙனம் :
ம. பாலசுப்பிரமணியன்,
காரியதரிசி,
சைவசித்தாந்த மகாசமாஜம்.

உ

சிவமயம்

# முன்னுரை

சைவ சமயத்திற்குப் பிரமாண நூல்களென்று போற்றப்படும் பன்னிரு திருமுறைகளையும் பதினான்கு சித்தாந்த சாத்திரங்களையும் அடக்கவிலைச் சுத்தப் பதிப்பாக அச்சிடக் கருதி, சைவ சித்தாந்த மஹா சமாஜத்தினர் 1929-ம் ஆண்டு தொடங்கி முதன் முதலாக 7-ம் திருமுறையாகிய சுந்தரர் தேவாரத்தை அச்சிட்டுச் சுவாமிகள் திருநட்சத்திரத் தினத்தன்று (11-8-1929) வெளியிட்டனர். பின்னர் 4, 5, 6 திருமுறைகளாகிய அப்பர் தேவாரத்தையும், அதன் பின்னர் 1, 2, 3 திருமுறைகளாகிய சம்பந்தர் தேவாரத்தையும், ஏனைய திருமுறைகளையும் வெளியிட்டுச் சென்ற ஆண்டில் பன்னிரண்டாம் திருமுறையாகிய பெரியபுராணத்தையும் வெளியிட்டுப் பன்னிரு திருமுறைகளையும் வெளியிடுந் திருப்பணியைப் பூர்த்திசெய்தனர். அதன் பிறகு, 28-12-34-ல் சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கையும் வெளியிட்டனர். முதல் 9 திருமுறைப் பிரதிகள் முழுமையும் செலவாகி விட்டன. புத்தகங்களுக்குத் தேவை இருப்பதாலும், தொடர்ச்சியாக 12 திருமுறைகளை மீண்டும் அச்சிட்டுக் குறைந்த விலைக்கு வழங்குவது சைவசமய வளர்ச்சிக்குத் துணை புரியும் செயலாகும் என்று என் சிற்றறிவிற்குத் தோன்றியபடியாலும், முதலில் திருமுறைகளை அச்சிட்ட முறைப்படி 7-ம் திருமுறையாகிய சுந்தரர் தேவாரத்தை அச்சிட எண்ணினேன். அப்போது, பெரியபுராணச் சரித்திரத்தை ஒட்டிச் சுவாமிகள் பதிகங்களைப் பாடின முறையில், சுவாமிகள் சரித்திரத்தோடு முக்கியமான பெரியபுராணச் செய்யுள்களையும் சேர்த்து அச்சிட்டால் படிப்பவர்களுக்கு மிக்க பயன் உண்டாகும் என்று தோன்றியது. அதுபோல் சுந்தரர் தேவாரத்தை அச்சிடத் தொடங்கியபோது, தேவாரத்திற்குச் சாமானிய படிப்புள்ளவர்களுக்குப் பொருள் விளங்குவது கடினமாயிருப்பதால், குறிப்புரையோடு அச்சிட்டால் திருமுறைகள் படிப்பவர்களுக்குப் பெரிதும் பயன்படும் என்று என்னுடைய நண்பர்களில் சிலர் அறிவித்தார்கள். தேவாரம்போன்ற அருள் நூல்களுக்குப் பொருள் விளக்கம் செய்வது, திருவருள் கைவரப் பெறாத சிறியேனால் முடியாத காரியம் என்று உணர்ந்தும், என்னால் இயன்ற அளவு செய்யத் திருவருள் துணை கொண்டு இப்பணியை மேற்கொண்டேன். இந்த அரிய தொண்டில் எனக்கு உதவி புரிந்த எனது நண்பர் திருவாளர் - சண்முகசுந்தர

செட்டியார் அவர்கட்கும், சாது அச்சுக்கூடத்தினருக்கும் யான் என்ன கைம்மாறு செய்யவல்லேன். இப்பதிப்பில் இருக்கும்படியான சொற்பிழைகளையும் பொருட்பிழைகளையும் குறிப்பிட்டு அறிஞர்கள் எனக்குத் தெரிவிப்பார்களாயின் நன்றியுடன் ஏற்றுக் கொள்வேன். மறுபதிப்பு வெளியிட அவசியம் ஏற்படுமானால், அப்பிழைகளைத் திருத்தி அச்சிடக் கூடும்.

புத்தகம் வெளிவரும் சமயத்தில், தேவாரத்தில் காணப்படும் விஷயக் குறிப்புகளைப் பாகுபாடு செய்து அகர வரிசையாய்ப் பதிப்பித்தால் இன்னும் மிக்க பயன்படுமென்று என்னுடைய நண்பர்கள் சிலர் சொன்னமையால் சில குறிப்புகளையும் இதில் சேர்த்துள்ளேன். சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரத்தில் உள்ள பல விஷயங்களையும் சிவபெருமான் அவருக்கு எளிவந்து அருள்புரிந்த தன்மையையும் தம்முடைய தேவாரத்தில் விளக்கமாய்க் கூறி யிருக்கின்றபடியால், கடவுள் விஷயத்தில் நம்பிக்கை குறைந்த இந்தக் காலத்தில், நம்பிக்கை உண்டுபண்ண ஏதுவாயிருக்குமென்று கருதி அவைகளை அகச்சான்றுகள் என்ற தலைப்பின் கீழ் அச்சிட்டுள்ளேன். அவருடைய சரித்திரமும் தேவாரமும் மக்களெல்லோரும் அவரைப் பின் பற்றி நடந்து இவ்வுலக வாழ்வில் உள்ள துன்பங்களை நீக்கிப் பேரின்ப வாழ்வைப் பெறுதற்கு மிக்க துணைபுரிவனவாயிருக்கின்றன. பெரிய புராணமாகிய காவியத்திற்குக் கதாநாயகராக விளங்கும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரமும் அவருடைய தேவாரமும் சேர்ந்துள்ள இப்புத்தகத்தைச் சைவமக்கள் அனைவரும் மிகுதியாய் வாங்கிப் படித்துப் பொருளுணர்ந்து, அவரை ஆசாரிய மூர்த்தியாகக் கொண்டு சிவபெருமான் திருவருள் வழிநின்று வாழ்க்கை நடத்திப் பேரின்பப் பெருவாழ்வை அடைவார்களென்று நம்புகின்றேன். இப்புத்தகங்களை விரைவில் வாங்கிச் சைவர்கள் திருமுறை வெளியீட்டிற்கு ஆதரவு புரிவார்களானால், ஏனைய திருமுறைகளையும் இதே முறையில் குறிப்புக்களுடன் வெளியிடக் கூடும்.

நம்பியார் கழகம்,
இராயபுரம், சென்னை.

அ. சோமசுந்தரம்.



# தலம் பதிகம் பண் அட்டவணை

## (அகர வரிசை)



ஒவ்வொரு தலத்தின் முதலிலும் 'திரு' என்பதைக் கூட்டிக்கொள்க.

| தலம் | பதிகம் முதல் | பண் முறை எண் | பண் | பக்கம் |
|---|---|---|---|---|
| அஞ்சைக்களம் | தலைக்குத் | 4 | இந். | ௨௯௮ |
| ,, | முடிப்பது | 44 | கொ. கௌ. | ௨௮௩ |
| அதிகை வீரட்டானம் | தம்மானை | 38 | கொ. கௌ. | ௧௧ |
| ஆமாத்தூர் | காண்டனன் | 45 | கொ. கௌ. | ௨௧௮ |
| ஆரூர் | அந்தியும் | 83 | புற. | ௨௧௫ |
| ,, | இறைகளோ | 8 | இந். | ௨௭௬ |
| ,, | கரையும் | 73 | காந். | ௨௪ |
| ,, | குருகுபாய | 37 | கொல்லி. | ௨௩௩ |
| ,, | பத்திமை | 51 | ப.பஞ். | ௧௯௮ |
| ,, | பொன்னும் | 59 | தக். | ௨௮௬ |
| ,, | மீளாஅடிமை | 95 | செந். | ௨௩௬ |
| ஆரூர்ப்பரவையுண் மண்டளி | தூவாயா | 96 | பஞ். | ௨௩0 |
| ஆலங்காடு | முத்தா | 52 | ப. பஞ். | ௨0௯ |
| ஆவடுதுறை | கங்கைவார் | 70 | தக். | ௨.௨௪ |
| ,, | மறையவ | 66 | தக். | ௬௩ |
| ஆனைக்கா | மறைகளா | 75 | காந். | ௮௧ |
| இடைமருதூர் | கழுதை | 60 | தக். | ௬௫ |
| இடையாற்றுத்தொகை | முந்தை | 31 | கொல்லி. | ௩0௮ |
| ஊர்த்தொகை | காட்டூர் | 47 | ப. பஞ். | ௩௧0 |

குறிப்பு:—இந்—இந்தளம். கவு—கவுசிகம். காந்—காந்தாரம். கா. பஞ்—காந்தார பஞ்சமம். குறி—குறிஞ்சி. கொ. கௌ—கொல்லிக்கௌவாணம். சீகா— சீகாமரம். செந்—செந்துருத்தி. தக்க—தக்கராகம். தக்—தக்கேசி. ந. ரா—நட்டராகம். ந. பா—நட்டபாடை. பஞ்—பஞ்சமம். ப. பஞ்—பழம்பஞ்சுரம். பிய—பியந்தைக்காந்தாரம். புற—புறநீர்மை.

# பதிக அட்டவணை

## (பண் முறை)



# சுந்தரமூர்த்தி சுவாமிகள் செய்த யாத்திரை அட்டவணை

## திருவாரூருக்குச் செல்லும் வரை : நடுநாடு, சோழநாடு

| தலம் | பதிகம் | பண் முறை எண் | பக்கம் | செய்த அற்புதங்கள் முதலிய குறிப்புகள் |
|---|---|---|---|---|
| திருவெண்ணெய்நல்லூர் | பித்தா | 1 | ௯ | இறைவன் தடுத்தாட் கொண்டது. |
| திருநாவலூர் | * | | | |
| திருத்துறையூர் | மலையார் | 13 | ௮ | தவநெறி பெற்றது. |
| திருவதிகை | தம்மானை | 38 | ௧௧ | திருவடி சூட்டப்பெற்றது. |
| திருமாணிக்குழி | — | | | |
| திருத்தினைநகர் | நீறுதாங்கிய | 64 | ௧௭ | |
| திருத்தில்லை | இற | | | |
| திருக்கழுமலம் | சாதலும் | 58 | ௧௯ | இறைவன் காட்சி கொடுத்தது. |
| திருக்கோலக்கா | * | | | |
| திருப்புன்கூர் | * | | | |

**குறிப்பு** :—பெரியபுராணத்தில் பதிகம் பாடியதாகக் குறிப்பிடப்பட்டுள்ள அந்தப் பதிகங்கள் இப்போது கிடைக்காத இடங்களில் பதிகம் என்ற தலைப்பின்கீழ் ‘*’ குறி போடப்பட்டிருக்கிறது.

| | | | | |
|---|---|---|---|---|
| திருமயிலாடுதுறை | ... — | | | |
| திரு அம்பர் மாகாளம் | ... — | | | |
| திரு புகலூர் | ... — | | | |
| திரு ஆரூர் | ... கரையும் ... | 73 | உச | |
| ,, | ... தில்லைவாழ் ... | 39 | உக | திருத்தொண்டத் தொகை பாடியது. |

## சோழ நாடு

| | | | | |
|---|---|---|---|---|
| குண்டையூர் | ... | | | நெல் மலைபெற்றது. |
| திருக்கோளிலி | ... நீளநினைந் ... | 20 | ஙச | நெல் மலையைத் திருவாரூரில் சேர்ப்பிக்கப் [பாடியது. |
| திருநாட்டியத் | ... பூணுவதோர் | 15 | ஙஎ | |
| திருவலிவலம் | ... ஊனன் அங்கத் ... | 67 | சo | |
| திருஆரூர் | ... — | | | |
| திருப்புகலூர் | ... தம்மையே ... | 34 | சரு | செங்கல் செம்பொன்னாகச் செய்யப்பெற்றது. சி |
| திருப்பனையூர் | ... மாடமாளிகை. | 87 | சஅ | |
| திருஆரூர் | ... — | | | |
| திருநன்னிலம் | ... தண்ணியல் ... | 98 | ருo | |
| திருவீழிமிழலை | ... நம்பினார்க் ... | 88 | ருஉ | |
| திருவாஞ்சியம் | ... பொருவனார் ... | 76 | ருச | |
| திருஅரிசிற்கரைப்புத்தூர் ... — | | | | |
| திருநறையூர் சித்தீச்சரம் | ... நீரும்மலரும் ... | 93 | ருசு | |
| திருஅரிசிற்கரைப்புத்தூர் | ... மலைக்குமகள் ... | 9 | ருஅ | |
| திருஆவடுதுறை | ... மறையவன் ... | 66 | சுங | |
| திருஇடைமருது | ... கழுதை ... | 60 | சுரு | |
| திருநாகேச்சரம் | ... பிறையணி ... | 99 | சுக | |
| திருச்சிவபுரம் | ... — | | | |

| தலம் | பதிகம் | பண் முறை எண் | பக்கம் | செய்த அற்புதங்கள் முதலிய குறிப்புகள் |
|---|---|---|---|---|
| திருக்கலேயநல்லூர் | ... குரும்பை ... | 16 | எக | |
| திருக்குடமூக்கு | ... * ... | | | |
| திருவலஞ்சுழி | ... * ... | | | |
| திருநல்லூர் | ... — | | | |
| திருச்சோற்றுத்துறை | ... அழனீர் ... | 94 | எசு | |
| திருக்கண்டியூர் | ... — | | | |
| திருஐயாறு | ... — | | | |
| திருப்பூந்துருத்தி | ... — | | | |
| திருஆலம்பொழில் | ... — | | | |
| திருமழபாடி | ... பொன்னர் ... | 24 | எஅ | |
| திருஆனைக்கா | ... மறைகளா ... | 75 | அக | |
| திருப்பாச்சிலாச்சிராமம் | ... வைத்தனன் ... | 14 | அ௩ | பொன் பெற்றது. |
| திருப்பைஞ்ஞீலி | ... காருலாவிய ... | 36 | அஅ | |
| திருஈங்கோய்மலே | ... — | | | |

## கொங்கு நாடு

| | | | | |
|---|---|---|---|---|
| திருப்பாண்டிக்கொடுமுடி | ... மற்றுப் ... | 48 | கூo | |
| திருப்பேரூர் | ... — | | | |
| திருவெஞ்சமாக்கூடல் | ... எறிக்கும் ... | 42 | கூ௩ | |

## சோழ நாடு

| | | | | |
|---|---|---|---|---|
| திருக்கற்குடி | ... விடையாரும் ... | 27 | கூஎ | |
| திருஆறைமேற்றளி | ... — | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| திருஇன்னம்பர் | ... — | | | |
| திருப்புறம்பயம் | ... அங்கமோ ... | 35 | கக | திருஇன்னம்பரில் இருக்கும்போது இந்தத் திருப்பதிகம் பாடிக்கொண்டு திருப்புறம் பயம் புறப்பட்டுச் சென்றார். |

நடு நாடு

| | | | | |
|---|---|---|---|---|
| திருக்கூடலையாற்றூர் | ... வடிவுடை ... | 85 | கoக | இறைவன் திருக்கூடலை யாற்றூருக்கு வழி காட்டி மறைந்தபோது பாடியது. |
| திருமுதுகுன்றம் | ... நஞ்சியிடை ... | 43 | கoரு | |
| ,, | ... மெய்யை ... | 63 | கoசு | |

சோழ நாடு

| | | | | |
|---|---|---|---|---|
| திருத்தில்லை | ... மடித்தாடும் ... | 90 | கoக | |
| திருக்கருப்பறியலூர் | ... சிம்மாந்து ... | 30 | ககஉ | |
| திருப்பழமண்ணிப்படிக்கரை | முன்னவன் ... | 22 | ககரு | |
| திருவாழ்கொளிபுத்தூர் | ... தலைக்கலன் ... | 57 | ககஎ | |
| திருக்கானாட்டுமுள்ளூர் | ... வள்வாய ... | 40 | கஉக | |
| திருஎதிர்கொள்பாடி | ... மத்தயானை ... | 7 | கஉரு | |
| திருவேள்விக்குடி | ... மூப்பதுமில்லை... | 18 | கஉஎ | |
| திருஆரூர் | ... பொன்செய்த... | 25 | கஙo | திருமுதுகுன்றத்துப் பெருமான்மேல் பாடி அவ்வூரில் ஆற்றில் இட்ட பொன்னைத் திருவாரூர்க் குளத்தில் எடுத்தது. |
| ,, | ... பாறுதாங்கிய... | 33 | கஙந. | |

சோழ நாடு

| | | | | |
|---|---|---|---|---|
| திருநள்ளாறு | ... செம்பொன் ... | 68 | கஙரு | |
| திருக்கடவூர்மயானம் | ... மருவார் ... | 53 | கஙஎ | |

| தலம் | பதிகம் | | பண் முறை எண் | பக்கம் | செய்த அற்புதங்கள் முதலிய குறிப்புகள் |
|---|---|---|---|---|---|
| திருக்கடவூர்வீரட்டம் | ... பொடியார் | ... | 28 | கூ௦ | |
| திருவலம்புரம் | ... எனக்கினி | ... | 72 | கூஉ | |
| திருச்சாய்க்காடு | ... | ... | | | |
| திருவெண்காடு | ... படங்கொள் | ... | 6 | கூ௩ | |
| திருநனிபள்ளி | ... ஆதியன் | ... | கூஎ | கூ௪ | |
| திருசெம்பொன்பள்ளி | ... — | | | | |
| திருநின்றியூர் | ... திருவும்வண் | ... | 65 | கூ௬ | |
| ,, | ... அற்றவனார் | ... | 19 | கருக | |
| திருநீடூர் | ... ஊர்வதோர் | ... | 56 | கரு௩ | |
| திருப்புன்கூர் | ... — | | | | |
| திருக்கோலக்கா | ... புற்றில் | ... | 62 | கருஎ | |
| சீகாழி | ... — | | | | |
| திருக்குருகாவூர் | ... இத்தனை | ... | 29 | ககூக | இறைவனிடம் பொதி சோறு பெற்றது. |
| திருக்கழிப்பாலை | ... செடியேன் | ... | 23 | ககூ௩ | |
| திருத்தில்லை | ... — | | | | |

## நடு நாடு, தொண்டை நாடு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| திருத்தினைநகர் | ... — | | | | |
| திருநாவலூர் | ... கோவலனான் | ... | 17 | கஅரு | |
| திருக்கழுக்குன்றம் | ... கொன்று | ... | 81 | கஅஅ | |
| திருக்கச்சூர் | ... முதுவாய் | ... | 41 | கஎக | இறைவன் சோறு இரந்து கொடுக்கப் பெற்றது. |

| | | | | |
|---|---|---|---|---|
| காஞ்சி ... | — | | | |
| திருஏகம்பம் ... | ... | | | |
| திருக்காமக்கோட்டம் ... | — | | | |
| திருமேற்றளி | ... கொந்தா ... | 21 | கஎந | |
| திருஓணகாந்தன்தளி | ... நெய்யும் ... | 5 | கஎசு | பதிகம் பாடிப் பொன் பெற்றது. |
| திருஅநேகதங்காவதம் | ... தேனெய் ... | 10 | கஎஅ | |
| திருஏகம்பம் ... | — | | | |
| திருவன்பார்த்தான் பனங் காட்டூர் | ... விடையின் ... | 86 | கஅக | |
| திருமாற்பேறு ... | — | | | |
| திருவல்லம் ... | — | | | |
| திருக்காளத்தி | ... செண்டாடும் ... | 26 | கஅச | |
| திருப்பருப்பதம் | ... மானும் ... | 79 | கஅசு | } இவ்விரண்டு பதிகங்களும் திருக்காளத்தியில் இருந்து பாடப்பட்டவை. |
| திருக்கேதாரம் | ... வாழ்வாவது ... | 78 | கஅஅ | |
| திருஒற்றியூர் | ... பாட்டும்பாடி ... | 91 | ககூக | |
| ,, | ... பத்திமையும் ... | 51 | ககூஅ | திருவாரூர்ப் பெருமான் மேல் பாடியது. |
| ,, | ... அழுக்குமெய் ... | 54 | உ0க | சபதம் வழுவினவுடன் கண்கள் மறைந்த |
| வடதிருமுல்லைவாயில் | ... திருவும் ... | 69 | உ0ச | [போது பாடியது. |
| திருவெண்பாக்கம் | ... பிழையுளன ... | 89 | உ0எ | ஊன்றுகோல் பெற்றது. |
| திருப்பழயனூர்ஆலங்காடு | முத்தாமுத்தி ... | 52 | உ0கூ | |
| திருஊறல் ... | — | | | |
| காஞ்சி ... | | | | |
| திருக்காமக்கோட்டம் ... | | | | |
| திருஏகம்பம் | ... ஆலந்தான் ... | 61 | உகஉ | இடக்கண் பெற்றது. |
| ,, | ... அந்தியும் ... | 83 | உகரு | திருவாரூர்ப் பெருமான்மேல் பாடியது. |

| தலம் | பதிகம் | பண் முறை எண் | பக்கம் | செய்த அற்புதங்கள் முதலிய குறிப்புகள் |
|---|---|---|---|---|
| திருஆமாத்தூர் | ... காண்டனன் ... | 45 | உகஅ | |
| திருநெல்வாயில்அரத்துறை | கல்வாய் ... | 3 | உஉக | |
| | சோழ நாடு | | | |
| திருஆவடுதுறை | ... கங்கைவார் ... | 70 | உஉச | |
| திருத்துருத்தி | ... மின்னுமா ... | 74 | உஉஎ | இறைவன் கட்டளைப்படி திருத்துருத்தியில் குளத்தில் மூழ்கி நோய் நீங்கப்பெற்று திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும் சேர்த்துப் பாடியது. |
| திருஆரூர் | ... — | | | |
| திருப்பரவையுள்மண்டளி | தூவாயா ... | 96 | உ௩௦ | |
| திருமூலட்டானம் | ... குருகுபாயக் ... | 37 | உ௩௩ | |
| ,, | ... மீளாஅடிமை... | 95 | உ௩கூ | வலக்கண் வேண்டிப் பாடிக் கண் பெற்றது. |
| திருப்புன்கூர் | ... அந்தணாளன் ... | 55 | உசந | ஏயர்கோன் கலிக்காமநாயனார் உயிர் பெற்ற பின் இருவரும் திருப்புன்கூர் சென்ற போது பாடியது. |
| திருநாகை | ... பத்தூர் ... | 46 | உசஎ | |
| திருஆரூர் | ... | | | |
| | சேரமானுடன் யாத்திரை | | | |
| திருக்கீழ்வேளூர் | ... — | | | |
| திருநாகைக் காரோணம்... | — | | | |
| திருமறைக்காடு | ... யாழைப் ... | 71 | உ௫உ | |

| | | | | |
|---|---|---|---|---|
| திருஅகத்தியான்பள்ளி ... | | | | |
| திருக்கோடிக்குழகர் | ... கடிதாய் ... | 32 | உ௫௫ | |

பாண்டி நாடு

| | | | | |
|---|---|---|---|---|
| திருப்புத்தூர் | ... — | | | |
| மதுரை | ... * ... | | | |
| திருப்பூவணம் | ... திருவுடை ... | 11 | உ௫௭ | மூவேந்தருடன் தரிசித்தது. |
| மதுரை | ... — | | | |
| திருஆப்பனூர் | ... — | | | |
| திருஏடகம் | ... — | | | |
| மதுரை | ... — | | | |
| திருப்பரங்குன்றம் | ... கோத்திட்டை ... | 2 | உ௬௦ | மூவேந்தருடன் தரிசித்தது. |
| திருக்குற்றாலம் | ... — | | | |
| திருக்குறும்பலா | ... — | | | |
| திருநெல்வேலி | ... * ... | | | |
| திருஇராமேச்சரம் | ... * | | | |
| ,, | ... நத்தார் ... | 80 | உ௬௪ | திருக்கேதீச்சரத்து இறைவனை இராமேச்சரத்திலிருந்து பாடியது. |
| திருச்சுழியல் | ... ஊனாய் ... | 82 | உ௬௬ | |
| திருக்கானப்பேர் (காளையார் கோவில்) | ... தொண்டரடி ... | 84 | உ௬௯ | திருச்சுழியலில் இறைவன் காளை வடிவாய்க் கனவில் தோன்றித் திருக்கானப்பேருக்கு வரச் சொன்னபோது பாடியது. |
| திருப்புனவாயில் | ... சித்தநீ ... | 50 | உ௭௪ | |
| திருப்பாம்பணிமாநகர் | ... — | | | |
| திருப்பாதாளீச்சரம் | ... — | | | |
| திருஆரூர் | ... இறைகளோ ... | 8 | உ௭௬ | |

கரு

| தலம் | பதிகம் | பண் முறை எண் | பக்கம் | செய்த அற்புதங்கள் முதலிய குறிப்புகள் |
|---|---|---|---|---|
| **சேரருடன் மலைநாட்டுக்கு யாத்திரை** | | | | |
| திருக்கண்டியூர் | ... | — | | |
| திருஐயாறு | ...பரவும் | ... 77 | உஅ0 | காவிரிஆறு விலகி வழிவிடப் பாடியது. |
| திருஅஞ்சைக்களம் | ...முடிப்பது | ... 44 | உஅரு. | |
| ,, | ...பொன்னும் | ... 59 | ௩அசு | திருவாரூர்ப் பெருமான் மேல் பாடியது. |
| **தனி யாத்திரை** | | | | |
| திருமுருகன்பூண்டி | ...கொடுகு | ... 49 | உகக | வேடுவர்கள் சேரமான் கொடுத்த செல்வத்தைக் கொள்ளை கொண்டபோது பாடிப் பொருளை மீண்டும் பெற்றது. |
| திருஆரூர் | ... | | | |
| திருப்புக்கொளியூர் | ...எற்றான் | ... 92 | உகரு | முதலைவாயினின்றும் பிள்ளையை வரவழைக்கப்பாடியது. |
| திருஅஞ்சைக்களம் | ...தலைக்குத் | ... 4 | உகஅ | |
| **சேரமானுடன் கயிலை செல்லல்** | | | | |
| திருநொடித்தான்மலை | ...தானெனை | ... 100 | ௩0உ | |
| **தொகைப் பதிகங்கள்** | | | | |
| திருநாட்டுத்தொகை | ...வீழக் | 12 | ௩0சு | |
| திருஇடையாற்றுத்தொகை | முந்தை | 31 | ௩0அ | |
| ஊர்த்தொகை | ...காட்டூர் | 47 | ௩க0 | |

# விஷய அகராதி

குறிப்பு :—1. இந்த அகராதியில் மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ள இடங்களில் முதல் எண் - பாட்டு. இரண்டாவது எண் - பக்கம். பாட்டுகள் ஒன்றிற்குமேல் இருந்தால் பக்கங்கள் இந்த ( ) அடையாளங்களுக்குள் போடப்பட்டிருக்கும்.

## அகச்சான்றுகள்



C

கண் இழந்தமை.

*கண்மணியை மறைப்பித்தாய்* ... ௬, உ0அ
*கண்தனைக் கொண்டிட்டுக் காட்டாயே* ... எ, உ௩உ
*என்கண் கொண்டீர் நீரே பழிபட்டீர்* உ, கக, (உ௩௬, உ௩அ)

(*திருவொற்றியூரை நீங்கியபோது*) கண்ணிழந்தமை

*ஒழுக்க என்கணுக் கொருமருந்துரையாய்* ... க, உ0க
*மூன்று கண்ணுடையாய் அடியேன்கண் கொள்வதே*
*கணக்கு வழக்காகில்* ... ௪, உ0உ
*ஒருவன் கோல்பற்றிக் கறகற இழுக்கை ஒழித்து நீ*
*அருளாயின செய்யாய்* ... ௫, உ0உ
*முகத்திற் கண்ணிழந் தெங்ஙனம் வாழ்கேன்* ... ௯, உ0௩
*சங்கிலிக்கா என் கண் கொண்ட பண்ப* ... ௩, உ0௪

(*காஞ்சிபுரத்தில் ஒரு*) கண் *பெற்றமை*.

*கம்பனெம்மானைக் காணக் கண் அடியேன் பெற்ற*
*வாறே* க...கக, (உகஉ...உக௫)

(மற்றைக்)கண் *வேண்டியது*.

*மற்றைக்கண்தான் தாராதொழிந்தால்வாழ்ந்துபோதீரே* உ,உ௩௬

(*திருக்*)குருகாவூரில் சிவபெருமானால் போதிசோறு
*கொடுக்கப்பெற்றது*.

*பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவாய்* ... ௩, க௯க

(*திருக்*)கூடலையாற்றூருக்கு இறைவன் அழைத்துச்
சென்று *மறைந்தது*.

'*இவ்வழி போந்த அதிசயம் அறியேனே*' க...க0, (க0உ, க0௩)

சங்கிலியை இறைவன் மணம் *செய்வித்தமை*.

*சங்கிலியோ டெனைப்புணர்த்த தத்துவனை* ... கக, உ00

சிற்றின்பமே பேரின்பமாக *அனுபவித்தமை*.

*சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலி மென்தோள் தட*
*முலை ஆர்ந்தனன் ஆர்ந்தனன் ஆமாத்தூர் ஐயன்*
*அருளதே*. ... ௪, உகக

தவநெறி *வேண்டிப் பெற்றது*. க...கக, (அ, ௯, க0)

திருவடி தீக்கை செய்யப்பெற்றது.

அடிக்கொண்டென் முடிமேல் வைத்திடுமென்னும்
ஆசையால் வாழ்கின்ற அறிவிலா நாயேன் ... க, கக

தூதனாக இறைவன் வந்தது.

அடியேற்கு எளிவந்த தூதனை ... அ, கஙஎ
தூதனை என்றனைஆள் தோழனை ... கூ, உஎங

(இறைவனுக்குத்) தோழன் ஆனது.

தோழமை அருளித் தொண்டனேன் செய்த துரி
சுகள் பொறுக்கும் ... அ, கஙஎ
என்னுடைய தோழனுமாய் யான் செய்யும் துரிசு
களுக்கு உடனாகி ... க0, உ00
என்றனைஆள் தோழனை ... கூ, உஎங

(குண்டையூரில்) நெல் பெற்றது. நெல்லைத் திருவா
ரூரில் சேர்ப்பிக்க ஆட்கள் வேண்டிப்பெற்றது க...க0, (ஙச, ஙரு)

நோயால் வருந்தினமை.

கண்ணிலேன் உடம்பில் அடுநோயால் கருத்தழிந்து
உனக்கே பொறையானேன் ... உ, உஉச
மதியிலேன் உடம்பில் அடுநோயால் மயங்கினேன் ... ச, உஉரு

(இறைவன்) நோயைத் தீர்த்தமை.

என்னுடம்பு அடும்பிணி இடர்கெடுத்தானை ... க, உஉஎ
தொடர்ந்தடும் கடும்பிணி தொடர்வறுத்தானை ... ங, உஉஎ

பரவையாரை இறைவன் மணம் செய்வித்தமை.

மாழையொண்கண் பரவையைத் தந்து ஆண்டானை... க0, உ00

(திருக்கச்சூரில்) பிச்சை யெடுத்துச் சோறு அளிக்
கப்பெற்றது.

கதுவாய் தலையிற் பலிநீகொள்ள ... க, கஎக
ஒறுவாய் தலையிற் பலிநீகொள்ள ... சு, கஎஉ

(திருமுதுகுன்றில்) பொன் பெற்றது.

........எனக்குச் செம்பொனைத் தந்தருளித் திரு
முதுகுன்றமர்ந்தீர் ... உ, கஙO

(திருமுதுகுன்றில் இட்ட) பொன்னைத் திருவாரூர்க்
குளத்தில் பெறப்பாடியது. க...கூ, (கஙO...கஙஉ)

பொன் ஆடை கொடுக்கப்பெற்றது.

*தொடுவிப்பாய் துகிலொடு பொன் ... ௧, ௧௯௨*
*பொன்னைத் தந்து என்னைப் போகம் புணர்த்த ... உ, ௧௯௯*
*பொன்னைத் தந்தென்னைப் போகவிடா மின்னவன்... அ, உ௧௧*

மகிழின்கீழ் சபதம் செய்யச் சொன்னது.

*......போய் மகிழ்க்கீழ் இருவென்று சொன்னஎனைக்*
*காணுமே சூளறவு மகிழ்க்கீழேஎன்னவல்லபெருமானே ௧,உ0அ*

மனைவாழ்க்கையை முடிவில் வெறுத்தமை.

*வெறுத்தேன் மனைவாழ்க்கையை விட்டொழிந்தேன் அ, ௩0௪*

மூவேந்தர் முன் திருப்பரங்குன்றில் பதிகம் பாடியது.

*முடியால் உலகாண்ட மூவேந்தர் முன்னே ... ௧௧, உ௯௩*

சிவபெருமான் யானையை அனுப்பியது. ௧...௧, (௩0உ...௩0௪)

வன்தொண்டன் என்று பேர் கொடுக்கப்பெற்றது.

*சபைமுன் வன்மைகள் பேசிட வன்தொண்டன்*
*என்பதோர் வாழ்வு தந்தார் ... உ, ௧௯௯*

---

அகப்பொருள் துறை.

*என்னதெழிலும் நிறையுங் கவர்வான் ... ௪, ௧௧உ*
*திருவாரூர்ப்பதிகம். (37.) ௧...௧0, (உ௩௩, உ௩௪)*

## அடியார்களைப்பற்றிய குறிப்புகள்

## 63 நாயன்மார்கள்

*அறுபத்துமூவரும்*

*திருத்தொண்டத்தொகை. ௧...௧௧, (உ௧...௩௩)*

ஏயர்கோன் உற்ற இரும் பிணிதவிர்த்து ... ௩, உ௪௩

கண்ணப்பன்

*இடந்த* **கண்ணப்பன்** ... ௯, ௫௩
*கணைகொள்* **கண்ணப்பன்** ... உ, ௧௪௧

## *மற்ற அடியார்கள்*

எரி ஓம்பல்.

கலிகடி அந்தணர் ஓமப் புகையால் ... ச, எந
திருமேவு செல்வத்தார் தீமூன்றும் வளர்த்த திருத்
தக்க அந்தணர்கள் ... உ, கஉக

---

## சிவபெருமானுடைய குணங்கள்

அத்தன் அன்னை. க, (கா); ந, (கா); உ, (கக)

தாயுந்தந்தைபல்லுயிர்க்குந்தாமேஆயதலைவனர் — ந, கநஅ

அரியவன் எளியவன்.

சான்று காட்டுதற்(கு) அரியவன் எளியவன்தன்னைத்
தன்னிலா மனத்தார்க்கு ... கO, சச
தொழுவார்க்கெளியாய் துயர்தீர நின்றாய் ... கா, கூரு
போந்தவர்க்குச் சேயார் அடியவர்க்கணியவர் ... கO, கருந
தேடி மாலயன் காண்பரியானைச் சித்தமும் தெளி
வார்க்கு எளியானை ... கா, கருரு
நல்லவர்க்கணியானவன் ... கO, கருகா
உகந்துள்கி நண்ணாதார்க்கு அரியானை அடியேற்கு
எளியானை ... எ, உஅஅ

அருளுடையவர்.

கமையார் கருணையினாய் ... உ, கஅச

அருள் செய்யச் சித்தமாயிருப்பவர்.

அடியார்க்கருள் செய்ய வருந்தி நம்பி ... அ, கOஅ

அருள் புரிபவர்.

நானாறு குறையறிந்தருள் புரிவானை ... உ, சக
பந்தித்த வல்வினைப் பற்றறப்பிறவிப்படுகடற் பரப்புத்
தவிர்ப்பானை ... எ, சஉ
நம்பினார்க்கருள் செய்யும் அந்தணர் ... க, ருஉ
அடியாரை ஊழ்வினை நலியவொட்டாரே ... க, ருச
மருந்தனார் அடியாரை வல்வினை நலியவொட்டாரே. கூ, ருரு
கலந்தார்க்கு அருள் செய்திடுங் கற்பகமே ... ரு, கூரு
எல்லார்க்கும் இல்லை என்னாது அருள்செய்வார் ... ச, கநஅ

யம தண்டனையை விலக்குபவர்.

தருமனார் தமர் செக்கிலிடும்போது தடுத்தாட் கொள்வான் ௪...௫, ௮, ௯, ௧௦, (௧௦௯...௧௧௧)

அறிவிப்பவன். (இறைவன் அறிவித்தால் அன்றி ஆன்மா அறியாது.)

மனத்துளே மதியாய் இருப்பானை ... ௮, ௧௫௬
காணாதொழிந்தேன் காட்டுதியேல் இன்னம் காண்பன் நான் ... ௮, ௨௯௭

ஆண்டவன்—ஆன்மா இறைவனுக்கு என்றும் அடிமை.

பண்டேநின் அடியேன் ... ௪, ௭௯
ஒருமையே அல்லேன் எழுமையும் அடியேன் ... ௧௧, ௮௭
மீளா அடிமை ... ௧, ௨௩௬
நம்மை ஆள்கின்ற தன்மையை ஓரார் ... ௮, ௨௮௮

ஆயிரம் பேர் (பல திருநாமங்கள்) உடையவர்.

பேருமோர் ஆயிரம் பேருடையார் ... ௩, ௧௨௮
பேராயிரவர் மயானத்துப் பெரிய பெருமான் ... ௭, ௧௩௯
பேரோர் ஆயிரமும் உடையானை ... ௧௧, ௧௫௬
பேருமோர் ஆயிரம் என்பரால் ... ௭, ௨௮௫

இசையாயிருப்பவர்.

பாட்டகத் திசையாகி நின்றானை ... ௩, ௧௫௮
ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் ... ௧௦, ௨௦௦
ஏழிசை யாழ்நரம்பின் ஓசையை ... ௬, ௨௧௬
எண்தோளினன்...ஏழிசையினன் ... ௯, ௨௫௪

இனியவர்.

விரும்பி என் மனத்திடை மெய்குளிர்ப்பெய்தி ... ௬, ௨௧
தேனங்கைத் தமுதாகி யுள்ளூறும் தேசனைத் தினைத் தற்கினியானை ... ௧, ௪௦
அமுதம் பொதிந்தூறும் ஆத்தானை ... ௪, ௪௧
ஊறு நம்பி அமுதா ... ௪, ௧௦௭
மனத்தினால் நினைந்தபோது அவர் நமக்கினிய வாறே ௧...௧௦, (௧௧௨...௧௧௪)
தித்திக்கும் தேனை ... ௩, ௧௩௫
எனக்கினியவன் தமர்க்கினியவன் எழுமையும் மனக்கினியவன் ... ௧, ௧௪௨

அல்லலுள்ளன தீர்த்திடுவானை அடைந்தவர்க் கமுதா
யிடுவானை ... கO, கரு௬
பேசினுற் பெரிதும் இனியானை ... கக, கரு௬

உறவினர் சிவபெருமானையன்றி வேறு இலர்.

யாரெனக்குறவு அமரர்களேறே க...க. (உஉச, உஉரு)
உறவிலேன் உனையன்றி மற்றடியேன் ... ௬, உஉரு

உற்றவர்.

உற்றாயென் றுன்னையே உள்குகின்றேன் உணர்ந்து
உள்ளத்தால் ... க, உகரு

(இறையவனை மறையவனை) எண்குணத்தினனை. ... ௩, கஉக

ஓங்காரத்தின் வடிவாய் இருப்பவர்.

ஊன்அங்கத் துயிர்ப்பாய் உலகெலாம் ஓங்காரத் துரு
வாகி நின்றானை ... க, சO
ஓவணமேல் எருதொன்றேறும் ... கO, கஎஅ

தண்டித்தல் அருளின் செய்கை.

அல்லலில் அருளே புரிவானை ... ௩, கருரு
ஒறுத்தாய் நின் அருளில் ... ௩, க௬ச

(பலவிதத்) தன்மை.

முற்றும் பின்னையாய் முன்னமே முளைத்தானை ... க, ச௩
தண்ணியல் வெம்மையினான் ... க, ருO
பந்தம் வீடிவை பண்ணினீர் ... ச, ரு௩
ஏதிலார் தமக்கு ஏதிலன் ... உ, கருச
வீடிலாத வியன் புகழானை ... எ, கருரு
எவ்வுயிர்க்கும் வைப்பினை ... எ, உகஎ
நஞ்சுண்டு தேவர்க்கு அமுதங் கொடுத்த நலமொன்
றறியோம் ... உச, ௬க
நானுடை மாடெனவே நன்மைதரும் பரனை ... ௩, உஎO
இன்னதன்மையன் என்றறிவொண்ணு எம்மானை ... க, உஅ௬
விரவினால் விடுதற்கரியானை ... உ, உஅ௬
குழைக்கும் பயிர்க்கோர் புயலே ஒத்தியால் ... ச, ௩OO

திருத்துதல் (ஆன்மாக்களைப் பல முறையும்).

திருத்தித் திருத்தி வந்தென் சிந்தையிடங்கொள்
கயிலாயா ... அ, ௩கஉ

துணையாவார் சிவபெருமானே.

*சுற்றிய சுற்றமும் துணையென்று கருதேன் ... உ, உ0*
*எனக்கார் துணை நீ அலதே க...க0. (கசு0, கசுக)*

(வழித்)துணை.

*வான நாடனே வழித்துணை மருந்தே ... கூ, உஉகூ*

துன்பம் போக்குபவர்.

*தொழுவாரவர் துயராயின தீர்த்தல் உனதொழிலே... கூ, எ*
*தொழுவார் தங்கள் துயர்தீர்ப்பாய் ... ௬, உக0*

பற்றறுப்பவன்.

*விட்டவேட்கை வெந்நோய் களைவானை ... உ, உஅகூ*

பிழை பொறுப்பவன்.

*தொண்டனேன் செய்த துரிசுகள் பொறுக்கும் நாதனை ... அ, க௬எ*
*குற்றமே செய்யினும் குணமெனக் கருதும் ... கூ, உ0௯*
*குற்றம் செய்யினும் குணமெனக் கருதும் கொள்கை கண்டு ... சு, உசுசு*
*பின்னை என் பிழையைப் பொறுப்பானைப் பிழை யெலாம் தவிரப் பணிப்பானை ... க, உஅகூ*

பிறப்பு இறப்பு மூப்பு இல்லாதவர்.

*மூப்பதுமில்லை பிறப்பதுமில்லை இறப்பதில்லை ... க, கஉஎ*
*பிறவாய் இறவாய் பேணாய் மூவாய் ... கூ, கஎஉ*

பிறவாதவர்.

*பெண்ணோடாணலியாய்ப் பிறவா உருவானவனே ... கூ, கசு0*

பிறவியை அறுப்பவர்.

*பிறவி வேர் அறுக்கும் கரும்பினை ... கூ, உஉ*
*பந்தித்த வல்வினைப் பற்றறப் பிறவிப் படுகடற் பரப்புத் தவிர்ப்பானை ... எ, சுஉ*

பொன்னையும் முத்தியையும் கொடுப்பவர்.

*பொன்னும் மெய்ப்பொருளுந் தருவானைப்போகமும் திருவும் புணர்ப்பானை ... க, உஅகூ*

மெய்யர்க்கு மெய்யன் பொய்யர்க்குப் பொய்யன்.

*மெய்யனை மெய்யில் நின்றுணர்வானை மெய்யிலாதவர் தங்களுக்கெல்லாம் பொய்யனை ... கக, கஉ0*

## நிந்தாஸ்துதி.



## நிலையாமை.



## (திரு) நீறு.



## பழமொழி.

பற்று ஒழிக்கவேண்டும்.



பற்று துன்பங்களுக்குக் காரணம்.



---

## பாசம், வினை

---

பிறவாமை.



(சிவபெருமான் திருநாமஞ்சொல்ல பூர்வ)புண்ணியம் வேண்டும்.



(ஐம்)புலன்கள்.

மறவாமை.

*எத்தான் மறவாதே நினைக்கின்றேன் ... ௧, ௬*
*மன்னே மறவாதே நினைக்கின்றேன் ... ௩, ௬*
*மறவாத சிந்தையால் வாழ்வேன் ... ௨, ௧௧*
*பிறவேனாகிலும் மறவேன் ... ௧, ௩௭*
*வாழ்கொளிபுத்தூர் மாணிக்கத்தை மறந்து என் நினைக்கேனே ௧...௧௧, (௧௧௭...௧௨௦)*
*ஆரூரானை மறக்கலுமாமே ௧...௧௧, (௨௮௬...௨௯௩)*
*வைத்த சிந்தையுண்டே...... ... ௪, ௨௮௭*
*செறிவுண்டேல்...... ... ௫, ௨௮௭*
*எற்றான் மறக்கேன் எழுமைக்கும் எம்பெருமானையே ௧, ௨௩௫*
*மறவா தன்னைப் பாடப் பணியாயே ... ௧, ௩௧௦*

யோகப் பயிற்சி.

*நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலேயொர் நால்விரல் ௯, ௨௨௦*

---

## வழிபாட்டு முறை

அடியார்க்கு அடிமை செய்தல்.

*திருத்தொண்டத் தொகை ௧...௧௧, (௨௯...௩௩)*
*அடியார் அடியார்கட்கெல்லாம் தொண்டே பூண்டொழிந்தேன் தொடராமை துரிசறுத்தேன் ... ௪, ௭௯*
*இறைவனென்றடி சேர்வார் எம்மையும் ஆளுடையாரே ௧, ௮௧*
*(இது போன்றவை) ௨...௯, (௮௧, ௮௨, ௮௩)*
*அடியார்க்கு அடியேனாவேனே ௧...௯, ௨௦௯...௨௧௧)*

*அடியார்க்கு ஆட்செய்தல் பிறப்பறுக்கும்.*

*ஆமாத்தூர் மேயான் அடியார் கட்காள் பெற்றனன் பெயர்த்தும் பெயர்த்தும் பிறவாமைக்கே ... ௧௦, ௨௨௦*

அடியார் கூட்டுறவு வேண்டும்.

*சார்ந்தவர் தம்மடிச் சாரேன் ... ௭, ௨௫*

அடியார் வேடம்.

*துணிப்படும் உடையும்...மணிப்படு கண்டனை வாயினாற் கூறி மனத்தினால் தொண்டனேன் நினைவேன்... ௧௦, ௮௯*

*அன்பு.*

*அன்பரல்லால் அணிகொள் கொன்றை அடிகள் அடி சேரார் ... ௮, ௧௨௬*

கற்கவேண்டுவன சிவபெருமான் புகழே.

*நின்புகழ் அடிமை கல்லாதே பல கற்றேன்* ... ௪, ௩௭

காலையில் கடவுள் வழிபாடு.

*காலை எழுந்து தொழுவார் தங்கள் கவலைகளைவாய் கறைக்கண்டா.* ... ௫, ௧௭௨

(திருக்)கோயில் வழிபாடு.

*சாலக்கோயில் உளநின்கோயில் அவையென் தலை மேற் கொண்டாடி, மாலை தீர்ந்தேன் வினையும் துரந்தேன்* ... ௩, ௧௭௧

சந்தேகம் கூடாது.

*சங்கையவர் புணர்தற் கரியான்* ... ௧, ௧௮௦
*சங்கைப்பட நினையாதெழு நெஞ்சே தொழுதேத்த* ௫, ௨௫௩

தாழ்வு வேண்டும்.

*தாழ்வெனும் தன்மைவிட்டுத் தனத்தையே மனத் தில் வைத்து வாழ்வதே கருதி* ... ௭, ௨௭௮

நா இறைவனைப் புகழ்தல்

*நான்மறக்கினும் சொல்லும்நா நமச்சிவாயவே க...௧, (௧௧...௧௨)*
*நாத்தானும் உனைப்பாடலன்றி நவிலாது* ... ௬, ௨௧௬

நினைக்கவேண்டியது சிவபெருமான் ஒருவரே.

*நின்னை அல்லால் இனி யாரை நினைக்கேனே க...௧, (௭௮...௮0)*

*சார, உணர, பேச வேண்டியது....சிவபெருமான் ஒருவரே.*

*வன்பார்த்தான் பனங்காட்டூர் தேவாரம் க...௧, (௧௮௧...௧௮௩)*

(வேறு) பற்று கூடாது.

*மற்றுப் பற்றெனக்கின்றி நின்திருப்பாதமே மனம் பாவித்தேன்* ... க, ௧0
*நின்னையல்லால்...மற்றேயொரு பற்றிலன்* ... ௩, ௨௨௧

பொய்யாய்ப் புகழ்தல்.

*பொய்யே உன்னைப் புகழ்வார் புகழ்ந்தால் அதுவும் பொருளாக் கொள்வானே* ... ௭, ௧௭௨

## மனம் வாக்குக் காயங்களால் வழிபடவேண்டும்

*திருவாவடுதுறைப் பதிகம் க...ரு, (சா௩...கச)*
*வைத்தனன் தனக்கே தலையும் என்நாவும் நெஞ்சமும் க, அச*
*எம்பெருமானென்று எப்போதும்......அடிகளை அடி தொழப்பன்னாள் வாயினாற்கூறி மனத்தினால் நினைவான். ... கஉ, அஎ*
*பரவி உள்கி வன்பாசத்தை அறுத்து ... ச, கரு0*
*நித்தமாகம் நினைந்து உள்ளமேத்தித் தொழும் ...கக, உ௩ரு*

---

## வழிபாட்டின் பயன்

*ஒவ்வொரு பதிகத்தின் இறுதிப் பாட்டில் பதிகத்தை ஓதும் பயன் கூறப்பட்டிருக்கிறது.*

### துதித்தல்.

*இலையால் அன்பால் ஏத்துமவர்க்கு நிலையா வாழ்வை நீத்தார் ... கூ, எஎ*
*அன்பிலரேனும் எம்பெருமான் என்றெப்போதும் அழைத்தவர்க் கருள்செய் பாச்சிலாச்சிராமத்தடிகள் கூ, அகூ*
*திறம்பாமைத் திருநாமம் கற்றாரவர் கதியுட் செல்வர் ரு, உகஎ*

### தொண்டு செய்தல்

*காத்தாய் தொண்டுசெய்வார் வினைகள் அவைபோக.. சா, ககச*
*தொண்டே செயவல்லாரவர் நல்லார் துயரிலரே ... உ, உகஎ*

### தொழுதல்.

*தொழுமலரெடுத்தகை அடியவர் தம்மைத் துன்பமும் இடும்பையும் சூழகிலாவே ... க0, உ௩*
*தொழுதேன் என் வினைபோக ... கூ, ௩கூ*
*நின்ற பாவ வினைகள் தாம்பல நீங்கவே சென்று சென்று தொழுமின் ... க, ககூஅ*
*நீளநின்று தொழுமின் நித்தலும் நீதியால் ஆளும் நம்ம வினைகள் அல்கி அழிந்திட ... ௩, ககூகூ*
*வழிபாடு செய்தெழுவார் அடிதொழுவார் அவ்வத் திசைக்கரசாகுவர் அலராள் பிரியாளே ... ௩, உசாஎ*
*அடிதொழுவார் பழுதுள்ளம் நிலையார் திகழ்புகழால் நெடுவானத் துயர்வாரே ... ச, உகூஎ*

நறுமலர்ப் பூவும் நீரும் நாடொறும் வணங்குவார்க்கு அறிவினைக் கொடுக்கும் ஆரூர் அப்பனே அஞ்சினேனே ... ௩, ௨௭௭
தொழுவுந் தொல்வினை தீர்க்கின்ற சோதி ... ௯, ௩0௭

## நினைத்தல்.

விளங்கு தாமரைப்பாதம் நினைப்பவர் வினை நலிவிலரே ... ௮, ௫௬
மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப்பாதமே மனம் பாவித்தேன், பெற்றலும் பிறந்தேன் இனிப் பிறவாத தன்மை வந்தெய்தினேன் ... ௧, ௯0
விரும்பி நின் மலர்ப்பாதமே நினைந்தேன் வினைகளும் விண்டன ... ௭, ௯௨
எங்கேனும் இருந்துன் அடியேன் உனைநினைந்தால், அங்கேவந் தென்னொடும் உடனாகி நின்றருளி, இங்கே என்வினையை அறுத்திட்(டு) எனையாளும்... ௨, ௧௯௩
நினைவார்தமை நலியார் நமன்தமரே ... ௧, ௨௬௬
நிலந் தாங்கிய மலராற் கொழும் புகையால் நினைந் தேத்தும் தலந்தாங்கிய புகழால் மிகுதவமாம் சதுராமே ... ௬, ௨௬௭
ஏற்றே நினை என்றொடு சூளறும் வைகலும் மற்றோறும் வேண்டா வல்வினை மாய்ந்தற ... ௯, ௨௭௫
எங்கேனும் போகினும் எம்பெருமானை நினைந்தக்காற் கொங்கே புகினும் கூறைகொண்டு ஆறலைப்பாரிலை. ௩, ௨௯௫

## பாடுதல்.

பாட நும்பாவம் பற்றறுமே ... ௧0, ௩௯
பொய்ம்மையாளரைப் பாடாதே எந்தைபுகலூர் பாடுமின் புலவீர்காள், இம்மையே தரும் சோறும் கூறையும் ஏத்தலாம்இடர் கெடலுமாம், அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவில்லையே
௧...௧௧, (௪௫...௪௭)
பரவி நாடொறும் பாடுவார் வினை பற்றறுக்கும் ... ௬, ௮௯
பறையாத வல்வினைகள் பறைந்தொழியப் பண்ணோடும் பாடி ஆடி ... ௮, ௧௧௪

## புகழ்தல்.

பொய்யா நாவதனாற் புகழ்வார்கள் மனத்தினுள்ளே மெய்யே நின்றெரியும் விளக்கேயொத்த தேவர்பிரான் ௯, ௧௧௫

(உலக) வாழ்வு நிலையற்றது, துன்பம் நிறைந்தது.

உடல் தளர்ந்து அருமாநிதி இயற்றி என்றும் வாழ லாம் எமக்கெனப் பேசுமிதுவும் பொய்யெனவே நினை ... ரு, கசு

வேந்தராய் உலகாண்டு......இவ்வுடல் இது தன்னைத் தேய்ந்திறந்து வெந்துயருழந்திடும் இப்பொக்க வாழ்வினை விட்டிடு ... சு, கக

பரிந்த சுற்றமும் மற்றுவன் துணையும் பலரும் கண் டழுதெழ உயிருடலைப் பிரிந்துபோமிது நிச்சயம் அ, கஎ

புல்நுனைப் பனிவெங்கதிர் கண்டாற்போலும் வாழ்க்கை ௩, சுசு

ஊன்மிசை உதிரக்குப்பை ஒருபொரு ளிலாத மாயம் உ, உஎஎ

பொய்த் தன்மைத்தாய மாயப் போர்வையை மெய் யென் றெண்ணும் வித்தகத்தாய வாழ்வு வேண்டி நான் விரும்பகில்லேன் ... க, உஎஅ

விலக்க வேண்டியவை.

ஆசை

அருத்தம் பெரிதும் உகப்பன் ... சு, உரு

ஆசைபல அறுக்கில்லேன் ... க0, உரு

கூசம் நீக்கிக் குற்றம் நீக்கிச் செற்றம் மனம் நீக்கி ......வஞ்சமனை வாழ்க்கை ஆசை நீக்கி ... எ, கஉசு

கொலை

ஆருயிரைக் கொல்ல நினைப்பனவும் குற்றமும் அற் றொழிய ... ச, உகசு

பொய்ம்மை

பொய்யா நாவதனாற் புகழ்வார்கள் ... க, கசுரு

---

சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரத்திலிருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டிய உண்மைகளாவன :—

(1) முன்செய் நல்வினைப் பயனால் கடவுளிடத்து அன்பு பூண்டு, திருவருள் வழிநின்று அத்திருவருள் கூட்டுவித்த் காரியத்தை முடிக்கக் கடவுளை வேண்டினால், கடவுள் அக்காரியத்தை முடித்து வைப்பார். ஆனால், கடவுளிடத்து அன்பில்லாமல் உலகப் பற்றே காரணமாக நாம் ஒரு காரியத்தை முடிக்கும்படி கடவுளை வேண்டினால் நமது வேண்டுகோளுக்கு அவர் இணங்க மாட்டார். சில சமயங்களில் காரியத்தை முற்றுவித்தாலும், துன்பத்தை விளைவிப்பார்.

(2) எவராயினும் நெறிதவறி நடந்தால், கடவுள் நடுநிலைமையிலிருந்து அவரைத் தண்டிப்பார். சபதம் தவறினமையால் சுந்தரர் கண் இழந்தமை காண்க.

(3) அப்படித் தண்டித்தபோதிலும், தம்முடைய குற்றத்தை உணர்ந்து வருந்தி, மெய்யன்போடு கடவுளிடம் முறையிட்டுத் தம்முடைய துயரைப் போக்கவேண்டுமென்று வேண்டுவோர்க்குக் கடவுள் அருள் புரிவார் என்பது நிச்சயம்.

(4) சிவபெருமான் தம்பால் பேரன்பு பூண்டு, சதாகாலமும் அவர் திருநாமங்களையே நாவினால் சொல்லிக்கொண்டிருந்த சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கும் கண்ணிழந்த துன்பத்தை உடனே நீக்கவில்லை. முதலில் ஊன்றுகோல் கொடுத்து, பிறகு ஒரு கண் கொடுத்து, அதன் பிறகு மற்றைக் கண்ணும் கொடுத்தார். ஆகையால், கடவுள் நம்முடைய துன்பங்களை உடனே போக்கவில்லை என்று நாம் குறைகூறி, கடவுள் நம்பிக்கையை இழத்தலாகாது.

(5) நான் எனது என்னும் பற்றுக்களால் துன்பங்கள் உண்டாகின்றன என்றும், அத்துன்பங்களெல்லாம், நாம் உலகப்பற்றுகளை நீக்கிக் கடவுளிடம் அன்பு செலுத்திப் பேரின்பம் அடைவதற்காகக் கடவுளால் கொடுக்கப்பட்டன என்றும் உணரவேண்டும்.

(6) இல்லறத்தில் ஒழுகுபவர்கள் உலக போகங்களாகிய சிற்றின்பங்களைத் திருவருள் வழிநின்று அனுபவித்தால், அச்சிற்றின்பங்களே பேரின்பமாக மாறுகின்றன என்றும் உணரவேண்டும். சுந்தரமூர்த்தி சுவாமிகள் பரவையாரோடும் சங்கிலியாரோடும் அனுபவித்த இன்பம் பேரின்பம் என்பதை அவர் சரித்திரத்தினால் அறிக.

---

## குறிப்பு

1. பின்வரும் சரித்திரத்தில், பெ=பெரிய புராணம், த=தடுத்தாட் கொண்ட புராணம், ஏ=ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம், கழ=கழறிற்றறிவார் நாயனார் புராணம், வெ=வெள்ளானைச் சருக்கம்.

2. பின்வரும் தேவாரக் குறிப்புரையில் மேற்கோள்களுக்குப் பிறகு (  ) குறிக்குள் இருப்பது மேற்கோள் பாட்டின் முதல்.

உ

சிவமயம்

# சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்

## (சரித முறை)

### ஆலாலசுந்தரர் அவதாரம்

திருக்கைலாயத்தில் சிவபெருமானுக்கு மலர் மாலையும் திருநீறும்கொண்டு செல்லும் நெருங்கிய தொண்டராகிய ஆலாலசுந்தரர் என்னும் பெரியார், ஒரு நாள் மலர் கொய்வதற்குத் திருநந்தன வனத்தை அடைந்தார். அவ்வாறே உமாதேவியாருக்குத் தொண்டு புரிவோராகிய அநிந்திதை கமலினி என்னும் இருபெண்களும் அந் நந்தன வனத்தினை அடைந்து அம்மையார் சூடுவதற்குரிய மலர்களைக் கொய்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது உலகம் வாழ்வடையவும், "தீதிலாத் திருத்தொண்டத் தொகை" தந்து சைவம் தழைக்கச் செய்யவும் சிவபிரான் திருவருளால் ஆலால சுந்தரர் அம்மாதர்கள் மேல் மனம் செலுத்தினர். அவர்களும் சுந்தரர்மேல் விருப்பம் வைத்தனர். இங்ஙனம் காதல் கொண்ட நம்பியும் நங்கைமார்களும் தங்கள் மனதைத் திருத்திக்கொண்டு, கொய்த மலர்களுடன் முறையே இறைவன் சந்நிதியையும் தேவியார் சந்நிதியையும் அடைந்தனர். சிவபெருமான் ஆலால சுந்தரரை நோக்கி "நீ மாதர்மேல் மனம் வைத்தனை, தென்புவிமீது தோன்றி அம்மெல்லியலாருடன் காதலின்பம் கலந்து அணைவாய்" என்று கட்டளை இட்டனர். ஆலால சுந்தரர் மனம் கலங்கி இறைவனை வணங்கி "எம்பெருமானே தேவரீரது தாமரை மலர் போன்ற திருவடிகளை நீங்கும் சிறுமையேன் மானுடப் பிறவியை எடுத்து மயங்குங் காலத்து அடியேனைத் தேவரீரே தடுத்து ஆட்கொள்ளவேண்டும்" என்று பிரார்த்திக்கச் சிவபிரானும் அதற்கிசைந்தார்.

அதன் பின்னர் ஆலால சுந்தரர் தமிழ்நாட்டிலே நடுநாடு என்னும் திருமுனைப்பாடி நாட்டில், வாய்மை குன்ற மறையவர்கள் வாழும் திருநாவலூரில் "மாதொரு பாகனுர்க்கு வழி வழி அடிமை செய்யும்" ஆதிசைவர் மரபில், சடையனுர் என்பவர்க்குக் கற்பின்மேம் பட்ட மனைவியார் இசைஞானியார்பால் "தீது அகன்று உலகம் உய்ய"த் திருஅவதாரம் செய்தார். அக்குழந்தை நம்பி ஆரூரர் என்னும் திருநாமம் இடப்பெற்றுச் செல்வமாக வளர்ந்து தெருவில் விளையாடிக் கொண்டிருக்கும்போது, அந்நாட்டிற்கு அரசராகிய நரசிங்க முனையரையர், அக்குழந்தையின் ரூபலாவணியத்தைக்கண்டு காதல் கூர்ந்து நம்பி ஆரூரரைத் தாமே வளர்க்க விரும்பி, சடையனுர் அனுமதி பெற்று, நம்பியாரூரரைத் தம்முடைய நிலைமைக்கேற்ப, தம்முடைய குமாரனைப்போல் வளர்த்து வந்தார்.

## தம்பிரான் தடுத்தாட்கொள்ளல்

நம்பி ஆரூரர் அரசகுமாரராய் வளர்ந்துவரும்போது, தம்முடைய வேதியர் மரபிற்குரிய ஒழுக்கத்தை உடையவராகி, உபநயனம் செய்யப்பெற்று, கலைகள் பலவற்றையும் பயின்று மணப்பருவம் அடைந்தார். சடையனுர் தமது அருமைப் புதல்வருக்குத் திருமணம்செய்ய விரும்பிப், புத்தூர் சடங்கவி சிவாசாரியாரிடம் பெண் பேசி முடித்து, திருமணத்திற்கு நாளைக்குறித்து, மணவோலை அனுப்பினர். நம்பிஆரூரர் மணக்கோலம் பூண்டு மன்னவர் திருவும் தங்கள் வைதிகத் திருவும் பொங்க, நாதன் தன்னடி மனத்துட் கொண்டு, திருநீறுசாத்தி, குதிரைமேல் ஏறிச் சென்று, மணம்வந்தபுத்தூரை அடைந்து மணப்பந்தரில் வீற்றிருந்தனர்.

அப்போது, சிவபெருமான் சுந்தரர்க்குக் கயிலையில் அருள் செய்த வண்ணம் அவரைத் தடுத்து ஆட்கொள்ளும் பொருட்டு ஒரு முதிய அந்தண வடிவங்கொண்டு மணப்பந்தரிடை வந்து, நம்பி ஆரூரரை நோக்கி "நமக்குள் இருக்கும் பெருவழக்கினை முடித்தே உன்னுடைய மணவினையைத் தொடங்குதல் வேண்டும்" என்றார். நம்பிஆரூரர் "அப்படி வழக்கு இருக்குமானல் அதைத் தீர்த்தே நான் மணம் செய்துகொள்வேன்" என்றனர். திருமால் முதலிய சகல ஆன்மாக்களையும் அடிமையாக உடைய சிவபெருமான் "இந்த

நாவலாரூரன் என்னுடைய அடிமை" என்றனர். இதைக் கேட்ட நம்பிஆரூரர் "இவ்வேதியர் சொல் நன்றாயிருக்கிறது!" என்று சொல்லிச் சிரித்தார். அப்போது அக்கிழவேதியர் "அக்காலத்தில் உன் பாட்டன் எழுதிக்கொடுத்த ஆள் ஓலை இதோ இருக்கிறது. நீ ஏன் பரிகசிக்கின்றாய்" என்றனர். நம்பிஆரூரர் "சிவபிரானுக்கே அடிமைபூண்ட குற்றமற்ற சைவ அந்தணர்கள் வேறு அந்தணர்களுக்கு அடிமை ஆதல் என்பது இன்று நீ சொல்லவே கேட்டோம். ஆகையால் 'நீ பித்தனோ'" என்றார். கிழவேதியர் "நான் பித்தனாகிலும் ஆகட்டும் பேயனாகிலும் ஆகட்டும்; நீ எத்தனை வசைமொழிகளை உரைத்தாலும் நான் நாணமடையேன். நீ என்னை அறியாவிட்டால் இங்கு நின்று வித்தகம் பேசவேண்டாம்; பணிசெய்தல் வேண்டும்" என்றனர். நம்பிஆரூரர் "என் பாட்டன் எழுதிக்கொடுத்ததாகச் சொன்ன அடிமை ஓலையைக் காட்டும்" என்ன, வேதியர் "நீ அடிமைத் தொழில்செய்ய உரியவனே அன்றி ஓலையைக்காண உரியவனல்லன்" என்றனர். அது கேட்ட நம்பிஆரூரர் வெகுண்டு வேதியரைப் பின்தொடர்ந்து ஓலையைப் பறித்துக் கிழிக்க, சிவபிரான் "இது முறையோ" என்று ஓலமிட்டனர். அருகில் நின்றவர்கள் விலக்கி, வேதியரை "நீர் எந்த ஊர்" என்று வினவ, வேதியர் "நான் இருப்பது திருவெண்ணெய்நல்லூர்; ஓலையை வலியக் கிழித்தமையினாலே, இவன் என்னுடைய அடிமை என்பது உறுதி ஆயிற்று" என்றார். ஆரூரர் வேதியரை நோக்கி "உம்மூர் திருவெண்ணெய்நல்லூராயின் இவ்வழக்கை அங்கே தீர்ப்போம் வாரும்" என்றனர். கிழவேதியரும் "திருவெண்ணெய்நல்லூரிலுள்ள மறையவர்முன் நான் வைத்துள்ள மூல ஓலையைக் காட்டி நீ எனக்கு அடிமை என்பதை நிலைநாட்டுவேன்" என்று கூறித் தண்டு ஊன்றி முன் செல்ல, நம்பிஆரூரரும் மற்றையோரும் பின் சென்றனர். மறையவரும் திருவெண்ணெய்நல்லூரிலுள்ள சபையோர்முன் தம் வழக்கைச் சொல்ல, அவர்கள் "ஐயா, மறையவர் அடிமையாதல் இந்த மாநிலத்தில் இல்லையே" என்றனர். அது கேட்ட வேதியர் "இவன் கிழித்த ஓலை இவன் பாட்டன் மனம் இசைந்து எழுதிக்கொடுத்த அடிமைச் சீட்டு ஆகும்; ஆதலின் நான் இவ்வழக்குக் கொண்டுவந்தது பொருத்தமே ஆகும்" என்றார். சபையோர் ஆரூரரை நோக்கி "இம்மறையவர் காட்டிய

ஓலையைக் கிழித்ததால் உமது வழக்கு வெற்றியாகுமென்று எண்ணுதல் கூடுமோ? இம்முதியவர் தம் வழக்கைப் பொருந்துமாறு கூறினார். உம்முடைய வாதம் என்ன" என்றார்கள். நம்பிஆரூரர் அவர்களை நோக்கி "நான் ஆதி சைவன் என்பதை நீங்கள் அறிவீர்கள்; இவ் வந்தணர் என்னைத் தன் அடியான் என்று சாதித்தால் அது மனதினால் நினைக்கக்கூடாத மாயை ஆகும். என் மனம் தெளியவில்லை" என்றனர். சபையோர் அம்முனிவரை நோக்கி "இவர் உமது அடிமை என்று துணிவதற்கு,

"ஆட்சியில் ஆவணத்தில் அன்றிமற்று அயலார் தங்கள்
காட்சியில் மூன்றில் ஒன்று காட்டுவாய்"

என்றனர். மறையவர் "முன் கிழிக்கப்பட்ட ஓலை படிஓலை; மூலஓலை என்னிடமிருக்கிறது" என்று சொல்லி அதனைக் காண்பிக்க, சபையோர் ஏவலின்படி கணக்கனும்,

"அருமறை நாவல் ஆதி சைவன்ஆ ரூரன் செய்கை
பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக் கியானும் என்பால்
வருமுறை மரபு ளோரும் வழித்தொண்டு செய்தற் கோலை
[1]இருமையால் எழுதி நேர்ந்தேன் இதற்கிவை என்னெழுத்து."

—பே. க. 59.

என்று வாசித்தான்.

அவ்வோலையில் சாட்சிக் கையெழுத்து இட்டவர்களும் தம்முடைய எழுத்தே என்றனர். ஓலையின் எழுத்தும் பாட்டனாரின் வேறு கையெழுத்தும் ஒத்திருந்தன. ஆதலால், சபையோர் நம்பி ஆரூரரை நோக்கி "நீர் இம்மறையவர்க்குத் தோற்றீர்; இனி நீர் இவர்க்கு அடிமை செய்தல் கடமை" என்று கூற, நம்பிஆரூரரும் சபையோர் தீர்ப்புக்கு இசைந்தனர். பிறகு சபையோர் வேதியரைப் பார்த்து "முனிவரே, நீர் காட்டிய ஓலையில் இவ்வூரே உமது ஊராகக் கூறப்பட்டிருப்பதால் உமக்குத் தலைமுறையாக உள்ள வீடும் பொருளும் காட்டும்" என்றார்கள். முனிவர் "என்னை உங்களில் ஒருவரும் அறியீராயின், காட்டுவேன் வாருங்கள்" என்று அழைத்துக்கொண்டு போய்த், திருஅருட்டுறை என்னும் ஆலயத்துட் புகுந்து மறைந்தனர். பின்பு யாவரும் காணாது திகைத்து நின்றனர். நம்பிஆரூரர் "ஈது என்ன

[1]இருமையால் - உள்ளும் புறமும் ஒத்து.

அதிசயம்! என்னை அடிமைகொண்ட அந்தணர், சிவபெருமானுடைய ஆலயத்தில் புகுந்தனர்" என்று வியந்து அவரைத் தொடர்ந்து போய்க் கூப்பிட, சிவபெருமான் ஆகாயத்தில், இடபவாகனத்தின் மீது பார்வதி தேவியாரொடு காட்சிதந்து "ஆரூரனே! முன்பு நமக்குத் தொண்டனாகிய நீ, மாதர்மேல் காதல் கொள்ள, நம்முடைய கட்டளையினால் மண்ணின்மீது பிறந்தனை. நீ முன்பு வேண்டிய வண்ணம், துன்பமாகிய உலகவாழ்க்கை உன்னைத் தொடராதபடி நாம் உன்னைத் தடுத்தாட் கொண்டோம்" என்று திருவாய்மலர்ந்தனர்.

அதுகேட்ட நம்பிஆரூரர் தாய்ப் பசுவின் கனைப்புக்கேட்ட கன்றுபோல் கதறி, உடல் முழுவதும் புளகிக்க, கைகளைத் தலைமீது குவித்து "அடியேனைத் தடுத்தாட்கொண்ட தேவரீரது செயலை என்னென்பேன்" என்று கூறித் துதித்தனர். சிவபெருமான் ஆரூரரை நோக்கி,

"மற்றுநீ வன்மை பேசி வன்தொண்டன் என்னும் நாமம்
பெற்றனை நமக்கும் அன்பில் பெருகிய சிறப்பின் மிக்க
அர்ச்சனை பாட்டே ஆகும் ஆதலால் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடு" கென்றார் தூமறை பாடும் வாயார்.

—பெ. த. 70.

நம்பிஆரூரரும் இறைவனை வணங்கி,

"வேதியன் ஆகி என்னை வழக்கினால் வெல்ல வந்த
ஊதியம் அறியா தேனுக்(கு) உணர்வுதந்(து) உய்யக் கொண்ட
கோதிலா அமுதே! இன்றுன் குணப்பெருங் கடலை நாயேன்
யாதினை அறிந்தென் சொல்லிப் பாடுகேன்" எனமொ ழிந்தார்.

அன்பனை அருளின் நோக்கி அங்கணர் அருளிச் செய்வார்
"முன்பெனைப் பித்தன் என்றே மொழிந்தனை ஆத லாலே
என்பெயர் பித்தன் என்றே பாடுவாய்" என்றார், நின்ற
வன்பெருந் தொண்டர் ஆண்ட வள்ளலைப் பாடல் உற்றார்.

கொத்தார்மலர்க் குழலாளொரு கூறாய்அடி யவர்பால்
மெய்த்தாயினும் இனியானைஅவ் [1]வியன்நாவலர் பெருமான்
"பித்தாபிறை சூடி"எனப் பெரிதாந்திருப் பதிகம்
இத்தாரணி முதலாம்உல கெல்லாம்உ(ய்)ய எடுத்தார்.

---

[1]வியன் - பெருமை பொருந்திய.

முறையால்வரு மதுரத்துடன் மொழிஇந்தளம் முதலில்
[1]குறையாநிலை மும்மைப்படி கூடுங்கிழ மையினால்
நிறை[2]பாணியின் இசைகோள்புணர் நீடும்புகழ் வகையால்
இறையான்மகிழ் இசைபாடினன் எல்லாம்நிகர் இல்லான்.

—பெ. பு. 72, 73, 74, 75.

## 1. திருவெண்ணெய் நல்லூர்

**பண் - இந்தளம்**

*திருச்சிற்றம்பலம்*

பித்தாபிறை சூடீபெரு மானேயரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அத்தாவுனக் காளாய்இனி அல்லேனென லாமே. க

நாயேன்பல நாளும்நினைப் பின்றிமனத் துன்னைப்
பேயாய்த்திரிந் தெய்த்தேன்பெற லாகாஅருள் பெற்றேன்
வேயார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆயாவுனக் காளாய்இனி அல்லேனென லாமே. உ

மன்னேமற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னைப்
பொன்னேமணி தானேவயி ரம்மேபொரு(து) உந்தி
மின்னார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அன்னேயுனக் காளாய்இனி அல்லேனென லாமே. ங

முடியேன்இனிப் பிறவேன்பெறின் மூவேன்பெற் றம்மூர்தீ
கொடியேன்பல பொய்யேயுரைப் பேனைக்குறிக் கொள்நீ

---

[1]மும்மைப்படி குறையாநிலை கூடும் கிழமையினால் - நலிதல் படுத்தல் எடுத்தல் என்னும் இசை வேறுபாடு குறையாமல் பொருந்தும் முறைமையினாலும்.

[2]பாணி - தாளம். இசைகோள் - இசையின் கொள்கை.

(க) எத்தான் - எவ்வகையாலும். அல்லேன் எனலாமே - அடிமை அல்லேன் என்றல் கூடுமோ. (உ) எய்த்தேன் - இளைத்தேன். ஆயா - ஆன்மாக்களுக்குத் தாயை நிகர்த்தவனே. (ங) பொருது உந்தி - மோதித்தள்ளி. மின்ஆர் - பிரகாசிப்பிக்கின்ற. (ச) பெற்றம் ஊர்தி - இடபத்தை ஊர்பவனே. பெறின் மூவேன் - பிறந்தாலும் மூப்பு அடையமாட்டேன்.

செடியார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டு
அடிகேளுனக் காளாய்இனி அல்லேனென லாமே. [றையுள் ௪

பாதம்பணி வார்கள்பெறு பண்டம்அது பணியாய்
ஆதன்பொரு ளானேன்அறி வில்லேனரு ளாளா [டுறையுள்
தாதார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்
ஆதியுனக் காளாய்இனி அல்லேனென லாமே. ௫

தண்ணார்மதி சூடிதழல் போலுந்திரு மேனி
எண்ணார்புர மூன்றும்எரி யுண்ணநகை செய்தாய் [டுறையுள்
மண்ணார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்
அண்ணாவுனக் காளாய்இனி அல்லேனென லாமே. ௬

ஊனாய்உயி ரானாய்உட லானாய்உல கானாய்
வானாய்நிலன் ஆனாய்கட லானாய்மலை யானாய் [டுறையுள்
தேனார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்
ஆனாயுனக் காளாய்இனி அல்லேனென லாமே. ௭

ஏற்றார்புர மூன்றும்எரி யுண்ணச்சிலை தொட்டாய்
தேற்றாதன சொல்லித்திரி வேனோசெக்கர் வானீர் [யுள்
ஏற்றாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறை
ஆற்றாயுனக் காளாய்இனி அல்லேனென லாமே. ௮

மழுவாள்வலன் ஏந்திமறை யோதிமங்கை பங்கா
தொழுவாரவர் துயராயின தீர்த்தல்உன தொழிலே [டுறையுள்
செழுவார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்
அழகாவுனக் காளாய்இனி அல்லேனென லாமே. ௯

காரூர்புனல் எய்திக்கரை கல்லித்திரைக் கையால்
பாரூர்புக ழெய்தித்திகழ் பன்மாமணி உந்திச்

---

(௫) ஆதன் பொருள் ஆனேன் - மூடன் கைப் பொருள்போலப் பயன் இல்லாதவன் ஆனேன். தாதுஆர் - மகரந்தப் பொடி நிறைந்த. (௬) தண்ணார்மதி - குளிர்ச்சிபொருந்திய சந்திரன். எண்ணார் - பகைவரது. மண்ஆர் - மாட்சிமை பொருந்திய. (௮) ஏற்றார் - பகைவர். தேற்றாதன - தெளிவில்லாத வார்த்தைகளை. செக்கர்வான் நீர் ஏற்றாய் - செவ்வானத்தின் நிறத்தைப் பொருந்தியவரே. ஆற்றாய் - செந்நெறிச் செல்வரே. (௧0) கல்லி - தோண்டி.

சீரூர்பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூர ருட் டுறை
ஆரூரன்எம் பெருமாற்(கு) ஆளல்லேனென லாமே. [யுள்
திருச்சிற்றம்பலம்

நல்லூர் அருட்டுறை மேவிய பெருமானும், இசைப்பாடலைப் பாடிய தொண்டனை நோக்கி "இன்னும் பலவாறாக உலகினில் நம் புகழைப் பாடுக" என்று அருள் செய்தார். புத்தூரில் சடங்கவி சிவாசாரியார் புதல்வியும் மணம் தவிர்ந்தமையால் நம்பிஆரூரரையே நாடோறும் சிந்தித்துக்கொண்டிருந்து சிவலோகத்தை எளிதில் பெற்றார்.

## திருவதிகையில் திருவடி சூட்டல்

நம்பிஆரூரர் திருவெண்ணெய் நல்லூரில் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்ட பிறகு, **திருநாவலூரை** அடைந்து இறைவனை வணங்கித் திருப்பதிகம் பாடினார்.

சிவனுறையுந் **திருத்துறையூர்** சென்றணைந்து "தீவினையால்
அவநெறியே செல்லாமே தடுத்தாண்டாய் அடியேற்குத்
**தவநெறி தந்தருள்**" என்று தம்பிரான் முன்னின்று
பவநெறிக்கு விலக்காகுந் திருப்பதிகம் பாடினார்.—பே. **த**. 79.

## 13. திருத்துறையூர்

பண் - தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

மலையார் அருவித் திரள்மா மணியுந்திக்
குலையாரக் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
கலையா ரல்குற் கன்னியராடுந் துறையூர்த்
தலைவா உனைவேண்டிக் கோள்வேன் தவநெறியே.

மத்தம் மதயா னையின்வெண் மருப்புந்தி
முத்தங் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபால்

(க) குலைஆர - கரையில் பொருந்தும்படி. கலைஆர் - மேகலை பொருந்திய.

பத்தர் பயின்றேத்திப் பரவுந் துறையூர்
அத்தா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. ௨

கந்தங் கமழ்காரகில் சந்தனம் உந்திச்
செந்தண் புனல்வந் திழிபெண்ணை வடபால்
மந்தி பலமா நடமாடுந் துறையூர்
எந்தாய் உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. ௩

அரும்பார்ந்தன மல்லிகை செண்பகஞ் சாடிச்
சுரும்பா ரக்கொணர்ந் தெற்றி யோர்பெண்ணை வடபால்
கரும்பார் மொழிக்கன் னியராடுந் துறையூர்
விரும்பா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. ௪

பாடார்ந் தனமாவும் பலாக்களுஞ் சாடி
நாடார வந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
மாடார்ந்தன மாளிகை சூழுந் துறையூர்
வேடா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. ௫

மட்டார் மலர்க்கொன்றையும் வன்னியும் சாடி
மொட்டாரக் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
கொட்டாட்டொடு பாட்டொலி ஓவாத் துறையூர்ச்
சிட்டா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. ௬

மாதார்மயிற் பீலியும் வெண்ணுரை உந்தித்
தாதாரக் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
போதார்ந்தன பொய்கைகள் சூழுந் துறையூர்
நாதா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. ௭

கொய்யாமலர்க் கோங்கொடு வேங்கையுஞ் சாடிச்
செய்யா ரக்கொணர்ந் தெற்றியோர் பெண்ணைவடபால்
மையார்தடங் கண்ணிய ராடுந் துறையூர்
ஐயா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. ௮

---

(௫) பாடு - பக்கங்களில். ஆர்ந்தன - நிறைந்துள்ளனவாகிய. மாடு - செல்வம். (௬) மட்டு - தேன். கொட்டு - வாத்தியம். ஓவா - நீங்காத. சிட்டா - மேலானவனே. (௭) மாதார் - விருப்பத்தைத் தருகிற; அழகிய. (௮) செய்யார - வயல்கள் நிறைய.

விண்ணார்ந்தன மேகங்கள் நின்று பொழிய
மண்ணார நக்கொணர்ந் தெற்றியோர் பெண்ணைவடபால்
பண்ணார்மொழிப் பாவைய ராடுந் துறையூர்
அண்ணா உனைவேண்டிக் கோள்வேன் தவநெறியே. ௯

மாவாய்ப் பிளந்தானும் மலர்மிசை யானும்
ஆவா அவர்தேடித் திரிந்(து)அல மந்தார்
பூவார்ந்தன பொய்கைகள் சூழுந் துறையூர்த்
தேவா உனைவேண்டிக் கோள்வேன் தவநெறியே. ௧0

செய்யார் கமல மலர்நாவ லூர்மன்னன்
கையாற் றொழுதேத் தப்படுந் துறையூர்மேல்
பொய்யாத் தமிழூர னுரைத்தன வல்லார்
மெய்யே பெறுவார்கள் தவநெறி தானே. ௧௧

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் ஓதிச் சிவபெருமானால் "புலன் ஒன்றும்படி தவத்திற் புரிந்த நெறி கொடுத்தருள"ப் பெற்று, திருத்துறையூரில் அமர்ந்தருளும் சிவபெருமானுடைய திருப்பாதங்களை மலர்கொண்டு அர்ச்சித்துத் தொழுது விடைபெற்றுக்கொண்டு சிவபெருமான் அமர்ந்தருளும் இடம் பலவும் புக்கு இறைஞ்சி, சிதம்பரத்தில் நடராஜமூர்த்தியின் திருக்கூத்தைக் கண்டு தொழுவதற்கு நினைந்து புறப்பட்டார். பிறகு பெண்ணையாற்றைக் கடந்து திருவதிகையின் புறத்தைச் சேர்ந்தார். திருநாவுக்கரசு சுவாமிகள் கைத்தொண்டு செய்துகொண்டிருந்த அத்தலத்தை மிதித்தற்கு அஞ்சிப் புறத்தேயுள்ள சித்தவடமடத்தில் தங்கி, வீரட்டானேசுரரைச் சிந்தித்துக்கொண்டே அடியார்களோடு நித்திரை செய்தார். அப்போது வீரட்டானேசுரர் ஒரு கிழ வேதியராய் மடத்திற்சென்று, ஆரூரர் திருமுடிமீது தம்முடைய மலர்த்தாளை வைத்து நித்திரை செய்வார் போலிருந்தார். உடனே ஆரூரர் விழித்து "வேதியரே உன் அடி என் தலைமீது பட்டது" என்ன, அவர் "ஐயா, என் கிழத்தன்மையால் அறியாது செய்தேன்" எனலும், நாவலூரர் தலையை வேறொரு பக்கத்தில் வைத்துத் தூங்கினார். சிவபெருமான் மீண்டும் காலை நீட்ட, நாவலூரர், "இங்கென்னைப் பலகாலும் மிதித்தனை, நீ யார்?" என்றார். உடனே பெருமான் "என்னை அறிந்திலையோ" என்று கேட்டு மறைந்தார். ஆரூரர் தன்னை மிதித்தவர் சிவபெருமானே என்று தெளிந்து "யான்

இறுமாப்பால் யாது செய்துவிட்டேன்" என்று வருந்தி "தம்மானை அறியாத சாதியார் உளரே" என்று தொடங்கிப் பதிகம் பாடினார்.

## 38. திருவதிகைத் திருவீரட்டானம்

பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

தம்மானை யறியாத சாதியா ருளரே
சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகிர்தன்
கைம்மாவின் உரியானைக் கரிகாட்டில் ஆடல்
உடையானை விடையானைக் கறைகொண்ட கண்டத்(து)
எம்மான்றன் அடிக்கொண்டேன் முடிமேல்வைத் திடுமென்னும்
ஆசையால் வாழ்கின்ற அறிவிலா நாயேன்
எம்மானை எறிகெடில வடவீரட் டானத்(து)
உறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. க

முன்னேயெம் பெருமானை மறந்தென்கொல் மறவா(து)
ஒழிந்தென்கொல் மறவாத சிந்தையால் வாழ்வேன்
பொன்னேநன் மணியேவெண் முத்தேசெம் பவளக்
குன்றமே ஈசனென் றுன்னையே புகழ்வேன்
அன்னேயென் னத்தாவென்(று) அமரரால் அமரப்
படுவானை அதிகைமா நகருள்வாழ் பவனை
என்னேயென் னெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. உ

விரும்பினேற்கு எனதுள்ளம் விடகிலா விதியே
விண்ணவர்தம் பெருமானே மண்ணவர்நின் றேத்தும்
கரும்பேயென் கட்டியென் றுள்ளத்தா லுள்கிக்
காதல்சேர் மாதராள் கங்கையாள் நங்கை

---

(க) தம்மான் - தலைவன். விகிர்தன் - வெவ்வேறு வடிவம் கொள்பவன். கரிகாடு - சுடலை. இறைபோதும் இகழ்வன்போல் - சிறிது பொழுதும் இகழ்வேனோ. (உ) முன்னே...வாழ்வேன் - இதற்குமுன் எம்பெருமானை மறந்திருந்தால் என்ன மறவாதிருந்திருந்தால் என்ன; இப்போது நான் அவனை எப்போதும் மறவாத மனத்தோடு வாழ்ந்து வருகிறேன். அமரப்படுவானை - விரும்பப்படுபவனை. (ந) விடகிலா - நீங்காத. விதியே - செல்வமே.

வரும்புனலுஞ் சடைக்கணிந்து *வளராத பிறையும்
வரியரவும் உடன்றுயில வைத்தருளு மெந்தை
இரும்புனல்வந் தெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. ௩.

நாற்றானத் தொருவனை நானாய பரனை
நள்ளாற்று நம்பியை வெள்ளாற்று விதியைக்
காற்றானைத் தீயானைக் கடலானை மலையின்
தலையானைக் கடுங்கலுழிக் கங்கைநீர் வெள்ள
ஆற்றானைப் பிறையானை அம்மானை யெம்மான்
தம்மானை யாவர்க்கும் அறிவரிய செங்கண்
ஏற்றானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. ௪

சேந்தர்தாய் மலைமங்கை திருநிறமும் பரிவும்
உடையானை அதிகைமா நகருள்வாழ் பவனைக்
கூந்தல்தாழ் புனல்மங்கை குயிலன்ன மொழியாள்
சடையிடையிற் கயலினங்கள் குதிகொள்ளக் குலாவி
வாய்ந்தநீர் வரவுந்தி மராமரங்கள் வணக்கி
மறிகடலை யிடங்கொள்வான் மலையார வாரி
ஏந்துநீர் எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. ௫

மைம்மான மணிநீல கண்டத்தெம் பெருமான்
வல்லேனக் கொம்பணிந்த மாதவனை வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்மதியும் பாம்புந்
தடுமாறுஞ் சடையானைத் தாழ்வரைக்கை வென்ற

---

(௩) வரும்புனல் - பெருகிவரும் நீர். இரும்புனல் - பெருவெள்ளம். (௪) நாற்றானம் - நான்குதிசை. கடுங்கலுழி - வேகமான பெருக்கை உடைய. (௫) சேந்தர் தாய் - முருகன் தாய். மற்றொரு பாடம்—சேர்ந்தாய - செம்மைநிறம் பொருந்திய. மராமரம் - அரசமரம். (௬) மைம்மான - மையைப்போன்ற. ஏனக்கொம்பு - பன்றிக் கொம்பு.

*பாம்பொடு திங்கள் பகைதீர்த் தாண்டாய்—அப்பர் (அங்கமே.)

எம்மானை மதகரியி னுரியானை வேத
விதியானை *வெண்ணீறு சண்ணித்த மேனி
எம்மானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. சு

வெய்தாய வினைக்கடலில் தடுமாறும் உயிர்க்கு
மிகஇரங்கி யருள்புரிந்து வீடுபே றாக்கம்
பெய்தானைப் பிஞ்ஞகனை மைஞ்ஞவிலுங் கண்டத்(து)
எண்டோளெம் பெருமானைப் பெண்பாக மொருபாற்
செய்தானைச் செக்கர்வா னொளியானைத் தீவாய்
அரவாடு சடையானைத் திரிபுரங்கள் வேவ
எய்தானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. எ

பொன்னானை மயிலூர்தி முருகவேள் தாதை
பொடியாடு திருமேனி நெடுமாறன் முடிமேல்
தென்னானைக் குடபாலின் வடபாலின் குணபாற்
சேராத சிந்தையான் செக்கர்வான் அந்தி
அன்னானை அமரர்கள்தம் பெருமானைக் கருமானின்
உரியானை யதிகைமா நகருள்வாழ் பவனை
என்னானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. அ

திருந்தாத வாளவுணர் புரமூன்றும் வேவச்
சிலைவளைவித் தொருகணையால் தொழில்பூண்ட சிவனைக்
கருந்தாள மதக்களிற்றி னுரியானைப் பெரிய
கண்மூன்றும் உடையானைக் கருதாத அரக்கன்

(சு) சண்ணித்த - பூசப்பெற்ற. (எ) வீடுபேறு ஆக்கம் - வீடுபேறு ஆகிய செல்வத்தை. பெய்தானை - மிகுதியாகக் கொடுத்தவனை. தீவாய் - விஷாக்கினியையுள்ள வாயையுடைய. (அ) நெடுமாறன் முடிமேல் தென்னானை - பாண்டியன் முடியை ஏற்றுத் தென்னாட்டை ஆண்ட சுந்தரனை. குடபாலின் - மேற்கிலும். குணபால் - கிழக்கிலும். சேராத சிந்தையான் - (அவ்வாறு) ஆட்சி புரியத் திருவுளங் கொள்ளாதவன். (கு) கருதாத அரக்கன் பெருந்தோள்கள் நாலைந்தும் ஈரைந்து முடியும் பேயுருவம் மூன்றும் உடையானை -

*மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான்—**அப்பர்.**

பெருந்தோள்கள் நாலைந்தும் ஈரைந்து முடியும்
உடையானைப் பேயுருவம் மூன்றுமுற மலைமேல்
இருந்தானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. கூ

என்பினையே கலனாக அணிந்தானை யெங்கள்
எருதேறும் பெருமானை இசைஞானி சிறுவன்
வன்பனைய வளர்பொழில்சூழ் வயல்நாவ லூர்க்கோன்
வன்றொண்டன் ஆரூரன் மதியாது சொன்ன
அன்பனை யாவர்க்கும் அறிவரிய அத்தர்
பெருமானை அதிகைமா நகருள் வாழ்பவனை
என்பொன்னை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. கO

திருச்சிற்றம்பலம்

## சிதம்பர தரிசனம்

பின்பு தென்திசையில் கங்கை என்னும் திருக்கெடில நதியில் நீராடி, அந்நதியைக் கடந்து வாமனாவதாரம் செய்த திருமால் வழி பட்ட திருமாணிக்குழி அடைந்து, சிவபெருமானை வணங்கிப் பணிந்த வர்களுக்கு வேண்டிய வரத்தைத் தருகின்ற பரம்பொருள் எழுந் தருளியுள்ள திருத்தினைநகரை அடைந்து,

## 64. திருத்தினை நகர்

### பண் - தக்கேசி

தி ரு ச் சி ற் ற ம் ப ல ம்

நீறு தாங்கிய திருநுத லானை
நெற்றிக் கண்ணனை நிரைவளை மடந்தை
கூறு தாங்கிய கொள்கையி னானைக்
குற்ற மில்லியைக் கற்றையஞ் சடைமேல்

(இறைவனை) நினையாத அரக்கனும், பெருந் தோள்கள் இருபதும் பத்துத் தலைகளும் பேயுருவமும் ஆக மூன்றும் உடையவனும் ஆகிய இராவணனை.

(க) நிரை - ஒழுங்கான.

ஆறு தாங்கிய அழகனை அமரர்க்
கரிய சோதியை வரிவரால் உகளுஞ்
சேறு தாங்கிய திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. க

பிணிகொ ளாக்கை பிறப்பிறப் பென்னும்
இதனைநீக்கி ஈசன் திருவடி யிணைக்காள்
துணிய வேண்டிடிற் சொல்லுவன் கேள்நீ
அஞ்சல் நெஞ்சமே வஞ்சர்வாழ் மதில்மூன்(று)
அணிகொள் வெஞ்சிலை யாலுகச் சீறும்
ஐயன் வையகம் பரவிநின் றேத்துந்
திணியும் வார்பொழில் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. உ

வடிகொள் கண்ணிணை மடந்தையர் தம்பால்
மயல துற்றுவஞ் சனைக்கிட மாகி
முடியு மாகரு தேல்எரு தேறு
மூர்த்தி யைமுத லாய பிரானை
அடிக ளென்றடி யார்தொழு தேத்தும்
அப்பன் ஒப்பிலா முலையுமை கோனைச்
செடிகொள் கான்மலி திருத்தினை நகருள்
சிவக்கொழுந்தினைச் சென்றடை மனனே. ங

பாவ மேபுரிந்(து) அகலிடம் தன்னிற்
பலப கர்ந்(து)அல மந்துஉயிர் வாழ்க்கைக்(கு)
ஆவ வென்றுழந் தயர்ந்துவீ ழாதே
அண்ணல் தன்திறம் அறிவினாற் கருதி

---

(க) உகளும் - குதிக்கின்ற. (உ) பிணிகொள் ஆக்கை - நோய்களுக்குக் கொள்கலம் (இருப்பிடம்) ஆகிய சரீரம். ஆள் துணியவேண்டிடில் - ஆட்செய்வதற்குத் திடசித்தம் வேண்டுமானால். உக - அழிய. திணியும் - நெருங்கிய. (ங) வடிகொள் - கூர்மையான. மயல் - மோகம். முடியுமா - இறக்கும்படி. கான் - காடு. (ச) அலமந்து - துன்பப்பட்டு. உயிர் வாழ்க்கைக்கு ஆவ என்று - இவைகள் உலக வாழ்விற்கு(ஆவன) இன்றியமையாதன என்று நினைத்து. உழந்து - உழன்று. அண்ணல் - பெருமையிற் சிறந்தோன்; சிவபெருமான். திறம் - மேன்மைக் குணம். அறிவினால் - உணர்வினால்.

மாவின் ஈருரி உடைபுனைந் தானை
மணியை மைந்தனை வானவர்க் கமுதைத்
தேவ தேவனைத் திருத்தினை நகருட்
சிவக்கொழுந்தினைச் சென்றடை மனனே. ௪

ஒன்ற லாவுயிர் வாழ்க்கையை நினைந்திட்(டு)
உடல்த ளர்ந்தரு மாநிதி யியற்றி
என்றும் வாழலா மெமக்கெனப் பேசும்
இதுவும் பொய்யென வேநினை யுளமே
குன்று லாவிய புயமுடை யானைக்
கூத்த னைக்குலா விக்குவ லயத்தோர்
சென்றெ லாம்பயில் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. ௫

வேந்த ராய்உல காண்(டு)அறம் புரிந்து
வீற்றி ருந்தஇவ் வுடல்இது தன்னைத்
தேய்ந்(து)இ றந்துவெந் துயருழந் திடுமிப்
பொக்க வாழ்வினை விட்டிடு நெஞ்சே
பாந்தள் அங்கையி லாட்டுகந் தானைப்
பரம னைக்கடற் சூர்தடிந் திட்ட
சேந்தர் தாதையைத் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. ௬

தன்னில் ஆசறு சித்தமு மின்றித்
தவம்மு யன்(று)அவ மாயின பேசிப்
பின்ன லார்சடை கட்டியென்(பு) அணிந்தால்
பெரிதும் நீந்துவ தரிதது நிற்க

---

(௫) ஒன்று அலா - ஒரு பொருளல்லாத. குலாவி-மனம் கலந்து. (௬) உழந்திடும் - அநுபவிக்கும். பொக்க வாழ்வு - பொய்யான உலக வாழ்வு. கடல் சூர் - கடலில் ஒளித்த சூரபதுமனை. சேந்தர் - முருகன். (௭) ஆசறு - குற்றமற்ற. தவ - மிகுதியாக. அவம் - வீண். பின்னல் ஆர்சடை கட்டி - பின்னலையுடைய சடையைக் கட்டி. பெரிதும் நீந்துவது அரிது - (பிறவிக் கடலை) நீந்துவது மிக அரிது.

முன்னெ லாம்முழு முதலென்று வானோர்
மூர்த்தி யாகிய முதலவன் றன்னைச்
செந்நெ லார்வயற் றிருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. எ

பரிந்த சுற்றமும் மற்றுவன் துணையும்
பலருங் கண்(டு)அழு தெழவுயி ருடலைப்
பிரிந்து போமிது நிச்சயம் அறிந்தாற்
பேதை வாழ்வெனும் பிணக்கினைத் தவிர்ந்து
கருந்த டங்கண்ணி பங்கனை உயிரைக்
கால காலனைக் கடவுளை விரும்பிச்
செருந்தி பொன்மலர் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. அ

நமையெ லாம்பலர் இகழ்ந்துரைப் பதன்முன்
நன்மை யொன்றிலாத் தேரர்புன் சமணாஞ்
சமய மாகிய தவத்தினார் அவத்தத்
தன்மை விட்டொழி நன்மையை வேண்டில்
உமையோர் கூறனை ஏறுகந் தானை
யும்பர் ஆதியை யெம்பெரு மானைச்
சிமயம் ஆர்பொழிற் றிருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. கூ

நீடு போக்கையிற் பிறவியைப் பழித்து
நீங்கலா மென்று மனத்தினைத் தெருட்டிச்
சேடு லாம்பொழிற் றிருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தின திருவடி யிணைதான்

---

(அ) பரிந்த - இரங்கிய. வன்துணையும் - வலியதுணையும். எப்படிப் பட்ட வலிய துணை இருந்தும் உயிர் போவதைத் தடுக்க முடியாது. பேதை வாழ்வு - அறியாமையோடு கூடிய வாழ்வு. பிணக்கு - குழப்பம். (கூ) தேரர் - புத்தர். அவத்தத் தன்மை - பொய்ந்நிலை. சிமயம் ஆர்பொழில் - மலைகளும் நெருங்கிய சோலைகளும். (கo) நீடுபொக்கையின் பிறவி - பெரிய பொய்யாகிய பிறப்பு. தெருட்டி - தெளிவித்து. சேடு உலாம் - அழகு அல்லது பெருமை பொருந்திய.

நாடெ லாம்புகழ் நாவலூ ராளி
நம்பி வன்றொண்ட னூர னுரைத்த
பாட லாந்தமிழ் பத்திவை வல்லார்
முத்தி யாவது பரகதிப் பயனே. கO

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடினார்.

பிறகு தில்லையை நெருங்கித் தொழுவார்களுடைய மும்மலங்கள் அற வீட்டை (மோக்ஷத்தை)த் தரும்படியான தில்லைப்பதியின் எல்லையை வணங்கி,

மன்றுளாடு[1]மது வின்நசை யாலே மறைச்சுரும்பறை புறத்தின் மருங்கே, குன்று போலு(ம்)மணி மாமதில் சூழுங் [2]குண்டகழ்க்கமல வண்(டு)அலர் கைதை, துன்று நீறுபுனை மேனிய வாகித் தூய நீறுபுனை தொண்டர்கள் என்னச், சென்று சென்றுமுரல் கின்றது கண்டு சிந்தை அன்பொடு திளைத்தெதிர் சென்றார்.

—பே. த. 96.

பின்பு தில்லைப்பதியின் நான்கு திருவாயில்களில் வட திருவாயிலை அடைந்து, தம்மை எதிர்கொள்ள வந்த அடியார்களோ அல்லது நம்பிஆரூரர் தாமோ யாவர் முன்பு இறைஞ்சினர் என்று அறியக் கூடாத வகையில் வணங்கி*, திருவீதியிற் புகுந்து, கோபுரத்தைத் தொழுது, கோயிலினுள்ளே சென்று அம்பலத்தில் ஆனந்தத் தாண்டவம் செய்யும் நடராஜப் பெருமானைத் தாழ்ந்து வணங்கினார்.

**ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள அளப்பரும் கரணங்கள் நான்கும், சிந்தையே ஆகக் குணம் ஒரு மூன்றும் திருந்து சாத்து விகமே ஆக, இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த எல்லையில் தனிப்பெருங் கூத்தின், வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்.**

---

[1]மதுவின் நசையாலே - குஞ்சிதபாதமாகிய தாமரை மலரில் உள்ள பேரானந்தமான தேனை உண்ணவேண்டு மென்னும் விருப்பத்தால். [2]குண்டகழ் - ஆழமாகிய அகழி.

* இது சைவத்திற்கு அடிப்படையான நம்பிஆரூரரின் தாழ்வு என்னும் தன்மையைக் காட்டுகின்றது.

தெண்ணிலா மலர்ந்த வேணியாய்! உன்தன் திருநடம் கும்பிடப் பெற்று, மண்ணிலே வந்த பிறவியே எனக்கு [1]வாலிதாம் இன்பம் ஆம் என்று, கண்ணில் ஆனந்த அருவிநீர் சொரியக் கைம்மலர் உச்சிமேல் குவித்துப், பண்ணினால் நீடி [2]அறிவரும் பதிகம் பாடினார் பரவினார் பணிந்தார். —பெ. த. 106, 107

அப்போது நடராஜப் பெருமான் திருவருளால் "நீ திருவாரூரிலே நம்மிடத்திற்கு வருக" என ஓர் ஒலி வானில் எழுந்தது. அதனைக் கேட்டலும் அப்பணியைச் சென்னிமேற் கொண்டு வணங்கி, சிதம்பரத்தை நீங்கித் திருவாரூருக்குப் புறப்பட்டார். பிறகு சிவபெருமான் திருவருளையே மனத்திற்கொண்டவராய், கொள்ளிடத்தைக் கடந்து சீகாழியைச் சமீபிக்க, அத்திருப்பதி திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருஅவதாரம் செய்த தலமாகையால் அதனை மிதித்தலாகாதென்று எண்ணி, ஊரின் புறஎல்லையை வணங்கி, வலமாக வரும்பொழுதில், சிவபெருமான் உமாதேவியாருடன் விடையின்மீது எதிர் காட்சி கொடுத்தருள வணங்கித் திருப்பதிகம் பாடினார்.

மண்டியபேர் அன்பினால் வன்தொண்டர் நின்றிறைஞ்சித்
தெண்திரைவே லையில்மிதந்த திருத்தோணி புரத்தாரைக்
கண்டுகொண்டேன் கயிலையினில் வீற்றிருந்த படிஎன்று
பண்தரும்இன் னிசைபயின்ற திருப்பதிகம் பாடினார்.
—பெ. த. 113.

## 58. திருக்கழுமலம்

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

சாதலும் பிறத்தலுந் தவிர்த்தெனை வகுத்துத்
தன்னருள் தந்தஎந் தலைவனை மலையின்
மாதினை மதித்தங்கோர் பால்கொண்ட மணியை
வருபுனல் சடையிடை வைத்தஎம் மானை

---

[1]வாலிதாம் - மேலான. [2]அறிவரும் - அறியத்தக்க.
(க) வகுத்து - திருத்தி.

ஏதிலென் மனத்துக் கோரிரும் புண்டநீரை
எண்வகை யொருவனை எங்கள் பிரானைக்
காதில்வெண் குழையனைக் கடல்கொள மிதந்த
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. க

மற்றோரு துணையினி மறுமைக்குங் காணேன்
வருந்தலுற் றேன்மற வாவரம் பெற்றேன்
சுற்றிய சுற்றமுந் துணையென்று கருதேன்
துணையென்று நான்தொழப் பட்டவொண் சுடரை
முத்தியும் ஞானமும் வானவ ரறியா
முறைமுறை பலபல நெறிகளுங் காட்டிக்
கற்பனைக் கற்பித்த கடவுளை யடியேன்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. உ

திருத்தினை நகருறை சேந்தனப் பனென்
செய்வினை யறுத்திடுஞ் செம்பொனை யம்பொன்
ஒருத்தனை யல்லதிங்(கு) ஆரையும் உணரேன்
உணர்வுபெற் றேன்உய்யுங் காரணந் தன்னால்
விருத்தனைப் பாலனைக் கனவிடை விரவி
விழித்தெங்குங் காணமாட் டாதுவிட் டிருந்தேன்
கருத்தனை நிருத்தஞ்செய் காலனை வேலைக்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. ௩

---

(க) ஏதில் - குற்றமில்லாத. இரும்புண்ட நீரை - காய்ச்சின இரும்பின் மேல் வார்த்தநீர் ஆவியாக மாறிக் காணப்படாதது போல செயலினால் காணப்படும் தோற்றத்தினால் காணப்படாமலும் இருப்பவனை. (உ) கற்பனை - கற்கவேண்டியவற்றை. (௩) உணர்வு பெற்றேன் உய்யும் காரணம் தன்னால் - உய்வதற்குக் காரணமாகிய உணர்வை (அறிவை)ப் பெற்றேன். விருத்தனை.........கண்டுகொண்டேனே - சிவபெருமான் விருத்தனாகவும் பாலனாகவும் என் கனவின்கண் தோன்றி என்னைக் கலந்தான்; நான் விழித்தபோது அன்னவனைக் காணாமல் வருந்தியிருந்தேன்; ஆனால் அவனைக் கழுமல வளநகரில் இப்போது அவன் எனக்குக் காட்சி கொடுக்கக் கண்டு கொண்டேன்.

மழைக்(கு)அரும் பும்மலர்க் கொன்றையி னானை
வளைக்கலுற் றேன்மற வாமனம் பெற்றேன்
பிழைத்தொரு காலினிப் போய்ப்பிற வாமைப்
பெருமைபெற் றேன்பெற்ற தார்பெறு கிற்பார்
குழைக்கருங் கண்டனைக் கண்டுகொள் வானே
பாடுகின் றேன்சென்று கூடவும் வல்லேன்
கழைக்கரும் புங்கத லிப்பல சோலைக்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. ச

குண்டலங் குழைதிகழ் காதனே யென்றுங்
கொடுமழு வாட்படைக் குழகனே யென்றும்
வண்டலம் பும்மலர்க் கொன்றைய னென்றும்
வாய்வெரு வித்தொழு தேன்விதி யாலே
பண்டைநம் பலமன மும்களைந் தொன்றாய்ப்
பசுபதி பதிவின விப்பல நாளுங்
கண்டலங் கழிக்கரை ஓதம்வந் துலவுங்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. ரு

வரும்பெரும் வல்வினை யென்றிருந் தெண்ணி
வருந்தலுற் றேன்மற வாமனம் பெற்றேன்
விரும்பியேன் மனத்திடை மெய்குளிர்ப் பெய்தி
வேண்டிநின் றேதொழு தேன்விதி யாலே

(ச) மழைக்கு அரும்பும் - மழைக் காலத்து பூக்கின்ற. வளைக்கலுற்றேன் - (அன்பினால்) கட்டலுற்றேன். மறவா......பெறுகிற்பார் - மறவாத மனதைப் பெற்றேன்; அதனால் தப்பி இனிமேல் ஒருகாலத்தும் பிறவாமையாகிய பெருமையைப் பெற்றேன்; நான் பெற்றபேறு யார்பெற வல்லார். கண்டுகொள்வான்(ஏ)-கண்டுகொள்ளும்பொருட்டு. ஏ - அசை. கழைக்கரும்பு - மூங்கில் போலப் பருத்த கரும்பு. கதலி - வாழை. (ரு) குண்டலம் குழை - தோடும் குழையும். குழகன் - அழகன். அலம்பும் - சத்திக்கின்ற. வெருவி - குழறி. கண்டலம் - தாழை. பண்டைநம்...ஒன்றாய் - பழமையாகவே பல விஷயங்களில் செல்லுகிற மனத்தின் குற்றங்களை நீக்கி ஒரு வழிப்படுத்தி.

அரும்பினை அலரினை அமுதினைத் தேனை
ஐயனை அறவனென் பிறவிவே ரறுக்குங்
கரும்பினைப் பெருஞ்செந்நெல் நெருங்கிய கழனிக்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. ௬

அயலவர் பரவவும் அடியவர் தொழவும்
அன்பர்கள் சாயலுள் அடையலுற் றிருந்தேன்
முயல்பவர் பின்சென்று முயல்வலை யானை
படுமென மொழிந்தவர் வழிமுழு தெண்ணிப்
புயலினைத் திருவினைப் பொன்னின தொளியை
மின்னின துருவை என்னிடைப் பொருளைக்
கயலினம் சேலொடு வயல்விளை யாடுங்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. ௭

நினைதரு பாவங்கள் நாசங்க ளாக
நினைந்துமுன் தொழுதெழப் பட்டவொண் சுடரை
மலைதரு மலைமகள் கணவனை வானோர்
மாமணி மாணிக்கத் தைம்மறைப் பொருளைப்
புனைதரு புகழினை எங்கள தொளியை
இருவரு மொருவனென் றுணர்வரி யவனைக்
கனைதரு கருங்கடல் ஓதம்வந் துலவுங்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. அ

மறையிடைத் துணிந்தவர் மனையிடை யிருப்ப
வஞ்சனை செய்தவர் *பொய்கையு மாயத்
துறையுறக் குளித்துள தாகவைத் துய்த்த
உண்மையெ னுந்தக வின்மையை யோரேன்

(௬) அறவன் - தருமசொரூபன். (௭) சாயல் - சார்பு. முயல்பவர்...எண்ணி - திருவருள் நெறியில் முயல்பவரைப் பின்பற்றிச் சென்று முயலைப் பிடிக்கும் வலையில் யானையைப் பிடிக்கலாம் என்று சொன்னவர் வழியை முழுவதும் ஆராய்ந்து தெளிந்து. என்னிடைப் பொருளை - என்னுள் இருக்கும் பொருளை. (அ) நினைதரு - நினைக்கத் தக்க. புனைதரு புகழினை - பாமாலைகளால் அலங்காரம் செய்யும்படியான உண்மைப் புகழை உடையவனை. இருவர் - பிரம விஷ்ணுக்கள். ஒருவன் - ஒப்பற்றவன். கனைதரு - சப்திக்கின்ற. (௯) மறையிடை...... தகவின்மையை ஓரேன்......? *போகையு—மற்றொரு பாடம்.

பிறையுடைச் சடையனை எங்கள் பிரானைப்
பேரரு ளாளனைக் காரிருள் போன்ற
கறையணி மிடறுடை யடிகளை யடியேன்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. ௯

செழுமலர்க் கொன்றையுங் கூவிள மலரும்
விரவிய சடைமுடி அடிகளை நினைந்திட்(டு)
அழுமலர்க் கண்ணிணை யடியவர்க் கல்லால்
அறிவரி தவன்திரு வடியிணை இரண்டுங்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டூரன்
சடையன்றன் காதலன் பாடிய பத்துந்
தொழுமல ரெடுத்தகை யடியவர் தம்மைத்
துன்பமும் இடும்பையுஞ் சூழகி லாவே. ௧௦

திருச்சிற்றம்பலம்

சீகாழிப் பெரும்பதியை வணங்கிப் பிறகு **திருக்கோலக்காவை** அடைந்து செந்தமிழ் மாலைகள் பாடினார்.

அதன் பின்பு **திருப்புன்கூரை** அடைந்து அங்கு எழுந்தருளி யுள்ள நம்பர்பால் *ஆறாப்பேர் அன்புமிக அடிபணிந்து தமிழ் பாடினார்.

பின்பு " மானார்க்கும் கரதலத்தார் மகிழ்ந்த இடம் பல வணங்கி" காவிரியின் கரையை அடைந்து, அதில் நீராடி, **மயிலாடுதுறை** வணங்கி, **அம்பர்மாகாளத்தில்** அமர்ந்த பிரான் அடிபணிந்தார்.

பிறகு **திருப்புகலூரைப்** பணிந்து எத்தித் **திருவாரூரைச்** சமீபித்தார். சிவபெருமான் திருவாரூரில் வாழ்வாருக்கு " ஆராத காதலின் நம் ஆரூரன் நாம் அழைக்க வாராநின்றான் ; அவனை மகிழ்ந்து எதிர் கொள்வீர் " என்று அருள் செய்தார். அதுபோல் அவர்கள் திரு வாயிலின் புறத்தே வந்து நம்பி ஆரூரரை எதிர்கொண்டு அழைத்துச் சென்றார்கள்.

---

(௧௦) திருவடி இணை இரண்டும் - இவைகளுக்கு ஒப்பாக வேறு இல்லாத திருவடிகள் இரண்டையும். தொழுமலரெடுத்த கை - அர்ச்சித்து வணங்குவதற்காக மலர் ஏந்திய கைகளையுடைய.

* ஆறா - அடங்காத.

வந்தெதிர் கொண்டு வணங்குவார்முன் வன்தொண்டர் அஞ்சலி கூப்பி நின்று, சிந்தை களிப்புற வீதியூடு செல்வார் திருத்தொண்டர் தம்மை நோக்கி, 'எந்தை இருப்பதும் ஆரூர்அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்' என்னும், சந்த இசைப்பதி கங்கள்பாடித் தம் பெருமான் திருவாயில் சார்ந்தார். —பெ. தந. 123.

## 73. திருவாரூர்

### பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

கரையுங் கடலும் மலையுங் காலையும் மாலையு மெல்லாம்
உரையில் விரவி வருவா னொருவ னுருத்திர லோகன்
வரையின் மடமகள் கேள்வன் வானவர் தானவர்க் கெல்லாம்
அரைய னிருப்பதும் ஆரூர் அவ ரெம்மையும் ஆள்வரோ கேளீர்.

தனியனென் றெள்கி யறியேன் தம்மைப் பெரிதும் உகப்பன்
முனிபவர் தம்மை முனிவன் முகம்பல பேசி மொழியேன்
கனிகள் பலவுடைச் சோலைக் காய்க்குலை யீன்ற கமுகின் [ர்.
இனிய னிருப்பதும் ஆரூர் அவ ரெம்மையும் ஆள்வரோ கேளீ

சொல்லிற் குலாவன்றிச் சொல்லேன் தொடர்ந்தவர்க் குந்துணை யல்
கல்வில் வலிய மனத்தேன் கற்ற பெரும்புல வாணர் [லேன்
அல்லல் பெரிதும் அறுப்பான் அருமறை ஆறங்கம் ஓதும்
எல்லை யிருப்பதும் ஆரூ ரவ ரெம்மையு மாள்வரோ கேளீர்.

நெறியும் அறிவுஞ் செறிவும் நீதியும் நான்மிகப் பொல்லேன்
மிறையுந் தறியும் உகப்பன் வேண்டிற்றுச் செய்து திரிவன்
பிறையும் அரவும் புனலும் பிறங்கிய செஞ்சடை வைத்த
இறைவ னிருப்பதும் ஆரூ ரவ ரெம்மையு மாள்வரோ கேளீர்.

---

(க) உரையில் விரவிவருவான் - சொல்லுவார் சொல்லில் கலந்து வருவான். தானவர் - அசுரர். (உ) தனியன் - வேறு துணை இல்லாதவன். எள்கி-இகழ்ந்து. தம்மைப் பெரிதும் - சிவபெருமானை மிகவும். முகம் - முகமன், உபசார வார்த்தை. (ங) குலா(வு) அன்றி - சிநேகம் பாராட்டும் வார்த்தை அல்லாமல் வேறொன்றையும். எல்லை - ஞான சூரியன். (ச) செறிவு - கலப்பு; அன்பு. மிறை - குற்றம். தறி - வெட்டெனப் பேசல்.

நீதியி லொன்றும் வழுவேன் நிட்கண்ட கஞ்செய்து வாழ்வேன்
வேதியர் தம்மை வெகுளேன் வெகுண்டவர்க் குந்துணை யாகேன்
சோதியிற் சோதியெம் மானைச் சுண்ணவெண் ணீறணிந் திட்ட
ஆதி யிருப்பதும் ஆரூ ரவ ரெம்மையு மாள்வரோ கேளீர். ௫

அருத்தம் பெரிதும் உகப்பன் அலவலை யேனலந் தார்கள்
ஒருத்தர்க் குதவியேன் அல்லேன் உற்றவர்க் குந்துணை யல்லேன்
பொருத்தமே லொன்றுமி லாதேன் புற்றெடுத் திட்டிடங் கொண்ட
அருத்த னிருப்பதும் ஆரூ ரவ ரெம்மையு மாள்வரோ கேளீர்.

சந்தம் பலவறுக் கில்லேன் சார்ந்தவர் தம்மடிச் சாரேன்
முந்திப் பொருவிடை யேறி மூவுல குந்திரி வானை
கந்தம் கமழ்கொன்றை மாலைக் கண்ணியன் விண்ணவ ரேத்தும்
எந்தை யிருப்பதும் ஆரூ ரவ ரெம்மையு மாள்வரோ கேளீர்.

நெண்டிக்கொண் டேயுங்கி லாய்ப்பன் நிச்சய மேயிது திண்ணம்
மிண்டர்க்கு மிண்டலாற் பேசேன் மெய்ப்பொரு ளன்றி யுணரேன்
பண்டங் கிலங்கையர் கோனைப் பருவரைக் கீழடர்த் திட்ட
அண்ட னிருப்பதும் ஆரூ ரவ ரெம்மையு மாள்வரோ கேளீர்.

நமர்பிற ரென்ப தறியேன் நான்கண்ட தேகண்டு வாழ்வேன்
தமரம் பெரிதும் உகப்பன் தக்கவா றொன்றுமி லாதேன்
குமரன் திருமால் பிரமன் கூடிய தேவர் வணங்கும்
அமர னிருப்பதும் ஆரூ ரவ ரெம்மையு மாள்வரோ கேளீர்.

ஆசை பலஅறுக் கில்லேன் ஆரையும் அன்றி யுரைப்பேன்
பேசிற் சழக்கலாற் பேசேன் பிழைப்புடை யேன்மனந் தன்னால்

---

(௫) நிட்கண்டகம் - பட்சபாதமின்மை. தக்கன்தன் பெரு வேள்வி நிரந்தரம் செய்த நிட்கண்டகனை—**சுந்தரர்** (வரங்கள்.) (௬) அருத்தம் - பொருள். அலவலையேன் - அற்பன். உற்றவர் - அடுத்தவர். அருத்தன் - கடவுள். (௭) சந்தம் - ஆசை. (௮) நெண்டிக் கொண்டேயுங் கிலாய்ப்பன் - நெளித்துக் கொண்டேயும் களிப்பேன். மிண்டர் - வீண்வழக்கிடுவோர். மிண்டு - வன்சொல். அண்டன் - உலகங்களுக்கு எல்லாம் கர்த்தா. (௯) நமர் பிறர் - பிறரெல்லாம் நம்மவர் (நம் அன்பிற்கு உரியவர்) தமரம் - ஆரவாரம். தக்கஆறு - தகுந்த வழி ; முத்திநெறி. அமரன் - அழிவில்லாதவன். (௧௦) அன்றி - பகைத்து. சழக்கு - பொய்.

ஓசை பெரிதும் உகப்பேன் ஒலிகடல் நஞ்சமு துண்ட
ஈச னிருப்பதும் ஆரூ ரவ ரெம்மையு மாள்வரோ கேளீர். ௧௦

எந்தை யிருப்பது மாரூ ரவ ரெம்மையு மாள்வரோ வென்று
சிந்தை செயுந்திறம் வல்லான் திருமரு வுந்திரள் தோளான்
மந்த முழவம் இயம்பும் வளவயல் நாவலா ரூரன்
சந்த மிசையொடும் வல்லார் தாம்புக ழெய்துவர் தாமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

வானுற நீள்திரு வாயில்நோக்கி மண்ணுற ஐந்துறுப் பால் வணங்கித், தேனுறை கற்பக வாசமாலைத் தேவாசிரியன் தொழு திறைஞ்சி, ஊனும் உயிரும் உருகும் அன்பால் உச்சி குவித்த செங்கைகளோடும், தூநறுங் கொன்றையான் மூலட்டானம் சூழ் திரு மாளிகை வாயில் புக்கார்.

புற்றிடங் கொண்ட புராதனனைப் பூங்கோயில் மேய பிரானை யார்க்கும், பற்றிடம் ஆய பரம்பொருளைப் பார்ப்பதி பாகனைப் பங்கயத்தாள், அர்ச்சனை செய்ய அருள்புரிந்த அண்ணலை மண் மிசை வீழ்ந்திறைஞ்சி, நற்றமிழ் நாவலர் கோன்உடம்பால் நன் மையின் தன்மையை மெய்ம்மை பெற்றார்.

அன்பு பெருக உருகிஉள்ளம் அலையஅட் டாங்கபஞ் சாங்கமாக, முன்பு முறைமையி னல்வணங்கி முடிவிலாக் காதல் முதிர ஓங்கி, நன்புலன் ஆகிய ஐந்தும்ஒன்றி நாயகன் சேவடி எய்தப்பெற்ற, இன்பவெள் ளத்திடை மூழ்கிநின்றே இன்னிசை வண்தமிழ் மாலைபாட.

வாழிய மாமறைப் புற்றிடங்கொள் மன்னவன் ஆரரு ளாலோர் வாக்குத், "தோழமை ஆக உனக்குநம்மைத் தந்தனம் நாம்முன்பு தொண்டுகொண்ட, [1]வேள்வியில் அன்றுநீ கொண்டகோலம் என்றும் புனைந்துநின் வேட்கைதீர, வாழிமண் மேல்விளை யாடு வாய்"என் றாரூரர் கேட்க எழுந்ததன்றே.

கேட்க விரும்பிவன் தொண்டர் என்றும் கேடிலாதானை இறைஞ்சி நின்றே,"ஆட்கொள வந்த மறையவனே! ஆரூர் அமர்ந்த அருமணியே!, வாட்கயல் கொண்டகண் மங்கைபங்கா! மற்றுன்

(௧௧) மந்தமுழவம் - மெல்லோசையோடு கூடிய மத்தளம்.
[1]வேள்வி - திருமணம்.

பெரிய கருணையன்றே!, நாட்கம லப்பதம் தந்துநின்று நாயினேனைப்பொரு ளாக" என்றார்.

என்று பலமுறை யால்வணங்கி எய்திய உள்ளக் களிப்பினோடும், வென்றி அடல்விடை போல்நடந்து வீதி விடங்கப் பெருமான் முன்பு, சென்று தொழுது துதித்து வாழ்ந்து திருமாளிகைவலம் செய்து போந்தார், அன்று முதலடி யார்களெல்லாம் தம்பிரான் தோழர் என்றே அறைந்தார்.

மைவளர் கண்டர் அருளினலே வண்தமிழ் நாவலர் தம்பெருமான், சைவ விடங்கின் அணிபுனைந்து சாந்தமும் மாலையும் தாரும்ஆகி, மெய்வளர் கோலமெல் லாம்பொலிய மிக்கவிழுத்தவ வேந்தர் என்னத், தெய்வ மணிப்புற்று ளாரைப்பாடித் [1]திளைத்து மகிழ்வொடுஞ் செல்லா நின்றார்.

—பே. த. 124, 125, 126, 127, 128, 129, 130.

## பரவையார் திருமணம்

இதற்கு முன் கயிலையில் இருந்த உமைஅம்மையாரின் சேடியர் இருவருள், கமலினி என்பவர் திருவாரூரில் உருத்திரகணிகையர் குலத்திற் பிறந்து, பரவை என்னும் பெயருடன் வளர்ந்து மங்கைப் பருவம் அடைந்து, தினந்தோறும் திருவாரூர் பூங்கோயிலுக்குச் சென்று வன்மீகநாதரைத் தரிசித்து வருவாராயினர். ஒருநாள் நம்பி ஆரூரர் பரிசனங்களுடன் கோயிலுக்குப் போய் ஆண்டவனைத் தரிசித்து மீளும்பொழுது, சுவாமி தரிசனம் செய்ய வந்துகொண்டிருந்த பரவையாரைத் திருவருள்கூட்டக் கண்டார். கண்டவுடன் பரவையார்மீது காதல்கொண்டு, சிவபெருமான் திருவருளே இவ்வடிவு கொண்டு வந்ததோ என்று எண்ணினர்.

கற்பகத்தின் பூங்கொம்போ காமன்தன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவனருளோ அறியேன்என் றதிசயித்தார்.

—பே. த. 140.

---

[1]திளைத்து - சிவானந்தத்தில் மூழ்கி.

பரவையாரும் திருவருள் கூட்டுவிக்க நம்பிஆரூரரைக் கண்டு காதல்கொண்டு, சிவபெருமான் திருவருள் பெற்றவர் என்று நினைத்தார்.

முன்னேவந் தெதிர்தோன்றும் முருகனோ பெருகொளியால்
தன்னேரில் மாரனோ தார்மார்பின் விஞ்சையனோ
மின்னேர்செஞ் சடைஅண்ணல் மெய்யருள்பெற் றுடையவனோ
என்னே!என் மனந்திரித்த இவன்யாரோ எனநினைந்தார்.

—பெ. பு. 144.

இவ்வாறு இருவரும் ஒருவர்மீது ஒருவர் காதல்கொண்டு திருமணம் செய்துகொள்ள விரும்பி, சிவபிரானை வேண்டினார்கள். அவர்களை இவ்வுலகில் வரும்படி முன்பு அருள்செய்த அடிகள், திருவாரூரிலுள்ள அடியவர்கள் கனவிற்றோன்றி "ஆரூரருக்கும் பரவைக்கும் மணம் செய்து வையுங்கள்" என்று கட்டளையிட்டு இந்தச் செய்தியை இருவருக்கும் தெரிவித்தார். மறுநாள் காலையில் அடியவர்கள் கூடி நாவலர்கோனும் பரவையாரும் மகிழத் திருமணத்தை முடித்தனர். நாவலூரரும் சிவபிரான் திருவருள் நினைவுடன் சிவயோக நெறியிலே பரவையாருடன் போகம் அநுபவித்துத் திருப்பதிகங்களாகிய தமிழ்ப் பாமாலைகளை இறைவனுக்குச்சாத்தி இன்பமாக வாழ்ந்து வந்தார்.

ஒருநாள் பூங்கோயிலை அடைந்து, தேவாசிரிய மண்டபத்தில் எண்ணிலாத சிவனடியார்கள் கூடியிருக்கக் கண்டு, "இவர்களுக்கு நான் அடியன் ஆகும் நாள் எந்நாள்" என்று எண்ணியவராய்த் திருக்கோயில் வாயிலின் முன் பணிந்து உள்ளே புகுந்தார். சிவபெருமான் அவர் காணும்படி எதிரிலே காட்சிகொடுக்க, ஆரூரர் இறைவன் திருவடிகளைப் பணிந்து துதித்தனர். ஆண்டவனும் "மன்னுசீர் அடியார் தங்கள் வழித்தொண்டை உணர"ச்செய்து அவர்கள் பெருமையைப் பின்வருமாறு எடுத்துச் சொல்லி,

பெருமையால் தம்மை ஒப்பார் பேணலால் எம்மைப் பெற்றார்
ஒருமையால் உலகை வெல்வார் ஊனம்மேல் ஒன்றும் இல்லார்
அருமையாம் நிலையில் நின்றார் அன்பினால் இன்பம் ஆர்வார்
இருமையுங் கடந்து நின்றார் இவரைநீ அடைவாய் என்று.

—பெ. பு. 196.

அவர்களைப் பணிந்து பாடு என்று சிவபெருமான் கட்டளையிட, நம்பிஆரூரர் "அடியார்களை நான் எவ்வாறு பாடுவேன். பாமாலை பாடும் திறத்தை எனக்கு அருள்செய்ய வேண்டும்" என்று வேண்ட, உமையொருபாகன் அல்லல் தீர்ந்து உலகு உய்ய மறை அளித்த திருவாக்கால் "தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்று அடி எடுத்துக் கொடுத்து இசைப்பா மொழி என்று கூறி மறைந்தார். வன்தொண்டரும் அந்த அடியை முதலாகக்கொண்டு திருத்தொண்டத்தொகைப் பதிகம் பாடி அருளினர்.

## 39. திருத்தொண்டத்தொகை

### பண் - கொல்லிக் கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. க

இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தர்க் கடியேன்
ஏனாதி நாதன்றன் அடியார்க்கு மடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன்
கடவூரிற் கலயன்ற னடியார்க்கும் அடியேன்
மலைமலிந்த தோள்வள்ளல் மானக்கஞ் சாறன்
எஞ்சாத வாட்டாயன் அடியார்க்கு மடியேன்
அலைமலிந்த புனல்மங்கை ஆனாயர்க் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. உ

(க) அல்லி - மகரந்தத்தோடு கூடிய. (உ) இலைமலிந்த - இலை வடிவினைப் பொருந்திய. கலைமலிந்த சீர்நம்பி - நூல்களில் போற்றப் படும் மிக்க சிறப்பினையுடைய ஆண் மக்களிற் சிறந்தவரான. எஞ்சாத - (அன்பில்) குறைவுபடாத. வாள்தாயன் - அரிவாளையுடைய தாயனாயனார்.

*மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன்
முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கு மடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கு மடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் மடியார்க்கு மடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினா லெறிந்த
அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக் கடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. ௫

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்ற னடியார்க்கு மடியேன்
பெருநம்பி குலச்சிறைதன் னடியார்க்கு மடியேன்
பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கு மடியேன்
ஒருநம்பி அப்பூதி யடியார்க்கு மடியேன்
ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கர்க் கடியேன்
அருநம்பி நமிநந்தி யடியார்க்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. ௬

வம்பறா வரிவண்டு மணம்நாற மலரும்
மதுமலர்நற் கொன்றையா னடியலாற் பேணா
எம்பிரான் சம்பந்த னடியார்க்கு மடியேன்
ஏயர்கோன் கலிக்காம னடியார்க்கு மடியேன்

---

(௫) செம்மையே - திருந்திய மனத்தையுடைய. மெய்ம்மையே- உண்மை அன்போடு. திருமேனி - சிவலிங்கத் திருமேனி(யை). அம்மையான் அடிச்சண்டி - மோட்சத்தைத் தருவோ னாகிய சிவபெருமானுடைய திருவடி அடைந்த சண்டேச நாயனார். (௬) திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட - வீடுபேறாகிய செல்வத்திற்கு இருப்பிடமாகிய செம்பொருளையே செவ்விய பற்றுக்கோடாகக் கொண்ட. (௭) வம்புஅறா - வாசனை நீங்காத.

* விபூதி, உருத்திராக்கம், சடைமுடி இவைகளுடன் அரசு செய்தமையால் " மும்மையா லுலகாண்ட மூர்த்தி " யென்றருளினர்.

நம்பிரான் திருமூல னடியார்க்கு மடியேன்
*நாட்டமிகு தண்டிக்கும் மூர்க்கர்க்கு மடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. ரு

வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கு மடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கு மடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டர்க் கடியேன்
கார்கொண்ட கொடைக் கழறிற் றறிவார்க்கு மடியேன்
கடற்காழிக் கணநாத னடியார்க்கு மடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோ னடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. சு

பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழர்க் கடியேன்
மெய்யடியான் நரசிங்க முனையரையர்க் கடியேன்
விரிதிரைசூழ் கடல்நாகை அதிபத்தர்க் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோ னடியார்க்கு மடியேன்
ஐயடிகள் காடவர்கோ னடியார்க்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. எ

---

(சு) கார்கொண்டகொடை-(கைம்மாறுவேண்டாத)மேகம்போன்ற ஈகைத்தன்மை. ஆர்கொண்ட - கூர்மை வாய்ந்த. (எ) "சத்தி வரிஞ்சையர்கோன்" என்பதை - வரிஞ்சியூர் சத்தியார் என மாற்றுக.

*பிறவி அந்தகராயிருந்து திருவாரூர்க் கமலாலய தீர்த்தத்தில் மூழ்கி எழுந்திருக்கும்போது சுவாமிகளுடைய திருவருளால் நாட்டம் விளங்கப் பெற்றவரென்பதுதோன்ற "நாட்டமிகு தண்டிக்கும்" என்றருளிச் செய்தனர். "அம்பரான் சோமாசி" என்பது - திருஅம்பர் என்னுந் தலத்தில் வாழ்பவர்.

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்குங் காரிக்கு மடியேன்
நிறைக்கொண்ட சிந்தையால் நெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்
துறைக்கொண்ட செம்பவளம் இருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலா னடியார்க்கு மடியேன்
அறைக்கொண்ட வேல்நம்பி முனையடுவார்க் கடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. அ

கடல்சூழ்ந்த உலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி இடங்கழிக்குந் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைத னடியார்க்கு மடியேன்
புடைசூழ்ந்த புலியதள்மேல் அரவாட ஆடிப்
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கு மடியேன்
அடல்சூழ்ந்த வேல்நம்பி கோட்புலிக்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. கூ

பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்
பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியேன்
அப்பாலும் அடிச்சார்ந்த அடியார்க்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. க0

---

(அ) காப்புக்கொண்டிருந்த - மனத்தில் நிறுத்தி தியானித்தலை யுடைய. நிறைக்கொண்ட சிந்தையான் - நிறைவினையுடைய சிந்தையை உடையவன். அறைக்கொண்ட - அறுக்குந் தன்மை உடைய. (கூ) அடல் சூழ்ந்த - வெற்றி பொருந்திய.

மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கும் நேசனுக்கு மடியேன்
தென்னவனாய் உலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனாம் அரனடியே அடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்
அன்னவனாம் ஆரூர னடிமைகேட்(டு) உவப்பார்
ஆரூரி லம்மானுக் கன்பரா வாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## நெல்மலை பெறுதல்

திருநாவலூரர் திருத்தொண்டத்தொகை அருளியபின் 'கருத்து ஒன்று காதலினால் கனகமதில் திருவாரூர் ஒருத்தர்கழல் முப்பொழுதும் உருகிய அன்பொடு பணிந்து, பெருத்தெழு மெய் அன்பினால் பிரியா(து) அங்கு உறையுநாளில், அவரிடத்துப் பேரன்பு பூண்டவராய், அவருக்குச் செந்நெல் அரிசி பருப்பு முதலிய பண்டங்களைத் தவறாமல் நெடுநாள்களாகக் கொடுத்துத் தொண்டு செய்துவந்த குண்டையூர்க் கிழார் என்னும் வேளாளர், மழையின்மையால் நெல் அனுப்பக் கூடாமையால் துயரம் அடைந்து உண்ணாமல் துயில்கொள்ளும்போது சிவபிரான் அவர் கனவில் " ஆரூரனுக்காக உனக்கு நெல் தந்தோம் " என்று அருளிச்செய்து குண்டையூர் முழுமையும் நெல் மலையாகச் செய்தருளினார். இவ்வாறு பெருமானார் நெல் மலையை அளித்த செய்தியை ஆரூரருக்குக் குண்டையூர்க்கிழார் சொல்ல, நம்பிஆரூரரும் குண்டையூருக்குச் சென்று நெல்மலையைக் கண்டு வியப்பெய்தி, அருகேயுள்ள திருக்கோளிலி என்னும் தலத்திற்குச் சென்று நெல்லினைத் திருவாரூருக்குக் கொண்டுவந்து சேர்க்க ஆளைத் தரவேண்டுமென்று அன்போடு பதிகம் பாடினார்.

---

(௧௧) தென்னவனாய் உலகாண்ட செங்கணார்க்கு - பாண்டிய இராச்சியத்திற்கு உரியராய் உலகத்தை அரசாட்சிசெய்த கோச்செங்கட்சோழ நாயனார்க்கு. என்னவன் - எமது தலைவன். காதலன் - புதல்வன்.

# 20. திருக்கோளிலி

## பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

நீள நினைந்தடியேன் உனைநித்தலுங் கைதொழுவேன்
வாளன கண்மடவாள் அவள்வாடி வருந்தாமே [றேன்
கோளிலி யெம்பெருமான் குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்
ஆளிலை யெம்பெருமா னவையட்டித் தரப்பணியே. க

வண்டம ருங்குழலா ளுமைநங்கையோர் பங்குடையாய்
விண்டவர் தம்புரமூன் றெரிசெய்தவெம் வேதியனே
தெண்டிரை நீர்வயல்சூழ் திருக்கோளிலி யெம்பெருமான்
அண்டம தாயவனே யவையட்டித் தரப்பணியே. உ

பாதியோர் பெண்ணைவைத்தாய் படருஞ்சடைக் கங்கைவைத்
மாதர்நல் லார்வருத்தம் அதுநீயும் அறிதியன்றே [தாய்
கோதில் பொழில்புடைசூழ் குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்
ஆதியே அற்புதனே யவையட்டித் தரப்பணியே. [றேன்

சொல்லுவ தென்னுனைநான் தொண்டைவாயுமை நங்கையைநீ
புல்கியி டத்தில்வைத்தாய்க் கொருபூசல்செய் தாருளரோ
கொல்லை வளம்புறவிற் குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
அல்லல் களைந்தடியேற் கவையட்டித் தரப்பணியே. ச

முல்லை முறுவல்உமை யொருபங்குடை முக்கணனே
பல்லயர் வெண்டலையிற் பலிகொண்டுழல் பாசுபதா
கொல்லை வளம்புறவிற் றிருக்கோளிலி யெம்பெருமான்
அல்லல் களைந்தடியேற் கவையட்டித் தரப்பணியே. ரு

---

(க) நீள - நெடுநேரம். அட்டில் தர - கொண்டுபோய்ச் சேர்க்க. (உ) விண்டவர் - பகைவர். (ச) தொண்டைவாய் - கொவ்வைக் கனி போன்ற சிவந்த வாயையுடைய. புல்கி இடத்தில் - இடப்பக்கத்தில் சேர்த்து. பூசல் - கலகம். (ரு) பல்அயர் - பல் உதிர்ந்த.

குரவ மருங்குழலா ளுமைநங்கையோர் பங்குடையாய்
பரவை பசிவருத்த மதுநீயு மறிதியன்றே [றேன்
குரவ மரும்பொழில்சூழ் குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்
அரவ மசைத்தவனே யவையட்டித் தரப்பணியே. ௬

எம்பெரு மானுனையே நினைந்தேத்துவ னெப்பொழுதும்
வம்பம ருங்குழலா ளொருபாகம் அமர்ந்தவனே
செம்பொனின் மாளிகைசூழ் திருக்கோளிலி யெம்பெருமான்
அன்பது வாய்அடியேற் கவையட்டித் தரப்பணியே. ௭

அரக்கன் முடிகரங்கள் அடர்த்திட்டவெம் மாதிப்பிரான்
பரக்கும் அரவல்குலாள் பரவையவள் வாடுகின்றாள் [றேன்
குரக்கினங் கள்குதிகொள் குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்
இரக்கம தாயடியேற் கவையட்டித் தரப்பணியே. ௮

பண்டைய மால்பிரமன் பறந்தும்மிடந் தும்அயர்ந்தும்
கண்டில ராயவர்கள் கழல்காண்பரி தாயபிரான்
தெண்திரை நீர்வயல்சூழ் திருக்கோளிலி யெம்பெருமான்
அண்டம தாயவனே யவையட்டித் தரப்பணியே. ௯

கொல்லை வளம்புறவிற் றிருக்கோளிலி மேயவனை
நல்லவர் தாம்பரவுந் திருநாவல வூரனவன்
நெல்லிட ஆட்கள்வேண்டி நினைந்தேத்திய பத்தும்வல்லார்
அல்லல் களைந்துலகின் அண்டர்வானுல காள்பவரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

அன்றிரவே அந்நெல்மலை முழுவதும் சிவபிரான் திருவருளால் திருவாரூருக்குக் கொண்டுவந்து சேர்ப்பிக்கப்பட்டது. பரவையார்

---

(௬) குரவு அமரும் - நறுமணங் கமழும். குரவு அமரும் பொழில் - குராமரங்கள் மிகுந்த சோலை. (௭) வம்பு - வாசனை. (௯) இடந்தும் - தோண்டியும்.

கட்டளைப்படி திருவாரூரில் உள்ளவர்கள் அந்நெல்மலையை எடுத்து வாரி வைத்துக்கொண்டு வன்றொண்டரைப் பணிந்து சுகமாய் வாழ்ந் தார்கள்.

நம்பிஆரூரரும் திருவாரூரில் உறையும் நாட்களில் புற்றிடங் கொண்டு வீற்றிருந்த செழுந்தேனை மிக்க விருப்போடு தாழ்ந்து உணர்வினாற் பருகித் துதித்துக்கொண்டிருந்தார். நாவலூரர் திரு வாரூர்ப் பெருமானிடம் விடைபெற்று மற்ற தலங்களுக்குச் சென்று சிவபெருமானைத் தொழ விரும்பி, பல பதிகளுக்குச் சென்று வணங்கி திருநாட்டியத்தான்குடிக்குச் சமீபிக்கும்போது அவ்வூரிலுள்ள கோட் புலி நாயனார் எதிர்கொண்டு வணங்கித் தம்மாளிகையின்கண் தூய மணிப்பொன் தவிசில் எழுந்தருளுவித்து, திருவடிகளை விளக்கி, அர்ச்சனை செய்து, திருவமுது செய்வித்தார். பிறகு கோட்புலி நாயனார் சிங்கடியார் வனப்பகையார் என்னும் தமது அருமைப் புதல்வியர் இருவரையும் வன்றொண்டர் தூநாண் மலர்த்தாள் பணி வித்துத் தாமும் தொழுது "சுவாமி அடியேன் பெற்ற மக்கள் இவர் இருவரையும் அடிமையாகக் கொண்டருளித் தங்கள் திருவடிகளைத் தொழுது உய்யும்படி கருணை புரியவேண்டும்" என்றார். அது கேட்ட பரவைக் கொழுநனார் "இவர்கள் எனக்கு மக்களாவார்" என்று சொல்லி அன்பு பாராட்டி, அவர்களுக்கு வேண்டுவன கொடுத்து, நாதர் கோயிலை அடைந்து,

வென்றி வெள்ளே றுயர்த்தருளும் விமலர் திருக்கோ புரம் இறைஞ்சி, ஒன்றும் உள்ளத் தோடும்அன்பால் உச்சி குவித்த கரத்தோடும், சென்று புக்குப் பணிந்துதிருப் பதிகம் பூணா ணென் றெடுத்துக், கொன்றை முடியார் அருளுரிமை சிறப்பித் தார் கோட் புலியாரை.

சிறப்பித் தருளுந் திருக்கடைக்காப் பதனி னிடைச்சிங் கடியா ரைப், பிறப்பித் தெடுத்த பிதாவாகத் தம்மை நினைந்த பெற்றியி னால், மறப்பில் வகைச்சிங் கடியப்பன் என்றே தம்மை வைத் தருளி, நிறப்பொற் புடைய இசைபாடி நிறைந்த அருள்பெற் றிறைஞ்சுவார்.

—பே. ஏ. 41, 42.

# 15. திருநாட்டியத்தான்குடி

பண் - தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

பூண்நா ணாவதோர் அரவங்கண் டஞ்சேன் புறங்காட் டாடல்கண் டிகழேன், பேணீ ராகிலும் பெருமையை யுணர் வேன் பிறவே ணாகிலும் மறவேன், காணீ ராகிலுங் காண்ப னென் மனத்தாற் கருதீ ராகிலுங் கருதி, நானே லும்மடி பாடுத லொழியேன் நாட்டியத் தான்குடி நம்பீ. க

கச்(சு)ஏர் பாம்பொன்று கட்டிநின் றிடுகாட் டெல்லியி லாடலைக் கவர்வன், துச்சே னென்மனம் புகுந்திருக் கின்றமை சொல்லாய் திப்பிய மூர்த்தீ, வைச்சே இடர்களைக் களைந்திட வல்ல மணியே மாணிக்க வண்ணா, நச்சே னொருவரை நானுமை யல்லால் நாட்டியத் தான்குடி நம்பீ. உ

அஞ்சா தேயுமக் காட்செய வல்லேன் யாதினுக் காசைப் படுகேன், பஞ்சேர் மெல்லடி மாமலை மங்கை பங்கா எம்பர மேட்டீ, மஞ்சேர் வெண்மதி செஞ்சடை வைத்த மணியே மாணிக்க வண்ணா, நஞ்சேர் கண்டா வெண்தலை ஏந்தீ நாட் டியத் தான்குடி நம்பீ. ௩

கல்லே னல்லேன் நின்புக ழடிமை கல்லா தேபல கற்றேன், நில்லே னல்லேன் நின்வழி நின்றார் தம்முடை

---

(க) பூண்நாண் - தரிக்கின்ற அரைநாண். (உ) கச்சு - கச்சை யாக. ஏர் - அழகிய. எல்லியில் - இராக்காலத்தில். கவர்வன் - விரும்பு வான். துச்சேன் - பொய்யன். திப்பியமூர்த்தி - விளக்கம் பொருந் திய மூர்த்தி. நச்சேன் - விரும்பேன். (௩) அஞ்சாதே உமக்கு ஆட்செய வல்லேன் யாதினுக்கு ஆசைப்படுகேன் - (எவ்வகை இடர் வரினும்) மனம் தளராமல் உனக்கு அடிமைப் பணி செய்ய வல்லவ னாகிய நான் வேறு எதன்பேரிலும் ஆசைப்படமாட்டேன். பர மேட்டி - தன் இஷ்டப்படி எவற்றையும் செய்பவன். மஞ்சு ஏர் வெண்மதி - மேகங்களால் சூழப்பட்ட அழகிய வெண்மையான சந்திரன். (௪) அடிமை நின்புகழ் கல்லாதே பல கற்றேன் - உனக்கு அடிமையாகிய நான் உன் திருப்புகழைக் கூறும் நூல்களைக் கற்காமல் பயனற்ற பல நூல்களைக் கற்று வாழ்நாளை வீணாக்கினேன்.

நீதியை நினைய, வல்லே னல்லேன் பொன்னடி பரவ மாட்டேன் மறுமையை நினைய, நல்லே னல்லேன் நானுமக் கல்லால் நாட்டியத் தான்குடி நம்பீ. ௪

மட்டார் பூங்குழல் மலைமகள் கணவனைக் கருதா தார் தம்மைக் கருதேன், ஒட்டீ ராகிலும் ஒட்டுவேன் அடியே னும்மடி யடைந்தவர்க் கடிமைப், பட்டே னாகிலும் பாடுத லொழியேன் பாடியும் நாடியும் அறிய, நட்டே னாதலால் நான்மறக் கில்லேன் நாட்டியத் தான்குடி நம்பீ. ௫

படப்பாற் றன்மையில் நான்பட்ட தெல்லாம் படுத்தா யென்றல்லல் பறையேன், குடப்பாச் சில்லுறை கோக்குளிர் வானே கோனே கூற்றுதைத் தானே, மடப்பால் தயிரொடு நெய்மகிழ்ந் தாடும் மறையோதீ மங்கை பங்கா, நடப்பீ ராகிலும் நடப்பன்நும் மடிக்கே நாட்டியத் தான்குடி நம்பீ. ௬

ஐவாய் அரவினை மதியுடன் வைத்த அழகா அமரர்கள் தலைவா, எய்வான் வைத்ததோ ரிலக்கினை யணைதர நினைந்தே னுள்ளமுள் ளளவும், உய்வா னெண்ணிவந் தும்மடி யடைந்தேன் உகவீ ராகிலும் உகப்பன், நைவா னன்றுமக் காட்பட்ட தடியேன் நாட்டியத் தான்குடி நம்பீ. ௭

---

(௫) மட்டு ஆர் - தேன் நிறைந்த. ஒட்டீராகிலும் ஒட்டுவன் - நீர் என்னை பற்றுவிட்டாலும் நான் உம்மைப் பற்றிக் கொள்வேன். (௬) படப்பால் தன்மையின்......பறையேன் - நான் என் ஊழ்வினைப் பயனால் துன்பப்படவேண்டிய தன்மையினால், நான் அனுபவித்த துன்பங்களை நீ செய்வித்தாய் என்று உன் மீது குறைகூறி என் துன்பங்களை வெளியிடமாட்டேன். குளிர் வானே - குளிர்ச்சியைத் தருகின்ற மழையே. (௭) ஐவாய் அரவம் - ஐந்தலை நாகம். இலக்கு - குறி. உகத்தல் - விரும்புதல். நைவான் அன்று உமக்கு ஆட்பட்டது அடியேன் - அடியேன் உமக்கு அன்று ஆட்பட்டது நான் உம்மிடம் அன்பு கூர்ந்து மனம் கசியும் பொருட்டல்லவா? நைவான் நன்று என்று பிரித்து நன்றாக நையும்பொருட்டு என்றும் பொருள் கொள்ளலாம்.

கலியேன் மானுட வாழ்க்கையொன் றாகக் கருதிடிற் கண்கள்நீர் பில்கும், பலிதேர்ந் துண்பதோர் பண்புகண் டிகழேன் பசுவே யேறிலும் பழியேன், வலியே யாகிலும் வணங்குத லொழியேன் மாட்டேன் மறுமையை நினையேன், நலியேன் ஒருவரை நானுமை யல்லால் நாட்டியத் தான்குடி நம்பீ. ௮

குண்டா டிச்சமண் சாக்கியப் பேய்கள் கொண்டா ராகிலுங் கொள்ளக், கண்டா லுங்கரு தேனெரு தேறுங் கண்ணா நின்னல தறியேன், தொண்டா டித்தொழு வார்தொழக் கண்டு தொழுதே னென்வினை போக, நண்டா டும்வயல் தண்டலை வேலி நாட்டியத் தான்குடி நம்பீ. ௯

கூடா மன்னரைக் கூட்டத்து வென்ற கொடிறன் கோட்புலி சென்னி, நாடார் தொல்புகழ் நாட்டியத் தான்குடி நம்பியை நாளும் மறவாச், சேடார் பூங்குழற் சிங்கடி யப்பன் திருவா ரூர னுரைத்த, பாட ராகிலும் பாடுமின் தொண்டீர் பாடநம் பாவம் பற்றறுமே. ௧௦

திருச்சிற்றம்பலம்

அங்கு நின்றும் எழுந்தருளி அளவில் அன்பின் உள்மகிழச்
செங்கண் நுதலார் மேவுதிரு வலிவ லத்தைச் சேர்ந்திறைஞ்சி
மங்கை பாகர் தமைப்பதிகம் "வலிவ லத்துக் கண்டேன்" என்
றெங்கும் நிகழ்ந்த தமிழ்மாலை எடுத்துத் தொடுத்த இசைபுனைவார்.

**நன்று மகிழ்ந் சம்பந்தர் நாவுக் கரசர் பாட்டுகந்தீர்***
என்று சிறப்பித் திறைஞ்சிமகிழ்ந் தேத்தி அருள்பெற் றெழுந்தருளி
மன்றி னிடையே நடம்புரிவார் மருவு பெருமைத் திருவாரூர்
சென்று குறுகிப் பூங்கோயிற் பெருமான் செம்பொற் கழல்பணிந்து.

—பே. ஏ. 43, 44.

---

(௮) கலியேன் - வஞ்சனேன். நலியேன் - வருத்தமாட்டேன். (௯) குண்டாடி - கலகஞ்செய்யும். கொண்டாராகிலும்......கண்டாலும் - (நன்னெறியை)க் கொண்டாராலும் அங்ஙனம் கொள்வதைப் பார்த்தாலும். தண்டலை - சோலை. (௧௦) கொடிறன் - வல்லமை உடையவன். சென்னி நாடு ஆர் - சோழநாட்டில் நிறைந்த. பாடராகிலும் பாடுமின் - பாடுவதில் உமக்கு விருப்ப மில்லாவிட்டாலும் பயன் கருதியாவது பாடுங்கள்.

*திருவலிவலம் - 5-வது பாடல்.

## 67. திருவலிவலம்

### பண் - தக்கேசி

*திருச்சிற்றம்பலம்*

ஊன்அங் கத்(து)உயிர்ப் பாயுல கெல்லாம்
    ஓங்கா ரத்துரு வாகிநின் றானை
வானங் கைத்தவர்க் கும்அளப் பரிய
    வள்ள லைஅடி யார்கள் தம் முள்ளத்
தேனங் கைத்தமு தாகியுள் ளூறுந்
    தேச னைத்திளைத் தற்கினி யானை
மான்அங் கைத்தலத்(து) ஏந்தவல் லானை
    வலிவ லந்தனில் வந்துகண் டேனே. க

பல்லடி யார்பணிக் குப்பரி வானைப்
    பாடியா டும்பத்தர்க்(கு) அன்புடை யானைச்
செல்லடி யேநெருக் கித்திறம் பாது
    சேர்ந்தவர்க் கேசித்தி முத்திசெய் வானை

---

(க) ஊனங்கத்து உயிர்ப்பாய் - ஊனால் ஆகிய சரீரத்துள் சுவாசமாய்—'என்னுளே உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு'—அப்பர் (என்னிலாரு.) வானம் கைத்தவர்க்கும்............வள்ளலை - சுவர்க்க போகத்தை வெறுத்து முத்திப் பேற்றையே விரும்பும் மெய் அடியார்களாலும் அளந்து அறியமுடியாத உதாரத்தன்மை உடையவனை. அடியார்கள் தம் உள்ளம் தேன்அம் கைத்து அமுதாகி உள்ளூறும் தேசனை - அடியார்கள் உள்ளத்தே தேனும் கசக்கிறது என்று சொல்லும்படியான தீஞ்சுவையை உடைய அமிர்தத்தைப்போல (நினைக்கும் தோறும் பேசுந்தோறும்) உள்ளே ஊறி இனிக்கும் ஒளிவடிவாயிருப்பவனை. திளைத்தற்கு - மனம் கலந்து அனுபவிப்பதற்கு. (உ) பரிவானை- அன்பு கூர்வானை. செல் அடியே நெருக்கி - செல்லுகின்ற திருவருள் நெறியிலே தொடர்ந்து சென்று. திறம்பாது சேர்ந்தவர்க்கே - (என்ன இடையூறு வரினும்) மனம் மாறுபடாமல் தன்னைச் சரணாக அடைந்தவர்க்கே.

நல்லடி யார்மனத்(து) எய்ப்பினில் வைப்பை
நானுறு குறையறிந் தருள்புரி வானை
வல்லடி யார்மனத் திச்சையு ளானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. ௨

ஆழிய னும்அகன் றேஉயர்ந் தானை
ஆதியந் தம்பணி வார்க்(கு)அணி யானைக்
கூழைய ராகிப்பொய் யேகுடி யோம்பிக்
குழைந்து மெய்யடி யார்குழுப் பெய்யும்
வாழியர்க் கேவழு வாநெறி காட்டி
மறுபிறப் பென்னை மாசறுத் தானை
மாழையொண் கண்ணுமை யைமகிழ்ந் தானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. ௩

நாத்தான் உன்திற மேதிறம் பாது
நண்ணி அண் ணித்(து)அமு தம்போதிந் தூறும்
ஆத்தா னைஅடி யேன்றனக் கென்றும்
அளவிறந் தபல தேவர்கள் போற்றும்
சோத்தா னைச்சுடர் மூன்றிலும் ஒன்றித்
துருவி மால்பிர மன்னறி யாத
மாத்தா னைமாத் தெனக்குவைத் தானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. ௪

---

(௨) எய்ப்பினில் வைப்பு - இளைத்த காலத்துச்சேமித்துவைத்த நிதிபோல்வான். நான் உறுகுறை அறிந்து அருள் புரிவானை - நான் அடைந்த குறைகளை நான் விண்ணப்பியாமலே தானே அறிந்து அருள்செய்து அக்குறைகளை நிவர்த்திக்கின்றவனை. "வேண்டத்தக்க தறிவோய்நீ......" திருவாசகம். (௩) ஆதிஅந்தம் - ஆதி முதல் அந்தம் வரை ; சதாகாலமும். கூழையராகிப்......வாழியர்க்கே - அறிவில்லாதவராகி நிலையில்லாத உடலைப் பாதுகாத்து, பிறகு நல்லுணர்ச்சி பெற்று மனம் வருந்தி, மெய்யடியார் கூட்டத்தில் சேர்ந்து வாழும் மேலான வாழ்வு உடையவர்க்கே. வழுவாநெறி காட்டி-தவறாத முத்தி நெறியைக் காட்டி. மாழை ஒண்கண்-மாவடுப்போலும் அழகிய கண்ணை உடைய. (௪) நாத்தான்......ஆத்தானை - என்னுடைய நாவானது உன் புகழையே தவறாமல் சொல்லுவதனால் அந்நாவில் இனிய சுவை உண்டாகி,அமுதத்தைச் சேமித்து அதனின்றும் ஊறுவதுபோல் இன்பத்தைக் கொடுக்கும் நேசனை. சோத்தானை - அஞ்சலிக்கு உரியவனை. துருவி - தேடி. மாத்தானை - மகத்தானை ; பெருமை உடையவனை.

நல்லிசை ஞானசம் பந்தனும் நாவினுக்
கரசரும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லிய வேசொல்லி ஏத்துகப் பானைத்
தொண்ட னேனறி யாமை யறிந்து
கல்இயல் மனத்தைக் கசிவித்துக் கழலடி
காட்டியென் களைகளை யறுக்கும்
வல்லியல் வானவர் வணங்கநின் றானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. ரு

பாடு மாபாடிப் பணியுமா றறியேன்
பனுவுமா பனுவிப் பரவுமா றறியேன்
தேடுமா தேடித் திருத்துமா றறியேன்
செல்லுமா செல்லச் செலுத்துமா றறியேன்
கூடுமா றெங்ஙன மோவென்று கூறக்
குறித்துக் காட்டிக் கொணர்ந்தேனை யாண்டு
வாடிநீ வாளா வருந்தலென் பானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. சு

பந்தித்த வல்வினைப் பற்றறப் பிறவிப்
படுக டற்பரப் புத்தவிர்ப் பானைச்
சந்தித் ததிற லாற்பணி பூட்டித்
தவத்தை ஈட்டிய தம்மடி யார்க்குச்

---

(ரு) சொல்லியவே சொல்லி ஏத்துகப்பானை - சொல்லிய பாடல்களையே பலமுறையும் சொல்லித் துதித்தால் மகிழ்வோனை. கல்இயல் மனத்தை - கல்லின் தன்மையை உடைய மனத்தை. களை - குற்றம். (சு) பாடுமா(று) பாடி - பாடும் வழியாய்ப் பாடி. பனுவுதல் - பாடல்களைச் செய்தல். குறித்துக் காட்டி - சுட்டிக்காட்டி. கொணர்ந்து - மீட்டு. (எ) பந்தித்த - கட்டிய. வல்வினைப் பற்றுஅற - வல்வினையாகிய பாசம் அறுபட்டு ஒழிந்து (அதனால்). பிறவிப்படுகடற்பரப்புத் தவிர்ப்பானை - பிறவியாகிய பெரிய கடலைக் கடந்து முத்தியாகிய கரையில் சேர்ப்பிப்பவனை. சந்தித்த திறலால் - சிவத்தோடு நினைப்பு மறப்பின்றி கலந்து நிற்கும் சாதன வலிமையால். பணி பூட்டித் தவத்தை ஈட்டிய - சிவபெருமானுக்கு உகந்த திருப்பணிகளை அன்பினாற் செய்து அதனால் சிவபுண்ணியத்தை மிகுதியாகச் செய்த.

சிந்தித் தற்கெளி தாய்த்திருப் பாதஞ்
சிவலோ கந்திறந் தேற்றவல் லானை
வந்திப் பார்தம் மனத்தினுள் ளானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. எ

எவ்வவர் தேவர் இருடிகள் மன்னர்
எண்ணிறந் தார்கள்மற் றெங்கு(ம்)நின் றேத்த
அவ்வவர் வேண்டிய தேயருள் செய்து
அடைந்தவர்க் கேஇட மாகிநின் றானை
இவ்வவர் கருணையெங் கற்பகக் கடலை
எம்பெரு மானரு ளாயென்ற பின்னை
வவ்வியென் னாவி மனங்கலந் தானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. அ

திரியும் முப்புரஞ் செற்றதுங் குற்றத்
திறல ரக்கனைச் செறுத்ததும் மற்றைப்
பெரிய நஞ்சமு துண்டது முற்றும்
பின்னை யாய்முன்ன மேமுளைத் தானை*
அரிய நான்மறை அந்தண ரோவா(து)
அடிபணிந்தறி தற்கரி யானை
வரையின் பாவை மணாளனெம் மானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. கூ

ஏன்ற அந்தணன் தலையினை அறுத்து
நிறைக்க மாலுதி ரத்தினை யேற்றுத்
தோன்று தோள்மிசைக் களேபரந் தன்னைச்
சுமந்த மாவிர தத்தகங் காளன்

---

(அ) அடைந்தவர்க்கே இடமாகி - (பற்றுக்கோடு வேறு ஒன்றும் இன்றித் தன்னைச் சரணாக) அடைந்தவர்க்கு வீடுபேறாய். இவ்வவர் - இப்படிப்பட்ட. வவ்வி என் ஆவி - என் ஆவியை வவ்வி; என் உயிரைத் தன்வசப்படுத்தி. (கூ) செறுத்ததும் - தண்டித்ததும். (கo) ஏன்ற- எதிர்த்த. களேபரம்-எலும்பு. கங்காளன்-முழு எலும்பை அணிந்தவன்.

*முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே - பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே.—திருவாசகம்.

சான்று காட்டுதற் கரியவ னெளியவன்
தன்னைத் தன்னி லாமனத் தார்க்கு
மான்று சென்றணை யாதவன் றன்னை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. க௦

கலிவ லங்கெட ஆரழ லோம்புங்
கற்ற நான்மறை முற்றனை லோம்பும்
வலிவ லந்தனில் வந்துகண் டடியேன்
மன்னு நாவலா ரூரன்வன் றொண்டன்
ஒலிகொள் இன்னிசைச் செந்தமிழ் பத்தும்
உள்ளத் தால்உகந் தேத்தவல் லார்போய்
மெலிவில் வானுல கத்தவ ரேத்த
விரும்பி விண்ணுல கெய்துவர் தாமே. கக

திருச்சிற்றம்பலம்

இவ்வாறு திருவலிவலத்துப் பெருமானைத் தரிசித்துத் திருவாரூரை அடைந்து, புற்றிடங்கொண்டிருந்த பெருமானைத் தொழுது கொண்டு பேரின்பம் உற்றிருந்தார்.

## புகலூரிற் பொன் பெறல்

திருவாரூரில் பங்குனி உத்திரத் திருநாள் சமீபிக்கவும் பரவையார் செலவிற்குப் பொன்வேண்டித் திருப்புகலூர் கோயி லுக்குச் சென்று பெருமானைத் துதித்துப் பதிகம் பாடி வெளியே வரும் போது சிவனருளால் தூக்கம் வரவும், அங்கு திருப்பணிக்காக வைத்திருந்த செங்கற்களைப் பரப்பி அதன்மேல் பட்டு உத்தரியத்தை

---

(க௦) சான்று காட்டுதற்கு அரியவன் - தனக்கு ஒப்பாக வேறு எவரையும் இல்லாதவன். தன்னில்ஆம் மனத்தார்க்கு எளியவன் தன்னை - தங்களுடைய மனதில் தன்னை எப்போதும் மறவாமல் தியானிப்பவர்களுக்கு எளியவனாய் இருப்பவனை. மான்று - மயங்கி.
(கக) கலிவலம்.........ஓம்பும் - பாபத்தின் வலிமை கெட மிக்க ஓமாக்கினியை வளர்க்கின்றவர்களும், நன்றாகப் பயின்ற நான்கு வேதங்களின் முடிவாகிய உபநிடதங்களில் கூறிய ஞானாக்கினியைப் பாதுகாப்பவரும் ஆகிய அந்தணர்கள் வாழும்.

விரித்துத் தூங்கினார். பரவை கேள்வனார் விழித்தெழுந்தபோது, சிவபிரான் அருளால் செங்கற்களெல்லாம் செம்பொற் கற்களாயினமை கண்டு புகலூர் இறைவர் திருவருளைப் போற்றி,

தொண்டர் [1]உணர மகிழ்ந்தெழுந்து துணைக்கைக் கமல [2]முகைதலை கொண்டு கோயி லுட்புகுக் குறிப்பில் அடங்காப் பேரன்பு [மேல் மண்டு காத லுறவணங்கி வாய்த்த மதுர மொழிமாலை பண்டங் கிசையில் 'தம்மையே புகழ்ந்'தென் றெடுத்துப் பாடினார்.

—பெ. ஏ. 51.

## 34. திருப்புகலூர்

### பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

தம்மையே புகழ்ந்(து) இச்சை பேசினுஞ் சார்வினுந் தொண்டர் தருகிலாப், பொய்ம்மை யாளரைப் பாடாதே யெந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள், இம்மையேதரும் சோறுங்கூறையும் ஏத்தலாம்இடர் கெடலுமாம், அம்மையே சிவ லோகம்ஆள்வதற்(கு) யாதும்ஐயுற வில்லையே. க

மிடுக்கிலாதானை வீமனேவிறல் விசயனேவில்லுக் கிவ னென்று, கொடுக்கிலாதானைப் பாரியேயென்று கூறினுங் கொடுப் பாரிலை, பொடிக்கொள் மேனியெம் புண்ணியன்புக லூரைப்பாடுமின் புலவீர்காள், அடுக்குமேல்அம ருலகம்ஆள் வதற் கியாதுமையுற வில்லையே. உ

காணியேற்பெரி துடையனேகற்று நல்லனேசுற்றம் நன்கிளை பேணியேவிருந் தோம்புமேயென்று பேசினுங்கொடுப் பாரிலை பூணிபூண்டுழப் புட்சிலம்புந்தண் புகலூர்பாடுமின் புலவீர்காள் ஆணியாய்அம ருலகம்ஆள்வதற் கியாதுமையுற வில்லையே.

---

[1]உணர - துயில்நீங்க. [2]முகை - மொட்டு.

(க) இச்சை - இச்சகம்; முகஸ்துதி. சார்வினும் - சார்ந்திருந்தாலும். ஏத்தலாம் - துதித்தலாம்; அதனால் இம்மையில் சோறும் கூறையும் கிடைக்கும்; துன்பமும் கெடும். (உ) மிடுக்கு-பலம். விறல்-வெற்றி. பாரி - ஒருவள்ளல். அடுக்குமேல் - பாடுதல் கூடுமானால். (ங) காணி - நிலம். பூணி பூண்டுழப் புட்சிலம்பும் - எருதுகள் கட்டி உழவு செய்யப் பறவைகள் ஒலிக்கும். ஆணியாய் - உறுதியாக.

நரைகள்போந்துமெய் தளர்ந்துமூத்துடல் நடுங்கிநிற்கு மிக் கிழவனை, வரைகள்போல்திரள் தோளனேயென்று வாழ்த்தினுங்கொடுப் பாரிலை, புரைவெள்ளேறுடைப் புண் ணியன்புக லூரைப்பாடுமின் புலவீர்காள், அரையனுயமருல கம்ஆள்வதற் கியாதுமையுற வில்லையே. ச

வஞ்சநெஞ்சனை மாசழக்கனைப் பாவியைவழக் கில்லி யைப், பஞ்சதுட்டனைச் சாதுவேயென்று பாடினுங்கொடுப் பாரிலை, பொன்செய்செஞ்சடைப் புண்ணியன்புக லூரைப் பாடுமின் புலவீர்காள், நெஞ்சில்நோயறுத்(து) உஞ்சுபோவ தற் கியாதுமையுற வில்லையே. ரு

நலமிலாதானை நல்லனேயென்றும் நரைத்தமாந்தரை யிளையனே, குலமிலாதானைக் குலவனேயென்று கூறினுங் கொடுப் பாரிலை, புலமெலாம்வெறி கமழும்பூம்புக லூரைப் பாடுமின் புலவீர்காள், அலமரா(து)அம ருலகம்ஆள்வதற் கியாதுமையுற வில்லையே. சு

நோயனைத்தடந் தோளனேயென்றும் நொய்யமாந்தரை விழுமிய, தாயன்றேபுல வோர்க்கெலாமென்று சாற்றினுங் கொடுப் பாரிலை, போயுழன்றுகண் குழியாதேயெந்தை புக லூர்பாடுமின் புலவீர்காள், ஆயமின்றிப்போய் அண்டம்ஆள் வதற் கியாதுமையுற வில்லையே. எ

எள்விழுந்திடம் பார்க்குமாகிலும் ஈக்குமீகில னாகிலும், வள்ளலேயெங்கள் மைந்தனேயென்று வாழ்த்தினுங்கொடுப் பாரிலை, புள்ளெலாஞ்சென்று சேரும்பூம்புக லூரைப்பாடு மின் புலவீர்காள், அள்ளற்பட்டழுந் தாதுபோவதற் கியா துமையுற வில்லையே. அ

---

(ச) புரை - மேன்மை பொருந்திய. (ரு) மாசழக்கனை - பெரிய பொய்யனை. வழக்கில்லி - நீதியில்லாதவன். பஞ்சதுட்டன் - பஞ்ச பாதகங்களைச் செய்வோன். உஞ்சு - உய்ந்து. (சு) வெறி - வாசனை. அலமராது - துன்பமடையாமல். (எ) நொய்ய - அற்ப. உழன்று - திரிந்து. ஆயம் - தடை. (அ) அள்ளல் - சேறு ; நரகம்.

கற்றிலாதானைக் கற்றுநல்லனே காமதேவனை யொக்குமே, முற்றிலாதானை முற்றனேயென்று மொழியினுங் கொடுப் பாரிலை, பொத்திலாந்தைகள் பாட்டறப்புக லூரைப் பாடுமின் புலவீர்காள், அத்தனுயம ருலகமாள்வதற் கியாதுமையுற வில்லையே. க

தையலாருக்கோர் காமனேசால நலவழகுடை யையனே கையுலாவிய வேலனேயென்று கழறினுங்கொடுப் பாரிலை பொய்கைவாவியின் மேதிபாய்புக லூரைப்பாடுமின் புலவீர்காள் ஐயனாரம ருலகம்ஆள்வதற் கியாதுமையுற வில்லையே. க0

செறுவினிற்செழுங் கமலமோங்குதென் புகலூர்மேவிய செல்வனை, நறவம்பூம்பொழில் நாவலூரன் வனப்பகையப்பன் சடையன்றன், சிறுவன்வன்றொண்ட னூரன்பாடிய பாடல் பத்திவை வல்லவர், அறவனாரடி சென்றுசேர்வதற் கியாதுமையுற வில்லையே. கக

திருச்சிற்றம்பலம்

என்று திருப்பதிகம் பாடி, பேரின்பத்தை இம்மையே தருவார் திருவருளைப்பெற்று, நிதிக்குவைகளை எடுத்துக்கொண்டு திருப்பனையூர் புகுந்தார்.

செய்ய சடையார் திருப்பனையூர்ப் புறத்துத் திருக்கூத் தொடுங்காட்சி
எய்த அருள எதிர்சென்றங் கெழுந்த விருப்பால் விழுந்திறைஞ்சி
ஐயர் தம்மை அரங்காட வல்லார் அவரே அழகியர்என்(று)
உய்ய உலகு பெறும்பதிகம் பாடி அருள்பெற் றுடன்போந்தார்.

—பெ. ஏ. 53.

(க) முற்று - நிறைகுணம். பொத்தில்-பொந்துகளில். (க0) கழறினும் - சொல்லினும். (கக) செறு - வயல். நறவம் - தேன். அறவனார் - தர்ம சொரூபியாகிய சிவபெருமான்.

## 87. திருப்பனையூர்

### பண் - சீகாமரம்

*திருச்சிற்றம்பலம்*

மாட மாளிகை கோபு ரத்தொடு மண்டபம் வளரும் வளர்பொழில், பாடல் வண்டறை யும்பழ னத்திருப் பனையூர்த், தோடு பெய்தொரு காதி னிற்குழை தூங்கத் தொண்டர்கள் துள்ளிப்பாடநின், றாடு மாறுவல் லாரவ ரேஅழ கியரே.

நாறு செங்கழு நீர்மலர் நல்ல மல்லிகை சண்ப கத்தொடு
சேறு செய்கழ னிப்பழ னத்திருப் பனையூர்
நீறு பூசிநெய் யாடி தன்னை நினைப்ப வர்தம் மனத்த ராகிநின்
றாறு சூடவல் லாரவ ரேயழ கியரே. உ

செங்கண் மேதிகள் சேடெ றிந்து தடம்ப டிதலிற் சேலினத்தொடு, பைங்கண் வாளைகள் பாய்பழ னத்திருப் பனையூர்த், திங்கள் சூடிய செல்வ னாரடி யார்தம் மேல்வினை தீர்ப்பராய்விடில், அங்கி ருந்துறை வாரவ ரேயழ கியரே. ௩

வாளை பாய மலங்(கு) இளங்கயல் வரிவ രால்உக ளுங்கழனிப், பாளை யொண்கமு கம்புடை சூழ்திருப் பனையூர்த், தோளும் ஆகமுந் தோன்ற நட்டமிட் டாடு வாரடித்தொண்டர் தங்களை, ஆளு மாறுவல் லாரவ ரேயழ கியரே. ௪

கொங்கை யார்பல ருங்குடைந் தாட நீர்க்குவளை மலர் தரப், பங்க யம்மல ரும்பழனத்திருப் பனையூர், மங்கை பாகமும் மாலோர் பாகமுந் தாமுடை யவர்மான் மழுவினொ(டு), அங்கைத் தீயுகப் பாரவ ரேயழ கியரே. ௫

காவிரி புடைசூழ் சோணா டவர்தாம் பரவிய கருணை யங்க
பாவிரி புலவர் பயிலுந்திருப் பனையூர் [டலப்

(க) பழனம் - வயல். தோடுபெய்தொரு காதினில் குழைதூங்க - ஒரு காதினில் தோடும், மற்றொரு காதினில் குழையும் அணிந்து. தோடு - பெண் காதணி. குழை - ஆண் காதணி. (உ) நாறு - வாசனை வீசுகின்ற. (௩) சேடு எறிந்து - சேறாக்கி. தீர்ப்பராய் விடில் - தீர்த்து விடுவாரானால். (௪) மலங்கு - ஒருவகைமீன்.

மாஇரி மடநோக் கியஞ்ச மதக ரியுரி போர்த்து கந்தவர்
ஆவி லேந்துகப் பாரவ ரேயழ கியரே. சு

மரங்கள் மேல்மயி லால மண்டபம் மாட மாளிகை கோபு
ரத்தின்மேல், திரங்கல் வன்முக வன்புகப் பாய்திருப் பனை
யூர்த், துரங்கன் வாய்பிளந் தானுந் தாமலர்த் தோன்ற லும்
அறி யாமற் றோன் றிநின்(று), அரங்கி லாடவல் லாரவ ரேயழ
கியரே. எ

மண்ணெலாம் முழவம் அதிர்தர மாட மாளிகை கோபு
ரத்தின்மேல், பண்(ணி)யாழ் முரலும் பழனத்திருப் பனையூர்,
வெண்ணி லாச்சடை மேவிய விண்ணவ ரொடுமண் ணவர்
தொழ, அண்ண லாகிநின் றாரவ ரேயழ கியரே. அ

குரக்கி னங்குதி கொள்ளத் தேனுகக் குண்டு தண்
வயற் கெண்டை பாய்தரப், பரக்குந் தண்கழ னிப்பழ னத்
திருப் பனையூர், இரக்க மில்லவ ரைந்தொ டைந்தலை தோளிரு
பது தாள்நெரிதர, அரக்க னைஅடர்த் தாரவ ரேயழ கியரே.

வஞ்சி நுண்ணிடை மங்கை பங்கினர் மாதவர் வளரும்
வளர்பொழில், பஞ்சின் மெல்லடி யார்பயி லுந்திருப் பனையூர்,
வஞ்சி யும்வளர் நாவ லூரன்வ னப்பகை யவ ளப்பன் வன்
றொண்டன், செஞ்சொற் கேட்கேப் பாரவ ரேயழ கியரே. கO

திருச்சிற்றம்பலம்

என்னும் உலகு உய்யும்படியான திருப்பதிகம் பாடி, ஆரூரர் திருப்
பனையூரை விட்டு,செம்பொற் கற்களை எடுத்துக்கொண்டு திருவாரூரை
அடைந்து 'உளம் மன்னிய தம்பெருமானார் தம்மை வணங்கி' பரவை
யாருடன் மகிழ்ந்திருந்தார். திருவாரூருக்குச் சமீபத்திலுள்ள பல
கோவில்களுக்குச் சென்று வணங்கி, மீண்டும் திருவாரூரை
அடைந்து பலநாள் அவ்விடத்தில் அமர்ந்திருந்தார்.

பிறகு **திருநன்னிலத்துப் பெருங்கோயிலுக்குச்** சென்று
பிரானை வணங்கி,

---

(சு) மாஇரி மடநோக்கி - மான் அஞ்சி ஓடும் பார்வையை உடைய
உமாதேவியார். (எ) திரங்கல் - தோல் சுருங்கிய. முகவன் - குரங்கு.
துரங்கன் வாய் பிளந்தான்-குதிரை உருக்கொண்ட அசுரனது வாய்
பிளந்த கிருஷ்ணன். அரங்கு - அம்பலம்; நடனசாலை. (கூ) குண்டு-
குளம். (கO) வஞ்சி - வஞ்சிக்கொடி.

## 98. திருநன்னிலத்துப் பெருங்கோயில்

பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

தண்ணியல் வெம்மையினான் தலையிற்கடை தோறும்பலி
பண்ணியல் மென்மொழியா ரிடங்கொண்டுழல் பண்டரங்கன்
புண்ணிய நான்மறையோர் முறையாலடி போற்றிசைப்ப
நண்ணிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. க

வலங்கிளர் மாதவஞ்செய் மலைமங்கையோர் பங்கினனாய்ச்
சலங்கிளர் கங்கைதங்கச் சடையொன்றிடை யேதரித்தான்
பலங்கிளர் பைம்பொழில்தண் பனிவெண்மதி யைத்தடவ
நலங்கிளர் நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. உ

கச்சியன் இன்கருப்பூர் விருப்பன் கருதிக்கசிவார்
உச்சியன் பிச்சையுண்ணி உலகங்களெல் லாமுடையான்
நொச்சியம் பச்சிலையால் நுரைதீர்புன லாற்றொழுவார்
நச்சிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. ங

பாடிய நான்மறையான் படுபல்பிணக் கா(டு)அரங்கா
ஆடிய மாநடத்தான் அடிபோற்றியென்(று) அன்பினராய்ச்
சூடிய செங்கையினார் பலதோத்திரம் வாய்த்தசொல்லி
நாடிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. ச

பிலந்தரு வாயினொடு பெரிதும்வலி மிக்குடைய
சலந்தரன் ஆகமிரு பிளவாக்கிய சக்கரம்முன்
நிலந்தரு மாமகள்கோன் நெடுமாற்கருள் செய்தபிரான்
நலந்தரு நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. ரு

---

(க) தண்ணியல் வெம்மையினான் - குளிர்ச்சியும் வெப்பமும் ஒருங்கே உடையவன். கடை - வாயில். பண்டரங்கன் - பண்டரங்கம் என்னும் கூத்துடைய சிவபெருமான். (உ) வலம் கிளர் - மன உறுதி மிகுந்த. பலம் - பழங்கள். (ச) சூடிய - குவித்த. (ரு) பிலந்தரு-குகை போன்ற.

வெண்பொடி மேனியினான் கருநீல மணிமிடற்றான்
பெண்படி செஞ்சடையான் பிரமன்சிரம் பீடழித்தான்
பண்புடை நான்மறையோர் பயின்றேத்திப்பல் கால்வணங்கும்
நண்புடை நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. ௬

தொடைமலி கொன்றைதுன்றுஞ் சடையன்சுடர் வெண்மழுவாள்
படைமலி கையன்மெய்யிற் பகட்(டு)ஈருரிப் போர்வையினான்
மடைமலி வண்கமலம் மலர்மேன்மட அன்ன(ம்)மன்னி
நடைமலி நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. ௭

குளிர்தரு திங்கள்கங்கை குரவோடரக் கூவிளமும்
மிளிர்தரு புன்சடைமே லுடையான்விடை யான்விரைசேர்
தளிர்தரு கோங்குவேங்கை தடமாதவி சண்பகமும்
நளிர்தரு நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. ௮

கமர்பயில் வெஞ்சுரத்துக் கடுங்கேழற்பின் கானவனாய்
அமர்பயில் வெய்திஅருச் சுனற்கருள் செய்தபிரான்
தமர்பயில் தண்விழவிற் தகுசைவர் தவத்தின்மிக்க
நமர்பயில் நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. ௯

கருவரை போலரக்கன் கயிலைம்மலைக் கீழ்க்கதற
ஒருவிர லாலடர்த்(து)இன் னருள்செய்த உமாபதிதான்
திரைபொரு பொன்னிநன்னீர்த் துறைவன்திகழ் செம்பியர்கோன்
நரபதி நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. ௧௦

கோடுயர் வெங்களிற்றுத் திகழ்கோச்செங்க ணான்செய்கோயில்
நாடிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனைச்
சேடியல் சிங்கிதந்தை சடையன்திரு வாரூரன்
பாடிய பத்தும்வல்லார் புகுவார்பர லோகத்துளே. ௧௧

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடினார். பின்பு திருவீழிமிழலையுள் உள்ள

(௬) பெண்படி - கங்கை தங்கிய. (௭) துன்றும் - நெருங்கிய. பகட்டு ஈர் உரி - கிழிக்கப்பட்ட யானையின் தோலை. (௮) அர - அரா; பாம்பு. நளிர் - குளிர்ச்சி. (௯) கமர் பயில்-வெடிப்புகளையுடைய. தமர்- அடியார்கள். விழவில் - திருவிழாவில். (௧௦) செம்பியர்கோன் - சோழ அரசன். (௧௧) சேடு இயல் சிங்கி - அழகு மிக்க சிங்கடியின்.

அந்தணர்கள் எதிர்கொள்ள அங்கு சென்று திருக்கோயிலை வணங்கி 'பந்தம் அறுக்கும் தம்பெருமான் பாதம் பரவிப் பணிந்து',

படங்கொள் அரவில் துயில்வோனும் பதுமத் தோனும் பரவரிய
விடங்கன் விண்ணோர் பெருமானை விரவும் புளக முடன்பரவி
அடங்கல் வீழி கொண்டிருந்தீர் அடியே னுக்கும் அருளுமெனத்
[1]தடங்கொள் செஞ்சொற் றமிழ்மாலை சாத்தி அங்குச் சாருநாள்.
—பெ. ஏ. 59.

## 88. திருவீழிமிழலை

### பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

நம்பி னார்க்கருள் செய்யு மந்தணர் நான்மறைக் கிடமாய வே
செம்பொன் னேர்மட வாரணி பெற்ற திருமிழலை [ள்வியுள்
உம்ப ரார்தொழு தேத்த மாமலை யாளொடும் முடனே யுறைவிடம்
அம்பொன் வீழிகொண் டீர்அடி யேற்கும் அருளுதிரே. க

விடங்கொள் மாமிடற் றீர்வெள்ளைச் சுருளொன் றிட்டு விட்டகா தினீ ரென்று, திடங்கொள் சிந்தையி னார்கலி காக்குந் திருமிழலை, மடங்கல் பூண்ட விமானம் மண்மிசை வந்திழிச் சியவான நாட்டையும், அடங்கல் வீழிகொண் டீரடி யேற்கும் அருளுதிரே. உ

ஊனை உற்றுயி ராயினீர் ஒளிமூன் றுமாய்த் தெளிநீரோ டானைஞ்சின், தேனை யாட்டுகந் தீர்செழு மாடத் திருமிழலை, மானை மேவிய கையினீர் மழுவேந்தி னீர்மங்கை பாகத் தீர் விண்ணில், ஆன வீழிகொண் டீரடி யேற்கும் அருளுதிரே.

---

[1]தடங்கொள் - பெருமைமிக்க.

(க) அந்தணர் - அழகிய தண்ணளியையுடைய சிவபெருமான். அருளுதிர் - அருள் செய்யக் கடவீர். (உ) மிடற்றீர் - கண்டத்தை யுடையவரே. சுருள் - தோடு. கலி - கேடு; வறுமை. 3-வது வரி. பூமியின்மீது கொண்டுவந்து இறக்கிய சிங்கம் பூண்ட விமானத்தையும், வான நாட்டையும். மடங்கல்-சிங்கம். அடங்கல் வீழி கொண்டீர்-முழுமையும் திருவீழிமிழலையாகக் கொண்டீர். (ங) ஒளி மூன்று-முச்சுடர்; சோம சூரிய அக்கினி. ஆன் ஐஞ்சின் - பஞ்சகவ்வியத்தோடு.

பந்தம் வீடிவை பண்ணினீர் படிறீர் மதிப்பிதிர்க் கண்ணி யீ
சிந்தை செய்திருக் குஞ்செங்கை யாளர் திருமிழலை [ரென்று
வந்து நாடகம் வான நாடியர் ஆட மாலயன் ஏத்த நாடோறும்
அந்தண் வீழிகொண் டீரடி யேற்கு மருளுதிரே. ௪

புரிசை மூன்றையும் பொன்றக் குன்றவில் ஏந்தி வேதப் புரவித்தேர்
திரிசெய் நான்மறை யோர்சிறந் தேத்துந் திருமிழலைப் [மிசைத்
பரிசி னலடி போற்று பத்தர்கள் பாடியா டப்பரிந் துநல்கினீர்
அரிய வீழிகொண் டீரடி யேற்கு மருளுதிரே. ௫

எறிந்த சண்டி இடந்தகண் ணப்பன் ஏத்து பத்தர்கட் கேற்றம் நல்கினீர், செறிந்த பூம்பொழில் தேன்துளி வீசுந் திருமிழலை, நிறைந்த அந்தணர் நித்தம் நாடோறும் நேசத் தாலுமைப் பூசிக்கும்மிடம், அறிந்து வீழிகொண் டீரடி யேற்கு மருளுதிரே. ௬

பணிந்த பார்த்தன் பகீரதன் பலபத்தர் சித்தர்க்குப் பண்டு நல்கினீர், திணிந்த மாடந் தொறுஞ்செல்வம் மல்கு திருமிழலைத், தணிந்த அந்தணர் சந்தி நாடோறும் அந்திவா னிடுபூச் சிறப்பவை, அணிந்து வீழிகொண் டீரடி யேற்கு மருளுதிரே.

பரந்த பாரிடம் ஊரிடைப் பலிபற்றிப் பார்த்துணுஞ் சுற்ற மாயினீர், தெரிந்த நான்மறை யோர்க்கிட மாய திருமிழலை, இருந்து நீர்தமி ழோடிசை கேட்கும் இச்சையாற் காசு நித்தல் நல்கினீர், அருந்தண் வீழிகொண் டீரடி யேற்கு மருளுதிரே. அ

(௪) பந்தம் வீடிவை பண்ணினீர்.—“பந்தமும் வீடும் ஆயி னார்க்கு......”—திருவாசகம் (வேதமும்.) படிறீர் - வஞ்சகமுடையீர். மதிப்பிதிர்க் கண்ணியீர்-மதிக்கொழுந்தைத் தரித்தவரே. (௫) புரிசை-புரங்கள். பரிசினல் - அன்பினல். (௬) எறிந்த - தந்தையின் காலை வெட்டின. “தாதை தாளற எறிந்த சண்டிக்குன்.”—சுந்தரர் (ஏதநன்.) ஏற்றம் - உயர்வாகிய முத்தி. நிறைந்த - கல்வி கேள்விகளால் நிரம்பிய. (எ) திணிந்த - நெருங்கிய. தணிந்த - சாந்தியை யடைந்த. அந்திவான் இடு பூச்சிறப்பவை - அந்திக் காலத்தில் செய்கிற புஷ்ப அலங்காரத்தை. (அ) பரந்த பாரிடம் - மிகுதியான பூதங்கள். பார்த்து-சேமித்து வைத்து.

தூய நீரமு தாய வாறது சொல்லுகென் றுமைக்கேட்கச் சொல்லினீர், தீய ராக்குலை யாளர் செழுமாடத் திருமிழலை, மேய நீர்பலி யேற்றதென் னென்றவின் ணப்பஞ்செய் பவர்க்கு மெய்ப்பொருள், ஆய வீழிகொண் டீரடி யேற்கு மருளுதிரே. க

வேத வேதியர் வேத நீதிய ரோதுவார் விரிநீர் மிழலை யுள், ஆதி வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுகென்று, நாத கீதம்வண் டோதுவார் பொழில்நாவ லூரன் வன்தொண்டன் நற்றமிழ், பாத மோதவல் லார்பர னோடு கூடுவரே. கo

திருச்சிற்றம்பலம்

வாசி அறிந்து காசளிக்க வல்ல மிழலை வாணர்பால் விடை பெற்றுத் திருவாஞ்சியம் சென்று 'பாசம் அறுத்து ஆட்கொள்ளும்' திருவடிகளைப் பணிந்து,

## 76. திருவாஞ்சியம்

**பண் - பியந்தைக்காந்தாரம்**

திருச்சிற்றம்பலம்

பொருவ னார்புரி நூலர் புணர்முலை உமையவ ளோடு
மருவ னார்மரு வார்பால் வருவது மில்லைநம் மடிகள்
திருவ னார்பணிந் தேத்துந் திகழ்திரு வாஞ்சியத் துறையும்
ஒருவ னார்அடி யாரை ஊழ்வினை நலியவொட் டாரே. க

தொறுவில் ஆனிள ஏறு துண்ணென இடிகுரல் வெருவிச்
செறுவில் வாளைக ளோடச் செங்கயல் பங்கயத் தொதுங்கக்
கறுவி லாமனத் தார்கள் காண்தகு வாஞ்சியத் தடிகள்
மறுவி லாதவெண் ணீறு பூசுதல் மன்னுமொன் றுடைத்தே.

(க) தூயநீர்...இதில் புராண கதை குறிப்பிடப்பட் டிருக்கிறது. தீயராக் குலையாளர் - தீயை வளர்க்கும் கூட்டத்தவராகிய அந்தணர்.

(க) பொருவனார் - போர்புரிபவர். மருவனார் - கூடியிருப்பவர். மருவார்பால் - தம்மை அடுக்காதவரிடத்து. திருவனார் - சிவஞானச் செல்வர். (உ) தொறுவில் - பசுக்கூட்டங்களிலுள்ள. செறு - வயல். கறுவு - கோபம். மறு - குற்றம். ஒன்று - ஒரு கருத்து.

தூர்த்தர் மூவெயி லெய்து சுடுநுனைப் பகழிய தொன்றால்[சித்
பார்த்த னார்திரள் தோள்மேற் பன்னுனைப் பகழிகள் பாய்ச்
தீர்த்த மாமலர்ப் பொய்கைத் திகழ்திரு வாஞ்சியத் தடிகள்
சாத்தும் மாமணிக்கச்(சு)அங் கொருதலை பலதலை யுடைத்தே.

சள்ளை வெள்ளையங் குருகு தானது வாமெனக் கருதி
வள்ளை வெண்மல ரஞ்சி மறுகியோர் வாளையின் வாயில் [கள்
துள்ளு தெள்ளுநீர்ப் பொய்கைத் துறைமல்கு வாஞ்சியத் தடி
வெள்ளை நுண்பொடிப் பூசும் விகிர்தமொன் றொழிகிலர் தாமே.

மைகொள் கண்டரெண் தோளர் மலைமக ளுடனுறை வாழ்க்
கொய்த கூவிள மாலை குலவிய சடைமுடிக் குழகர் [கைக்
கைதை நெய்தலங் கழனி கமழ்புகழ் வாஞ்சியத் தடிகள்
பைதல் வெண்பிறை யோடு பாம்புடன் வைப்பது பரிசே. ரு

கரந்தை கூவிள மாலை கடிமலர்க் கொன்றையுஞ் சூடிப்
பரந்த பாரிடஞ் சூழ வருவர்நம் பரமர்தம் பரிசால்
திருந்து மாடங்கள் நீடு திகழ்திரு வாஞ்சியத் துறையும்
மருந்த னாரடி யாரை வல்வினை நலியவோட் டாரே. சா

அருவி பாய்தரு கழனி அலர்தரு குவளையங் கண்ணார்
குருவி யாய்கிளி சேர்ப்பக் குருகினம் இரிதரு கிடங்கில் [யும்
பருவ ரால்குதி கொள்ளும் பைம்பொழில் வாஞ்சியத் துறை
இருவ ரால்றி யொண்ணா இறைவன தறைகழல் சரணே. எ

களங்க ளார்தரு கழனி அளிதரக் களிதரு வண்டு
உளங்க ளார்கலிப் பாடல் உம்பரில் ஒலித்திடுங் காட்சி

---

(ங) தூர்த்தர் - கொடியவர். மாமணிக்கச்சு - மாணிக்கத்தை தன்னிடத்துக் கொண்ட பாம்பினால் ஆகிய கச்சு. ஒருதலை பல தலையுடைத்து - உண்மையாக பல தலைகளை உடையது. (ச) சள்ளை - சிறு மீன்கள். வள்ளை - ஒரு கொடி. மறுகி - மயங்கி. விகிர்தம் - வழக்கம். (ரு) பைதல் - இளமையாகிய. (சா) பரிசால் - தன்மையால். மருந்து அ(ன்)னார் - அமிர்தத்தை ஒப்பவர். (எ) குருவியாய் கிளிசேர்ப்ப, குருவி கிளி ஆய்சேர்ப்ப - குருவி மீனையும் கிளி மீனையும் தேர்ந்து சேர்க்க. குருகினம் இரிதரு கிடங்கில் - நீர்ப்பறவைகள் கலைந்து ஓடும் குளங்களில். (அ) களங்கள் - நெல்களங்கள். அளி - தேன். ஆர்கலிப் பாடல் - கடலைப்போல் சப்திக்கும் பாடல்.

குளங்கள் ஆல்நிழற் கீழ்நற் குயில்பயில் வாஞ்சியத் தடிகள்
விளங்கு தாமரைப் பாதம் நினைப்பவர் வினைநலி விலரே. அ

வாழை யின்கனி தானும் மதுவிம்மு வருக்கையின் சுளையும்
கூழை வானரந் தம்மிற் கூறிது சிறிதெனக் குழறித் [த்துள்
தாழை வாழையந் தண்டாற்செருச்செய்து தருக்குவாஞ் சிய
ஏழை பாகனை யல்லால் இறையெனக் கருதுத விலமே. கூ

செந்நெ லங்கலங் கழனித் திகழ்திரு வாஞ்சியத் துறையும்
மின்ன லங்கலஞ் சடையெம் இறைவன தறைகழல் பரவும்
பொன்ந லங்கலநன் மாடப் பொழிலணி நாவலா ரூரன்
பல்ந லம்கல்நன் மாலை பாடுமின் பத்தரு ளீரே. கo

திருச்சிற்றம்பலம்

என்னும் மாசில்லாத திருப்பதிகம் பாடி, அரிசிற்கரைப்புத்தூர் அணைந்தார். பின்பு **நறையூர் சித்தீச்சரமும் பணிந்து** ஏத்தி,

## 93. திருநறையூர்ச் சித்தீச்சரம்

### பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

நீரும் மலரும் நிலவுஞ் சடைமேல்
ஊரும் அரவம் உடையான் இடமாம்
வாரும் அருவி மணிபொன் கொழித்துச்
சேரும் நறையூர்ச் சித்தீச் சரமே. க

---

(கூ) வருக்கையின் - பலாவின். கூழை - குறுகிய. (கo) செந்நெல் அங்கலங்கழனி - செந்நெல் விளையும் அழகிய ஆபரணம்போன்ற நிலங்களில். மின் அலங்கலம் சடை - மின்னலைப்போல் ஒளி வீசும் சடை. பொன் நலம் கலநன் மாடம் - பொன்னின் நலம் கலந்த நல்ல மாளிகை. பல்நலம் கல் நன்மாலை - பலவித நன்மைகளைக் கற்பிக்கும் சிறந்த தமிழ்ச் சொல்மாலை.

(க) நிலவும் - பிரகாசிக்கும்.

அளைப்பை அரவேர் இடையாள் அஞ்சத்
துளைக்கைக் கரித்தோல் உரித்தா னிடமாம்
வளைக்கைம் மடவார் மடுவில் தடநீர்த்
திளைக்கும் நறையூர்ச் சித்தீச் சரமே. ௨

இகழுந் தகையோ ரெயில்மூன் றெரித்த
பகழி யொடுவில் லுடையோன் பதிதான்
முகிழ்மென் முலையார் முகமே கமலம்
திகழும் நறையூர்ச் சித்தீச் சரமே. ௩

மறக்கொ ளரக்கன் வரைதோள் வரையால்
இறக்கொள் விரற்கோன் இருக்கும் இடமாம்
நறக்கொள் கமலம் நனிபள் ளியெழத்
திறக்குந் நறையூர்ச் சித்தீச் சரமே. ௪

முழுநீ றணிமே னியன்மொய் குழலார்
எழுநீர்மை கொள்வான் அமரும் இடமாம்
கழுநீர் கமழக் கயல்சேல் உகளும்
செழுநீர் நறையூர்ச் சித்தீச் சரமே. ௫

ஊனார் உடைவெண் டலையுண் பலிகொண்(டு)
ஆனார் அடலே(று) அமர்வா னிடமாம்
வானார் மதியம் பதிவண் பொழில்வாய்த்
தேனார் நறையூர்ச் சித்தீச் சரமே. ௬

காரூர் கடலில் விடமுண் டருள்செய்
நீரூர் சடையன் நிலவும் மிடமாம்
வாரூர் முலையார் மருவும் மறுகில்
தேரூர் நறையூர்ச் சித்தீச் சரமே. ௭

---

(௨) அளை - புற்றில் வாழும். திளைக்கும் - மூழ்கி விளையாடும். (௪) மறம் - கோபம், பாபம், வீரம். இற - பெரிய. நற - தேன்; வாசனை. நனிபள்ளி எழத் திறக்கும் - மிகுதியாக விழித்து எழுவது போல மலரும். (௫) எழுநீர்மை; எழும் நீர்மை - இயல்பாய் எழும் நிறை. (௬) உடை - உடைந்த. ஆனார் அடல் ஏறு - அடல்ஆன் ஏறு - வலிமை பொருந்திய இடபம். (௭) மறுகு - வீதி.

கரியின் உரியுங் கலைமான் மறியும்
எரியும் மழுவும் உடையா னிடமாம்
புரியும் மறையோர் நிறைசொற் பொருள்கள்
தெரியுந் நறையூர்ச் சித்தீச் சரமே. அ

பேணா முனிவன் பெருவேள் வியெலாம்
மாணாமை செய்தான் மருவும் மிடமாம்
பாணார் குழலும் முழவும் விழவில்
சேணார் நறையூர்ச் சித்தீச் சரமே. கூ

குறியில் வழுவாக் கொடுங்கூற் றுதைத்த
எறியும் மழுவாட் படையா னிடமாம்
நெறியில் வழுவா நியமத் தவர்கள்
செறியுந் நறையூர்ச் சித்தீச் சரமே. க0

போரார் புரமெய் புனிதன் அமருஞ்
சீரார் நறையூர்ச் சித்தீச் சரத்தை
ஆரூ ரன்சொல் இவைவல் லவர்கள்
ஏரா ரிமையோ ருலகெய் துவரே. கக

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடி மீண்டும் திருப்புத்தூரை வணங்கி,

## 9. திருஅரிசிற்கரைப் புத்தூர்

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

மலைக்கு மகள்அஞ்ச மதகரியை உரித்தீர்
எரித்தீர் வருமுப் புரங்கள்
சிலைக்குங் கொலைச்சே உகந்தேற் றொழியீர்
சில்பலிக்(கு) இல்கடொறுஞ் செலவொழியீர்

(அ) புரியும் - விரும்புகிற. (கூ) பேணா முனிவன் - மதியாத தக்கன். மாணாமை செய்தான் - பெருமை அடையாமற் செய்தவன்; அழித்தவன். பாணார் - இசையையுடைய. சேணார் - ஆகாயத்தை அளாவிய. (க0) குறி - இலக்கு. எறியும்-பகைவரை வெட்டுகின்ற. (கக) ஏரார் - அழகுமிக்க.

(க) சிலைக்கும் - ஆரவாரிக்கும். சே - இடபம்.

கலைக்கொம் புங்கரி மருப்பும் இடறிக்
கலவம் மயிற்பீ லியுங்கா ரகிலும்
அலைக்கும் புனல்சே ரரிசிற் றென்கரை
யழகார் திருப்புத்தூ ரழகனீரே. க

அருமல ரோன்சிர மொன்ற றுத்தீர்
செறுத்தீர் அழற்கூ லத்தில் அந்தகனைத்
திருமகள் கோன்நெடு மால்பலநாள் சிறப்பா
கியபூ சனைசெய் பொழுதில்
ஒருமல ராயிரத் திற்குறை வால்நிறை
வாகவோர் கண்மலர் சூட்டலுமே
பொருவிற லாழி புரிந்தளித் தீர்பொழி
லார்திருப் புத்தூர்ப் புனிதனீரே. உ

தரிக்குந் தரைநீர் தழல்காற்(று) அந்தரஞ்
சந்திரன் சவிதா இயமான னானீர்
சரிக்கும் பலிக்குத் தலைஅங்கை யேந்தித்
தையலார் பெய்யக் கொள்வது தக்கதன்றால்
முரிக்குந் தளிர்ச்சந் தனத்தொடு வேயுமுழுங்குந்
திரைக்கைக ளால்வாரி மோதி
அரிக்கும் புனல்சே ரரிசிற் றென்கரை
அழகார் திருப்புத்தூ ரழகனீரே. ௩

கொடியுடை மும்மதில் வெந்தழியக் குன்றம்
வில்லா நாணி யிற்கோ லொன்றினால்
இடிபட எய்தெரித்தீர் இமைக்கும் அளவில்
உமக்கா ரெதிரெம் பெருமான்
கடிபடு பூங்கணை யான்கருப் புச்சிலைக்
காமனை வேவக் கடைக்கண்ணினால்
பொடிபட நோக்கிய தென்னை கொல்லோ
பொழிலார் திருப்புத்தூர் புனிதனீரே. ச

---

(க) கலை - கலைமான். கலவம் - தோகை. (உ) செறுத்தீர் - அழித்தீர். (௩) சவிதா - சூரியன். இயமானன் - ஆன்மா. சரிக்கும் - சஞ்சரித்து ஏற்கும். அரிக்கும் - கரைகளை அறுத்துக்கொண்டு ஓடும். (ச) எதிர் - சமானமானவர்; பகைவர். கடிபடு - வாசனை பொருந்திய

வணங்கித் தொழுவா ரவர்மால் பிரமன்
மற்றும் வானவர் தானவர் மாமுனிவர்
உணங்கல் தலையில் பலிகோண்ட லென்னே
உலகங்க ளேல்லா முடையீர் உரையீர்
இணங்கிக் கயல்சே லிளவாளை பாய
இனக்கெண்டை துள்ளக்கண் டிருந்த அன்னம்
அணங்கிக் குணங்கொ ளரிசிற் றென்கரை
யழகார் திருப்புத்தூ ரழகனீரே. ௫

*அகத்தடி மைசெய்யும் அந்தணன்தான்
அரிசிற் புனல்கோண்(டு) உவந்தாட்டு கின்றான்
மிகத்தளர் வெய்திக் குடத்தையும் நம்முடி
மேல்விழுத் திட்டு நடுங்குதலும்
வகுத்தவ னுக்கு நித்தற் படியும்
வருமென் றொருகாசி னைநின்ற நன்றிப்
புகழ்த்துணை கைபுகச் செய்து கந்தீர்
பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதனீரே. ௬

---

(௫) தானவர்-அசுரர். உணங்கல் தலையில்-உலர்ந்த தலையோட்டில். உடையீர் - உமக்கு உடைமையாக உடையவரே. அணங்கிக் குணங்கொள்-வருந்தி நல்ல குணத்தை மேற் கொள்ளுகிற. (௬) வகுத்து-ஏற்படுத்தி. நின்ற நன்றி - நிலைபெற்ற நல்லொழுக்கத்தை உடைய.

*திருப்புத்தூரென்னு மித்திருப்பதியிலே, ஆதிசைவ பிராமண குலத்திலே திருவவதாரஞ் செய்து, புகழ்த்துணை நாயனாரெனத் திருநாமம் பெற்று, மிகுந்த சிவநேசத்துடன் சிவலிங்கப் பெருமாற்குத் திருமஞ்சனமாதி உபசாரங்கள் ஆகமவிதி வழாது இயற்றி வருங்கால், பஞ்சம் நேரிட்டுச் சின்னாளுணவின்றித் திருமேனி வாடியும் ஓர் தினம் திருமஞ்சனஞ் செய்கையில் குடம் நழுவிச் சிவபெருமான் திருமுடிக்கண் வீழவும், நாயனார் பெருந்தகையஞ்சி நடுங்குதலைத் திருவுளத்திற்கொண்டு திரிபுரமெரித்த விரிசடைக் கடவுள் பஞ்சம் நீங்குமளவும் அப்பெரியார்க்கோர் படிக்காசு அருள்செய்த அருட்பெற்றியை விளக்குவது இவ்வாரூர் தேவாரம்.

பழிக்கும் பெருந்தக்கன் எச்சம் மழியப்
பகலோன் முதலாப் பல தேவரையுந்
தெழித்திட்(டு) அவரங்கஞ் சிதைத்தருளுஞ்
செய்கை யென்னைகொலோ மைகொள்செம் மிடற்றீர்
விழிக்குந் தழைப்பீலி யொடேலம் உந்தி
விளங்கும் மணிமுத் தொடுபொன் வரன்றி
அழிக்கும் புனல்சே ரரிசிற் றென்கரை
யழகார் திருப்புத்தூ ரழகனீரே. எ

பறைக்கண் நெடும்பேய்க் கணம்பாடல் செய்யக்
குறட்பா ரிடங்கள் பறைதாம் முழக்கப்
பிறைக்கொள் சடைதாழப் பெயர்ந்து நட்டம்
பெருங்கா(டு) அரங்காக நின்றா டலென்னே
கறைக்கொள் மணிகண்ட முந்திண் டோள்களுங்
கரங்கள் சிரந்தன்னி லுங்கச்சு மாகப்
பொறிக்கொள் ளரவம் புனைந்தீர் பலவும்
பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதனீரே. அ

மழைக்கண் மடவாளை ஓர்பாகம் வைத்தீர்
வளர்புன் சடைக்கங்கை யைவைத் துகந்தீர்
முழைக்கொள் அரவோ டென்பணி கலனா
முழுநீ று மெய்பூசு தலென்னை கொலோ

---

(எ) எச்சம் - யாகம். தெழித்திட்டு - கோபித்து. மைகொள் செம்மிடற்றீர் - கருநிறங் கொண்ட செம்மையான (அருட்குறிப்புடன் கூடிய) கண்டத்தை உடையவரே. விழிக்கும் - பிரகாசிக்கும். மயிற் பீலியின் கண்கள் விழிப்பதுபோல் தோன்றும். வரன்றி- வாரிக்கொண்டு. அழிக்கும் - கரையை அறுத்துக்கொண்டு போகும். (அ) பறைக்கண் - பறைபோலும் வட்டமான பெரிய கண்கள். பாரிடங்கள் - பூதகணங்கள். பொறிக்கொள் - புள்ளிகளை உடைய. (கூ) மழைக்கண் - குளிர்ச்சியான கண்களை உடைய; அருட்பார்வை உடைய. முழை - புற்று.

கழைக்கொள் கரும்புங் கதலிக் கனியுங்
கமுகின் பழுக்காயுங் கவர்ந்து கொண்டிட்
டழைக்கும் புனல்சே ரரிசிற் றென்கரை
யழகார் திருப்புத்தூ ரழகனீரே. ௯

கடிக்கும் அரவால் மலையா லமரர்
கடலைக் கடைய எழுகாள கூடம்
ஒடிக்கும் உலகங் களையென் றதனை
உமக்கே அமுதாக வுண்ட ருமிழீர்
இடிக்கும் மழைவீழ்த் திழுத்திட் டருவி
யிருபாலு மோடி யிரைக்குந் திரைக்கை
அடிக்கும் புனல்சே ரரிசிற் றென்கரை
யழகார் திருப்புத்தூ ரழகனீரே. ௧௦

காரூர் மழைபெய் துபொழி யருவிக்
கழையோ டகில்உந் திட் டிருகரையும்
போரூர் புனல்சே ரரிசிற் றென்கரைப்
பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதர் தம்மை
ஆரூரன் அருந்தமி ழைந்தினோ டைந்தழ
காலுரைப் பார்களுங் கேட்பவரும்
சீரூர் தருதேவர் கணங்க ளோடும்
இணங்கிச் சிவலோகம தெய்துவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் ஓதிப் 'புனிதனார் முன் புகழ்த்துணையார்க்கு அருளும் திறமும் போற்றிசைத்து சிவபெருமான் வீற்றிருக்கும் பதிகள் பலவும் பணிந்து திருவாவடுதுறை வந்தெய்தினார்.

விளங்குந் திருவாவடுதுறையில் மேயார் கோயில் புடைவலங் கொண்(டு), உளங்கோண் டுருகும் அன்பினுடன் உள்புக் கிறைஞ்சி

(௯) கழைக்கொள் - மூங்கில் என்று சொல்லும்படி பருத்த. (௧௦) காளகூடம்-காளகூட விஷம். ஒடிக்கும் - அழிக்கும். இடிக்கும் மழை - இடிமுழக்கம் செய்யும் மேகங்களால். (௧௧) கார்ஊர் - கருமை பொருந்திய. மழை - மேகம். போர்ஊர் - மோதிச் செல்லுகின்ற.

ஏத்துவார், வளங்கொள் பதிகம் மறையவனென் றெடுத்து வள வன் செங்கணான், தளங்கொள் பிறப்புஞ் சிறப்பித்துத் தமிழ்ச் சொன் மாலை சாத்தினார். —பே. ஏ. 63.

## 66. திருவாவடுதுறை

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

மறைய வனொரு மாணிவந் தடைய
வார மாய்அவ னாருயிர் நிறுத்தக்
கறைகொள் வேலுடைக் காலனைக் காலாற்
கடந்த காரணங் கண்டுகண் டடியேன்
இறைவ னெம்பெரு மானென்றெப் போதும்
ஏத்தி யேத்திநின்(று) அஞ்சலி செய்துன்
அறைகொள் சேவடிக் கன்போடும் அடைந்தேன்
ஆவ டுதுறை ஆதியெம் மானே. க

தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி
சித்திரப் பந்தர் சிக்கென வியற்றச்
சுருண்ட செஞ்சடை யாய்அது தன்னைச்
சோழ னாக்கிய தொடர்ச்சிகண் டடியேன்
புரண்டு வீழ்ந்துநின் பொன்மலர்ப் பாதம்
போற்றி போற்றியென்(று) அன்போடு புலம்பி
அருண்டென் மேல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்
ஆவ டுதுறை யாதியெம் மானே. உ

(க) மாணி-பிரமசாரியாகிய மார்க்கண்டேயன். வாரமாய்-அன்பு கூர்ந்து. கறை - உதிரக்கறை. கடந்த - உதைத்த. அறைகொள் - சப்திக்கின்ற வீரக்கழல் அணிந்த. (உ) தெருண்ட சிலந்தி-தெளிந்த அறிவுடைய சிலந்தி. சிக்கென - உறுதியாக. தொடர்ச்சி - நேசம். அருண்டு - நடுங்கி.

திகழும் மாலவன் ஆயிர மலரால்
ஏத்து வானொரு நீண்மலர் குறையப்
புகழி னலவன் கண்ணிடந் திடலும்
புரிந்து சக்கரங் கொடுத்தல் கண்(டு)அடியேன்
திகழும் நின்றிருப் பாதங்கள் பரவித்
தேவ தேவநின் திறம்பல பிதற்றி
அகழும் வல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்
ஆவ டுதுறை யாதி யெம்மானே. ௯

வீரத் தாலொரு வேடுவ னாகி
விசைந்தோர் கேழலைத் துரந்துசென் றணைந்து
போரைத் தான்விசை யன்தனக்(கு) அன்பாய்ப்
புரிந்து வான்படை கொடுத்தல்கண்(டு) அடியேன்
வாரத் தாலுன நாமங்கள் பரவி
வழிபட் டுன்திற மேநினைந் துருகி
ஆர்வத் தோடுவந் தடியிணை யடைந்தேன்
ஆவ டுதுறை யாதியெம் மானே. ௪

ஒக்க முப்புரம் ஓங்கெரி தூவ
உன்னை உன்னிய மூவர்நின் சரணம்
புக்கு மற்றவர் பொன்னுல காளப்
புகழி னலருள் ஈந்தமை யறிந்து
மிக்க நின்கழ லேதொழு தரற்றி
வேதி யாஆதி மூர்த்திநின் அரையில்
அக்க ணிந்தஎம் மானுனை யடைந்தேன்
ஆவ டுதுறை யாதியெம் மானே. (ரு-கூ-எ-அ-கூ-க0.)

திருச்சிற்றம்பலம்

என்னும் தமிழ் மாலை சாத்தி, விடைபெற்று காவிரியின் தென்

(௯) இடந்து - தோண்டி. புரிந்து - அன்பு கூர்ந்து. (௪) துரந்து - துரத்திக்கொண்டு. போரைத்தான் விசயன் தனக்கு அன்பாய் புரிந்து - அர்ச்சுனனுடன் அன்போடு போர்புரிந்து. வான்படை - பாசுபதாஸ்திரம். ஆர்வம் - பேரன்பு. (ரு) ஒக்க - ஒருமிக்க. தூவ - சிந்த. அக்கு - (அக்கம்) - பாம்பு. சரணம் புக்கு - அடைக்கலம் புக. மற்று அவர் புகழினல் பொன்னுலகு ஆள - அம்மூவரும் புகழுடன் சுவர்க்க லோகத்தை ஆளும்படி. மற்று—அசை.

கரைமேல் திகழும் பதிகள் பல பணிந்து முனைப்பாடித் தலைவர் திரு விடைமருதூரை அடைந்தார். அங்கே பெருமானை வணங்கி,

## 60. திருவிடைமருதூர்

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

கழுதை குங்குமம் தான்சுமந்(து) எய்த்தாற்
 கைப்பர் பாழ்புக மற்றதுபோலப்
பழுது நானுழன் றுள்தடு மாறிப்
 படுசு ழித்தலைப் பட்டனன் எந்தாய்
அழுது நீயிருந் தென்செய்தி மனனே
 அங்க ணாஅர னேயென மாட்டா
இழுதை யேனுக்கோர் உய்வகை யருளாய்
 இடைம ருதுறை யெந்தை பிரானே. க

நரைப்பு மூப்போடு பிணிவரும் இன்னே
 நன்றி யில்வினை யேதுணிந் தெய்த்தேன்
அரைத்த மஞ்சள தாவதை யறிந்தேன்
 அஞ்சி னேன்நம னாரவர் தம்மை

(க) கழுதை......கைப்பர் - குங்குமத்தின் தன்மை அறியாத கழுதை அதைச் சுமந்து சென்றால் அதைக் கண்டவர் பரிகசிப்பர். பழுது - குற்றத்தில். உள் - மனம். படுசுழித் தலைப்பட்டனன் - உலக வாழ்வு என்னும் சுழியில் மீள முடியாதபடி அகப்பட்டுக்கொண்டேன். அங்கணா - கிருபாநோக்கமுடையவனே. இழுதையேன் - மூடனேன். (உ) இன்னே - இப்பொழுதே; விரைவில். நன்றியில் வினையே துணிந்து - நன்மை பயவாத செயல்களையே துணிவாகச் செய்து.

உரைப்பன் நானுன சேவடி சேர
வுணரும் வாழ்க்கையை யொன்றறி யாத
இரைப்ப னேனுக்கோர் உய்வகை அருளாய்
இடைம ருதுறை யெந்தை பிரானே. உ

புல்நு னைப்பனி வெங்கதிர் கண்டாற்
போலும் வாழ்க்கை பொருளிலை நாளும்
என்னே னக்கினி இற்றைக்கு நாளை
யென்றி ருந்திட றுற்றனன் எந்தாய்
முன்ன மேயுன சேவடி சேரா
மூர்க்க னாகிக் கழிந்தன காலம்
இன்னம் என்றனக்(கு) உய்வகை யருளாய்
இடைம ருதுறை யெந்தை பிரானே. ௩

முந்திச் செய்வினை இம்மைக்கண் நலிய
மூர்க்க னாகிக் கழிந்தன காலம்
சிந்தித் தேமனம் வைக்கவும் மாட்டேன்
சிறுச்சிறி தேஇரப் பார்கட்கொன் றீயேன்
அந்தி வெண்பிறை சூடுமெம் மானே
ஆரூர் மேவிய அமரர்கள் தலைவா
எந்தை நீயெனக்(கு) உய்வகை யருளாய்
இடைம ருதுறை யெந்தை பிரானே. ச

---

(உ) உரைப்பன்நான் - நான் இவ்வாறாகப் பலதடவைகள் சொல்லுவேன். சேர-சேரும்பொருட்டு. உணரும் வாழ்க்கையை ஒன்று அறியாத - மெய் உணர்வோடு கூடிய வாழ்க்கையை ஒரு சிறிதும் அறிந்து கொள்ளாத. இரைப்பனேனுக்கு - பேச்சு பேசமட்டும் தெரிந்தவனான எனக்கு. (௩) வெங்கதிர் - வெப்பத்தோடு கூடிய சூரிய கிரணம். வாழ்க்கை - இவ்வுலக வாழ்வு. பொருளிலை......உற்றனன் - நிலையில்லாத இவ்வாழ்வால் ஒரு பயனும் இல்லை; தினந்தோறும் இன்றைக்கு என்ன செய்வது நாளைக்கு என்ன செய்வது என்று கவலைப்பட்டுத் துன்பத்தை அடைந்தேன். (ச) இம்மைக்கண் நலிய - இப்பிறப்பில் வருத்த.

அழிப்ப ரைவர் புரவுடை யார்கள்
ஐவ ரும்புர வாசற வாண்டு
கழித்துக் காற்பெய்து போயின பின்னைக்
கடைமு றையுனக் கேபொறை யானேன்
விழித்துக் கண்டனன் மெய்ப்பொருள் தன்னை
வேண்டேன் மானுட வாழ்க்கை யீதாகில்
இழித்தே னென்றனக்(கு) உய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தை பிரானே. ரு

குற்றம் தன்னொடு குணம்பல பெருக்கிக்
கோல நுண்ணிடை யாரொடு மயங்கிக்
கற்றி லேன்கலை கள்பல ஞானங்
கடிய வாயின கொடுமைகள் செய்தேன்
பற்ற லாவதோர் பற்றுமற் றில்லேன்
பாவி யேன்பல பாவங்கள் செய்தேன்
எற்று ளேனெனக் குய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தை பிரானே. சு

கொடுக்க கிற்றிலேன் ஒண்பொருள் தன்னைக்
குற்றம் செற்றம் இவைமுத லாக
விடுக்க கிற்றிலேன் வேட்கையுஞ் சினமும்
வேண்டில் ஐம்புல னென்வச மல்ல

---

(ரு) அழிப்பர்......ஆண்டு - என்னைக் காக்கவேண்டிய ஐம் பொறிகளும் எம்மை அழிக்கின்றன ; இந்த ஐவர்களின் காத்தற் றொழிலின் குற்றம் அற்றொழிய ஆட்கொண்டு. கழித்து......ஆனேன்- நெடுங்காலம் சென்ற பிறகு கடைசிகாலத்தில் உனக்கே சுமை ஆனேன். விழித்து - மெய்உணர்வு பெற்று. இழித்தேன் - இகழ்ந் தேன். (சு) கலைகள் பல ஞானம் - பல நூற் கல்வி; இது 64 கலை ஞானங்களைக் குறிக்கும். கடியவாயின - கடியத்தகுந்த; செய்யத் தகாத. எற்றுளேன் - எதற்காக இருக்கின்றேன். (எ) ஒண்பொருள்- நல்ல (அறத்தால் ஈட்டிய) பொருள். செற்றம் - பிடிவாதம். வேட்கை யும் சினமும் குற்றம் செற்றம் இவை முதலாக விடுக்ககிற்றி லேன் என்பது உரைநடை.

நடுக்க முற்றதோர் மூப்புவந் தெய்த
நமன் தமர்நர கத்திட லஞ்சி
இடுக்க ணுற்றன னுய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தை பிரானே. ௭

ஐவ கையரை யர்அவ ராகி
ஆட்சி கொண்டொரு காலவர் நீங்கார்
அவ்வ கையவர் வேண்டுவ தானால்
அவர வர்வழி யொழுகிநான் வந்து
செய்வ கையறி யேன்சிவ லோகா
தீவ ணாசிவ னேயெரி யாடீ
எவ்வ கையெனக் குய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தை பிரானே. ௮

ஏழை மானுட இன்பினை நோக்கி
இளைய வர்வலைப் பட்டிருந் தின்னம்
வாழை தான்பழுக் கும்நமக் கென்று
வஞ்ச வல்வினை யுள்வலைப் பட்டுக்
கூழை மாந்தர்தஞ் செல்கதிப் பக்கம்
போத மும்பொரு ளொன்றறி யாத
ஏழை யேனுக்கோ ருய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தை பிரானே. ௯

அரைக்குஞ் சந்தனத் தோ(டு)அகில் உந்தி
ஐவ னம்சுமந் தார்த்திரு பாலும்
இரைக்குங் காவிரித் தென்கரை தன்மேல்
இடைம ருதுறை யெந்தை பிரானை

---

(௮) ஐவகை.........நீங்கார் - ஐம்பொறிகளும் ஐந்துவகை அரசர்களாகி என்மீது ஆட்சிசெய்து, ஒருகாலத்திலும் என்னைவிட்டு நீங்காது என்னைத் துன்பப்படுத்துகிறார்கள். (௯) ஏழை - அற்பமாகிய. இளையவர் - மாதர். வாழை தான் பழுக்கும் நமக்கென்று - நாம் இனிமேல் இன்பம் அனுபவிப்போம் என்று. கூழை - அறிவில்லாத. போதமும் பொருள் ஒன்று அறியாத - ஞானமும் உண்மைப் பொருள் விவேகமும் ஒன்றும் இல்லாத. ஏழையேன் - அறிவில்லாதவன். (௧௦) ஐவனம் சுமந்து - மலைநெல்லை ஏந்தி. ஆர்த்து இருபாலும் இரைக்கும்-இரண்டு கரையின் மேலும் மோதி சப்தித்து ஓடும்.

உரைக்குமூர ஞெளிதிகழ் மாலை
உள்ளத் தாலுகந் தேத்தவல் லார்கள்
நரைப்பு மூப்போடு நடலையு மின்றி
நாதன் சேவடி நண்ணுவர் தாமே. ௧௦

திருச்சிற்றம்பலம்

என்னும் மதுரச் சொன்மலர்களால் ஆன திருப்பதிகத்தைப் 'பன்னிப் புனைந்து பணிந்தேத்திப் பரவிப் போந்து' தொண்டருடன் அப்பதியை விட்டு நீங்கி திருநாகேச்சரத்தை அடைந்து,

## 99. திருநாகேச்சரம்

பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

பிறையணி வாள்நுதலாள் உமையாளவள் பேழ்கணிக்க
நிறையணி நெஞ்(சு)அனுங்க நீலமால்விடம் உண்டதென்னே
குறையணி குல்லைமுல்லை அளைந்துகுளிர் மாதவிமேல்
சிறையணி வண்டுகள்சேர் திருநாகேச் சரத்தானே. ௧

அருந்தவ மாமுனிவர்க் கருளாகியோர் ஆலதன்கீழ்
இருந்தற மேபுரிதற் கியல்பாகிய தென்னைகொலாம்
குருந்தய லேகுரவம் அரவின்னெயி றேற்(று)அரும்பச்
செருந்திசெம் பொன்மலருந் திருநாகேச் சரத்தானே. ௨

(௧௦) நடலை - நடுக்கம்; துன்பம்.

(௧) பிறை அணி வாள் நுதலாள் - பிறைபோலும் அழகிய ஒளி பொருந்திய நெற்றியையுடையவளாகிய உமாதேவியார். பேழ்கணிக்க- அஞ்ச. நிறை அணி நெஞ்சு அனுங்க - கற்பினால் அழகு பெற்ற மனம் வருந்த. குறை அணி குல்லை முல்லை அளைந்து - குறுகிய அழகிய துளசியையும் முல்லையையும் சேர்ந்து. குல்லை - துளசி. மாதவி - குருக்கத்தி மரம்; ஓர் கொடியெனினுமாம். சிறையணி - அழகிய சிறகு. (௨) அருந்தவமா முனிவர் - சநகாதி முனிவர் நால்வர். குருந்து - காட்டெலுமிச்சை. குரவம் அரவின் எயிறு ஏற்று அரும்ப - குரவமரம் பாம்பின் பல்லினையொத்து அரும்பாகிற்க.

பாலன தாருயிர்மேற் பரியாது பகைத்தெழுந்த
காலனை வீடுவித்துக் கருத்தாக்கிய தென்னைகொலாம்
கோல மலர்க்குவளை கழுநீர்வயல் சூழ்கிடங்கில்
சேலொடு வாளைகள்பாய் திருநாகேச் சரத்தானே. ௩

குன்ற மலைக்குமரி கொடியேரிடை யாள்வெருவ
வென்றி மதகரியின் உரிபோர்த்தது மென்னைகொலாம்
முன்றில் இளங்கமுகின் முதுபாளை மதுஅளைந்து
தென்றல் புகுந்துலவுந் திருநாகேச் சரத்தானே. ௪

அரைவிரி கோவணத்தோ டர(வு)ஆர்த்தொரு நான்மறைநூல்
உரைபெரு கவ்வுரைத்தன் றுகந்தருள் செய்ததென்னே
வரைதரு மாமணியும் வரைச்சந்தகி லோடும்உந்தித்
திரைபொரு தண்பழனத் திருநாகேச் சரத்தானே. ௫

தங்கிய மாதவத்தின் தழல்வேள்வியின் நின்றெழுந்த
சிங்கமும் நீள்புலியுஞ் செழுமால்கரி யோடலறப்
பொங்கிய போர்புரிந்து பிளந்தீருரி போர்த்ததென்னே
செங்கயல் பாய்கழனித் திருநாகேச் சரத்தானே. ௬

நின்றவிம் மாதவத்தை யொழிப்பான்சென் றணைந்துமிகப்
பொங்கிய பூங்கணைவேள் பொடியாக விழித்ததென்னே
பங்கய மாமலர்மேல் மதுவுண்டுவண் தேன்முரலச்
செங்கயல் பாய்வயல்சூழ் திருநாகேச் சரத்தானே. ௭

வரியர நாணதாக மாமேரு வில்லதாக
அரியன முப்புரங்கள் அவைஆரழல் ஊட்டலென்னே
விரிதரு மல்லிகையும் மலர்ச்சண்பக முமளைந்து
திரிதரு வண்டுபண்செய் திருநாகேச் சரத்தானே. ௮

---

(௩) பாலனது - பாலகனாகிய மார்க்கண்டனது. பரியாது-இரக்கமின்றி. வீடுவித்து - கொன்று. கோலமலர் - அழகிய புஷ்பம். கிடங்கில் - குளங்களில். (௪) குன்ற - இமயமாகிய. மலைக்குமரி - மலைமகள் (பார்வதி தேவியார்.) வெருவ - அஞ்ச. வென்றி - வெற்றியையுடைய. மது அளைந்து - தேனோடு கலந்து. (௬) தங்கிய மாதவத்தின் - பொருந்திய பெரிய தவத்தினையுடைய தாருகாவனத்து முனிவர்கள் செய்த. (௭) வண்தேன் முரல - வளப்பமான தேன் வண்டுகள் சப்திக்க.

அங்கியல் யோகுதன்னை அழிப்பான்சென் றணைந்துமிகப்
பொங்கிய பூங்கணைவேள் பொடியாக விழித்தலென்னே
பங்கய மாமலர்மேல் மதுவுண்டுபண் வண்டறையச்
செங்கயல் நின்றுகளுந் திருநாகேச் சரத்தானே. கூ

குண்டரைக் கூறையின்றித் திரியுஞ்சமண் சாக்கியப்பேய்
மிண்டரைக் கண்டதன்மை விரவாகிய தென்னைகொலோ
தொண்டிரைத் துவணங்கித் தொழில்பூண்டடி யார்பரவும்
தெண்டிரைத் தண்வயல்சூழ் திருநாகேச் சரத்தானே. க0

கொங்கணை வண்டரற்றக் குயிலும்மயி லும்பயிலும்
தெங்கணை பூம்பொழில்சூழ் திருநாகேச் சரத்தானை
வங்கம் மலிகடல்சூழ் வயல்நாவல வூரன்சொன்ன
பங்கமில் பாடல்வல்லா ரவர்தம்வினை பற்றறுமே. கக

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடி, நிறைதிருவின் மலியும் **சிவபுரத்துத்** தேவர் பெருமான் கழல் வணங்கி, உருகும் சிந்தையுடன், உமை யொரு பாகனார்தாம் மகிழ்ந்து மருவும் பதிகள் பிற பணிந்து, **திருக் கலைய நல்லூரை** அடைந்து, இறைவரை வணங்கி,

## 16. திருக்கலயநல்லூர்

**பண் - தக்கராகம்**

திருச்சிற்றம்பலம்

குரும்பைமுலை மலர்க்குழலி கொண்டதவம் கண்டு
குறிப்பினொடு சென்(று)அவள்தன் குணத்தினைநன் கறிந்து
விரும்புவரங் கொடுத்தவளை வேட்டருளிச் செய்த
விண்ணவர்கோன் கண்ணுதலோன் மேவியவூர் வினவில்

---

(கூ) அங்கு இயல் யோகு தன்னை - அவ்விடத்தில் நீ இயைந் திருந்த யோகத்தை. (க0) மிண்டர்-துஷ்டர். கண்ட தன்மை விரவாகி யது என்னை...? தொண்டிரைத்து வணங்கி - மிகுதியாகத் தொண்டு களைச் செய்து வணங்கி. (கக) கொங்குஅணை - மகரந்தப் பொடியை அணைந்த. தெங்கு அணை-தென்னமரங்களை உடைய. பங்கம்-குற்றம்.

(க) வேட்டருளிச்செய்த - மணம் செய்தருளிய.

அரும்பருகே சுரும்பருவ அறுபதம் பண்பாட
அணிமயில்கள் நடமாடு மணிபொழில்சூ ழயலின்
கரும்பருகே கருங்குவளை கண்வளருங் கழனிக்
கமலங்கள் முக(ம்)மலருங் கலயநல்லூர் காணே. க

செருமேவு சலந்தரனைப் பிளந்தசுட ராழி
செங்கண்மலர் பங்கயமாச் சிறந்தானுக் கருளி
இருள்மேவும் அந்தகன்மேல் திரிசூலம் பாய்ச்சி
இந்திரனைத் தோள்முரித்த இறையவனூர் வினவில்
பெருமேதை மறையொலியும் பேரிமுழ வொலியும்
பிள்ளையினம் துள்ளிவிளை யாட்டொலியும் பெருகக்
கருமேதி புனல்மண்டக் கயல்மண்டக் கமலம்
களிவண்டின் கணம்இரியுங் கலயநல்லூர் காணே. ௨

இண்டைமலர் கொண்டுமணல் இலிங்கம(து) இயற்றி
இனத்தாவின் பாலாட்ட இடறியதாதை யைத்தாள்
துண்டமிடு சண்டியடி யண்டர்தொழு தேத்தத்
தொடர்ந்தவனைப் பணிகொண்ட விடங்கனதூர் வினவில்
மண்டபமுங் கோபுரமும் மாளிகை சூளிகையும்
மறையொலியும் விழவொலியும் மறுகுநிறை வெய்திக்
கண்டவர்கண் மனம்கவரும் புண்டரிகப் பொய்கைக்
காரிகையார் குடைந்தாடுங் கலயநல்லூர் காணே. ௩

மலைமடந்தை விளையாடி வளையாடு கரத்தால்
மகிழ்ந்தவள்கண் புதைத்தலுமே வல்லிருளா யெல்லா
உலகுடன்றுன் மூடஇரு ளோடும்வகை நெற்றி
யோற்றைக்கண் படைத்துகந்த உத்தமனூர் வினவில்

---

(க) சுரும்பு அருவ - வண்டுகள் நெருங்க. (௨) செருமேவு-போர்த் தொழிலையுடைய. இருள்மேவும் அந்தகன்மேல் - இருள் போன்ற கரிய நிறத்தையுடைய யமன் (அல்லது அந்தகாசுரன்)மீது. மேதை-மேன்மை; அறிவு. பிள்ளை இனம் - குழந்தைக் கூட்டம். மண்ட - நெருங்க. இரியும் - கலைந்து ஓடும்படியான. (௩) இண்டை மலர்-மலர் இண்டை; மலர்மாலை. விடங்கன் - அழகன். சூளிகை - அரண்மனை. குடைந்து - முழுகி.

அலையடைந்த புனல்பெருகி யானைமருப் பிடறி
யகிலொடுசந் துந்திவரும் அரிசிலின்தென் கரைமேல்
கலையடைந்த கலிகடியந் தணரோமப் புகையாற்
கணமுகில்போன்(று)அணிகிளருங் கலயநல்லூர் காணே.

நிற்பானுங் கமலத்தி லிருப்பானும் முதலா
நிறைந்தமரர் குறைந்திரப்ப நினைந்தருளி யவர்க்காய்
வெற்பார்வில் அரவுநாண் எரிஅம்பால் விரவார்
புரமூன்றும் எரிவித்த விகிர்தனூர் வினவில்
சொற்பால பொருட்பால சுருதியொரு நான்கும்
தோத்திரமும் பலசொல்லித் துதித்திறைதன் திறத்தே
கற்பாருங் கேட்பாரு மாயெங்கும் நன்கார்
கலைபயிலந் தணர்வாழுங் கலயநல்லூர் காணே. ரு

பெற்றிமையோன் றறியாத தக்கனது வேள்விப்
பெருந்தேவர் *சிரம்தோள்பற் கரம்கண்பீ டழியச்
செற்றுமதிக் கலைசிதையத் திருவிரலால் தேய்வித்(து)
அருள்பெருகு சிவபெருமான் சேர்தருமூர் வினவில்
தெற்றுகொடி முல்லையொடு மல்லிகைசெண் பகமுந்
திரைபொருது வருபுனல்சேர் †அரிசிலின்தென் கரைமேல்
கற்றின(ம்)நன் கரும்பின்முளை கறிகறக்கக் கறவை
கமழ்கழுநீர் கவர்கழனிக் கலயநல்லூர் காணே. சு

(ச) கலை அடைந்த - கலைகள் பயின்ற. கலி கடி - பாவத்தைப் போக்கும். கணமுகில் - முகில் கணம்; மேகக்கூட்டம். (ரு) நிற் பான் - வாமனவதாரத்தில் நெடியவனாய் நின்ற திருமால். கமலத்தில் இருப்பான் - பிரமன். விகிர்தன் - ஞானசொரூபன். (சு) பெற்றிமை-குணம். செற்று - தண்டித்து. தெற்று - படர்கின்ற. கற்றினம் - கன்று இனம்; கன்றுக் கூட்டம். கறி கறக்க - கடித்தலைக் கறக்க. கறவை - பால் கறக்கும் பசுக்கள். கமழ் கழுநீர் கவர் - வாசனை வீசுகின்ற கழுநீர் மலர் களை மேயும்.

*எச்சன்சிரம், இந்திரன்தோள், சூரியன்பல், அக்கினிதேவன் கரம், பகன் என்னும் பெயருள்ள மற்றொரு சூரியன் கண் இவை பீடழிந்தவை.

†விஷ்ணுவினற் சொல்லப்பட்டு வந்தமையால் அரிசொல் நதி யென்று பெயர். அது அரிசில் என மருவியிருக்கின்றது. இதனைக் கும்பகோணப் புராணத்திற் கண்டுகொள்க.

இலங்கையர்கோன் சிரம்பத்தோ டிருபதுதிண் தோளும்
இற்றலற ஒற்றைவிரல் வெற்பதன்மே லூன்றி
நிலங்கினர்நீர் நெருப்பொடுகாற் றுகாச மாகி
நிற்பனவும் நடப்பனவாம் நின்மலனூர் வினவில்
பலங்கள்பல திரையுந்திப் பருமணிபொன் கொழித்துப்
பாதிரிசந் தகிலினொடு கேதகையும் பருகிக்
கலங்குபுனல் அலம்பிவரும் அரிசிலின்தென் கரைமேற்
கயலுகளும் வயல்புடைசூழ் கலயநல்லூர் காணே. எ

மாலயனுங் காண்பரிய மாலெரியாய் நிமிர்ந்தோன்
வன்னிமதி சென்னிமிசை வைத்தவன் மொய்த்தெழுந்த
வேலைவிடம் உண்டமணி கண்டன்விடை ஊரும்
விமலனுமை யவளோடு மேவியவூர் வினவில்
சோலைமலி குயில்கூவக் கோலமயி லாலச்
சுரும்பொடுவண்(டு)இசைமுரலப் பசுங்கிளிசொல் துதிக்கக்
காலையிலும் மாலையிலும் கடவுளடி பணிந்து
கசிந்தமனத் தவர்பயிலுங் கலயநல்லூர் காணே. அ

பொரும்பலம துடையசுரன் தாருகனைப் பொருது
பொன்றுவித்த பொருளினைமுன் படைத்துகந்த புனிதன்
கரும்புவி(ல்)லின் மலர்வாளிக் காமனுடல் வேவக்
கனல்விழித்த கண்ணுதலோன் கருதுமூர் வினவில்
இரும்புனல்வெண் திரைபெருகி ஏலமில வங்கம்
இருகரையும் பொருதலைக்கு மரிசிலின்தென் கரைமேல்
கரும்பு(ன்)னைவெண் முத்தரும்பிப் பொன்மலர்ந்து பவளக்
கவின்காட்டுங் கடிபொழில்சூழ் கலயநல்லூர் காணே. கூ

---

(எ) இற்று அலற - நெரிந்து ஓலமிட. பலங்கள் பல - பல வகைப் பழங்களை. கேதகை - தாழை. (அ) மாலெரி - பெரு நெருப்பு. சொல் துதிக்க - சொல்லால் துதிக்க. (கூ) பொரும் - போர் செய்வதற் குரிய. பொருளினை - பொருளாகிய முருகக் கடவுளை. கரும் புனை - கருநிறத்தை உடைய புன்னைமரம். கவின் - அழகு. கடி - வாசனை.

தண்கமலப் பொய்கைபுடை சூழ்ந்தழகார் தலத்தில்
　　தடங்கொள்பெருங் கோயில்தனில் தக்கவகை யாலே
வண்கமலத் தயன்முன்னாள் வழிபாடு செய்ய
　　மகிழ்ந்தருளி யிருந்தபரன் மருவியவூர் வினவில்
வெண்கவரி கரும்பீலி வேங்கையொடு கோங்கின்
　　விரைமலரும் விரவுபுன லரிசிலின்தென் கரைமேல்
கண்கமுகின் பூம்பாளை மதுவாசங் கலந்த
　　கமழ்தென்றல் புகுந்துலவு கலயநல்லூர் காணே. க０

தண்புனலும் வெண்மதியுந் தாங்கியசெஞ் சடையன்
　　தாமரையோன் தலைகலனாக் காமர(ம்)முன் பாடி
உண்பலிகொண் டுழல்பரமன் உறையுமூர் நிறைநீர்
　　ஒழுகுபுன லரிசிலின்தென் கலயநல்லூ ரதனை
நண்புடைய நன்சடையன் இசைஞானி சிறுவன்
　　நாவலர்கோ னாரூரன் நாவில்நயந் துரைசெய்
பண்பயிலும் பத்துமிவை பத்திசெய்து நித்தம்
　　பாடவல்லார் அல்லலோடு பாவமிலர் தாமே. கக

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகத்தை 'மெய்ம்மைப் புராணம் பலவும் மிகச் சிறப்பித்து இசையின் விளம்பினார்.' அத்திருந்த திருக்குடமூக்கு அணைந்து பணிந்து பாடிப்போய், திருவலஞ்சுழியை அடைந்து பெருகும் அன்புருகத் தங்கு காதலுடன் வணங்கித் தமிழ்மாற் பரசி, திருநாவுக்கரசருக்குத் திங்கள் முடியார் திருவடி சூட்டிய திருநல்லூரைச் சேர்ந்து இறைவரைத் துதித்து, மற்றும் பிற பதிகளையும் வணங்கிக் கொண்டு திருச்சோற்றுத்துறை அடைந்து நீலகண்டர் அடி பணிந்து,

(க０) பீலி - மயில் இறகு. கண் - கணுக்களை உடைய. (கக) கலன்ஆ - பிக்ஷா பாத்திரமாக. காமரம் முன் பாடி - முன்னே சீகாமரப்பண்ணைப் பாடி.

# 94. திருச்சோற்றுத்துறை

## பண் - கவுசிகம்

திருச்சிற்றம்பலம்

அழல்நீ ரொழுகி அனைய சடையும்
உழைஈ ருரியும் உடையா னிடமாம்
கழைநீர் முத்துங் கனகக் குவையும்
சுழல்நீர்ப் பொன்னிச் சோற்றுத் துறையே. க

பண்டை வினைகள் பறிய நின்ற
அண்ட முதல்வன் அமலன் னிடமாம்
இண்டை கொண்(டு)அன் பிடைய றாத
தொண்டர் பரவுஞ் சோற்றுத் துறையே. உ

கோல அரவுங் கொக்கின் இறகும்
மாலை மதியும் வைத்தா னிடமாம்
ஆலும் மயிலும் ஆட லளியும்
சோலை தருநீர்ச் சோற்றுத் துறையே. ௩

பளிக்குத் தாரை பவள வெற்பில்
குளிக்கும் போல்நூற் கோமாற் கிடமாம்
அளிக்கும் ஆத்தி அல்லால் மதுவம்
துளிக்குஞ் சோலைச் சோற்றுத் துறையே. ௪

---

(க) அழல்நீர் ஒழுகி அனைய சடையும்-அழல் நிறமுள்ள சடை மேல் கங்காநதி பாய்வதால், நெருப்பின்மேல் நீர் ஒழுக்கொண்டிருக்கும் தோற்றத்தையுடைய சடையும். உழை-மான். கழைநீர் முத்தும்-மூங்கிலில் உண்டாகிய குணமுள்ள உயர்ந்த முத்துக்களையும். சுழல்நீர்ப் பொன்னிச் சோற்றுத்துறை-சுழித்துக்கொண்டு ஓடும்நீர்ப்பெருக்கினையுடைய காவிரியின் கரைமேலுள்ள சோற்றுத்துறை. (உ) இண்டை கொண்......பரவும் - நீங்காத அன்பினை உடைய தொண்டர்கள் பூமாலைகளைச் சாத்தி வணங்கும். (௩) அளி - வண்டு. (௪) பளிக்குத் தாரை......இடமாம் - பளிங்குபோன்ற நீர்த்தாரை பவளமலைமீது ஓடுவதுபோல் தோற்றத்தையுடைய வெண்புரிநூல் அணிந்த இறைவனுக்கு இடமாகும். அளிக்கும் - தேனைக் கொடுக்கும் இயல்புள்ள. ஆத்தி - ஒருவகை மரம். மது - தேன். அம்—அசை.

உதையுங் கூற்றுக்(கு) ஒல்கா விதிக்கு
வதையுஞ் செய்த மைந்தன் இடமாம்
திதையுந் தாதுந் தேனுஞ் ஞிமிறும்
துதையும் பொன்னிச் சோற்றுத் துறையே. ரு

ஓதக் கடல்நஞ் சினையுண் டிட்ட
பேதைப் பெருமான் பேணும் பதியாம்
சீதப் புனலுண் டெரியைக் காலும்
சூதப் பொழில்சூழ் சோற்றுத் துறையே. சு

இறந்தா ரென்பும் எருக்குஞ் சூடிப்
புறங்காட் டாடும் புனிதன் கோயில்
சிறந்தார் சுற்றந் திருவென் றின்ன
துறந்தார் சேருஞ் சோற்றுத் துறையே. எ

காமன் பொடியாக் கண்ணொன் றிமைத்த
ஓமக் கடலார் உகந்த இடமாம்
தேமென் குழலார் சேக்கை புகைத்த
தூமம் விசும்பார் சோற்றுத் துறையே. அ

இலையால் அன்பால் ஏத்து மவர்க்கு
நிலையா வாழ்வை நீத்தா ரிடமாம்

---

(ரு) உதையுங்......மைந்தன் - யமனுக்கு உதையும், அகங்காரம் கொண்ட தக்கனுக்குக் கொலையும் செய்த வலியுடையவன். திதையும் தாதும் - மிகுந்த மகரந்தமும். தேன், ஞிமிறு - வண்டின் பேதங்கள். துதையும் - நெருங்குகிற. (சு) 1, 2-வது வரி - அலை வீசும் கடலில் தோன்றிய நஞ்சினை உண்ட அறிவிலியாகிய பெருமான்—இது நிந்தாஸ்துதி. நாயேன் தனையாண்ட பேதாய்—திருவாசகம் (தாதாய்). எரியைக்காலும் - நெருப்பைக் கக்குகின்ற. சூதப் பொழில்-மாமரச்சோலை. (எ) சிறந்தார் - சிறப்புடைய நண்பர். சுற்றம்-உறவினர். திரு - செல்வம். (அ) இமைத்த - விழித்த. ஓமக்கடலார் - மிக்க யாகாக்நியை உடையவர். தே மென்-வாசனையும் மென்மையும் உடைய. சேக்கை புகைத்த தூமம் - படுக்கை அறையில் புகைத்த புகை. (கூ) இலையால் அன்பால் ஏத்துமவர்க்கு - பச்சிலையினால் அன்போடு துதிப்பவர்களுக்கு. நிலையா வாழ்வை நீத்தார் - அழியும் தன்மையுடைய உலகவாழ்வை ஒழித்து நிலையானவீடுபேற்றைக் கொடுத்தவர்.

தலையால் தாழுந் தவத்தோர்க் கென்றுந்
தொலையாச் செல்வச் சோற்றுத் துறையே. கூ

சுற்(று)ஆர் தருநீர்ச் சோற்றுத் துறையுள்
முற்றா மதிசேர் முதல்வன் பாதத்(து)
அற்றா ரடியார் அடிநா யூரன்
சொற்றா னிவைகற் றார்துன் பிலரே. கo

திருச்சிற்றம்பலம்

என்னுஞ் அஞ்சொற் பதிகம் ஓதியருளி, தேவ தேவர் வீற்றிருக்கும் **திருக்கண்டியூரைப்** பணிந்து, **திருவையாற்றை** மேவி வணங்கி, **திருப்பூந்துருத்தி** விமலர் பாதம் தொழுதிறைஞ்சி, **திருவாலம்பொழிலிற்** சேர்ந்து தாழ்ந்து, அன்றிரவு பள்ளிகொள்ளும்போது நம்பிஆரூரர் கனவில் இறைவன் தன் கோலத்தைக் காட்டி, " மழபாடியினில் வருவதற்கு மறந்தாயோ " என்று கூற, ஆரூரர் விழித்தெழுந்து காவிரியைக் கடந்து வடபால் உள்ள **திருமழபாடியைச்** சேர்ந்து,

அணைந்து திருக்கோ புரம்இறைஞ்சி அன்பர் சூழ உடன்புகுந்து, பணங்கொள் அரவம் அணிந்தார்முன் பணிந்து வீழ்ந்து **பரங்கருணைக், குணங்கொள் அருளின் திறம்போற்றிக்** கொண்ட புளகத் துடனுருகிப், புணர்ந்த இசையால் திருப்பதிகம் " பொன்னார் மேனி " என்றெடுத்து. —பெ. ஏ. 73.

## 24. திருமழபாடி

### பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

பொன்னார் மேனியனே புலித்தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை யணிந்தவனே
மன்னே மாமணியே மழபாடியுள் மாணிக்கமே
அன்னே யுன்னையல்லா லினியாரை நினைக்கேனே. க

---

(கூ) தொலையாச் செல்வம் - அழியாத செல்வம். (கo) சுற்று ஆர் தரு நீர் - சுற்றிலும் நீர் நிறைந்து வளப்பம் பொருந்திய. அற்றார் அடியார் அடிநாய் - பற்றற்ற அடியார்களுக்கு அடியவனென நாய்போன்ற.

(க) அரைக்கு அசைத்து - அரையிற்கட்டி.

கீளார் கோவணமும் திருநீறுமெய் பூசியுன்றன்
தாளே வந்தடைந்தேன் தலைவாவெனை ஏன்றுகொள்நீ
வாளார் கண்ணிபங்கா மழபாடியுள் மாணிக்கமே
கேளா நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. உ

எம்மா னெம்அ(ன்)னையென் றனக்கெள்தனைச் சார்வாகார்
இம்மா யப்பிறவி பிறந்தேயிறந் தெய்த்தொழிந்தேன்
மைம்மாம் பூம்பொழில்சூழ் மழபாடியுள் மாணிக்கமே
அம்மான் நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. ௩

பண்டே நின்னடியேன் அடியாரடி யார்கட்கெல்லாம்
தொண்டே பூண்டொழிந்தேன் தொடராமைத் துரிசறுத்தேன்
வண்டார் பூம்பொழில்சூழ் மழபாடியுள் மாணிக்கமே
அண்டா நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. ௪

கண்ணாய் ஏழுலகும் கருத்தாய அருத்தமுமாய்ப்
பண்ணார் இன்தமிழாய்ப் பரமாய பரஞ்சுடரே
மண்ணார் பூம்பொழில்சூழ் மழபாடியுள் மாணிக்கமே
அண்ணா நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. ௫

நாளார் வந்தணுகி நலியாமுனம் நின்றனக்கே
ஆளா வந்தடைந்தேன் அடியேனையும் ஏன்றுகொள்நீ
மாளா நாளருளும் மழபாடியுள் மாணிக்கமே
ஆளா நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. ௬

---

(உ) கீளார் கோவணம் - கீளோடுகூடிய கௌபீனம். கீள் - கோவணத்தோடு செய்த அரைநாண். வாளார் கண்ணி - ஒளிமிக்க கண்களை உடைய உமாதேவியார். கேளா - கேள் ஆக; உறவினராக. (௩) எம்மான் - என் தந்தை. எம் அ(ன்)னை - என் தாய். எள்தனை - எள்ளளவும். சார்வு - ஆதரவு. மை - மேகங்கள் தவழும். (௪) பண்டே நின் அடியேன் - பூர்வீகமாகவே நான் உனக்கு அடியவன். 'என்றுநீ அன்றுநான் உன்அடிமை அல்லவோ'—தாயுமானவர். (அரும்பொனே) துரிசு தொடராமை அறுத்தேன் - (அடியார்கட்கு அடிமை பூண்டதனால்) குற்றங்கள் என்னோடு தொடராமல் நீக்கிவிட்டேன். அண்டா - சிதாகாயத்தில் இருப்பவனே. (௫) கருத்தாய - விரும்பும்படியான. அருத்தமும்-பொருளும். மண்ணார்-மாட்சிமை நிறைந்த. (௬) நாளார்-யமதூதர். மாளா நாள்-முடிவில்லாத ஆயுள்; பிறப்பு இறப்பு இன்மை. ஆளா - என்னை ஆளாக உடையவனே.

சந்தா ரூங்குழையாய் சடைமேற்பிறை தாங்கிநல்ல
வெந்தார் வெண்பொடியாய் விடையேறிய வித்தகனே
மைந்தார் சோலைகள்சூழ் மழபாடியுள் மாணிக்கமே
எந்தாய் நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. ௭

வெய்ய விரிசுடரோன் மிகுதேவர்க ணங்களெல்லாம்
செய்ய மலர்களிட மிகுசெம்மையுள் நின்றவனே
மையார் பூம்பொழில்சூழ் மழபாடியுள் மாணிக்கமே
ஐயா நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. ௮

நெறியே நின்மலனே நெடுமாலயன் போற்றிசெய்யும்
குறியே நீர்மையனே கொடியேரிடை யாள்தலைவா
மறிசே ரங்கையனே மழபாடியுள் மாணிக்கமே
அறிவே நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. ௯

ஏரார் முப்புரமும் எரியச்சிலை தொட்டவனை
வாரார் கொங்கையுடன் மழபாடியுள் மேயவனைச்
சீரார் நாவலர்கோ னூரனுரைத்த தமிழ்
பாரோ ரேத்தவல்லார் பரலோகத் திருப்பாரே. ௧0

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடி, அதில் "அன்னே உன்னை அல்லால் யான் ஆரை நினைக்கேன்" என்று துதித்து 'தன்னேர் இல்லாப் பதிகமலர் சாத்தித் தொழுது', சில நாட்கள் அப்பதியில் வைகி, காவிரியின் இரு கரையிலும் உள்ள தலங்களைத் தரிசித்துக்கொண்டு மேற்குத் திசையாய்ப் போய்த் திருவானைக்காவில் அணைந்து திருத் தொண்டர் எதிர்கொள்ள இறைஞ்சிக் கோவிலுட் சென்று பெருமான் சேவடிக்கீழ் ஆர்வம் பெருக விழுந்தெழுந்து மெய்யும் முகிழ்ப்பக் கண்பொழி நீர் வெள்ளம் பரப்ப,

"மறைகளாய நான்கும்" என மலர்ந்த செஞ்சொற் றமிழ்ப் பதிகம், நிறையுங் காத லுடனெடுத்து நிலவும் அன்பர் தமை

(௭) சந்து ஆரும் - அழகு நிறைந்த. வித்தகன் - ஞானரூபி. மைந்துஆர் - அழகு நிறைந்த. (௮) மை ஆர் - மேகங்கள் தவழும். (௯) குறி - இலட்சியம். நீர்மையனே - மங்கள குணங்களை உடையவனே. (௧0) ஏரார் - அழகு மிக்க.

நோக்கி, "[1]இறையும் பணிவார் எம்மையும்ஆ ளுடையார்" என்றெ றேத்துவார், உறையூர்ச் சோழன் மணியாரம் சாத்துந் திறத்தை உணர்ந்தருளி.

வளவர் பெருமான் மணியாரம் சாத்திக் கொண்டு வரும்பொன்னிக் கிளருந் திரைநீர் மூழ்குதலும் வழுவிப் போகக் [2]கேதமுற அளவில் திருமஞ் சனக்குடத்துள் அதுபுக் காட்ட அணிந்தருளித் தளரும் அவனுக் கருள்புரிந்த தன்மை சிறக்கச் சாற்றினார்.

—பெ. ஏ. 75, 76.

## 75. திருவானைக்கா

### பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

மறைக ளாயின நான்கும் மற்றுள பொருள்களு மெல்லாத்
துறையுந் தோத்திரத் திறையுந் தொன்மையும் நன்மையும்
அறையும் பூம்புன லானைக் காவுடை ஆதியை நாளும் [ஆய
இறைவ னென்றடி சேர்வா ரெம்மையும் ஆளுடை யாரே. க

வங்கம் மேவிய வேலை நஞ்செழ வஞ்சர்கள் கூடித்
தங்கள் மேலட ராமை யுண்ணென உண்டருள் கண்டன்
அங்க மோதிய ஆனைக் காவுடை யாதியை நாளும்
எங்க ளீசனென் பார்கள் எம்மையும் ஆளுடை யாரே. உ

நீல வண்டறை கொன்றை நேரிழை மங்கையோர் திங்கள்
சால வாளர வங்கள் தங்கிய செஞ்சடை யெந்தை
ஆல நீழலு ளானைக் காவுடை யாதியை நாளும்
ஏலு மாறுவல் லார்கள் எம்மையு மாளுடை யாரே. ங

தந்தை யாயுல குக்கோர் தத்துவன் மெய்த்தவத் தோர்க்குப்
பந்த மாயின பெருமான் பரிசுடை யவர்திரு வடிகள்

(க) தோத்திரத்திறையும் - தோத்திரங்களில் சொல்லப்பட்டுள்ள தலைவரும். (உ) அடராமை - நெருங்காதபடி. (ங) ஏலுமாறு-ஆண்டவனுக ஏற்றுக்கொள்ளுமாறு. (ச) பந்தமாயின - பற்றுக்கோடான.

[1]இறையும் - சிறிது பொழுதாவது. [2]கேதம் - துயரம்.

அந்தண் பூம்புன லானைக் காவுடை யாதியை நாளும்
எந்தை யென்றடி சேர்வா ரெம்மையு மாளுடை யாரே. ச

கணைசெந் தீயர வம்நாண் கல்வளை யுஞ்சிலை யாகத்
துணைசெய் மும்மதில் மூன்றுஞ் சுட்டவ னேயுல குய்ய
அணையும் பூம்புன லானைக் காவுடை யாதியை நாளும்
இணைகொள் சேவடி சேர்வா ரெம்மையு மாளுடை யாரே. ரு

விண்ணின் மாமதி சூடி விலையிலி கலனணி விமலன்
பண்ணின் நேர்மொழி மங்கை பங்கினன் பசுவுகந் தேறி
அண்ண லாகிய ஆனைக் காவுடை யாதியை நாளும்
எண்ணு மாறுவல் லார்கள் எம்மையு மாளுடை யாரே. சு

தார மாகிய பொன்னித் தண்துறை யாடி விழுத்தும்
நீரின் நின்றடி போற்றி நின்மலா கொள்ளென ஆங்கே
ஆரங் கொண்டஎம் ஆனைக் காவுடை யாதியை நாளும்
ஈர முள்ளவர் நாளும் எம்மையு மாளுடை யாரே. எ

உரவ முள்ளதோர் உழையின் உரிபுலி அதளுடை யானை
விரைகொள் கொன்றையி னானை விரிசடை மேற்பிறை யானை
அரவம் வீக்கிய ஆனைக் காவுடை யாதியை நாளும்
இரவு மெல்லியும் பகலு மேத்துவா ரெமையுடை யாரே. அ

(சு) விலையிலிகலன் - விலை மதிக்கக்கூடாத ஆபரணங்கள். (எ) தாரம்......ஆதியை - முத்துக்களைத் தன்னிடத்தே கொண்ட காவிரியின் குளிர்ந்த நீர்த்துறையில் நீராடியபோது சோழ அரசன் கழுத்தினின்றும் வழுவிப்போன முத்து மாலையை, அரசனவன் நீரில் நின்றபடியே பெருமான் அடிகளைப் போற்றி "நின்மலனே மாலையை ஏற்றுக்கொள்" என்று சொல்ல, அந்த மாலையைத் திருமஞ்சனக் குடத்துள் புகுத்தி, அபிடேகம் செய்யும்போது ஏற்றுக் கொண்ட, எல்லாப் பொருள்களுக்கும் முதலாய் நின்ற சிவபெருமானை. தாரம் - முத்து. விழுத்தும் ஆரம் - வழுவிப்போன முத்து ஆரத்தை. ஈரம் - அன்பு. (அ) உரவம் - வலிமையான. உழை - மான். வீக்கிய - கச்சையாகக் கட்டிய.

வலங்கோள் வாரவர் தங்கள் வல்வினை தீர்க்கும் மருந்து
கலங்கக் காலனைக் காலாற் காமனைக் கண்சிவப் பானை
அலங்கல் நீர்பொரு மானைக் காவுடை யாதியை நாளும்
இலங்கு சேவடி சேர்வா ரெம்மையு மாளுடை யாரே. ௯

ஆழி யாற்கரு ளானைக் காவுடை ஆதிபோ னடியின்
நீழ லேசர ணாக நின்றருள் கூர நினைந்து
வாழ வல்லவன் தொண்டன் வண்டமிழ் மாலைவல் லார்போய்
ஏழு மாபிறப் பற்று எம்மையு மாளுடை யாரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் ஓதி, மற்ற தலங்களையும் வணங்கிக்கொண்டு **திருப்பாச்சிலாச்சிராமம்** சென்றடைந்து, முதல்வர் முன்னே வீழ்ந்திறைஞ்சிப் பொருள் வேண்டுமென்று விண்ணப்பிக்க, பொருள் தாராமையினால்,

> **அன்பு நீங்கா அச்சமுடன் அடுத்த திருத்தோ ழமைப்பணி யால்,** [1]**பொன்பெறாத திருவுள்ளம் புழுங்க அழுங்கிப்** புறம்பொரு பால், முன்பு நின்ற திருத்தொண்டர் முகப்பே **முறைப்பா டுடை யார்போல், என்பு கரைந்து 'பிரானார்மற் றிலையோ'** என்ன எடுக்கின்றார்.

> [2]சித்தமும் நீங்கா நிலைமையின் நீங்கி நிலத்திடைப் புலம்கெழும் பிறப்பால், உய்த்தகா ரணத்தை உணர்ந்துநொந் தடிமை ஒருமை யாம் எழுமையும் உணர்த்தி, **"எத்தனை அருளா தொழியினும் பிரானார் இவரலா தில்லையோ"** என்பார், "வைத்தனன் தனக்கே தலையுமென் நாவும்" எனவழுத் தினர்வழித் தொண்டர்.

—பெ. ஏ. 80, 81.

---

(௯) அலங்கல் நீர் பொரும் - ஓடுகின்ற நீர் மோதுகின்ற. (௧௦) சரணாக நின்று - புகலிடமாகப் பற்றி நின்று. அருள் கூர நினைந்து - சிவபெருமான் திருவருள் சுரக்கும்படி அன்போடு நினைந்து.

[1]பொன் பெறாத காரணத்தால், மனம் புழுங்க அதனால் வருந்தி.

[2]திருக்கயிலையில் தாம் முன் பிரியாது இருந்த நிலைமையைவிட்டு நீங்கி, நில உலகத்தில் மீண்டும் பிறப்பதற்கு ஏதுவாகிய காரணத்தை உணர்ந்து வருந்தி, ஏழு பிறப்பிலும் தாம் அடிமையாயிருக்கும் அன்பின் ஒருமைப்பாட்டைப் பதிகத்தில் கூறி, (11-வது பாடல்).

## 14. திருப்பாச்சிலாச்சிராமம்

**பண் - தக்கராகம்**

*திருச்சிற்றம்பலம்*

வைத்தனன் தனக்கே தலையுமென் நாவும் நெஞ்சமும் வஞ்சமொன் றின்றி, உய்த்தனன் தனக்கே திருவடிக் கடிமை யுரைத்தக்கால் உவமனே யொக்கும், பைத்தபாம் பார்த்தோர் கோவணத்தோடு பாச்சிலாச் சிராமத்தெம் பரமர், பித்தரே யொத்தோர் நச்சில ராகில் இவரலா தில்லையோ பிரானார். க

அன்னையே யென்னேன் அத்தனே யென்னேன் அடிகளே அமையுமென் றிருந்தேன், என்னையு மொருவ னுளனென்று கருதி இறை யிறை திருவருள் காட்டாய், அன்ன மாம் பொய்கை சூழ்தரு பாச்சி லாச்சிரா மத்துறை யடிகள், பின்னையே அடியார்க் கருள்செய்வ தாகில் இவரலா தில்லையோ பிரானார். உ

உற்றபோ தல்லால் உறுதியை யுணரேன் உள்ளமே அமையுமென் றிருந்தேன், செற்றவர் புரம்மூன் றெரியெழச் செற்ற செஞ்சடை நஞ்சடை கண்டர், அற்றவர்க் கருள்செய்

(க) வைத்தனன்......நெஞ்சமும் - என் தலையையும், நாவையும் நெஞ்சத்தையும் தம் பொருட்டுப் பணிசெய்வதற்காகவே சிவபெருமான் எனக்குத் தந்தார். வஞ்ச......ஒக்கும் - "நானும் வஞ்சகம் சிறிதும் இல்லாமல் சிவபெருமான் பணிக்கே இவைகளைச் செலுத்தினேன்" என்று திருவடிக்கு அடிமையாகிய நான் சொன்னால் போலியாக முடியும், உண்மை ஆகாது. ஓர் நச்சு - சிறிது விருப்பமும். (உ) அன்னையே.........காட்டாய் - "தாயும் தந்தை பல் உயிர்க்கும் தானே" ஆகிய உன்னை, அன்னை என்றும் அத்தன் என்றும் உன் மீது அன்பு பாராட்ட வேண்டியிருக்க, உன்னைக் குரு என்று மாத்திரம் கருதினால் போதும் என்று நினைத்திருந்தேன். அப்படி உன் தன்மையை உணராத என்னை அடியவனை ஒருவன் இருக்கிறான் என்று கருதி, மிகச் சிறிய அளவாவது திருவருள் காட்டமாட்டாய். இறை இறை - மிகச் சிறிதேனும். 4-வது வரி - துன்பம் நேர்ந்தபோது அடியார்க்கு அருள்செய்யாமல், தாமதித்துச் செய்வதானால். (ங) உற்றபோது அல்லால் - இடர்வந்த காலத்து அல்லாமல் மற்றக்காலத்து. உறுதி - உறுதிப் பொருள். அற்றவர்க்கு - பற்றற்றவர்களுக்கு.

பாச்சிலாச் சிராமத் தடிகள்தாம் யாதுசொன்னாலும், பெற்றபோ துகந்து பெறாவிடி லிகழில் இவரலா தில்லையோ பிரானார். ௩

நாச்சில பேசி நமர்பிற ரென்று நன்றுதீ தென்கிலர் மற் றோர், பூச்சிலை நெஞ்சே பொன்விளை கழனிப் புள்ளினம் சிலம்புமாம் பொய்கைப், பாச்சிலாச் சிராமத் தடிகளென் றிவர்தாம் பலரையும் ஆட்கொள்வர் பரிந்(து)ஓர், பேச்சிலர் ஒன்றைத் தரவில ராகில் இவரலா தில்லையோ பிரானார். ௪

வரிந்தவெஞ் சிலையால் அந்தரத்(து) எயிலை வாட்டிய வகையின ரேனும், புரிந்தவந் நாளே புகழ்தக்க அடிமை போகுநாள் வீழுநா ளாகிப்,பரிந்தவர்க் கருள்செய் பாச்சிலாச் சிராமத் தடிகள்தாம் யாதுசொன்னாலும், பிரிந்திறைப் போதிற் பேர்வதே யாகில் இவரலா தில்லையோ பிரானார். ௫

செடித்தவஞ் செய்வார் சென்றுழிச் செல்லேன் தீவினை செற்றிடு மென்று,அடித்தவ மல்லா லாரையும் அறியே னவ தும் அறிவரேம் மடிகள், படைத்தலைச் சூலம் பற்றிய கையர் பாச்சிலாச் சிராமத்தெம் பரமர், பிடித்தவெண் ணீறே பூசுவ தானு லிவரலா தில்லையோ பிரானார். ௬

---

(௩) பெற்றபோது......இகழில் - அடிமைப் பணியைப் பெற்ற போது களித்து, பெறாதபோது இகழ்ந்தால். (௪) 1, 2 வரி - நாவினால் சிலவற்றைப் பேசி, நம்மவர் என்றும் பிறர் என்றும், நன்று என்றும் தீது என்றும பாகுபாடு செய்யாதவராகி, வேறொரு பகட்டும் (வெளி வேஷமும்) இல்லாதவராகி இருக்கின்றார். பூச்சு - பகட்டு. சிலம்பு - சப்திக்கின்ற. பரிந்து ஓர்.........தரவிலராகில் - அன்புகூர்ந்து ஒரு பேச்சும் பேசாமல் இருக்கின்றார். (அடியார் விரும்பிய) ஒரு பொரு ளைத் தராமற் போவாரானால். (௫) வரிந்த - கட்டமைந்த. அந்தரத்து எயில் - ஆகாயத்தில் சஞ்சரித்த மதில்கள் (முப்புரங்கள்.) புகழ்தக்க அடிமை புரிந்த அந்நாளே போகும்நாள் வீழும்நாள் ஆகிப் பரிந்து அவர்க்கு அருள்செய் - (சிவபெருமானிடத்துப்) புகழ்ந்து பேசத்தக்க அடிமைப்பட்ட அந்த நாட்களே பயன்படக் கழிந்த நாட்களும், அன் புடைய நாட்களும் ஆகி, அடிமைப்பட்டவர்கள்மீது அன்புகூர்ந்து அவர்களுக்கு அருள் செய்யும்படியான. (௬) செடித்தவம் - குற்ற முள்ள (பொய்த்)தவம். செற்றிடும் - துன்பம் செய்யும். அடித்தவம் - திருவடியைப் பற்றுக்கோடாகக் கொண்டு செய்யும் தவம்.

கையது கபாலங் காடுறை வாழ்க்கை கட்டங்கம் ஏந்திய கையர், மெய்யது புரிநூல் மிளிரும்புன் சடைமேல் வெண் திங்கள் சூடிய விகிர்தர், பையர வல்குற் பாவைய ராடும் பாச்சிலாச் சிராமத்தெம் பரமர், மெய்யரே யொத்தோர் பொய்செய்வ தாகி விவரலா தில்லையோ பிரானார். எ

நிணம்படும் உடலை நிலைமையென் றோரேன் நெஞ்சமே தஞ்சமென் றிருந்தேன், கணம்படிந் தேத்திக் கங்குலும் பகலும் கருத்தினாற் கைதொழு தெழுவேன், பணம்படும் அரவம் பற்றிய கையர் பாச்சிலாச் சிராமத்தெம் பரமர், பிணம்படு காட்டி லாடுவ தாகி விவரலா தில்லையோ பிரானார். அ

குழைத்(து)உவந் தோடிக் கூடுதி நெஞ்சே குற்றேவல் நாடொறுஞ் செய்வான், இழைத்தநாள் கடவார் அன்பிலரேனும் எம்பெரு மானென்றெப் போதும், அழைத்தவர்க் கருள்செய் பாச்சிலாச் சிராமத் தடிகள்தாம் யாதுசொன் னாலும், பிழைத்தது பொறுத்தொன்(று) ஈகிலராகி விவரலா தில்லையோ பிரானார். க

துணிப்படும் உடையுஞ் சுண்ணவெண் ணீறுந் தோற்றமுஞ் சிந்தித்துக் காணில்,மணிப்படு கண்டனை வாயினாற் கூறி மனத்தினாற் றொண்டனேன் நினைவேன், பணிப்படும் அரவம்

(எ) கட்டங்கம் - தண்டம். மெய்யரே ஒத்தோர் பொய்செய்வ தாகில் - பார்ப்பதற்கு உண்மையானவரைப் போன்றவராகிய இவர் பொய்யையே செய்வதானால். (அ) தஞ்சம் - பற்றுக்கோடு. கணம் படிந்து - அடியார் கூட்டத்தில் சேர்ந்து. பணம்படும் - படத்தையுடைய. (க) 1-வது வரி - நெஞ்சமே! குற்றேவலை நாள்தோறும் செய்யும் பொருட்டு, மனம் குழைந்து, மகிழ்ச்சியுடன் ஓடிக் கூடுவாயாக. இழைத்த நாள் கடவார் - நியமித்த நாளைக் கடந்து போகமாட்டார். "இழைத்த நாளெல்லை கடப்பதென்றால்"—அப்பர். (கo) தோற்றம் - சிவவேடப் பொலிவு. சிந்தித்துக் காணில்......நினைவேன் - கண்டால், நீலமணிபோலும் கண்டத்தை உடைய சிவபெருமானைச் சிந்தனை செய்து, வாயினால் துதித்து, மனதினால் தியானம் செய்வேன்.

பற்றிய கையர் பாச்சிலாச் சிராமத்தெம் பரமர், பிணிப்பட ஆண்டு பணிப்பில ராகி லிவரலா தில்லையோ பிரானார். கO

ஒருமையே யல்லேன் எழுமையு மடியே னடியவர்க் கடியனு மானேன், உரிமையா லுரியேன் உள்ளமும் உருகும் ஒண்மலர்ச் சேவடி காட்டாய், அருமையாம் புகழார்க் கருள்செயும் பாச்சி லாச்சிரா மத்தெம் மடிகள், பெருமைகள் பேசிச் சிறுமைகள் செய்யி லிவரலா தில்லையோ பிரானார். கக

ஏசின அல்ல இகழ்ந்தன அல்ல எம்பெரு மானென் றெப்போதும், பாயின புகழான் பாச்சிலாச் சிராமத்(து) அடிகளை அடிதொழப் பன்னாள், வாயினாற் கூறி மனத்தினால் நினைவான் வளவயல் நாவலா ரூரன், பேசின பேச்சைப் பொறாத்தில ராகி லிவரலா தில்லையோ பிரானார். கஉ

திருச்சிற்றம்பலம்

இவ்வகைத் திருப்பதிகம் பாடி வணங்க, 'மெய்வகை விரும்பு தம்பெருமானார் விழுநிதிக்குவை அளித்தருள, மைவளர்கண்டர் கருணையே பரவி' சிலநாள் அவ்விடம் தங்கி, பிற பதிகளையும் வணங்கித் திருப்பைஞ்ஞீலியை அடைந்து கங்காளரைக் கண்டு தொழுது,

[1]கண்டவர் கண்கள் காதல்நீர் வெள்ளம் பொழிதரக் கைகுவித் திறைஞ்சி, வண்டறை குழலார் மன்கவர் பலிக்கு வருந்திரு வடிவுகண் டவர்கள், கொண்டதோர் மயலால் வினவுகூற் றாகக் குலவுசொற் "காருலா விய" என்(று), அண்டர்நா யகரைப் பரவி "ஆரணிய விடங்கராம்" அருந்தமிழ் புனைந்தார். —பெ. பு. 84.

---

(கO) பிணிப்பட ஆண்டு-நோய் கெடும்படி ஆட்கொண்டு. பணிப்பிலராகில் - பணியும்படி அல்லது தொண்டு செய்யும்படி செய்யா விட்டால். (கக) ஒருமையே அல்லேன் எழுமையும் அடியேன்-இந்த ஒரு பிறப்பில் மட்டுமல்ல, நான் அடையும் படியான எழுவகைப் பிறப்பிலும் நான் உனக்கு அடியவன். உரிமையால் உரியேன் - தொன்று தொட்டு உனக்கும் எனக்கும் இருக்கும் ஆண்டவன் அடிமை என்னும் தொடர்பினால் நான் உனது அருளுக்கு உரியவன். (கஉ) பாயின-பரவின. அடிதொழப் பன்னாள் - பல நாட்களாக அடிதொழுது.

[1]கண்டவர் - தரிசித்த நம்பி ஆரூரர்.

## 36. திருப்பைஞ்ஞீலி

### பண் - கொல்லி

*திருச்சிற்றம்பலம்*

காருலாவிய நஞ்சையுண்டிருள் கண்டர்வெண்டலை யோடு
கொண்(டு), ஊரெலாந்திரிந் தென்செய்வீர்பலி யோரிடத்திலே
கொள்ளுநீர், பாரெலாம்பணிந் தும்மையேபர விப்பணியும்
பைஞ் ஞீலியீர், ஆரமாவது நாகமோசொலும் ஆரணீய விடங்
கரே. க

சிலைத்துநோக்கும்வெள் ளேறுசெந்தழல் வாயபாம்பது
மூசெனும், பலிக்குநீர்வரும் போதுநுங்கையிற் பாம்பு
வேண்டா பிரானிரே, மலைத்தசந்தொடு வேங்கைகோங்கமும்
மன்னுகாரகில் சண்பகம், அலைக்கும் பைம்புனல் சூழ்பைஞ்
ஞீலியி லாரணீய விடங்கரே. உ

தூயவர்கண்ணும் வாயும்மேனியுந் துன்னவாடை சுடலையில்
பேயொடாடலைத் தவிரும்,நீரொரு பித்தரோவெம்பி ரானிரே
பாயுநீர்க்கிடங் கார்கமலமும் பைந்தண்மாதவி புன்னையும்
ஆயபைம்பொழில் சூழ்பைஞ்ஞீலியி லாரணீய விடங்கரே. ௩

செந்தமிழ்த்திறம் வல்லிரோசெங்க ணரவமுன்கையி லாடவே
வந்துநிற்குமி தென்கொலோபலி மாற்றமாட்டோ மிடகிலோம்
பைந்தண்மாமல ருந்துசோலைகள் கந்தம் நாறுபைஞ் ஞீலியீர்
அந்திவானமும் மேனியோசொலு மாரணீய விடங்கரே. ௪

நீறுநுந்திரு மேனிநித்திலம் நீள்நெடுங்கண்ணி னாளொடும்
கூறராய்வந்து நிற்றிரால்கொணர்ந் திடுகிலோம்பலி நடமினோ

---

(க) கார் உலாவிய - கருநிறம் பொருந்திய. விடங்கர் - அழகர். (உ) வெள்ளேறு சிலைத்து நோக்கும். சிலைத்து - ஆரவாரம் செய்து. மூசெனும் - சீறும். (௩) கண்ணும் வாயும் மேனியும் தூயவர். துன்ன ஆடை - தைத்த ஆடையுடன். தவிரும்-விட்டுவிடும். (௪) பலிமாற்ற மாட்டோம் - பலி இல்லை என்னோம். கிடங்கு - அகழி. (௫) நீறு...... நித்திலம் - நீறணிந்த உமதுதிருமேனி முத்துப்போல் ஒளிவீசும். நடமின் - போம்.

பாறுவெண்டலை கையிலேந்திப்பைஞ் ஞீலியேனென்றீ ரடிகள்
ஆறுதாங்கிய சடையரோசொலு மாரணீய விடங்கரே. [நீர்

குரவம்நாறிய குழலினார்வளை கொள்வதேதொழி லாகிநீர்
இரவுமிம்மனை யறிதிரேயிங்கே நடந்துபோகவும் வல்லிரே
பரவிநாடோறும் பாடுவார்வினை பற்றறுக்கும்பைஞ் ஞீலியீர்
அரவமாட்டவும் வல்லிரோ சொலு மாரணீய விடங்கரே. கூ

ஏடுலாமலர்க் கொன்றைசூடுதிர் என்பெலாமணிந் தென்செய்வீர்
காடுநும்பதி ஓடுகையது காதல்செய்பவர் பெறுவதென் [றிரால்
பாடல்வண்டிசை யாலுஞ்சோலைப்பைஞ் ஞீலியேனென்று நிற்
ஆடல்பாடலும் வல்லிரோசொலு மாரணீய விடங்கரே. எ

மத்தமாமலர்க் கொன்றைவன்னியுங் கங்கையாளொடு
திங்களும், மொய்த்தவெண்டலை கொக்கிறகொடு வெள்
ளெருக்கமும் சடையதாம், பத்தர்சித்தர்கள் பாடியாடும்
பைஞ் ஞீலியேனென்று நிற்றிரால், அத்தியீருரி போர்த்
திரோசொலு மாரணீய விடங்கரே. அ

தக்கைதண்ணுமை தாளம்வீணை தகுணிச்சங்கிணை சல்லரி
கொக்கரைகுட முழவினோடிசை கூடிப்பாடிநின் றுடுவீர்
பக்கமேகுயில் பாடுஞ்சோலைப்பைஞ் ஞீலியேனென்று நிற்றி
அக்குமாலையும் பூண்டிரோசொலு மாரணீய விடங்கரே. [ரால்

கையோர்பாம்(பு)அரை ஆர்த்தோர்பாம்பு கழுத்தோர்பாம்
பவை பின்புதாழ், மெய்யெலாம்பொடிக் கொண்டுபூசுதிர்
வேதமோதுதிர் கீதமும், பையவேவிடங் காகநின்றுபைஞ்
ஞீலியேனென்றீ ரடிகள்நீர், ஐயம்ஏற்குமி தென்கொலோ
சொலு மாரணீய விடங்கரே. கo

---

(ரு) பாறு - பருந்துகள் மொய்க்கின்ற. (கூ) குரவம் நாறிய - நறுமணம் வீசும். (எ) ஏடுஉலாம் - இதழ்களையுடைய. (அ) மத்தம்மா மலர் - ஊமத்தை மலர். மொய்த்த - நெருங்கிய. (க) அக்கும் - உருத்திராக்கமாலையும். (கo) விடங்காக - அழகாக.

அன்னஞ்சேர்வயல் சூழ்பைஞ்ஞீலியி லாரணிய விடங்கரை, மின்னும் நுண்ணிடை மங்கைமார்பலர் வேண்டிக் காதல் மொழிந்தசொல், மன்னுதொல்புகழ் நாவலூரன்வன் தொண்டன் வாய்மொழி பாடல்பத்(து), உன்னியின்னிசை பாடுவாருமை கேள்வன்சேவடி சேர்வரே. கக

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம்பாடித் திருஈங்கோய்மலை முதலான விமலர்தம் பதி பல வணங்கி, கொங்குநாட்டில் உள்ள திருப்பாண்டிக்கொடுமுடி அணைந்து,

கொங்கினிற் பொன்னித் தென்கரைக் கறையூர்க் கொடுமுடிக் கோயில்முன் குறுகிச், சங்கவெண் குழையர் உழைவலஞ் செய்து சார்ந்தடி அன்பினில் தாழ்ந்து, பொங்கிய வேட்கை பெருகிடத் தொழுது புனிதர்பொன் மேனியை நோக்கி, "இங்கிவர் தம்மை மறக்கவொண் ணு"தென் றெழுந்தமெய்க் குறிப்பினில் எடுப்ப.

"அண்ணலார் அடிகள் மறக்கினும் நாம அஞ்செழுத் தறியஎப் பொழுதும், எண்ணிய நாவே இன்சுவை பெருக இடையறா தியம்பும்"என் றிதனைத், திண்ணிய உணர்விற் கொள்பவர் "மற்றுப் பற்றிலேன்" எனச்செழுந் தமிழால், நண்ணிய அன்பில் பிணிப்புற நவின்றார் நமச்சிவா யத்திருப் பதிகம். —பெ. ஏ. 86, 87.

## 48. திருப்பாண்டிக்கொடுமுடி

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

மற்றுப்பற்றெனக் கின்றிநின்திருப் பாதமேமனம் பாவித்தேன், பெற்றலும்பிறந் தேன்இனிப்பிற வாததன்மைவந் தெய்தினேன், கற்றவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை யூரிற்பாண்டிக்

(கக) வேண்டிக் காதல் மொழிந்த சொல் - பிரார்த்தித்து, சிவ பெருமான்மீது கொண்ட காதலால் சொன்ன சொல்லாக.

(க) மனம் பாவித்தேன் - மனதில் தியானித்திருந்தேன். பெற்றலும் - நினைக்கப் பெறுதலும். பிறந்தேன் - பிறந்ததன் பயனை அடைந்தவனானேன்,

கொடுமுடி, நற்றவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. க

இட்டன்றும்மடி யேத்துவார்கழற் றிட்டநாள்மறந் திட்டநாள், கெட்டநாளிவை யென்றலால்கரு தேன்கிளர்புனற் காவிரி, வட்டவாசிகை கொண்டடிதொழு தேத்துபாண்டிக் கொடுமுடி, நட்டவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. உ

ஓவுநாளுணர்(வு) அழியும்நாளுயிர் போகுநாளுயர் பாடைமேல் காவுநாளிவை யென்றலால்கரு தேன்கிளர்புனற் காவிரிப் பாவுதண்புனல் வந்திழிபரஞ் சோதிபாண்டிக் கொடுமுடி. நாவலாவுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. ங

எல்லையில்புகழ் எம்பிரானெந்தை தம்பிரானென் பொன் மாமணி, கல்லைஉந்தி வளம்பொழிந்திழி காவிரியதன் வாய்க்கரை, நல்லவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை யூரிற்பாண்டிக் கொடுமுடி, வல்லவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. ச

அஞ்சினார்க்(கு)அரண் ஆதியென்றடி யேனும் நான்மிக அஞ்சினேன், அஞ்சலென்றடித் தொண்டனேற்கருள் நல்கினுய்க்(கு)அழி கின்றதென், பஞ்சின்மெல்லடிப் பாவைமார் குடைந் தாடுபாண்டிக் கொடுமுடி, நஞ்சணிகண்ட நான் மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. ரு

---

(க) சொல்லும் நா நமச்சிவாய - என்னுடைய நாவானது நமச்சிவாய என்று இடைவிடாது சொல்லும். (உ) இட்டன் - இஷ்டன், சிநேகிதன். வட்டவாசிகை - வட்டமாகிய பூமாலை. நட்டவா - ஆன்மாக்களைக் கருணையினால் நட்புக்கொண்டவனே. (ங) ஓவும் நாள் - உன்னை விட்டு நீங்கும் நாட்கள் (உன்னை மறந்திருக்கும் நாட்கள்.) காவும் நாள் - சுமக்கப்படும் நாட்கள். பாவு - பரந்த. (ச) வாய்க்கரை - கரைவாய், கரையினிடத்து. (ரு) அருள்......அழிகின்றதென் - திருவருள் பாலித்த உமக்கு என்ன நஷ்டம்.

ஏடுவான் இளந் திங்கள்சூடினை யென்பின்கொல்புலித் தோலின்மேல், ஆடுபாம்ப(து)அ ரைக்கசைத்த அழகனே யந்தண் காவிரிப், பாடுதண்புனல் வந்திழிபரஞ் சோதிபாண் டிக் கொடுமுடிச், சேடனேயுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. சு

விரும்பிநின்மலர்ப் பாதமேநினைந் தேன்வினைகளும் விண்டன, நெருங்கிவண்பொழில் சூழ்ந்தெழில்பெற நின்ற காவிரிக் கோட்டிடைக், குரும்பை மென்முலைக் கோதைமார் குடைந் தாடுபாண்டிக் கொடுமுடி, விரும்பனேயுனை நான் மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. எ

செம்பொன்நேர்சடை யாய்திரிபுரந் தீயெழச்சிலை கோலி னாய், வம்புலாங்குழ லாளைப்பாகம் அமர்ந்துகாவிரிக் கோட் டிடைக், கொம்பின்மேற்குயில் கூவமாமயி லாடுபாண்டிக் கொடுமுடி, நம்பனேயுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. அ

சாரணன்றந்தை எம்பிரானெந்தை தம்பிரானென் பொன் மாமணியென்று, பேரெணாயிர கோடிதேவர் பிதற்றி நின்று பிரிகிலார், நாரணன்பிர மன்தொழுங்கறை யூரிற்பாண் டிக் கொடுமுடிக், காரணாவுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. கூ

---

(சு) ஏடுவான் - தகட்டு வடிவினையுடைய ஆகாயத்தில் சஞ்சரிக் கும். பாடு - பாடுவதுபோல் ஒலித்து ஓடுகிற. சேடன் - எல்லாம் அழிந்தாலும் தான் அழியாமல் எஞ்சியிருப்பவன். (எ) விரும்பி...... விண்டன - உன்மலர்போலும் பாதங்களை அன்புடன் நினைந்தேன். அதனால் என்னைப்பற்றி யிருந்த வினைகளும் நீங்கிப் போயின. கோட் டிடை - கரையில். விரும்பனே - விரும்புதற்கு உரியவரே. (அ) கோலி னாய் - வளைத்தாய். வம்புலாங்குழலாள் - இயற்கையாகவே மணம் வீசும் கூந்தலையுடைய உமாதேவியார். (கூ) சாரணன் - புகலிடமாக உள்ளவன். பேர் - உனது திருப்பெயர்களை. பிதற்றி - பேரன்பி னால் தம்வச மிழந்து சொல்லி. “பித்துப் பெருகப் பிதற்றுகின் றார்”—அப்பர் (சித்தத்.)

கோணியபிறை சூடியைக்கறை யூர்ற்பாண்டிக் கொடு முடி, பேணியபெரு மானைப்பிஞ்ஞகப் பித்தனைப்பிறப் பில்லி யைப், பாணுலாவரி வண்டறைகொன்றைத் தாரனைப்படப் பாம்பரை, நாணனைத் தொண்டனூரன் சொல்லிவை சொல்லு வார்க்கில்லை துன்பமே. க0

திருச்சிற்றம்பலம்

என்னும் 'உலகெலாம் உய்ய உறுதியாம் திருப்பதிகத்தை உரைத்து, மெய் உணர்வுஅுறு ஒருமை நிலவிய சிந்தையுடன் திருவருளால்' அப் பதியினின்றும் நீங்கி, திருப்பேரூரை அடைந்து, அங்கே,

அத்திருப் பதியை அணைந்துமுன் தம்மை ஆண்டவர் கோயி லுட் புகுந்து, மெய்த்தவர் சூழ வலங்கொண்டு முன்பு மேவுவார் தம்மெதிர் விளங்க, நித்தனார் தில்லை மன்றுள்நின் றடல் நீடிய கோலம்நேர் காட்டக், கைத்தலங் குவித்துக் கண்கள்ஆ னந்தக் கலுழிநீர் பொழிதரக் கண்டார்.

காண்டலுந் தொழுது வீழ்ந்துடன் எழுந்து கரையில்அன்(பு) என்பினை உருக்கப், பூண்டஐம் புலனில் புலப்படா இன்பம் புணர்ந்துமெய் யுணர்வினில் பொங்கத், தாண்டவம் புரியுந் தம் பிரா னுரைத் [1]தலைப்படக் கிடைத்தபின் சைவ,ஆண்டகை யாருக் கடுத்த [2]அந்நிலைமை விளைவையார் அளவறிந் துரைப்பார்.

அந்நிலை நிகழ்ந்த ஆரருள் பெற்ற அன்பனார் இன்பவெள் ளத்து, மன்னிய பாடல் மகிழ்ந்துடன் பரவி வளம்பதி அதனிடை மரு விப், "பொன்மணி மன்றுள் எடுத்தசே வடியார் புரிநடங் கும் பிடப் பெற்றல், என்இனிப் புறம்போய் எய்துவ" தென்று மீண்டெழுந் தருளுதற் கெழுவார். —பெ. ஏ. 89, 90, 91.

பின்பு பேரூரை விட்டு நீங்கி, வெஞ்சமாக்கூடலும் பணிந்து,

---

(க0) கோணிய - வளைந்த. பாண் உலா - தேனின்பொருட்டு உலாவுகின்ற.

[1]தலைப்படக் கிடைத்தபின் - தரிசிக்கப் பெற்றபின்.

[2]அந்நிலைமை விளைவை - அந்நிலைமையில் உண்டான பேரானந்த விளைவை.

# 42. திருவெஞ்சமாக்கூடல்

## பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

எறிக்குங் கதிர்வேய் உதிர்முத்தமொடே லம்இலவங்கம் தக்கோலமிஞ்சி, செறிக்கும்புன லுட் பெய்துகொண்டுமண்டித் திளைத்தெற்றுசிற்று றதன்கீழ்க்கரைமேல், முறிக்குந் தழைமா முடப்புன்னைஞாழல் குருக்கத்திகள்மேற் குயில் கூவலுறு, வெறிக்குங்கலைமா வெஞ்சமாக்கூடல் விகிர்தாஅடி யேனையும்வேண்டுதியே. க

குளங்கள்பலவுங் குழியும்நிறையக் குடமாமணிசந் தன மும் அகிலுந், துளங்கும்புன லுட் பெய்துகொண்டு மண்டித் திளைத்தெற்றுசிற்று றதன்கீழ்க்கரைமேல், வளங்கொள் மதில்மா ளிகைகோபுரமும் மணிமண்டமும் இவைமஞ்சுதன் னுள், விளங்குமதிதோய் வெஞ்சமாக்கூடல் விகிர்தாஅடியே னையும்வேண்டுதியே. உ

வரைமான்அனையார் மயிற்சாயல்நல்லார் வடிவேற்கண்நல் லார் பலர் வந்திறைஞ்சத், திரையார்புன லுட் பெய்து கொண்டுமண்டித் திளைத்தெற்றுசிற்று றதன்கீழ்க்கரைமேல், நிரையார்கமுகும் நெடுந்தாள்தெங்குங் குறுந்தாட்பலவும் விரவிக்குளிரும், விரையார்பொழில்சூழ் வெஞ்சமாக்கூடல் விகிர் தாஅடியே னையும்வேண்டுதியே. ௩

---

(க) எறிக்கும்......முத்தமொடு - மூங்கிலின் நின்றும் உதிர்ந்த கிரணங்களை வீசும் முத்துக்களொடு. மண்டித் திளைத்து எற்று - நெருங்கி நிரம்பி மோதுகிற. முடப் புன்னை - வளைந்த புன்னைமரம். ஞாழல் - குங்கும மரம். வெறிக்கும் கலைமா - மருட்சியுடைய கலை மான். விகிர்தா - ஞானசொரூபனே. (உ) குடமாமணி-திரட்சியுடைய பெரிய இரத்தினங்கள். மஞ்சு - மேகம். துளங்கும் - ஓடுகின்ற. (௩) நிரை ஆர் - வரிசைகள் நிறைந்த.

பண்ணேர்மொழியா ளையோர்பங்குடையாய படுகாட்டகத் தென்று மோர்பற்றொழியாய், தண்ணாரகிலும் நலசாமரை யும் அலைத்தெற்றுகின்ற றதன்கீழ்க்கரைமேல், மண்ணார் முழவுங் குழலுமியம்ப மடவார்நடமா டுமணியரங்கில், விண் ணோர்மதித்தாய் வெஞ்சமாக்கூடல் விகிர்தாஅடியே னையும் வேண்டுதியே. ௪

துளைவெண் குழையுஞ் சுருள்வெண்தோடுந் தூங்குங் காதிற் றுளங்கும்படியாய், களையேகமழும் மலர்க்கொன்றை யினுய் கலந்தார்க்கருள்செய் திடுங்கற்பகமே, பி(ள்)ளைவெண் பிறையாய் பிறங்குஞ்சடையாய் பிறவாதவனே பெறுதற்கரி யாய், வெ(ள்)ளைமால்விடையாய் வெஞ்சமாக்கூடல் விகிர்தா அடியே னையும்வேண்டுதியே. ௫

தொழுவார்க்கெளியாய் துயர்தீரநின்றாய் சுரும்பார்மலர்க் கொன்றை துன்றுஞ்சடையாய், உழுவார்க்கரிய விடையேறி யொன்னார் புரந்தீயெழவோடு வித்தாயழகார், முழவாரொலி பாட லோடாடலறா முதுகாடரங்கா நடமாடவல்லாய், விழ வார்மறுகில் வெஞ்சமாக்கூடல் விகிர்தாஅடியே னையும்வேண் டுதியே. ௬

கடமாகளியா னையுரித்தவனே கரிகாடிடமா அனல்வீசி நின்று, நடமாடவல்லாய் நரையேறுகந்தாய் நல்லாய்நறுங் கொன்றை நயந்தவனே, படமாயிரமாம் பருத்துத்திப்பைங் கண் பகுவாயெயிற்றோ(டு) அழலேயுமிழும், விடவார் அரவா வெஞ்சமாக்கூடல் விகிர்தாஅடியே னையும்வேண்டுதியே. எ

---

(௪) பண் - இராக அமைப்பு. மண்ணார் - அழகிய. அரங்கு-நாடக சாலை. (௫) தூங்கும்......படியாய் - தொங்குகின்ற காதில் அசைகின்ற வடிவத்தை உடையவனே. களையே கமழும் - அழகாக விளங்கும். பிளைவெண் பிறையாய் - வெண்மையான இளம் பிறையை அணிந் தவனே. (௬) துன்றும் - நெருங்கிய. விழவு ஆர் மறுகின் - திரு விழா நிறைந்த வீதிகளை உடைய (எ) கடம் - மதநீரைப் பொழிகின்ற. பருத்துத்தி - பெரிய புள்ளிகளையும். பகுவாய் - பிளந்த வாயையும்.

காடும்மலையும் நாடும்இடறிக் கதிர்மாமணிசந் தனமும் மகிலும், சேடன்னுறையும் மிடந்தான்விரும்பித் திளைத்தெற் றுசிற்று றதன்கீழ்க்கரைமேல், பாடல்முழவுங் குழலும்மியம் பப் பணைத்தோளியர்பாட லொடாடலறு, வேடர்விரும்பும் வெஞ்சமாக்கூடல் விகிர்தாஅடியே னையும்வேண்டுதியே. அ

கொங்கார்மலர்க்கொன்றை யந்தாரவனே கொடுகொட்டி யோர் வீணையுடையவனே, பொங்காடரவம் புனலுஞ்சடை மேற் பொதியும்புனிதா புனஞ்சூழ்ந்தழகார், துங்கார்புன லுட் பெய்துகொண்டுமண்டித் திளைத்தெற்றுசிற்று றதன் கீழ்க்கரைமேல், வெங்கார்வயல்சூழ் வெஞ்சமாக்கூடல் விகிர் தாஅடியே னையும்வேண்டுதியே. ௯

வஞ்சிநுண்ணிடையார் மயிற்சாயல்அன்னார் வடிவேற் கண்நல்லார் பலர்வந்திறைஞ்சும், வெஞ்சமாக்கூடல் விகிர் தாஅடியே னையும்வேண்டுதியே யென்றுதான்விரும்பி, வஞ் சியாதளிக்கும் வயல்நாவலர்கோன் வனப்பகையப்பன் வன் தொண்டன்சொன்ன, செஞ்சொற்றமிழ் மாலை கள்பத்தும்வல் லார் சிவலோகத்திருப்பது திண்ணமன்றே. ௧0

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடிக் கற்குடி மலையை அடைந்தார். வீடு தரும்படியான கற்குடியில் விழுமியாரைப் பணிந்திறைஞ்சி,

---

(அ) பணை - பருத்த. (௯) கொங்கு - மகரந்தம்; தேன். கொடு கொட்டி - சிவன் கூத்து. துங்கார் - பரிசுத்தமான. வெங்கார் வயல் - வெப்பத்தோடு கூடிய கரிய வயல். (௧0) வஞ்சி - வஞ்சிக் கொடி போலும். வஞ்சியாது அளிக்கும் வயல் - ஒளிக்காமல் விளைவைக் கொடுக்கும் வளப்பமுள்ள வயல்களையுடைய.

# 27. திருக்கற்குடி

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

விடையா ருங்கொடியாய் வெறியார்மலர்க் கொன்றையினாய்
படையார் வெண்மழுவா பரமாய பரம்பரனே
கடியார் பூம்பொழில்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
அடிகே ளெம்பெருமான் அடியேனையும் அஞ்சலென்னே. க

மறையோர் வானவரும் தொழுதேத்தி வணங்கநின்ற
இறைவா எம்பெருமான் எனக்கின்னமு தாயவனே
கறையார் சோலைகள்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
அறவா அங்கணனே அடியேனையும் அஞ்சலென்னே. உ

சிலையால் முப்புரங்கள் பொடியாகச் சினந்தவனே
மலைமேல் மாமருந்தே மடமாதிடங் கொண்டவனே
கலைசேர் கையினனே திருக்கற்குடி மன்னிநின்ற
அலைசேர் செஞ்சடையா யடியேனையு மஞ்சலென்னே. ௩

செய்யார் மேனியனே திருநீல மிடற்றினனே
மையார் கண்ணிபங்கா மதயானை யுரித்தவனே
கையார் சூலத்தினாய் திருக்கற்குடி மன்னிநின்ற
ஐயா எம்பெருமா னடியேனையு மஞ்சலென்னே. ச

சந்தார் வெண்குழையாய் சரிகோவண ஆடையனே
பந்தா ரும்விரலா ளொருபாகம் அமர்ந்தவனே
கந்தார் சோலைகள்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
எந்தா யெம்பெருமா னடியேனையும் என்றுகொள்ளே. ரு

அரையார் கீளொடுகோ வணமும் அரவும் அசைத்து
விரையார் கொன்றையுடன் விளங்கும் பிறை மேலுடையாய்

(க) வெறி - வாசனை. (உ) கறை ஆர் - கருமை நிறைந்த. அறவா - தரும வடிவினனே. (௩) மடமாது - இளம்பெண். கலை - மான் (ரு) சந்தம் ஆர் - அழகுபொருந்திய. கந்தம்ஆர் - மணம் நிறைந்த.

கரையா ரும்வயல்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
அரையா எம்பெருமா னடியேனையு மஞ்சலென்னே. ௬

பாரோர் விண்ணவரும் பரவிப்பணிந் தேத்தநின்ற
சீரார் மேனியனே திகழ்நீல மிடற்றினனே
காரார் பூம்பொழில்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
ஆரா இன்னமுதே அடியேனையு மஞ்சலென்னே. ௭

நிலனே நீர்வளிதீ நெடுவானக மாகிநின்ற
புலனே புண்டரிகத் தயன்மாலவன் போற்றிசெய்யும்
கனலே கற்பகமே திருக்கற்குடி மன்னிநின்ற
அனல்சேர் கையினனே யடியேனையு மஞ்சலென்னே. ௮

வருங்கா லன்னுயிரை மடியத்திரு மெல்விரலால்
பெரும்பா லன்தனக்காய்ப் பிரிவித்த பெருந்தகையே
கரும்பா ரும்வயல்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
விரும்பா எம்பெருமா னடியேனையும் வேண்டுதியே. ௯

அலையார் தண்புனல்சூழ்ந் தழகாகி விழவமரும்
கலையார் மாதவர்சேர் திருக்கற்குடிக் கற்பகத்தைச்
சிலையார் வாணுதலாள் நல்லசிங்கடி யப்பனுரை
விலையார் மாலைவல்லார் வியனுலகு(கு)ஆள்பவரே. ௧0

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகத்தை நிறைந்த சிந்தையுடன் பாடித் **திருவாறை மேற்றளியில்** நம்பர் பாதம் பணிந்திறைஞ்சி, **திருஇன்னம்பரை** அடைந்து ஈசர் கழல் வணங்கி, **திருப்புறம்பயத்தைச்** சேரும் அன்பு மிக்கெழ,

---

(௭) ஆரா - தெவிட்டாத. (௮) புலனே - அறிவு உருவனே. (௯) வேண்டுதி-விரும்பக்கடவாய். (௧0) கலைஆர் - கலைகளில் தேர்ச்சி பெற்ற. விலை ஆர் - விலை ஏறப்பெற்ற.

## 35. திருப்புறம்பயம்

### பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

அங்கமோதியோர் ஆறைமேற்றளி நின்றும்போந்துவந் தின்னம்பர்த், தங்கினோமையும் இன்னதென்றிலர் ஈசனாரெழு நெஞ்சமே, கங்குலேமங்கள் கொண்டுதேவர்க ளேத்திவான வர் தாந்தொழும், பொங்குமால்விடை யேறிசெல்வப் புறம் பயந்தொழப் போதுமே. ௧

பதியுஞ்சுற்றமும் பெற்றமக்களும் பண்டையரல்லர் பெண்டிரும், நிதியிலிம்மனை வாழும்வாழ்க்கையும் நினைப் பொழிமட நெஞ்சமே, மதியஞ்சேர்சடைக் கங்கையானிடம் மகிழும் மல்லிகை செண்பகம், புதியபூமலர்ந் தெல்லிநாறும் புறம்பயந் தொழப் போதுமே. ௨

புறந்திரைந்து நரம்பெழுந்து நரைத்துநீயுரை யாற்றளர் ந்(து), அறம்புரிந்து நினைப்பதாண்மை யரிதுகாண்இஃ தறிதி யேல், திறம்பியாதெழு நெஞ்சமேசிறு காலைநாமுறு வாணியம், புறம்பயத்துறை பூதநாதன் புறம்பயந்தொழப் போதுமே. ௩

குற்றொருவரைக் கூறைகொண்டு கொலைகள்சூழ்ந்த களவெலாம், செற்றொருவரைச் செய்ததீமைகள் இம்மையே வரும் திண்ணமே, மற்றொருவரைப் பற்றிலேன்மற வாதெழு மட நெஞ்சமே, புற்றரவுடைப் பெற்றமேறி புறம்பயந் தொழப் போதுமே. ௪

---

(௧) கங்குல் - இரவில். ஏமங்கள் - பொன்; விபூதி. தொழப் போதும் - வணங்கப் போவோம். (௨) பண்டையரல்லர் - பழமையான தொடர்பு இல்லாதவர்கள். நிதியில் - திரவியத்தோடு. (௩) 1-வரி - கிழப் பருவம் அடைந்தபோது. அறம் புரிந்து நினைப்பது ஆண்மை அரிதுகாண் - சிவதர்மத்தைச் செய்து சிவபெருமானைத் தியானிக்கும்படியான வீரத் தன்மை முடியாத காரியம். திறம்பியாது - தவறாமல்; தாமதியாமல். சிறுகாலை நாம் உறு வாணியம் - இளம் பிராயத்தில் நாம்செய்தற்குரிய வியாபாரம் இதுவேயாகும். (௪) குற்று ஒருவரை - ஒருவரைப் புடைத்து. கொலைகள் சூழ்ந்த - கொலைகளோடு சேர்ந்த. செற்று ஒருவரை - ஒருவரை வருத்தி.

கள்ளிநீசெய்த தீமையுள்ளன பாவமும்பறை யும்படி, தெள்ளிதாவெழு நெஞ்சமேசெங்கண் சேவுடைச்சிவ லோக னூர், துள்ளிவெள்ளிள வாளைபாய்வயல் தோன்றுதாமரைப் பூக்கள்மேல், புள்ளிநள்ளிகள் பள்ளிகொள்ளும் புறம்பயந் தொழப் போதுமே. ரு

படையெலாம் பக(டு)ஆரஆளிலும் பவ்வஞ்சூழ்ந்தா சாளிலும், கடையெலாம்பிணைத் தேரைவால்கவ லாதெழு மட நெஞ்சமே, மடையெலாங்கழு நீர்மலர்ந்து மருங்கெலாங் கரும் பாடத்தேன், புடையெலாம்மணம் நாறுசோலைப் புறம் பயந்தொழப் போதுமே. சு

முன்னைச்செய்வினை இம்மையில்வந்து மூடுமாதலின் முன்னமே, என்னைநீதியக் காதெழுமட நெஞ்சமேயெந்தை தந்தையூர், அன்னச்சேவலோ டூடிப்பேடைகள் கூடிச்சேரும் அணிபொழில், புன்னைக்கன்னி கழிக்கண்நாறும் புறம்பயந் தொழப் போதுமே. எ

மலமேலாம்அறும் இம்மையேமறு மைக்கும் வல்வினை சார்கிலா, சலமெலாம்ஒழி நெஞ்சமேயெங்கள் சங்கரன் வந்து தங்குமூர், கலமெலாங்கடல் மண்டுகாவிரி நங்கை யாடிய கங்கைநீர், புலமேலாம் மண்டிப் பொன்விளைக்கும் புறம்பயந்தொழப் போதுமே. அ

---

(ரு) கள்ளி - களவு செய்து ; வஞ்சித்து. பறையும்படி - அழியும் படி. நள்ளி - நண்டு. (சு) படையெலாம்-நால்வகைச் சேனைகளோடு. பகடுஆர - மிக்க பெருமையோடு அல்லது யானைப்படைமிக. கடையெலாம் பிணைத்தேரை வால்-கடைசியாக தவளையினிடத்துச் சேர்ந்ததுபோன்றுள்ள வால்போல ஒன்றுமில்லாமற் போகும். தவளை முட்டையிலிருந்து பொறித்து மீன் வடிவத்தோடு வெளிவரும்போது நீண்ட வாலுடன் இருக்கும்; பிறகு உருவம் மாறி கடைசியாய் தவளை வடிவு அடையும்போது வால் சூன்யமாய்விடும். கரும்புஆட - கரும்பை ஆலையிலிட்டுப் பிழிய. (எ) தியக்காது - மயக்காமல். புன்னைக்கன்னி கழிக்கண் நாறும் - இளம் புன்னை மரங்கள் கழிஅருகே வாசனை வீசும். (அ) சலம் - கோபம் ; பொய். கலம் - மரக்கலங்கள். கடல் மண்டு காவிரி - கடலில் உள்ளனபோல மிகுந்து இருக்கிற காவிரி. பொன் விளைக்கும் - வளப்ப மிகுதியால் செல்வத்தைப் பெருக்கும்.

பண்டரியன செய்ததீமையும் பாவமும்பறை யும்படி
கண்டரியன கேட்டியேற்கவ லாதெழுமட நெஞ்சமே
தொண்டரியன பாடித்துள்ளிநின் றாடிவானவர் தாந்தொழும்
புண்டரீகம் மலரும்பொய்கைப் புறம்பயந்தொழப் போதுமே.

துஞ்சியும்பிறந் துஞ்சிறந்துந் துயக்கறாத மயக்கிவை
அஞ்சியூரன் திருப்புறம்பயத் தப்பனைத்தமிழ்ச் சீரினால்
நெஞ்சினாலே புறம்பயந்தொழு(து) உய்துமென்று நினைத்தன
வஞ்சியாதுரை செய்யவல்லவர் வல்லவானுல காள்வரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

என்னும் இன்னிசைப் பதிகம் பாடிக்கொண்டு திருப்புறம்பயம் சேர்ந்து, அவ்வூரில் உள்ள தொண்டர்கள் எதிர் கொள்ளத் திருக் கோயிலுக்குச் சென்று வழிபட்டு, சிவபெருமான் அமர்ந்த தானங்கள் பல பணிந்து, திருக்கூடலை யாற்றூரைச் சாரும்போது நம்பிஆரூரர் முன்பு இறைவன் வேதியர் வடிவங்கொண்டு நின்றார். நம்பிஆரூரர் வேதியரை நோக்கி "திருமுதுகுன்று எய்த வழியாது" என்று கேட்க, குன்றவில்லியாரும் "கூடலையாற்றூர் ஏறச் சென்றதிவ் வழி தான்" என்று கூறிச் செல்வழித் துணையாய் உள்ளார் உடன் சென்று மறைய, வந்தவர் சிவபெருமான் என்று நம்பிஆரூரர் உணர்ந்து "அண்டர்தம் பெருமான் போந்த அதிசயம் அறியேன்" என்று,

## 85. திருக்கூடலையாற்றூர்

### பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

வடிவுடை மழுவேந்தி மதகரி உரிபோர்த்துப்
பொடியணி திருமேனிப் புரிகுழல் உமையோடும்

(௯) கண்டு அரியன கேட்டியேல் - அரியனவற்றைக் கண்டு அரியனவற்றைக் கேட்கவேண்டுமானால். (௧௦) துஞ்சியும்......அஞ்சி- இறந்தும், பிறந்தும், சிறப்பு அடைந்தும் மாறிமாறி வருகின்ற சோர்வை விளைவிக்கிற மயக்கமாகிய இவைகளுக்குப் பயந்து. தமிழ்ச் சீரினால் - சிறப்புடைய தமிழினால்.

(௧) வடிவுடை - அழகு பொருந்திய.

கொடியணி நெடுமாடக் கூடலை யாற்றூரில்
அடிகளிவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. ௧

வையகம் முழுதுண்ட மாலொடு நான்முகனும்
பையிள அரவல்குற் பாவையொ டும்முடனே
கொய்யணி மலர்ச்சோலைக் கூடலை யாற்றூரில்
ஐயன்இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. ௨

ஊர்தொறும் வெண்டலை கொண்(டு) உண்பலி யிடுமென்று
வார்தரு மென்முலையாள் மங்கையொ டும்முடனே
கூர்நுனை மழுவேந்திக் கூடலை யாற்றூரில்
ஆர்வனிவ் வழிபோந்த அதிசய மறியேனே. ௩

சந்தண வும்புனலுந் தாங்கிய தாழ்சடையன்
பந்தண வும்விரலாள் பாவையொ டும்முடனே
கொந்தண வும்பொழில்சூழ் கூடலை யாற்றூரில்
அந்தணன் வழிபோந்த அதிசயம் அறியேனே. ௪

வேதியர் விண்ணவரும் மண்ணவருந் தொழநற்
சோதிய துருவாகிச் சுரிகுழ லுமையோடும்
கோதிய வண்டறையுங் கூடலை யாற்றூரில்
ஆதியிவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. ௫

வித்தக வீணையொடும் வெண்புரி நூல்பூண்டு
முத்த(ன்)ன வெண்முறுவல் மங்கையொ டும்முடனே
கொத்தல ரும்பொழில்சூழ் கூடலை யாற்றூரில்
அத்தன்இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. ௬

மழைநுழை மதியமொடு வாளர வம்சடைமேல்
இழைநுழை துகிலல்குல் ஏந்திழை யாளோடும்
குழையணி திகழ்சோலைக் கூடலை யாற்றூரில்
அழகன்இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. ௭

(௨) கொய்யணி மலர் - கொய்யப்படுகிற அழகிய மலர்களை யுடைய. (௩) கொண்டு - கையில் ஏந்தி. ஆர்வன் - அன்பே வடிவானவன். (௪) சந்து அணவும் - அழகு பொருந்திய. கொந்து - பூங்கொத்துகள். (௫) கோதிய - மூக்கினால் உழுத. (௬) வித்தக வீணை - ஞானரூபமாகிய வீணை. (௭) இழை நுழை துகில்-இழைகளாலாகிய ஆடை.

மறைமுதல் வானவரும் மாலயன் இந்திரனும்
பிறைநுதல் மங்கையொடும் பேய்க்கண முஞ்சூழக்
குறள்படை யதனோடுங் கூடலை யாற்றூரில்
அறவனிவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. அ

வேலையின் நஞ்சுண்டு விடையது தானேறிப்
பால(ன்)ன மென்மொழியாள் பாவையொ டும்முடனே
கோலம துருவாகிக் கூடலை யாற்றூரில்
ஆலனிவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. கூ

கூடலை யாற்றூரிற் கொடியிடை யவளோடும்
ஆட லுகந்தானை அதிசய மிதுவென்று
நாடிய இன்தமிழால் நாவல வூரன்சொல்
பாடல்கள் பத்தும்வல்லார் தம்வினை பற்றறுமே. கO

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடித் திருக்கூடலையாற்றூர் திருக்கோயிலுக்குச் சென்று "ஆடகப் பொதுவில் ஆடும் அறைகழல் வணங்கிப் போற்றி"த் திருமுதுகுன்றை அடைந்து,

## 43. திருமுதுகுன்றம்

### பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

நஞ்சி யிடையின்று நாளையென் றும்மை நச்சுவார்
துஞ்சி யிட்டாற்பின் னைச்செய்வ தென்னடி கேள்சொலீர்

(எ) குழை அணி திகழ் - தளிர்களால் அழகு விளங்குகிற. (அ) குறள் படை - பூதப்படை. (கூ) கோலம் அது உருவாகி - அழகிய உருவத்தை எடுத்து. ஆலன் - கல்லாலின் கீழ் இருந்தவன். விஷத்தை உண்டவன்.

(க) நஞ்சி - நைந்து; மனம் உருகி. நஞ்சி உம்மை நச்சுவார் (விரும்புகிறவர்கள்) இடை இன்று நாளை என்று (இன்றைக்கு அருள் செய்வோம் நாளைக்குச் செய்வோம் என்று நீர் காலதாமதம் செய்து அவர்கள்) துஞ்சியிட்டால் பிறகு நீர் செய்வதற்கு என்ன இருக்கின்றது.

பஞ்சி யிடப்புட்டில் கீறு மோபணி யீரருள்
முஞ்சி யிடைச்சங்க மார்க்குஞ் சீர்முது குன்றரே. ௧

ஏரிக் கனகக் கமல மலரன்ன சேவடி
ஊரித் தனையுந் திரிந்தக் காலவை நோங்கொலோ
வாரிக் கட்சென்று வளைக்கப் பட்டு வருந்திப்போய்
மூரிக் களிறு முழக்க றுமுது குன்றரே. ௨

தொண்டர்கள் பாட விண்ணோர்க ளேத்த உழிதர்வீர்
பண்டகந் தோறும் பலிக்குச் செல்வது பான்மையே
கண்டகர் வாளிகள் வில்லி கள்புறங் காக்குஞ்சீர்
மொண்டகை வேள்வி முழக்க றுமுது குன்றரே. ௩

இளைப்பறி யீரிம்மை யேத்துவார்க் கம்மை செய்வதென்
விளைப்பறி யாதவெங் கால னையுயிர் வீட்டினீர்
அளைப்பிரி யாஅர வல்கு லாளொடு கங்கைசேர்
முளைப்பிறைச் சென்னிச் சடைமு டிமுது குன்றரே. ௪

ஆடி யசைந்தடி யாரும் நீரும் அகந்தொறும்
பாடிப் படைத்த பொருளெ லாமுமை யாளுக்கோ
மாட மதிலணி கோபு ரமணி மண்டபம்
மூடி முகில்தவழ் சோலை சூழ்முது குன்றரே. ௫

இழைவளர் நுண்ணிடை மங்கை யோடிடு காட்டிடைக்
குழைவளர் காதுகள் மோத நின்று குனிப்பதே
மழைவள ரும்நெடுங் கோட்டி டைமத யானைகள்
முழைவளர் ஆளி முழக்க றுமுது குன்றரே. ௬

---

(௧) புட்டில் கீறுமோ - கூடு கிழிந்துவிடுமோ. பணியீர் அருள் - அருள்செய்வீர். முஞ்சி - தருப்பைப்புல் புதர். (௨) ஏரிக்கனகக்கமல மலர் - ஏரியிற்பூத்த பொன்னிறமுள்ள தாமரைப்பூ. வாரி-வெள்ளம். வளைக்கப்பட்டு - தடுக்கப்பட்டு. மூரி-வலிய. (௩) பண்டு - பழமையாக. பான்மையோ - தகுதியோ. கண்டகர் - துஷ்டர். மொண்டகை - (தளராது) எடுத்துதவும் கரம். (௪) இளைப்பு - வருத்தம். விளைப்பு - மேல் விளையப்போவதை. அளை - புற்று. (௬) இழைவளர் - நூலிழை போலும். குழைவளர் - குழை அணிந்த. குனிப்பதே - நடிப்பதோ. மழை வளரும் - மேகங்கள் சஞ்சரிக்கின்ற. கோட்டிடை - மலையின் உச்சியினிடத்து. முழை - குகை. ஆளி - சிங்கம்.

சென்றில் இடைச்செ டிநாய் குரைக்கச் சேடிச்சிகள்
மன்றி லிடைப்பலி தேரப் போவது வாழ்க்கையே
குன்றி லிடைக்களி(று) ஆளி கொள்ளக் குறத்திகள்
முன்றி லிடைப்பிடி கன்றி டும்முது குன்றரே. எ

அந்தி திரிந்தடி யாரும் நீரும் அகந்தொறும்
சந்திகள் தோறும் பலிக்குச் செல்வது தக்கதே
மந்தி கடுவனுக் குண்பழம் நாடி மலைப்புறம்
முந்தி யடிதொழ நின்ற சீர்முது குன்றரே. அ

செட்டிநின் காதலி ஊர்கள் தோறும் அறஞ்செய
அட்டுமின் சில்பலிக் கென்(று) அகங்கடை நிற்பதே
பட்டிவெள் ளேறுகந் தேறு வீர்பரி சென்கொலோ
முட்டி யடிதொழ நின்ற சீர்முது குன்றரே. கூ

எத்திசை யுந்திரிந்(து) ஏற்றக் கால்பிற ரென்சொலார்
பத்தியி னாலிடு வாரி டைப்பலி கொள்மினோ
எத்திசை யுந்திரை யேற மோதிக் கரைகள்மேல்
முத்திமுத் தாறு வலஞ்செ யும்முது குன்றரே. கS0

முத்திமுத் தாறு வலஞ்செ யும்முது குன்றரைப்
பித்தனைப் பாணடித் தொண்ட னூரன் பிதற்றிவை
தத்துவ ஞானிக ளாயி னார்தடு மாற்றிலார்
எத்தவத் தோர்களும் எத்து வார்க்கிட ரில்லையே. கக

திருச்சிற்றம்பலம்

என்னும் செஞ்சொல்மாலைத் திருப்பதிகம் பாடி, அஞ்சலி கூப்பிப் பொன் வேண்டும் குறிப்போடு,

---

(எ) சென்று இல் இடை செடிநாய் குரைக்க - கோபத்தையுடைய நாய்கள் வீட்டினிடைச் சென்று குரைக்க. மன்று - வீடு. தேர - ஏற்க. வாழ்க்கையே - நல்வாழ்வுதானோ? களிறு ஆளிகொள்ள - ஆண்யானைகளைச் சிங்கங்கள் கொல்ல. பிடிகள் கன்றிடும் - பெண் யானைகள் மனம் வருந்துகின்ற. (அ) சந்தி - வீதிகள் கூடுமிடம். (கூ) செட்டிநின் காதலி - சிக்கனகாரியாகிய உன் மனைவி. அட்டும் - சமைத்தும். இன்சில்பலிக்கு - இனிய அற்ப பிக்ஷைக்கு. பட்டி - இளமையான. முட்டி - (அடியார்கள்) நெருங்கி. (கS0) முத்தி - மூழ்குவோருக்கு முத்தியைக் கொடுக்கும்.

# 63. நம்பி யென்ற திருப்பதிகம்

## பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

மெய்யை முற்றப் பொடிப் பூசியோர் நம்பி வேதம்நான் கும்விரித் தோதியோர் நம்பி, கையிலோர் வெண்மழு வேந்தியோர் நம்பி கண்ணுமூன் றுடைய யாயொரு நம்பி, செய்ய நம்பிசிறு செஞ்சடை நம்பி திரிபுரந் தீயெழச் செற்றதோர் வில்லால், எய்த நம்பியென்னை ஆளுடைநம்பி யெழுபிறப் புமெங்கள் நம்பிகண் டாயே. க

திங்கள் நம்பிமுடி மேல்அடி யார்பாற் சிறந்த நம்பிபிறந் தவுயிர்க் கெல்லாம், அங்கண் நம்பியருள் மால்விசும் பாளும் அமரர் நம்பிகும ரன்முதற் றேவர், தங்கள் நம்பிதவத் துக்கொரு நம்பி தாதை யென்றுன் சரண்பணிந் தேத்தும், எங்கள் நம்பியென்னை ஆளுடை நம்பி யெழுபிறப் புமெங்கள் நம்பி கண் டாயே. உ

வருந்த அன்றுமத யானை யுரித்த வழக்கு நம்பிமுழக் குங்கடல் நஞ்சம், அருந்து நம்பியம ரர்க்கமுதீந்த அருளென் நம்பிபொரு ளால்வரு நட்டம், புரிந்த நம்பிபுரி நூலுடை நம்பி பொழுதும்விண் ணும்முழு தும்பல வாகி, இருந்த நம்பி யென்னை யாளுடை நம்பி யெழுபிறப் புமெங்கள் நம்பிகண் டாயே. ங

---

(க) நம்பி - ஆடவரிற் சிறந்தோன். செய்ய - அழகிய, சிவந்த. (உ) அங்கண்-கருணையுடைய. அருள்-அருளோடுங்கூடி. (ங) வழக்கு - வழக்கம். பொருளால் வருநட்டம்-பஞ்சகிருத்தியமாகிய பொருளுடன் கூடிய நடனம். பொழுதும் விண்ணும் முழுதும் பலவாகி - அட்டமூர்த்தமும் மற்றுமாய். பொழுதும் - சூரியனும். விண்ணும் - ஆகாயமாயும். முழுதும் - சந்திரன், நிலம், நீர், தீ, காற்று, ஆன்மா ஆக முழுவதுமாய்ப் பல வுருவாகி.

ஊறு நம்பிஅமு தா,உயிர்க் கெல்லாம் உரியநம் பிதெரி
யம்மறை யங்கம், கூறும் நம்பிமுனி வர்க்கருங் கூற்றைக்
குமைத்தநம் பிகுமை யாய்ப்புல னைந்துஞ், சீறு நம்பிதிரு
வெள்ளடை நம்பி செங்கண்வெள் ளைச்செழுங் கோட்டெரு
தென்னும், ஏறு நம்பியென்னை யாளுடை நம்பி யெழுபிறப்
புமெங்கள் நம்பிகண் டாயே. ௪

குற்ற நம்பிகுறு காரெயில் மூன்றைக் குலைத்தநம் பிசிலை
யாவரை கையில், பற்று நம்பிபர மானந்த வெள்ளம் பணிக்கு
நம் பியெனப் பாடுத லல்லால், மற்று நம்பியுனக் கென்செய
வல்லேன் மதியி லேன்படு வெந்துய ரெல்லாம், எற்று நம்பி
யென்னை யாளுடை நம்பி யெழுபிறப் புமெங்கள் நம்பிகண்
டாயே. ௫

அரித்த நம்பிஅடி கைதொழு வார்நோய் ஆண்டநம்பி
முன்னை யீண்டுல கங்கள், தெரித்த நம்பியொரு சேவுடை
நம்பி சில்பலிக் கென்றகந் தோறுமெய் வேடந், தரித்த நம்பி
சம யங்களின் நம்பி தக்கன்றன் வேள்விபுக்(கு) அன்றிமை
யோரை, இரித்த நம்பியென்னை யாளுடை நம்பி யெழுபிறப்
புமெங்கள் நம்பிகண் டாயே. ௬

பின்னைநம் பும்புயத் தான்நெடு மாலும் பிரமனும் என்
றிவர் நாடியுங் காணா, உன்னை நம்பியொரு வர்க்கெய்த லாமே
உலகுநம் பியுரை செய்யும தல்லால், முன்னை நம்பிபின்னும்
வார்சடை நம்பி முழுதிவை யித்தனை யுந்தொகுத் தாண்ட,
தென்னை நம்பியெம் பிரானய நம்பி யெழுபிறப் புமெங்கள்
நம்பிகண் டாயே. ௭

---

(௪) ஊறும் - சுரக்கும். முனிவர்க்கு மறைஅங்கம் தெரியக் கூறும்—உரைநடை. குமைத்தல் - அழித்தல். (௫) குற்றம் - குற்றத்தையுடைய. "குற்றநீ குணங்கள்நீ" - சம்பந்தர். எற்றும் - அழிக்கும். (௬) அடிகை தொழுவார்நோய் அரித்த (போக்கிய). தெரித்த - தோற்றுவித்த. இரித்த - ஓடச்செய்த. சமயங்களின்நம்பி - எவ்வகைச் சமயத்தார்க்கும் உரித்தானவன். (௭) பின்னை - திருமகள். நம்பும் - விரும்புகிற. பின்னும் - பின்னலையுடைய. முன்னை - பின்னும் சொல்லழகை நோக்குக.

சொல்லை நம்பிபொரு ளாய்நின்ற நம்பி தோற்ற மீறுமுத லாகிய நம்பி, வல்லை நம்பிஅடி யார்க்கருள் செய்ய வருந்தி நம்பி உனக் காட்செய கில்லார், அல்லல் நம்பிபடு கின்றதேன் நாடி அணங்கொரு பாகம்வைத் தெண்கணம் போற்ற, இல்ல நம்பி யிடு பிச்சைகொள் நம்பி யெழுபிறப் புமெங்கள் நம்பிகண் டாயே. அ

காண்டு நம்பிகழற் சேவடி யென்றுங் கலந்துனைக் காதலித் தாட்செய்கிற் பாரை, ஆண்டு நம்பியவர் முன்கதி சேர அருளு நம்பிகுரு மாப்பிறை பாம்பைத், தீண்டுநம்பி சென்னியிற்கன்னி தங்கத் திருத்து நம்பிபொய்ச் சமண்பொரு ளாகி, ஈண்டு நம்பியிமை யோர்தொழு நம்பி யெழுபிறப்பு மெங்கள் நம்பிகண் டாயே. ௯

கரத்தி நம்பிகசி யாதவர் தம்மைக் கசிந்தவர்க் கிம்மையோ டம்மையி லின்பம், பெருக்கு நம்பிபெரு கக்கருத் தா.*

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடப் பனிமதிச் சடையார் பன்னிரண்டாயிரம் பொன் கொடுத்தருள, ஆளுடைய நம்பி "தேவரீர் அருளிய கனகமெல்லாம் ஆரூருள்ளோர் அதிசயிக்கும்படி அங்கே வரும்படி செய்யவேண்டும்" என்ன, அசரீரி வாக்கால் "செழு மணிமுத்தாற்றிட்டு இப்பொருளினை முழுதும் ஆரூர்க் குளத்திற்போய்க் கொள்க"

---

(அ) சொல்லும் பொருளுமாயிருக்கின்ற நம்பி. வல்லை-வலிமையுடையோனாகிய. அடியார்க்கு அருள்செய்ய வருந்தி - அடியார்கள் தன்னை எப்போது அடைந்து அருளைப் பெறுவார்கள் என்று கவலைப்படுகிற. ஆட்செய......என்நாடி - உனக்கு அடிமைசெய்ய மாட்டாதவர் துன்பப்படுவது யாது கருதி. இல்லம் (இல்லங்களில்) இடுபிச்சைகொள். (௯) 1-வது வரி. கழற்சேவடி காண்போம் என்னும் கருத்தோடு ஒரு வழிப்பட்ட மனதுடன் உன்னிடம் அன்பு செலுத்தி தொண்டு செய்பவரை. ஆண்டும் நம்பி - ஆட்கொண்டருளும் நம்பி. முன்கதி - முதன்மையான கதி, முத்தி. குரு - ஒளி. "குருமா மதிபுரை" - (திருவாலவாயுடையார் திருமுகப்பாசுரம்) சமணர்களுக்குப் பொய்ப் பொருளாகி இருக்கும் நம்பி. (௧0) மனம் கசியாதவர்களுக்கு ஒளிக்கின்ற நம்பி.

* மற்றது சிதலமாயது.

என்று அருளிச்செய்ய, வன்றொண்டர் மச்சம்வெட்டி வைத்துக்கொண்டு பொற்குவியலை எடுத்து நீருட் பெய்து, தில்லைமன்றில் சிவபிரான் திருக்கூத்தைக் கண்டு கும்பிடவேண்டும் என்னும் விருப்போடு பக்கத்திலுள்ள பதிகளிற் சென்று வணங்கித் தில்லையை அடைந்து பொன்னம்பலத்தில் ஆடிய திருவடிகளை வணங்கி,

"மடித்தாடும் அடிமைக்கண்" என்றெடுத்து மன்னுயிர்கட் கருளும் ஆற்றால், அடுத்தாற்று நன்னெறிக்கண் நின்றார்கள் வழிவிநாசனையா வண்ணம், தடுப்பானைப் பேரிற் கண்டநிலை சிறப்பித்துத் தனிக்கூத் தென்றும், நடிப்பானை நாம்மனமே பெற்றவாறெனுங்களிப்பால் நயந்து பாடி. —பெ. ஏ. 115.

## 90. கோயில்

### பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

மடித்தாடும் அடிமைக்கண் அன்றியே மனமேநீ வாழுநாளும், தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட் கொள்வான், கடுத்தாடுங் கரதலத்தில் தமருகமும் எரியகலுங் கரிய பாம்பும், பிடித்தாடி புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே. க

பேராது காமத்திற் சென்றார்போ லன்றியே பிரியா துள்கிச், சீரார்ந்த அன்பராய்ச் சென்றுமுன் னடிவீழுந் திருவினாரை, ஓராது தருமனார் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட் கொள்வான், பேராளர் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே. உ

---

(க) மடித்தாடும் - மட்டித்தாடும், வட்டமாக ஆடும். மட்டித்தாடும்படியான உன் திருவடிக்கு அடிமை செய்யுங்காலத்து மட்டுமன்றி, நீ வாழுங் காலத்திலெல்லாம் உன்னைத் தீநெறியிற் புகாமல் தடுத்துத் திருவருள் நெறியிற் செலுத்தி. எம்பெருமானைப் புலியூர் சிற்றம்பலத்தே அடைந்தோம். கடுத்து ஆடும் - விசையுடன் ஆடும். தமருகம் - உடுக்கை. (உ) பேராது காமத்திற் சென்றார்போல் பிரியாது அன்றியே உள்கி - இடையறாமல் காமநெறியிற் சென்றவனைப்போல் நீங்காமல் உன்னையே தியானித்து. ஓராது - ஆராயாமல்.

நரியார்தங் கள்ளத்தால் பக்கான பரிசொழிந்து நாளும் உள்கிப், பிரியாத அன்பராய்ச் சென்றுமுன் அடிவீழுஞ் சிந்தை யாரைத், தரியாது தருமனார் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட் கொள்வான், பெரியோர்கள் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே. ங

கருமையார் தருமனார் தமர்நம்மைக் கட்டியகட்(டு) அறுப்பிப் பானை, அருமையாம் தன்னுலகம் தருவானை மண்ணுலகம் காவல் பூண்ட, உரிமையாற் பல்லவர்க்குத் திறை கொடா மன்னவரை மறுக்கஞ் செய்யும், பெருமையார் புலியூர்ச்சிற் றம்பலத் தெம்பெருமானைப் பெற்றா மன்றே. ச

கருமானி னுரியாடைச் செஞ்சடைமேல் வெண்மதியக் கண்ணியானை, உருமன்ன கூற்றத்தை உருண்டோட வுதைத்துகந்(து) உலவா இன்பந், தருவானைத் தருமனார் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட் கொள்வான், பெருமானார் புலியூர்ச் சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே. ரு

உய்த்தாடித் திரியாதே உள்ளமே யொழிகண்டாய் ஊன்கண் ணோட்டம், எத்தாலுங் குறைவில்லை யென்பர்காண் நெஞ்சமே நம்மை நாளும், பைத்தாடும் அரவினன் படர் சடையன் பரஞ்சோதி பாவந் தீர்க்கும், பித்தாடி புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே. சு

முட்டாத முச்சந்தி மூவா யிரவர்க்கு மூர்த்தி யென்னப், பட்டானைப் பத்தராய்ப் பாவிப்பார் பாவமும் வினையும் போக, விட்டானை மலையெடுத்த இராவணனைத் தலைபத்தும்

(ங) நரியார் - நரிபோன்ற வஞ்சகர்கள். பக்குஆன பரிசு - பிளவாகிய தன்மை. நாளும் - தினந்தோறும். வீழும் - வீழ்ந்து வணங்கும். (ச) மறுக்கம் செய்யும்-வருத்தும். (ரு) கருமானின் உரி - யானைத்தோல். உரும் - இடியேறு. (சு) உய்த்துஆடி - புலன் வழியிற் சென்று அவைகள் ஆட்டியபடி ஆடி. ஊன்கண் ஓட்டம் - சரீரத்தின் மேல் பற்று. பைத்து - படமெடுத்து. பித்தாடி - பித்தன். (எ) முட்டாத முச்சந்தி - திரிசந்தியா காலங்களிலும் செய்யவேண்டிய நியமங்களைத் தவறாமல் செய்கிற.

ளெரியக் காலால், தொட்டானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றா மன்றே. எ

கல்தானுங் குழையுமா றன்றியே கருதுமா கருத கிற்
றார்க்(கு), எற்றாலுங் குறைவில்லை யென்பார்காண் உள்ளமே
நம்மை நாளுஞ், செற்றாட்டித் தருமனார் தமர்செக்கி லிடும்
போது தடுத்தாட் கொள்வான், பெற்றேறிப் புலியூர்ச்சிற்
றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே. அ

நாடுடைய நாதன்பால் நன்றென்றுஞ் செய்மனமே
நம்மை நாளுந், தாடுடைய தருமனார் தமர்செக்கி லிடும்
போது தடுத்தாட் கொள்வான், மோடுடைய சமணர்க்கும்
மூடையுடைய சாக்கியர்க்கும் மூடம் வைத்த, பீடுடைய புலி
யூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே. கூ

பாரூரும் அரவல்குல் உமைநங்கை யவள்பங்கன் பைங்
கண் ஏற்றன், ஊரூரன் தருமனார் தமர்செக்கி லிடும்போது
தடுத்தாட் கொள்வான், ஆரூரன் தம்பிரான் ஆரூரன்
மீகொங்கி லணிகாஞ் சிவாய்ப், பேரூரர் பெருமானைப் புலியூர்ச்
சிற் றம்பலத்தே பெற்றா மன்றே. கo

திருச்சிற்றம்பலம்

மீளாத அருள்பெற்றுப் புறம்போந்து திருவீதி மேவித்
தாழ்ந்தே, ஆளான வன்தொண்டர் அந்தணர்கள் தாம்போற்ற
அமர்ந்து வைகி, **மாளாத பேரன்பார்** பொற்பதியை வணங்கிப்
போய் **மறலி வீழத், தாளாண்மை கொண்டவர்தங் கரப்பறிய**
லூர்வணங்கிச் சென்று சார்ந்தார்.

---

(அ) கல்தானும்(கூட) குழையும்படி கருதும் விதமாய்க் கருது
வார்களுக்கு. (கூ) நாடுஉடைய - எல்லா உலகங்களையும் தனக்கு
உடைமையாக உடைய. தாடு - தண்டித்தல். மோடு - மூடத்தனம்.
மூடை - நாற்றம். மூடம் - அறிவு மயக்கம். (கo) ஊரூரன் - ஊர்
தோறும் திரிபவன். மீகொங்கில்......பெருமானை - மேற்றிசையி
லுள்ள கொங்குநாட்டில் அழகிய காஞ்சி நதி தீரத்தில் உள்ள திருப்
பேரூரில் வீற்றிருக்கும் பெருமானை.

கூற்றுதைத்தார் திருக்கொகுடிக் கோயில் நண்ணிக் கோபுரத்தைத் தொழுதுபுகும் தன்பர் சூழ, ஏற்றபெருங் காதலினால் இறைஞ்சி ஏத்தி எல்லையிலாப் பேருமகிழ்ச்சி மனத்தில் எய்தப், போற்றிசைத்துப் புறத்தணைந்(து)அப் பதியில் வைகிப் புனிதரவர் தமைநினையும் இன்பங் கூறிச், சாற்றியமெய்த் திருப்பதிகம் "சிம் மாந்" தென்னும் தமிழ்மாலை புனைந்தங்குச் சாரும் நாளில்.

—பெ. ஏ. 116, 117.

## 30. திருக்கருப்பறியலூர்

**பண் - நட்டராகம்**

*திருச்சிற்றம்பலம்*

சிம்மாந்து சிம்புளித்துச் சிந்தையினில் வைத்துகந்து திறம்பா வண்ணம், கைம்மாவி னுரிவைபோர்த்(து) உமை வெருவக் கண்டானைக் கருப்ப றியலூர்க், கொய்ம்மாவின் மலர்ச்சோலைக் குயில்பாட மயிலாடுங் கொகுடிக் கோயில், எம்மானை மனத்தினால் நினைந்தபோ தவர்நமக் கினிய வாறே.

நீற்றாரும் மேனியராய் நினைவார்தம் உள்ளத்தே நிறைந்து தோன்றும், காற்றானைத் தீயானைக் கதிரானை மதியானைக் கருப்ப றியலூர்க், கூற்றானைக் கூற்றுதைத்துக் கோல்வளையா ளவளோடுங் கொகுடிக் கோயில், ஏற்றானை மனத்தினால் நினைந்தபோ தவர்நமக் கினிய வாறே. உ

முட்டாமே நாடோறும் நீர்மூழ்கிப் பூப்பறித்து மூன்று போதும், கட்டார்ந்த இண்டைகொண் டடிசேர்த்தும் அந்த

(க) சிம்மாந்து - இறுமாந்து. சிம்புளித்து - கண்ணை மூடிக் கொண்டு. திறம்பாவண்ணம் - தவறாதபடி. இனியவாறே - இனிய ராய் (பேரின்ப மயமாய்) இருப்பது என்ன ஆச்சரியம். கொகுடிக் கோயில் - திருக்கருப்பறியலூர் திருக்கோயிலுக்குப் பெயர். திறம்பா வண்ணம் மனத்தினால் நினைந்தபோது என்று கூட்டுக. (உ) கோல் வளையாளவளோடும் கூற்றானை - உமாதேவியாரை ஒரு கூறாக உடை யவனை. ஏற்றானை - இடபவாகனத்தை உடையவனை. (ங) முட் டாமே - தவறாமல். இண்டை - மலர்மாலை.

ணர்தங் கருப்ப றியலூர்க், கொட்டாட்டுப் பாட்டாகி நின்று னைக் குழகனைக் கொகுடிக் கோயில், எட்டான மூர்த்தியை நினைந்தபோ தவர்நமக் கினிய வாறே. ௩

விருந்தாய சொன்மாலை கொண்டேத்தி வினைபோக வேலி தோறும், கருந்தாள வாழைமேற் செங்கனிகள் தேன் சொரியுங் கருப்ப றியலூர்க், குருந்தாய முள்ளெயிற்றுக் கோல்வளையா ளவளோடுங் கொகுடிக் கோயில், இருந்தானை மனத்தினால் நினைந்தபோ தவர்நமக் கினிய வாறே. ௪

பொடியேறு திருமேனிப் பெருமானைப் பொங்கரவக் கச்சை யானைக், கடிநாறு பூம்பொய்கைக் கயல்வாளை குதி கொள்ளும் கருப்ப றியலூர்க், கொடியேறி வண்டினமுந் தண்தேனும் பண்செய்யுங் கொகுடிக் கோயில், அடியேறு கழலானை நினைந்தபோ தவர்நமக் கினிய வாறே. ௫

பொய்யாத வாய்மையாற் பொடிபூசிப் போற்றிசைத்துப் பூசை செய்து, கையினா லெரியோம்பி மறைவளர்க்கும் அந்த ணர்தங் கருப்ப றியலூர்க், கொய்யுலா மலர்ச்சோலைக் குயில் கூவ மயிலாலுங் கொகுடிக் கோயில், ஐயனையென் மனத்தி னால் நினைந்தபோ தவர்நமக் கினிய வாறே. ௬

செடிகொள்நோய் உள்ளனவுந் தீவினையுந் தீர்ந்தொழியச் சிந்தை செய்மின், கடிகொள்பூந் தடம்மண்டிக் கருமேதி கண் படுக்குங் கருப்ப றியலூர்க், கொடிகொள்பூ நுண்ணிடையாள் கோல்வளையா ளவளோடுங் கொகுடிக் கோயில், அடிகளை யென் மனத்தினால் நினைந்தபோ தவர்நமக் கினிய வாறே. ௭

---

(௩) கொட்டு - மத்தளம் முதலியன. எட்டான மூர்த்தி - அஷ்டமூர்த்தமாய் இருப்பவர். (௪) விருந்தாய - புதுமையாகிய. ஏத்திவினைபோக - துதிப்பதனால் வினைகள்கெட. கருந்தாள - கருமைநிறம் பொருந்திய அடிப்பாகமுள்ள. குருந்தாய முள் எயிற்று - வெண்மையும் முள்ளைப்போல கூர்மையுமான பற்களையுடைய. (௫) கொடி - பூங்கொடி. தேன் - பெண்வண்டு. அடி ஏறுகழல் - திருவடியில் அணிந்த வீரக்கழல். (௬) பொய்யாத வாய்மையால் - பொய் கலவாத உண்மையோடு. கொய்யுலாம் - பறிக்கப்படுகின்ற. (௭) கோல் வளையாள் - அழகிய வளையல்களை அணிந்த உமாதேவியார்.

பறையாத வல்வினைகள் பறைந்தோழியப் பண்ணரும் பாடி யாடிக், கறையார்ந்த கண்டத்தன் எண்டோளன் முக் கண்ணன் கருப்ப றியலூர்க், குறையாத மறைநாவர் குற் றேவ லொழியாத கொகுடிக் கோயில், உறைவானை மனத்தி னால் நினைந்தபோ தவர்நமக் கினிய வாறே. அ

சங்கேந்து கையானுந் தாமரையின் மேலானுந் தன்மை காணாக், கங்கார்ந்த வார்சடைக ளுடையானை விடையானைக் கருப்ப றியலூர்க், கொங்கார்ந்த பொழிற்சோலை சூழ்கனிகள் பலஉதிர்க்குங் கொகுடிக் கோயில், எங்கோனை மனத்தினால் நினைந்தபோ தவர்நமக் கினிய வாறே. கூ

பண்டாழின் இசைமுரலப் பண்ணரும் பாவித்துப் பாடி யாடிக், கண்டார்தங் கண்குளிருங் களிக்கமுகம் பூஞ்சோலைக் கருப்ப றியலூர்க், குண்டாடுஞ் சமணருஞ் சாக்கியரும் புறங் கூறுங் கொகுடிக் கோயில், எண்டோளெம் பெருமானை நினைந்தபோ தவர்நமக் கினிய வாறே. கO

கலைமலிந்த தென்புலவர் கற்றோர்தம் இடர்தீர்க்கும் கருப்ப றியலூர்க், குலைமலிந்த கோட்டெங்கும் மட்டொழு கும் பூஞ்சோலைக் கொகுடிக்கோயில், இலைமலிந்த மழுவானை மனத்தினால் அன்புசெய்(து) இன்ப மெய்தி, மலைமலிந்த தோளூரன் வனப்பகையப் பன்னுரைத்த வண்த மிழ்களே.

திருச்சிற்றம்பலம்

என்னும் "புனிதரவர்தமை நினைவதனாற் பெறும் இன்பம் கூறும்" திருப்பதிகம் பாடி, திருப்பழமண்ணிப்படிக்கரையை நண்ணி மா தொரு பாகத்தவர் தாளை வணங்கி,

(அ) பறையாத - எளிதில் போக்கமுடியாத. (கO) பண்தாழ் இன் இசைமுரல - பண்ணோடு கூடிய இனிய இசை ஒலிக்க. பாவித்து - தியானித்து. களி - களிப்பைத்தருகிற. குண்டு ஆடும் - கோட்சொல் லும் அல்லது கலகம் செய்யும். (கக) கோடு - கிளை. இலைமலிந்த - இலைவடிவமான. வண்தமிழ்கள்......இடர்தீர்க்கும் என்று கூட்டுக.

## 22. திருப்பழமண்ணிப்படிக்கரை

### பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

முன்னவ னெங்கள்பிரான் முதல்காண்பரி தாயபிரான்
சென்னியி லெங்கள்பிரான் திருநீலமி டற்றெம்பிரான்
மன்னிய வெங்கள்பிரான் மறைநான்குங்கல் லால்நிழற்கீழ்ப்
பன்னிய வெங்கள்பிரான் பழமண்ணிப் படிக்கரையே. க

அண்டம் கபாலஞ்சென்னி அடிமேல்அல ரிட்டுநல்ல
தொண்டங் கடிபரவித் தொழுதேத்திநின் றூடிடம்
வெண்திங்கள் வெண்மழுவன் விரையார்கதிர் மூவிலைய
பண்டங்கன் மேயவிடம் பழமண்ணிப் படிக்கரையே. உ

ஆடுமின் அன்புடையீ ரடிக்காட்பட்ட தூளிகொண்டு
சூடுமின் தொண்டருள்ளீர் உமரோடெமர் சூழவந்து
வாடுமின் வாழ்க்கைதன்னை வருந்தாமல் திருந்தச்சென்று
பாடுமின் பத்தருள்ளீர் பழமண்ணிப் படிக்கரையே. ௩

அடுதலை யேபுரிந்(து)ஆ னவைஅந்தர மூஎயிலும்
கெடுதலை யேபுரிந்தான் கிளருஞ்சிலை நாணியிற்கோல்
அடுதலை யேபுரிந்தான் அரிகான்றிட்ட வெச்சில்வெள்ளைப்
படுதலை யேபுரிந்தான் பழமண்ணிப் படிக்கரையே. ௪

---

(க) சென்னியில் - எங்கள் தலைமேல் இருக்கும். மன்னிய - நிலைபெற்ற ; அழிவில்லாத. பன்னிய - சொல்லிய. (உ) அண்டம் கபாலம் சென்னி - கபாலத்தோடு கூடிய திருமுடி அண்டம் கடந்து இருப்பது. தொண்டு - தொண்டர். பண்டங்கன் - பாண்டரங்கம் என்னும் கூத்தை நவிற்றுபவன். (௩) அடிக்கு.......... சூடுமின் - சிவபெருமான் திருவடிக்கு அடிமைப்பட்டதற்கு அறிகுறியாகிய திருநீற்றை அணியுங்கள். உமர் - உம்மவர். எமர் - எம்மவர். வாடுமின் வாழ்க்கை தன்னை - உலகவாழ்வினிடத்துப் பற்றை ஒழியுங்கள். (௪) அடுதலையே......மூஎயிலும் - கொலைத் தொழிலையே செய்தனவாகிய முப்புரங்களையும். கெடுதலையே புரிந்தான் - அழியும்படிச் செய்தான். கோல் அடுதலையே புரிந்தான் - அம்பினைப் பூட்டியவன். அரிகான்றிட்ட............புரிந்தான் - திருமால், தலையின் நின்றும் பெருகிய உதிரத்தையுடைய வெண்மையான பிரமன்தலை யோட்டினையே விரும்பினான்.

உங்கைக ளாற்கூப்பி உகந்தேத்தித் தொழுமின்தொண்டீர்
மங்கையொர் கூறுடையான் வானோர்முத லாயபிரான்
அங்கையில் வெண்மழுவன் அலையார்கதிர் மூவிலைய
பங்கய பாதனிடம் பழமண்ணிப் படிக்கரையே. ரு

செடிபடத் தீவிளைத்தான் சிலையார்மதில், செம்புனஞ்சேர்
கொடிபடு மூரிவெள்ளை யெருதேற்றையும் மேற்கொண்டான்
கடியவன் காலன்றன்னைக் கறுத்தான்கழற் செம்பவளப்
படியவன் பாசுபதன் பழமண்ணிப் படிக்கரையே. சு

கடுத்தவன் தேர்கொண்டோடிக் கயிலாயநன் மாமலையை
எடுத்தவன் ஈரைந்துவா யரக்கன்முடி பத்தலற
விடுத்தவன் கைநரம்பால் வேதகீதங்கள் பாடலுறப்
படுத்தவன் பால்வெண்ணீற்றன் பழமண்ணிப் படிக்கரையே.

திரிவன மும்மதிலும் எரித்தானிமை யோர்பெருமான்
அரியவன் அட்டபுட்ப மவைகொண்டடி போற்றிநல்ல
கரியவன் நான்முகனும் அடியும்முடி காண்பரிய
பரியவன் பாசுபதன் பழமண்ணிப் படிக்கரையே. அ

வெற்றரைக் கற்றமணும் விரையாதுவிண் டாலமு(ண்)ணும்
துற்றரைத் துற்றறுப்பான் துன்னஆடைத்தொழி லுடையீர்

---

(ரு) அலையார் கதிர் மூஇலைய - கொல்லுந் தொழிலைச்செய்யும் ஒளியையுடைய முத்தலைச் சூலத்தை ஏந்திய. (சு) சிலை ஆர்மதில் - மலைபோலும் மூப்புரங்கள். செம்புனஞ்......எருதுஏற்றை - செம்மையான வயல்களில் மேய்வதும் கொடியில் எழுதப்பட்டதுமான வலிய வெள்ளை இடபம். கடிய வன் காலன்-கொடியவனான யமன். கழல் செம்பவளப்படியவன்-திருவடிகள் செம்பவளம்போலச் சிவந்திருக்கப்பட்டவன். (எ) கடுத்தவன் - வேகங்கொண்டவனாய். பாடலுறப் படுத்தவன் - பாடும்படிச் செய்தவன். (அ) அட்டபுட்பம்—புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், நீலோற்பலம், பாதிரி, அலரி, செந்தாமரை. பரியவன் - பெரியோன். (கூ) துற்று அறுப்பான் துன்ன ஆடைத்தொழிலுடையீர், வெற்றுஅரைக் கற்ற அமணும் விரையாது விண்டு, ஆலம் உ(ண்)ணும் துற்றரை பெற்றரைப் படிக்கரையுட் பற்றரைப் பற்றிநின்று பழி பாவங்கள் தீர்மின்களே ; பித்தரென்று கருதேன்மின் - உணவை உண்ணும்படியான பிறவியை ஒழிக்கும்பொருட்டு தைத்த ஆடையைத் தரித்து, எளியவாழ்க்கை வாழ்

பெற்றரைப் பித்தரென்று கருதேன்மின் படிக்கரையுள்
பற்றரைப் பற்றிநின்று பழிபாவங்கள் தீர்மின்களே. கூ

பல்லுயிர் வாழுந்தெண்ணீர்ப் பழமண்ணிப் படிக்கரையை
அல்லியந் தாமரைத்தார் ஆரூரனுரைத்ததமிழ்
சொல்லுதல் கேட்டல்வல்லா ரவர்க்குந் தமர்க்குங்கிளைக்கும்
எல்லியும் நண்பகலும் இடர்கூருத லில்லையன்றே. கய

திருச்சிற்றம்பலம்

என்னும் "எண்ணில்புகழ்த்" திருப்பதிகம் பாடித் திருவாழ்கோளி **புத்தூரை** அடைந்து,

## 57. திருவாழ்கொளிபுத்தூர்

### பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

தலைக்க லன்தலை மேல்தரித் தானைத் தன்னை யென்னை நினைக்கத் தருவானைக், கொலைக்கை யானையுரி போர்த்துகந் தானைக் கூற்றுதைத்த குரைசேர் கழலானை, அலைத்தசெங் கண்விடை யேறவல்லானை ஆணை யாலடி யேனடி நாயேன், மலைத்தசெந் நெல்வயல் வாழ்கொளி புத்தூர் மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனே. க

---

ந்து, தொண்டு பூண்டு ஒழுகும் அடியவர்களே! ஆடையைத் தரியாதவரும், கல்வியில் தேர்ந்தவருமான சமணரைப் பின்பற்றிச் செல்லாது பிரிந்து, ஆலகாலவிடத்தையே உணவாக உண்டவரும் இடபவாகனமுடையவரும், பழமண்ணிப்படிக் கரையில் விருப்புடன் வீற்றிருப்பவரும் ஆகிய சிவபெருமானைப் பற்றுக்கோடாகக் கொண்டு பழிபாவங்களையும் தீர்த்துக் கொள்ளுங்கள்; அவரைப் பித்தரென்று கருதாதீர்கள். துற்று-உணவு. பெற்றர் - இடபவாகனர். (கய) அல்லி-அகவிதழ்களையுடைய. எல்லியும் - இரவிலும்.

(க) குரைசேர் கழலான் - சப்திக்கின்ற வீரக் கழலை அணிந்த திருவடியை உடையவன். அலைத்த - (பகைவரை) வருத்துகின்ற. ஆணையால் - ஏவலினால். மலைத்த - மிகுந்த.

படைக்கட் சூலம் பயிலவல் லானைப் பாவிப் பார்மனம் பாவிக் கொண் டானைக், கடைக்கட் பிச்சைக்கிச்சை காதலித் தானைக் காமன் ஆகந்தனைக் கட்டழித் தானைச், சடைக்கட் கங்கையைத் தாழ வைத்தானைத் தண்ணீர் மண்ணிக்கரை யானைத் தக்கானை, மடைக்கண் நீல(ம்)மலர் வாழ்கொளி புத் தூர் மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. ௨

வெந்த நீறுமெய் பூசவல் லானை வேத மால்விடை யேற வல் லானை, அந்தம் ஆதி யறிதற் கரியானை ஆற லைத்த சடை யானை யம்மானைச், சிந்தை என்தடு மாற்றறுப் பானைத் தேவ தேவனென் சொல்முனி யாதே, வந்தெனுள் ளம்புகும் வாழ் கொளி புத்தூர் மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே.

தடங்கை யால்மலர் தூய்த்தொழு வாரைத் தன்னடிக் கேசெல்லு மாறுவல் லானைப், படங்கொள் நாகம்அரை யார்த்துகந் தானைப் பல்லின் வெள்ளைத்தலை ஊணுடை யானை, நடுங்க ஆனையுரி போர்த்துகந் தானை நஞ்ச முண்டுகண் டங்கறுத் தானை, மடந்தை பாகனை வாழ்கொளி புத்தூர் மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. ௪

வளைக்கை முன்கை மலைமங்கை மணாளன் மார னுருடல் நீறெழச் செற்றுத், துளைத்த அங்கத்தொடு தூமலர்க் கொன்றைதோலு(ம்)நூலுந்துதைந் தவரை மார்பன், திளைக் குந் தெவ்வர் திரிபுரம் மூன்றும் அவுணர் பெண்டிரும் மக்க ளும் வேவ, வளைத்த வில்லியை வாழ்கொளிபுத்தூர் மாணிக் கத் தைமறந் தென்னினைக் கேனே. ௫

திருவின் நாயக னாகிய மாலுக் கருள்கள் செய்திடுந் தேவர் பிரானை, உருவி னானைஒன் றாஅறி வொண்ணா மூர்த்தி

(௨) பாவிப்பார் மனம் பாவிக்கொண்டானை - தியானிப்பவர் மனத்தைப் பற்றிக்கொண்டிருப்பவனை. (௩) கட்டழித்தல் - முற்று மழித்தல். வேதமால்விடை - தருமவிடையும் மால்விடையும். (௪) செல்லும்ஆறு - செலுத்தும் வழியில். (௫) அங்கம் - எலும்பு. திளைக்கும் தெவ்வர் - போகத்தில் மூழ்கிய பகைவர்.

யைவிச யற்கருள் செய்வான், செருவில் ஏந்தியோர் கேழற்பின் சென்று செங்கண் வேடனாய் என்றெனும் வந்து, மருவி னான்றனை வாழ்கொளி புத்தூர் மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. ௬

எந்தையை யெந்தை தந்தை பிரானை ஏத மாயஇடர் தீர்க்கவல் லானை, முந்தி யாகிய மூவரின் மிக்க மூர்த்தி யைமுதல் காண்பரி யானைக், கந்தின் மிக்க கரியின் மருப் போடு கார கிற்கவ ரிம்மயிர் மண்ணி, வந்து வந்திழி வாழ் கொளி புத்தூர் மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. ௭

தேனை யாடிய கொன்றையி னானைத் தேவர் கைதொழுந் தேவர் பிரானை, ஊன மாயின தீர்க்கவல் லானை ஒற்றை ஏற்றனை நெற்றிக்கண் ணானைக், கான ஆனையின் கொம் பினைப் பீழ்ந்த கள்ளப் பிள்ளைக்குங் காண்பரி தாய, வான நாடனை வாழ்கொளி புத்தூர் மாணிக்கத் தைமறந் தென்னி னைக் கேனே. ௮

காளை யாகி வரையெடுத் தான்றன் கைக ளிற்(று)அவன் மொய்தலை யெல்லாம், மூளை போத ஒருவிரல் வைத்த மூர்த்தி யைமுதல் காண்பரி யானைப், பாளை தெங்கு பழம் விழ மண்டிச் செங்கண் மேதிகள் சேடெறிந் தெங்கும், வாளை பாய்வயல் வாழ்கொளி புத்தூர் மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. ௯

---

(௬) செரு வில் - போர்க்குரிய வில். (௭) கந்தில் மிக்க - கட்டுத் தறியில் கட்டப்பட்டு மதம்மிக்க. மண்ணி - அலங்கரிக்கப்பட்டு. (௮) கானஆனையின் கொம்பினைப் பீழ்ந்த.........காண்பரிதாய - கம்ஸன் தநுர்யாகத் திடத்துவாயிலில் நிற்கவைத்திருந்த குவலயா பீடம் என்னும் யானையின் கொம்பையொடித்து அதனைக் கொன்ற கிருஷ்ணனுக்கும் காணுவதற்கரிதாயவனை. இச்சரிதம் பாகவதத்திற் காண்க. (௯) மொய்தலை - நெருங்கிய தலை. போத - வெளிப்பட. மேதி - எருமை. சேடெறிந்து - சேறுசெய்து.

திருந்த நான்மறை பாடவல் லானைத் தேவர்க் குந்தெரி தற்கரி யானைப், பொருந்த மால்விடை யேறவல் லானைப் பூதிப் பைபுலித் தோலுடை யானை, இருந்துண் தேரரும் நின்றுண் சமணும் ஏச நின்றவன் ஆருயிர்க் கெல்லாம், மருந்தன் ஞன்றனை வாழ்கொளி புத்தூர் மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. க0

மெய்யனை மெய்யில் நின்றுணர் வானை மெய்யி லாதவர் தங்களுக் கெல்லாம், பொய்ய னைப்புர மூன்றெரித் தானைப் புனித னைப்புலித் தோலுடை யானைச், செய்ய னைவெளி யதிரு நீற்றில் திகழும் மேனியன் மான்மறி யேந்தும், மைகொள் கண்டனை வாழ்கொளி புத்தூர் மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. கக

வளம்கி ளர்பொழில் வாழ்கொளி புத்தூர் மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனென்(று), உளங்கு ளிர்தமிழ் ஊரன்வன் தொண்டன் சடையன் காதலன் வனப்பகை யப்பன், நலம்கி ளர்வயல் நாவலர் வேந்தன் நங்கை சிங்கடி தந்தை பயந்த, பலம்கி ளர்தமிழ் பாடவல் லார்மேற் பறையு மாஞ்செய்த பாவங்கள் தானே. கஉ

திருச்சிற்றம்பலம்

திருப்பதிகம் பாடியே சென்றங் கெய்தித் தேவர்பெரு மானூர் தங் கோயில் வாயில், உருப்பொலியும் மயிர்ப்புளகம் விரவத் தாழ்ந்தே உள்ளணைந்து பணிந்தேத்தி உருகும் அன்பால், பொருப் பரையன் மடப்பாவை இடப்பா லானைப் போற்றிசைத்துப் புறம் போந்து தங்கிப் பூமென், கருப்புவயல் வாழ்கொளிபுத் தூரை நீங்கிக் காளுட்டு முள்ளூரிற் கலந்த போது. —பெ. ஏ. 119.

கண்ணுதலார் எதிர்காட்சிக் கொடுப்பக் கண்டு 'தூநாண்மென் மலர்க் கொன்றைச் சடையார் செய்ய துணைப்பாத மலர்கண்டு தொழு தேன்' என்று,

(க0) திருந்த - திருத்தமாக. தேரர்-புத்தர். மருந்து அன்னுன் - பிறவிப் பிணிக்கு மருந்து போல்பவன். பூதி - விபூதி. ஏச - இகழ. (கக) மெய்யனை மெய்யில்நின் றுணர்வானை - உண்மையனை, எல்லா உடம்புகளிலும் நின்று அறிய வல்லவனை. செய்யன் - செந்நிறமுள்ள வன். (கஉ) பலம் கிளர் - மிக்க பயனைக் கொடுக்கக்கூடிய.

## 40. திருக்கானாட்டு முள்ளூர்

பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

வள்வாய மதிமிளிரும் வளர்சடையி னானை
மறையவனை வாய்மொழியை வானவர்தங் கோனைப்
புள்வாயைக் கீண்டுலகம் விழுங்கியுமிழ்ந் தானைப்
பொன்னிறத்தின் முப்புரிநூல் நான்முகத்தி னானை
முள்வாய மடல்தழுவி முடத்தாழை யீன்று
மொட்டலர்ந்து விரைநாறு முருகுவிரி பொழில்சூழ்
கள்வாய கருங்குவளை கண்வளருங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. க

ஒருமேகம் முகிலாகி ஒத்துலகந் தானாய்
ஊர்வனவும் நிற்பனவும் ஊழிகளுந் தானாய்ப்
பொருமேவு கடலாகிப் பூதங்கள் ஐந்தாய்ப்
புனைந்தவனைப் புண்ணியனைப் புரிசடையி னானைத்
திருமேவு செல்வத்தார் தீமூன்றும் வளர்த்த
திருத்தக்க அந்தணர்கள் ஓதுநக ரெங்கும்
கருமேதி செந்தாம ரைமேயுங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. உ

இரும்புயர்ந்த மூஇலைய சூலத்தி னானை
இறையவனை மறையவனை எண்குணத்தி னானைச்
சுரும்புயர்ந்த கொன்றையொடு தூமதியஞ் சூடுஞ்
சடையானை விடையானைச் சோதியெனுஞ் சுடரை
அரும்புயர்ந்த அரவிந்தத் தனிமலர்க ளேறி
அன்னங்கள் விளையாடும் அகன்துறையி னருகே
கரும்புயர்ந்து பெருஞ்செந்நெல் நெருங்கிவிளை கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. ௩

---

(க) வள்வாயமதி - கூர்மையான முனைகளை உடைய இளம் பிறை. புள்வாயைக்......உமிழ்ந்தான் - திருமால். முள்வாய...... பொழில்சூழ் - முட்களை உடைய வளைந்த தாழை மடல்கள் தழுவி (நெருங்கி) வெளிப்பட்ட மொட்டுகள் மலர்ந்து, மணம் வீசி, அழகோடு கூடிய சோலைகளால் சூழப்பட்ட. (உ) பொருமேவு - அலை மோதுகிற. திருமேவு - இலக்குமிவாசம் செய்யும். (௩) சுரும்பு - வண்டுகள். அரவிந்தம் - தாமரை.

பூளைபுனை கொன்றையொடு புரிசடையி னானைப்
புனலாகி அனலாகிப் பூதங்கள் ஐந்தாய்
நாளையின்று நெருநலாய் ஆகாய மாகி
ஞாயிறாய் மதியமாய் நின்றஎம் பரனைப்
பாளைபடு பைங்கமுகின் சூழலிளந் தெங்கின்
படுமதஞ்செய் கொழுந்தேறல் வாய்மடுத்துப் பருகிக்
காளைவண்டு பாடமயி லாலும்வளர் சோலைக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. ச

செருக்குவாய்ப் பைங்கண்வெள் அரவரையி னானைத்
தேவர்கள்சூ ளாமணியைச் செங்கண்விடை யானை
முருக்குவாய் மலரொக்குந் திருமேனி யானை
முன்னிலையாய் முழுதுலகம் ஆயபெரு மானை
இருக்குவாய் அந்தணர்கள் எழுபிறப்பு ளெங்கும்
வேள்வியிருந்(து) இருநிதியம் வழங்குநக ரெங்கும்
கருக்குவாய்ப் பெண்ணையொடு தெங்குமலி சோலைக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. ரு

விடையரவக் கொடியேந்தும் விண்ணவர்தங் கோனை
வெள்ளத்து மாலவனும் வேதமுத லானும்
அடியிணையுந் திருமுடியுங் காணஅரி தாய
சங்கரனைத் தத்துவனைத் தையல்மட வார்கள்

---

(ச) பூளை......சடையினானை - பூளைப் பூவையும் கொன்றைப் பூவையும் புனைந்த முறுக்கிய சடையை யுடையவனை. இலவம் பஞ்சுபோல் 'மெல்லிய இதழ்களுடைய கொன்றை மலரைத் தரித்த' என்றும் பொருள் கூறலாம். பாளை......பருகி - பாளையோடு கூடிய பசிய கமுகின் சோலைகளிலும் இளம் தென்னைகளிலும் உண்டாகிற மதத்தைச் செய்கிற தேனை வாய்வைத்துக் குடித்து. (ரு) செருக்கு - சீறுகின்ற. சூளாமணி - சிரோரத்தினம். முருக்குவாய் மலர் - முருக்கம்பூ; கலியாண முருங்கைப்பூ. கருக்குவாய்ப் பெண்ணை - கூரான வாயையுடைய பனைமரம். (சு) விடையரவக்கொடி - ஒலிக்கும் விடையாகிய கொடி. தையல்மடவார்கள் - அழகிய பெண்கள்.

உடையவிழக் குழலவிழக் கோதைகுடைந் தாடக்
குங்குமங்கள் உந்திவருங் கொள்ளிடத்தின் கரைமேல்
கடைகள்விடு வார்குவளை களைவாருங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. ௬

அருமணியை முத்தினை ஆனஞ்சும் ஆடும்
அமரர்கள்தம் பெருமானை அருமறையின் பொருளைத்
திருமணியைத் தீங்கரும்பின் ஊறலிருந் தேனைத்
தெரிவரிய மாமணியைத் திகழ்தருசெம் பொன்னைக்
குருமணிகள் கொழித்திழிந்து சுழித்திழியுந் திரைவாய்க்
கோல்வளையார் குடைந்தாடுங் கொள்ளிடத்தின் கரைமேல்
கருமணிகள் போல்நீலம் மலர்கின்ற கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. எ

இழைதழுவு வெண்ணூலும் மேவுதிரு மார்பின்
ஈசன்றன் எண்டோள்கள் வீசியெரி யாடக்
குழைதழுவு திருக்காதிற் கோளரவம் அசைத்துக்
கோவணங்கொள் குழகனைக் குளிர்சடையி னானைத்
தழைதழுவு தண்ணிறத்த செந்நெலதன் அயலே
தடந்தரளம் மென்கரும்பின் தாழ்கிடங்கி னருகே
கழைதழுவித் தேன்தொடுக்குங் கழனிசூழ் பழனக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. அ

---

(௬) கோதை - பூமாலை. கடை - கடைசியர்கள்; பள்ளப்பெண்கள். கள் விடுவார் குவளை களைவாரும் - தேன் பொருந்திய குவளையாகிய நீண்ட களையைப் பிடுங்கி யெறியும்படியான. (எ) கரும்பின் ஊறல் இருந்தேனை - கருப்பஞ் சாறு ஆகிய பெரிய தேனை. குரு - பிரகாசம் பொருந்திய. (அ) தடம்.........பழனம் - பருத்த முத்துக்களைத் தரும் மெல்லிய கரும்பின் பக்கத்திலுள்ள ஆழமான கிடங்கு (குழி)களின் பக்கத்தில், மூங்கிலை அடுத்து தேன் கூடு கட்டியிருக்கும் வயல்கள் சூழ்ந்த மருத நிலத்தையுடைய.

குனிவினிய கதிர்மதியஞ் சூடு சடையானைக்
குண்டலஞ்சேர் காதவனை வண்டினங்கள் பாடப்
பனியுதிருஞ் சடையானைப் பால்வெண்ணீற் றானைப்
பலவுருவுந் தன்னுருவே யாயபெரு மானைத்
துனிவினிய தூயமொழித் தொண்டைவாய் நல்லார்
தூநீலம் கண்வளருஞ் சூழ்கிடங்கி னருகே
கனிவினிய கதலிவனந் தழுவுபொழிற் சோலைக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. கூ

தேவியம்பொன் மலைக்கோமான் தன்பாவை யாகத்
தனதுருவ மொருபாகஞ் சேர்த்துவித்த பெருமான்
மேவியவெந் நரகத்தில் அழுந்தாமை நமக்கு
மெய்ந்நெறியைத் தான்காட்டும் வேதமுத லானைத்
தூவிவாய் நாரையொடு குருகுபாய்ந் தார்ப்பத்
துறைக்கெண்டை மிளிர்ந்துகயல் துள்ளிவிளை யாடக்
காவிவாய் வண்டுபல பண்செய்யுங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. கo

திரையினார் கடல்சூழ்ந்த தென்னிலங்கைக் கோனைச்
செற்றவனைச் செஞ்சடைமேல் வெண்மதியி னானைக்
கரையினார் புனல்தழுவு கொள்ளிடத்தின் கரைமேற்
கானாட்டு முள்ளூரிற் கண்டுகழல் தொழுது

(கூ) குனிவினிய - வளைவாகி அழகிய. பனி - (கங்கா) நீர்த்துளி. துனிவு இனிய - ஊடுதலால் இனிமை வாய்ந்த "ஊடுதல் காமத்திற் கின்பம்."—திருக்குறள். கனிவு இனிய - பழுத்தலால் இனிய. (கo) 1-வது வரி. அழகிய பொன்மலைக் கோமான்தன் மகளாகியபார்வதி தேவியாரைத் தேவி (மனைவி) ஆக. தூவிவாய்-மீனுண்ணும் வாயை யுடைய. துறை - துறைகளில். காவிவாய் - நீலோற்பல மலரினிடத்து.

உரையினார் மதயானை நாவலா ரூரன்
உரிமையா லுரைசெய்த வொண்டமிழ்கள் வல்லார்
வரையினார் வகைஞாலம் ஆண்டவர்க்கும் தாம்போய்
வானவர்க்கும் தலைவராய் நிற்பரவர் தாமே. கக

திருச்சிற்றம்பலம்

என்னும் வண்டமிழின் தொடைமாலை மலரச் சாத்தித் திருஎதிர் **கோள்பாடியை** அடைந்து,

## 7. திருஎதிர்கொள்பாடி

**பண் - இந்தளம்**

திருச்சிற்றம்பலம்

**ம**த்த யானை யேறி மன்னர் சூழவரு வீர்காள்
செத்த போதில் ஆரு மில்லை சிந்தையுள் வைம்மின்கள்
வைத்த வுள்ளம் மாற்ற வேண்டா வம்மின் மனத்தீரே
அத்தர் கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. க

தோற்ற முண்டேல் மரண முண்டு துயர மனைவாழ்க்கை
மாற்ற முண்டேல் வஞ்ச முண்டு நெஞ்ச மனத்தீரே
நீற்றர் ஏற்றர் நீல கண்டர் நிறைபுனல் நீள்சடைமேல்
ஏற்றர் கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. உ

செடிகொ ளாக்கை சென்றுசென்று தேய்ந்தொல்லை வீழாமுன்
வடிகொள் கண்ணார் வஞ்சனையுட் பட்டு மயங் காதே
கொடிகொ ளேற்றர் வெள்ளை நீற்றர் கோவண ஆடையுடை
அடிகள் கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. ௩

---

(கக) உரையின்ஆர் - புகழ் மிகுந்த. வரையினார் வகை - மலைகளால் நிறைந்த பாதுகாப்பை உடைய.

(க) மத்தயானை - மதயானை. மனத்தீரே - விருப்பமுள்ளவர்களே. அத்தர் - இறைவர். (உ) தோற்றம் உண்டேல் - பிறத்தல் உண்டாயின். மாற்றம் - பகை. (1) ஏற்றர் - இடபவாகனர். (2) ஏற்றர் - ஏற்றுக்கொண்டவர்; தரித்தவர். (௩) செடிகொள் - பாவத்தைக் கொண்ட. ஒல்லை - விரைவாக. வடிகொள் - கூர்மையான.

வாழ்வர் கண்டீர் நம்முள் ஐவர் வஞ்ச மனத்தீரே
யாவ ராலும் இகழப் பட்டிங்(கு) அல்லலில் வீழாதே
மூவ ராயும் இருவ ராயும் முதல்வன் அவனேயாம்
தேவர் கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. ௪

அரித்து நம்மேல்ஐவர் வந்திங்(கு) ஆறலைப்பான் பொருட்டால்
சிரித்த பல்வாய் வெண்டலைபோய் ஊர்ப்புறஞ் சேராமுன்
வரிக்கொ டுத்திவ் வாள ரக்கர் வஞ்ச மதில்மூன்றும்
எரித்த வில்லி யெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. ௫

பொய்யர் கண்டீர் வாழ்க்கை யாளர் பொத்தடைப்பான் பொரு
மையல் கொண்டீ ரெம்மோ டாடி நீரும் மனத்தீரே [ட்டால்
நைய வேண்டா இம்மை யேத்த அம்மை நமக்கருளும்
ஐயர் கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. ௬

கூசம் நீக்கிக் குற்றம் நீக்கிச் செற்ற மனநீக்கி
வாசம் மல்கு குழலி னார்கள் வஞ்ச மனைவாழ்க்கை
ஆசை நீக்கி அன்பு சேர்த்தி என்பணிந்(து) ஏறேறும்
ஈசர் கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. ௭

இன்ப முண்டேல் துன்ப முண்டு ஏழை மனைவாழ்க்கை
முன்பு சொன்னால் மோழை மையான் முட்டை மனத்தீரே
அன்ப ரல்லால் அணிகொள் கொன்றை அடிகள் அடிசேரார்
என்பர் கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. ௮

தந்தை யாருந் தவ்வை யாரும் எள்தனைச் சார்வாகார்
வந்து நம்மோ டுள்ளளாவி வான நெறி காட்டும்

---

(௪) ஐவர் - ஐம்பொறிகள். இருவர் - சத்திசிவம். (௫) அரித்து- வருத்தி. ஆறலைத்தல் - வழிகட்டிப் பறித்தல். வரிக் கொடுத்து - நெருப்பில் இட்டு. (௬) வாழ்க்கையாளர் - இல்வாழ்க்கை யுடையார். பொத்து அடைப்பான் பொருட்டு - வயிறு வளர்க்கும் நிமித்தம். நைதல் - வருந்தல். (௭) கூசம் - வெட்கம். (௮) முன்பு.......... மோழைமையால் - முன்பு சொன்னால் மடமை ஆதலால். முட்டை - சிற்றறிவுடைய. என்பர் - எலும்புமாலையைத் தரித்த சிவபெருமான். (அல்லது) என்பவர்; என்று சொல்லும் தன்மை உடையவரான சிவ பெருமான். (௯) தவ்வையாரும் - தாயாரும். எள்தனை - எள்ளளவும். சார்வுஆகார்-ஆதரவாகமாட்டார். உள்அளாவி - அந்தரங்கமாய்ப் பேசி. வானநெறி - முத்திநெறி. காட்டும் என்பதை எந்தையோடு கூட்டுக.

சிந்தை யீரே நெஞ்சி னீரே திகழ்மதியஞ் சூடும்
எந்தை கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. கூ

குருதி சோர ஆனை யின்தோல் கொண்ட குழற்சடையன்
மருது கீறி ஊடு போன மாலயனும் அறியாச்
சுருதி யார்க்குஞ் சொல்லவொண்ணாச் சோதியெம் ஆதியான்
கருது கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. கO

முத்து நீற்றுப் பவள மேனிச் செஞ்சடை யானுறையும்
பத்தர் பந்தத் தெதிர்கொள் பாடிப் பரமனையே பணியச்
சித்தம் வைத்த தொண்டர் தொண்டன் சடையனவன் சிறு [வன்
பத்த னூரன் பாடல் வல்லார் பாதம்பணி வாரே. கக

திருச்சிற்றம்பலம்

என்னும் சித்தநிலைத் திருப்பதிகம் பாடித் திருவேள்விக்குடியைச் சேர்ந்து முத்திதரும் பெருமானை,

## 18. மூப்பதுமில்லை

### (திருவேள்விக்குடியும் திருத்துருத்தியும்)

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

மூப்பது மில்லை பிறப்பது மில்லை இறப்பதில்லைச்
சேர்ப்பது காட்டகத் தூரினு மாகச்சிந் திக்கினல்லால்
காப்பது வேள்விக் குடிதண் துருத்தியெங் கோன்அரைமேல்
ஆர்ப்பது நாகம றிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே. க

(கO) குருதி சோர - உதிரம் ஒழுகும்படி. குழற்சடை - சுருண்ட சடை. மருதுகீறி - மருதநிலத்தைத் குடைந்து. சுருதியார் - வேதங்களில் வல்லவர். (கக) பத்தர் பந்தத்து-அடியார்களுக்கு ஆசை விளைவிப்பதாகிய. பாதம் பணிவார்-சிவபெருமான் பாதங்களைப் பணிபவர் ஆவார்.

(க) சேர்ப்பது காட்டகத்து ஊரினுமாக - உறைவிடமாக இருப்பது சுடுகாடு. மூப்பது......ஆட்படோமே - இறைவன் மூப்பதுமில்லை பிறப்பதுமில்லை யிறப்பதுமில்லை எனும் காரணங்களினால் அவருக்கு

கட்டக் காட்டின்நட மாடுவர் யாவர்க்குங் காட்சியொண்ணார்
சுட்டவெண் ணீறணிந் தாடுவர் பாடுவர், தூயநெய்யால்
வட்டக்குண் டத்தி லெரிவளர்த் தோம்பி மறைபயில்வார்
அட்டக்கொண் டுண்ப தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே-

பேருமோ ராயிரம் பேருடையார் பெண்ணோ டாணுமல்லர்
ஊருமது) ஒற்றியூர் மற்றையூர் பெற்றவா நாமறியோம்
காருங் கருங்கடல் நஞ்சமு துண்டுகண் டங்கறுத்தார்க்(கு)
ஆரம்பாம் பாவ தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே. ௩

ஏனக்கொம் பும்இள ஆமையும் பூண்டங்கோர் ஏறுமேறிக்
கானக்காட் டில்தொண்டர் கண்டன சொல்லியுங் காமுறவே
மானைத்தோ லொன்றை யுடுத்துப் புலித்தோல் பியற்குமிட்டு
யானைத்தோல் போர்ப்ப தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே.

ஊட்டிக்கொண் டுண்பதோர் ஊணிலர் ஊரிடு பிச்சையல்லால்
பூட்டிக்கொண் டேற்றினை யேறுவர் ஏறியோர் பூதம்தம்பால்
பாட்டிக்கொண் டுண்பவர் பாழிதொ றும்பல பாம்புபற்றி
ஆட்டிக்கொண் டுண்ப தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே.

குறவனார் தம்மகள் தம்மக னார்மண வாட்டி, கொல்லை
மறவனா ராய்அங்கோர் பன்றிப்பின் போவது மாயங்கண்டீர்
இறைவனா ராதியார் சோதிய ராயங்கோர் சோர்வுபடா
அறவனார் ஆவ தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே. ௬

---

அடிமையானேன். இவையல்லாமல் அவர் இருப்பிடம் சுடுகாடு, அரையில் அணிவது நாகம் என்றறிந்திருந்தேனானால் ஆட்பட்டிருக்க மாட்டேன். அறிந்தோமஎல் - தெரிந்து இருப்போமாயின். (௨) கட்டக் காடு - பயங்கரமான காடு. வட்டக் குண்டம் - வட்டமாகிய ஓமகுண் டம் (குழி.) அட்டக்கொண்டு - சமைத்தவற்றை ஏற்று. (௩) ஒற்றி யூர் - ஒற்றிவைத்த ஊர். காருங்கருங்கடல் - உவர்ப்புள்ள கருமைநிற முள்ள கடல். (௪) காமுறவே மான்ஐத்தோல் - விரும்பும்படி மானினது அழகியதோல். பியற்குமிட்டு - பிடரின்மீது போட்டு. (௫) ஊட்டிக்கொண்டு - பிறரை உண்பித்து. பாட்டி - பாடி. பாழி - ஊர். (௬) மறவன் - வேடுவன். மாயம் - தந்திரம்.

பித்தரை யொத்தொரு பெற்றியர் நற்றவை யென்னைப்பெற்ற
முற்றவை தம்மனை தந்தைக்குந் தவ்வைக்குந் தம்பிரானார்
செத்தவர் தந்தலை யிற்பலி கொள்வதே செல்வமாகில்
அத்தவ மாவ தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே. எ

உம்பரான் ஊழியான் ஆழியா னோங்கி மலருறைவான்
தம்பர மல்லவர் சிந்திப்ப வர்தடு மாற்றறுப்பார்
எம்பர மல்லவ ரென்னெஞ்சத் துள்ளு மிருப்பதாகில்
அம்பர மாவ தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே. அ

இந்திர னுக்குமி ராவண னுக்கும் அருள்புரிந்தார்
மந்திரம் ஓதுவர் மாமறை பாடுவர் மான்மறியர்
சிந்துரக் கண்ணனும் நான்முக னும்முட னய்த்தனியே
அந்தரஞ் செல்வ தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே.

கூடலர் மன்னன் குலநாவ லூர்க்கோன் நலத்தமிழைப்
பாடவல் லபர மன்னடி யார்க்கடி மைவழுவா
நாடவல் லதொண்ட னாரூரன் ஆட்படு மாறுசொல்லிப்
பாடவல் லார்பர லோகத் திருப்பது பண்டமன்றே. க0

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம்பாடி அவ்விடம்விட்டு 'அன்பு பூட்டி ஆட் கொண்டார்' மன்னும் தலங்களை வணங்கிக்கொண்டு **திருவாரூரை** அடைந்து, 'மூவாத முதலாகி நடுவாகி முடியாத சேவாருங் கொடியாரைத் திருமூலட்டானத்துள் ஓவாத பெருங்காதலுடன் இறைஞ்சிப்' பரவையார் மாளிகையைச் சார்ந்து, அவரோடு மகிழ்ந்து உறையும்போது, "திருமுதுகுன்றப் பெருமான் அளித்த நல் நிதியத்தை மணிமுத்தாற்றிற் புகவிட்டேன். அதனை அவர் அருளாலே கோயில்

(எ) பெற்றியர் - தன்மையர். நற்றவை யென்னைப் பெற்ற-என்னைப்பெற்ற நல்தவ்வை (தாய்). முற்றவை - பாட்டி. தம்மனை - தம் மனைவி. (அ) உம்பரான் - இந்திரன். ஊழியான் - ருத்திரன். ஆழியான் - விஷ்ணு. மலருறைவான் - பிரம்மா. தம்பரம் அல்லவர் சிந்திப்பவர் - தற்போதம் அற்று நினைப்பவர்களுடைய. அம்பரம் - ஞான ஆகாயம். (க) சிந்துரக்கண்ணன் - செங்கண்மால். (க0) வழுவா-வழுவாதபடி. பண்டம் அன்றே - ஒரு பொருளல்ல ; மிக எளிது.

மேல்பாலுள்ள குளத்திற்போய் எடுக்கப்போகின்றேன் என்னுடன் வா" என்று பரவையாரை அழைத்துக்கொண்டு குளத்தின் வடகீழ்க் கரையில் பரவையாரை நிறுத்திக் குளத்திலிறங்கித் தடவுதலும், சிவ பெருமான் திருவிளையாடல் செய்ய விரும்பிப் பொன்னை வருவியாது ஒழித்தருள, "ஆற்றில் இட்டுக் குளத்தில் தேடுவீர்! அருள் இதுவோ, சாற்றும்" என்று பரவையார் தன் கணவரைப் பரிகசிக்க, நம்பி ஆரூரர்,

"முன்செய்த அருள்வழியே [1]முருகலர்பூங் குழற்பரவை
தன்செய்ய வாயில்நகை தாராமே தாரும்" என
மின்செய்த நூல்மார்பின் வேதியர்தாம் முதுகுன்றில்
"பொன்செய்த மேனியினீர்" எனப்பதிகம் போற்றிசைத்து.

"முட்ட இமை யோர்அறிய முதுகுன்றில் தந்தபொருள்
[2]சட்டநான் பெறுதொழிந்த தளர்வினுல் கையறவாம்
இட்டளத்தை இவளெதிரே கெடுத்தருளும்" எனுந்திருப்பாட்(டு)
எட்டளவும் பொன்காட்டா தொழிந்தருள ஏத்துவார்.

—பெ. பு. 132, 133.

## 25. திருமுதுகுன்றம்

**பண் - நட்டராகம்**

*திருச்சிற்றம்பலம்*

பொன்செய்த மேனியினீர் புலித்தோலை அரைக்கசைத்தீர்
முன்செய்த மூவெயிலும் எரித்தீர்முது குன்றமர்ந்தீர்
மின்செய்த நுண்ணிடையாள் பரவையிவள் தன்முகப்பே
என்செய்த வாறடிகேள் அடியேன் இட்டளங்கெடவே. க

உம்பரும் வானவரும் உடனேநிற்க வேயெனக்குச்
செம்பொனைத் தந்தருளித் திகழும்முது குன்றமர்ந்தீர்

---

(க) மின்செய்த - மின்னற்கொடி போன்ற. முகப்பே - முன்பு. என்செய்தவாறு........கெடவே - சுவாமீ! அடியேன் துன்பங்கெட நீர் என்செய்தீர். இட்டளம் - துன்பம்.

[1]முருகு - வாசனை. [2]சட்ட - முழுமையும்.

வம்பம ருங்குழலாள் பரவையிவள் வாடுகின்றாள்
எம்பெரு மானருளீர் அடியேனிட் டளங்கெடவே. உ

பத்தா பத்தர்களுக் கருள்செய்யும் பரம்பரனே
முத்தா முக்கணனே முதுகுன்றம் அமர்ந்தவனே
மைத்தா ருடந்தடங்கண் பரவையிவள் வாடாமே
அத்தா தந்தருளா யடியேனிட் டளங்கெடவே. ௩

மங்கையோர் கூறமர்ந்தீர் மறைநான்கும் விரித்துகந்தீர்
திங்கள் சடைக்கணிந்தீர் திகழும்முது குன்றமர்ந்தீர்
கொங்கைநல் லாள்பரவை குணங்கொண் டிருந்தாள்முகப்பே
அங்கண னேயருளாய் அடியேனிட் டளங்கெடவே. ச

மையா ரும்மிடற்றாய் மருவார்புரம் மூன்றெரித்த
செய்யார் மேனியனே திகழும்முது குன்றமர்ந்தாய்
பையா ரும்அரவேர் அல்குலாளிவள் வாடுகின்றாள்
ஐயா தந்தருளா யடியேனிட் டளங்கெடவே. ரு

நெடியோன் நான்முகனும் இரவியொடும் இந்திரனும்
முடியால் வந்திறைஞ்ச முதுகுன்றம் அமர்ந்தவனே
படியா ரும்மியலாள் பரவையிவள் தன்முகப்பே
அடிகேள் தந்தருளீ ரடியேனிட் டளங்கெடவே. சு

கொந்தண வும்பொழில்சூழ் குளிர்மாமதில் மாளிகைமேல்
வந்தண வும்மதிசேர் சடைமாமுது குன்றுடையாய்
பந்தண வும்விரலாள் பரவையிவள் தன்முகப்பே
அந்தண னேஅருளா யடியேனிட் டளங்கெடவே. எ

பரசா ருங்கரவா பதினெண்கண முஞ்சூழ
முரசார் வந்ததிர முதுகுன்றம் அமர்ந்தவனே
விரைசே ருங்குழலாள் பரவையிவள் தன்முகப்பே
அரசே தந்தருளா யடியேனிட் டளங்கெடவே. அ

---

(௩) பத்தா - நாயகனே. முத்தா - அனாதிமல முத்தனே. (சு) படி ஆரும் இயலாள் - உலகெலாம் பரந்த புகழையுடைய. (எ) கொந்து அணவும் - பூங்கொத்துகள் நிறைந்த. அணவும் மதி - பொருந்துகிற பிறை. (அ) பரசு - மழு.

ஏத்தா திருந்தறியேன் இமையோர்தனி நாயகனே
மூத்தா யுலகுக்கெல்லாம் முதுகுன்றம் அமர்ந்தவனே
பூத்தா ருங்குழலாள் பரவையிவள் தன்முகப்பே
கூத்தா தந்தருளாய் கோடியேனிட் டளங்கெடவே. க

பிறையா ருஞ்சடையெம் பெருமானரு ளாயென்று
முறையால் வந்தமரர் வணங்குமுது குன்றர்தம்மை
மறையார் தங்குரிசில் வயல்நாவலா ரூரன்சொன்ன
இறையார் பாடல்வல்லார்க் கெளிதாம்சிவ லோகமதே. கO

திருச்சிற்றம்பலம்

"**ஏத்தாதே இருந்தறியேன்**" எனுந்திருப்பாட் டெவ்வுலகும்
காத்தாடும் அம்பலத்துக் கண்ணுளனுங் கண்ணுதலைக்
"**கூத்தா! தந் தருளாய்இக் கோமளத்தின் முன்**" என்று
**நீத்தாருந் தொடர்வரிய** [1]**நெறிநின்றார்** பரவுதலும். —**பே. ஏ. 134.**

உடனே கூத்தனார் திருவருளால் வந்தெழுந்த பொன்திரளை யெல்லாம் கரையேற்றி மச்சத்துடன் உரைத்துப் பார்க்க, மாற்று குறைய, வன்தொண்டர் மீண்டும் சிவபெருமானைத் தொழுத அள வில், 'மெய்அன்பர் அன்பில் வரும் பாட்டு உவந்து கூத்து உவந்தார்' முன்னைய மாற்றுக்குக் குறையாமல் காட்டுதலும், மகிழ்ந்து பொன் திரளை எடுத்துக்கொண்டு கரை ஏறினார். பிறகு பொன்னை எல்லாம் பரவையாரோடு அவர் மாளிகைக்கு அனுப்பிவிட்டுத் திருமூலட்டா னத்தார் மலர்ப்பாதம் தொழுது, மிக்க மகிழ்ச்சியோடு பரவையாரொடு வாழ்ந்திருந்தார்.

அணியாரூர் மணிப்புற்றின் அமர்ந்தருளும் பரம்பொருளைப்
பணிவார்அங் கொருநாளிற் **பாராட்டுந் திருப்பதிகம்**
**தணியாத ஆனந்தம் தலைசிறப்பத் தொண்டருடன்**
**துணிவாய போதுள்வினவித்** தொழுதாடிப் பாடுவார்.

பண்ணிறையும் வகை'பாறு தாங்கி' என எடுத்தருளி
உண்ணிறையும் மனக்களிப்பால் உறுபுளகம் மயிர்முகிழ்ப்பக்

---

(க) பூத்தாரும் - மலரைச்சூட்டிய. (கO) குரிசில் - தலைவன். இறை ஆர் - பெருமை நிறைந்த.

[1]நெறி நின்றார்-திருவருள் நெறியில் நின்றவரான நம்பி ஆரூரர்.

கண்ணிறையும் புனல்பொழியக் கரைஇகந்த ஆனந்தம்
எண்ணிறைந்த படிதோன்ற ஏத்திமகிழ்ந் தின்புற்றார்.
—பெ. ஏ. 140, 141.

## 33. நமக்கடிகளாகிய அடிகள்

### பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

பாறுதாங்கிய காடரோபடு தலையரோமலைப் பாவையோர்
கூறுதாங்கிய குழகரோகுழைக் காதரோகுறுங் கோட்(டு)இள
ஏறுதாங்கிய கொடியரோசுடு பொடியரோவிளங் கும்பிறை
ஆறுதாங்கிய சடையரோநமக் கடிகளாகிய அடிகளே. ௧

இட்டிதாகவந் துரைமினோநுமக் கிசையுமாநினைந் தேத்துவீர்
கட்டிவாழ்வது நாகமோசடை மேலு(ம்)நாறுக ரந்தையோ
பட்டிஏறுகந் தேறரோபடு வெண்தலைப்பலி கொண்(டு)உவந்
தட்டியாளவுங் கிற்பரோநமக் கடிகளாகிய வடிகளே. ௨

ஒன்றிநீர்கள்வந் துரைமினோநுமக் கிசையுமாநினைந் தேத்துவீர்
குன்றிபோல்வதோ ருருவரோகுறிப் பாகிநீறுகொண் டணிவ
இன்றியேயில ராவரோவன்றி யுடையராயில ராவரோ [ரோ
அன்றியேமிக அறவரோநமக் கடிகளாகிய வடிகளே. ௩

தேனையாடுமுக் கண்ணரோமிகச் செய்யரோவெள்ளை நீற்றரோ
பால்நெய்ஆடலும் பயில்வரோதமைப் பற்றினார்கட்கு நல்லரோ
மானைமேவிய கண்ணினாள்மலை மங்கைநங்கையை அஞ்சவோர்
ஆனையீருரி போர்ப்பரோநமக் கடிகளாகிய வடிகளே. ௪

கோணல்மாமதி சூடரோகொடு கொட்டிகாலர் கழலரோ
வீணைதானவர் கருவியோவிடை யேறுவேதமு தல்வரோ

(௧) பாறு - பருந்து. படுதலையர் - உலர்ந்த மண்டை ஓட்டை உடையவர். குறுங்கோட்டு - சிறிய கொம்பினை உடைய. அடிகளாகிய அடிகள் - தலைவராகிய கடவுள். (௨) இட்டிதாக - விருப்பத்துடன். இசையுமா - கூடிய விதத்தில். பட்டிஏறு - இளஎருது. அட்டி - சமைத்ததை உண்டு. (௩) குன்றி - குன்றிமணி. குறிப்பாகி - விருப்பத்துடன். (௫) கொடுகொட்டி காலர் கழலரோ-கொடுகொட்டி என்னும் கூத்து ஆடுகின்ற வீரக்கழலை அணிந்த கால்களை உடையவரோ.

நாணதாகவே ஆர் நாகங்கொண்டரைக் கார்ப்பரோ நல மார்தர
ஆணையாகநம் மடிகளோ நமக் கடிகளாகிய வடிகளே. ௫

வந்துசொல்லுமின் மூடனேனுக்கு வல்லவாறிணை நேத்துவீர்
வந்தசாயினை யறிவரோ தம்மை வாழ்த்தினார்கட்கு நல்லரோ
புந்தியாலுரை கொள்வரோ அன்றிப் பொய்யில் மெய்யுரைத் தாள்வ
அன்றியேமிக அறவரோ நமக் கடிகளாகிய வடிகளே. [ரோ

மெய்யென் சொல்லுமின் நமரங்காளுமக் கிசையுமாறிணை நேத்துவீர்
கையிற்சூலமு துடையரோ கரி காடரோ கறைக் கண்டரோ
வெய்யபாம்பரை ஆர்ப்பரோ விடை யேறரோ கடை தோறுஞ்சென்
றையங்கொள்ளுமவ் வடிகளோ நமக் கடிகளாகிய வடிகளே. (எ)

நீடுவாழ்பதி யுடையரோ அயன் நெடியமாலுக்கும் நெடியரோ
பாடுவாரையும் உடையரோ தமைப் பற்றினார்கட்கு நல்லரோ
காடுதானரங் காகவேகைக ளெட்டினோ(டு) இல யம்பட
ஆடுவாரெனப் படுவரோ நமக் கடிகளாகிய வடிகளே. அ

நமணநந்தியுங் கருமவீரனுந் தருமசேனனும் என்றிவர்
குமணமாமலைக் குன்றுபோல்நின்று தங்கள் கூறையொன் றின்றியே
ஞமணஞாஞணஞாணஞோணமென் றோதியாரையும் நாணிலா
அமணராற்பழிப் புடையரோ நமக் கடிகளாகிய வடிகளே. கூ

படிசெய்நீர்மையிற் பத்தர்காள் பணிந் தேத்தினேன்
பணியீரருள், வடிவிலான் திரு நாவலூரன் வனப்பகையப்

(௫) நாணதாக - அரைஞாணாக. ஆர்ப்பரோ - கட்டுவரோ. நலம் ஆர்தர - நமக்கு நன்மைகள் பெருகும்படி. ஆணையாக - சத்தியமாக. (௬) சாயினை - தளர்ச்சியை. புந்தியால் உரைகொள்வரோ - தம்திருவுளத்தில் எமது அற்பமொழிகளை ஏற்றுக்கொள்வரோ. பொய் இல் - பொய்படாத. (எ) மெய்என் - உண்மைஎது. நமரங்காள் - நம்மவர்களே. கரிகாடு - சுடுகாடு. (அ) நீடு - நெடுங்காலமாக. நெடியரோ - நீண்டவுருவினரோ. இலயம்பட - கூத்துதாளத்திற்கு இசைய. (கூ) நமணநந்தி......தருமசேனன் - சமணர்களின் பெயர்கள். ஞமண......-அவர்கள் ஓதும் மந்திரங்களின் ஓசையைக் குறிக்கும் சொற்கள். யாரையும் - யார்க்கும். (க0) படிசெய் நீர்மையில்-தொண்டு செய்ய வேண்டிய முறைப்படி. பணியீர்அருள் - அருள்செய்வீர். வடிவு இல்லான் - உருவமில்லாதவனை சிவபிரான் வீற்றிருக்கும் திருநாவலூரில் அவதரித்தவன்.

பன் வன்றொண்டன், சேடியனாகிலுந் தீயனாகிலுந் தம்மை யேமனஞ் சிந்திக்கும், அடியனூரனை யாள்வரோநமக் கடிக ளாகிய வடிகளே. ௧௦

திருச்சிற்றம்பலம்

*இப்படி இருக்கும் நாளில் திருமூலட்டானர் அருள்பெற்று அன்புற்ற காதலுடன் பிறதலங்களை வணங்கப் புறப்பட்டுத் திருநள்ளாற்றை அடைந்து அண்ணலாரை மண்டிய பேரன்பினொடும் தொழுது,*

## 68. திருநள்ளாறு

**பண் - தக்கேசி**

திருச்சிற்றம்பலம்

செம்பொன் மேனிவெண் ணீறணி வானைக் கரிய கண்டனை மாலயன் காணாச், சம்பு வைத்தழல் அங்கையி னானைச் சாம வேதனைத் தன்னொப்பி லானைக், கும்ப மாகரி யின்னுரி யானைக் கோவின் மேல்வருங் கோவினை யெங்கள், நம்பனைநள் ளாறனை அமுதை நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. ௧

விரைசெய் மாமலர்க் கொன்றையி னானை வேத கீதனை மிகச்சிறந் துருகிப், பரசு வார்வினைப் பற்றறுப் பானைப் பாலொ(டு) ஆனஞ்சும் ஆடவல் லானைக், குரைக டல்வரை யேழுல குடைய கோனை ஞானக் கொழுந்தினைத் தொல்லை, நரைவிடை யுடையநள் ளாறனை அமுதை நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. ௨

பூவில் வாசத்தைப் பொன்னினை மணியைப் புவியைக் காற்றினைப் புனல்அனல் வெளியைச், சேவின் மேல்வருஞ் செல்வனைச் சிவனைத் தேவ தேவனைத் தித்திக்குந் தேனைக், காவி யங்கண்ணி பங்கனைக் கங்கைச் சடைய னைக்காம ரத்

---

(க) கும்பம் - மத்தகம். கோ - (1) இடபம் ; (2) அரசன். என் நினைக்கேனே-வேறு எதை நினைப்பேன்; வேறு ஒன்றையும் நினைக்க மாட்டேன். (உ) பரசுவார் - துதிப்பவர். கடல் ஏழு, வரை ஏழு, உலகு ஏழு. நரை - வெண்மை நிறமுள்ள. (௩) காவி - குவளை மலர்போலும்.

திசை பாட, நாவி லூறுமங்கள் ளாறனை அமுதை நாயி னேன் மறந் தென்னினைக் கேனே. ௩

தஞ்ச மென்றுதன் தாளது அடைந்த பாலன் மேல் வந்த காலனை யுருள, நெஞ்சி லோருதை கொண்ட பிரானை நினைப்ப வர்மனம் நீங்ககில் லானை, விஞ்சை வானவர் தான வர் கூடிக் கடைந்த வேலையுள் மிக்கெழுந் தெரியும், நஞ்ச முண்டநள் ளாறனை அமுதை நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. ௪

மங்கை பங்கனை மாசிலா மணியை வான நாடனை ஏன மோ டன்னம், எங்கும் நாடியுங் காண்பரி யானை ஏழை யேற் கெளி வந்த பிரானை, அங்கம் நான்மறை யால்நிறை கின்ற அந்த ணாளர் அடியது போற்றும், நங்கள் கோனைநள் ளாறனை அமுதை நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. ௫

கற்ப கத்தினைக் கனகமால் வரையைக் காம கோபனைக் கண்ணுத லானைச், சொற்ப தப்பொருள் இருளறுத் தருளுந் தூய சோதியை வெண்ணெய்நல் லூரில், அற்பு தப்பழ ஆவ ணங் காட்டி அடியனு வென்னை ஆளது கொண்ட, நற்ப தத்தைநள் ளாறனை அமுதை நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. ௬

மறவனை அன்று பன்றிப்பின் சென்ற மாயனை நால்வர் க்(கு)ஆலின்கீ ழுரைத்த, அறவ னையம ரர்க்கரி யானை அமரர் சேனைக்கு நாயக னை, குறவர் மங்கைதன் கேள்வனைப் பெற்ற கோனை நான்செய்த குற்றங்கள் பொறுக்கும், நறைவி ரியு(ம்)நள் ளாறனை அமுதை நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. ௭

(௩) நாவிலூறும் - நாவில் இனிக்கின்ற. (௪) விஞ்சை - அறிவுடைய. வானவர் - தேவர். தானவர் - அசுரர். (௬) ஆவணம் - (அடிமை) ஓலை. (௭) மறவனை - வேடனை. நறை விரியும் - மணம் பரவிய சோலைகளால் சூழப்பெற்ற.

மாதி னுக்(கு)உடம்பு இடங்கொடுத் தானை மணியி னைப்பணி வார்வினை கெடுக்கும், வேத னைவேத வேள்வியர் வணங்கும் விமல னைஅடி யேற்கெளி வந்த, தூதனைத் தன்னைத் தோழமை யருளித் தொண்ட னேன்செய்த துரிசுகள் பொறுக்கும், நாத னைநள் ளாறனை அமுதை நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. அ

இலங்கை வேந்தன் எழில்திகழ் கயிலை யெடுப்ப ஆங்கிம வான்மக ளஞ்சத், துலங்கும் நீண்முடி யொருபதுந் தோள்க ளிருப தும்நெரித் தின்னிசை கேட்டு, வலங்கை வாளொடு நாமமுங் கொடுத்த வள்ள லைப்பிள்ளை மாமதிச் சடைமேல், நலங்கொள் சோதிநள் ளாறனை அமுதை நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. கூ

செறிந்த சோலைகள் சூழ்ந்தநள் ளாற்றெஞ் சிவனை நாவலூர்ச் சிங்கடி தந்தை, மறந்து நான்மற்று நினைப்ப தேதென்று வனப்பகை யப்ப னூரன்வன் தொண்டன், சிறந்த மாலைக ளஞ்சினோ டஞ்சுஞ் சிந்தை யுள்ளுரு கிச்செப்ப வல்லார்க், கிறந்து போக்கில்லை வரவில்லை யாகி இன்ப வெள்ளத்து ளிருப்பர்கள் இனிதே. க0

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம்பாடி, திருக்கடவூர் மயானம் பணிந்து,

## 53. திருக்கடவூர் மயானம்

பண் - பழம்பஞ்சுரம்

தி ரு ச் சி ற் ற ம் ப ல ம்

மருவார் கொன்றை மதிசூடி மாணிக் கத்தின் மலைபோல
வருவார் விடைமேல் மாதோடு மகிழ்ந்து பூதப் படைசூழத்

---

(அ) துரிசு - குற்றம். (கூ) வலம் - வெற்றியுடைய. நாமமும் - இராவணன் என்ற பெயரையும், "இராவணனென்று ஈந்தநாமத் தத்துவனை"—அப்பர். (கைத்தலம்.) (க0) சிறந்த (தமிழ்ப்பா) மாலைகள் அஞ்சினொடு ஐஞ்சும்.

திருமால் பிரமன் இந்திரற்குந் தேவர் நாகர் தானவர்க்கும்
பெருமான் கடவூர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே.

விண்ணோர் தலைவர் வெண்புரிநூல் மார்பர் வேத கீதத்தர்
கண்ணார் நுதலர் நகுதலையர் கால காலர் கடவூரர் [பாகம்
எண்ணார் புரமூன் றெரிசெய்த இறைவ ருமையோ ரொரு
பெண்ஆண் ஆவர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. ௨

காயும் புலியின் அதளுடையர் கண்ட ரெண்டோட் கடவூரர்
தாயுந் தந்தை பல்லுயிர்க்குந் தாமே யாய தலைவனார் [மேட்டி
பாயும் விடையொன் றதுவேறிப் பலிதேர்ந் துண்ணும் பர
பேய்கள் வாழும் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. ௩

நறைசேர் மலரைங் கணையானை நயனத் தீயாற் பொடிசெய்த
இறையா ராவர் எல்லார்க்கும் இல்லை யென்னா தருள்செய்வார்
பறையார் முழவம் பட்டோடு பயிலுந் தொண்டர் பயில்கடவூர்ப்
பிறையார் சடையார் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே.

கொத்தார் கொன்றை மதிசூடிக் கோள்நா கங்கள் பூணாக
மத்த யானை உரிபோர்த்து மருப்பு மாமைத் தாலியார்
பத்தி செய்து பாரிடங்கள் பாடி யாடப் பலிகொள்ளும்
பித்தர் கடவூர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. ௫

துணிவார் கீளுங் கோவணமுந் துதைந்து சுடலைப் பொடியணிந்து
பணிமே லிட்ட பாசுபதர் *பஞ்ச வடிமார் பினர்கடவூர்த்

---

(௨) நகுதலையர் - சிரிப்பது போலுள்ள தலை ஓட்டை உடைய வர். (௩) காயும் - கோபிக்கும். கண்டர் - நீலகண்டர். (௪) நறை - தேன், வாசனை. (௫) கோள் - கொல்லும் தன்மையுள்ள. மருப்பும் ஆமைத்தாலியார் - பன்றிக்கொம்பையும் ஆமை யோட்டையும் கழுத்தில் அணிந்தவர். (௬) துதைந்து - தரித்து. பணி - பாம்பு.

* பஞ்சவடியாவது - மயிர்ப்பூணூல். இது மாவிரதிய ரென்னும் உட்சமயத்தா ரணிவது. மேலும் அவர்கள் அணியும் மணி எலும்பினாலாகிய மணிகள். இவற்றை மானக்கஞ்சாற நாயனார் புராணத்து ௨௩-வது திருவிருத்தத்தானு முணர்க.

திணிவார் குழையார் புரமூன்றுந் தீவாய்ப் படுத்த சேவகனார்
பிணிவார் சடையர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே.

காரார் கடலின் நஞ்சுண்ட கண்டர் கடவூ ருறைவாணர்
தேரார் அரக்கன் போய்வீழ்ந்து சிதைய விரலா லூன்றினார்
ஊர்தா னவ துலகேழும் உடையார்க் கோற்றி யூர்ஆரூர்
பேரா யிரவர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. எ

வாடா முலையாள் தன்னோடு மகிழ்ந்து கானில் வேடுவனாய்க்
கோடார் கேழற் பின்சென்று குறுகி விசையன் தவம்அழித்து
நாடா வண்ணம் செருச்செய்து ஆவ நாழி நிலையருள்செய்
பீடார் சடையார் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. அ

வேழம் உரிப்பர் மழுவாளர் வேள்வி அழிப்பர் சிரமறுப்பர்
ஆழி யளிப்பர் அரிதனக்கன்(று) ஆனைந் துகப்ப ரறமுரைப்பர்
ஏழைத் தலைவர் கடவூரில் இறைவர் சிறுமான் மறிக்கையர்
பேழைச் சடையர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே.

மாடம் மல்கு கடவூரில் மறையோ ரேத்தும் மயானத்துப்
பீடை தீர அடியாருக் கருளும் பெருமான் அடிகள்சீர்
நாடி நாவ லாரூரன் நம்பி சொன்ன நற்றமிழ்கள்
பாடும் அடியார் கேட்பார்மேற் பாவ மான பறையுமே. க0

திருச்சிற்றம்பலம்

என்னும் பொங்கும் இசைத்திருப்பதிகம் பாடிக் கடவூர் வீரட்டானத்துத் தேவர்பிரான் கழல் பணிந்து,

---

(சு) திணிவார் குழையார் - கடின சித்தமுடையவரும் அன்பில்லாதவருமான அரக்கருடைய (அல்லது) திண்மையும் நீட்சியும் உடைய குழையை அணிந்தவரும். சேவகனார் - வீரர். (அ) வாடா - சாயாத. கோடு ஆர் கேழல் - கொம்பினை உடைய பன்றி. நாடாவண்ணம் - தம்மை அறியாதபடி. ஆவம் நாழி நிலை - அம்புப் புட்டிலை நிலைக்க. ஏழை-உமாதேவியாரது. (கூ) பேழை-பெரிய. (க0) பீடை - துன்பம்.

# 28. திருக்கடவூர்

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

பொடியார் மேனியனே புரிநூலொரு பாற்பொருந்த
வடியார் மூவிலைவேல் வளர்கங்கையின் மங்கையொடுங்
கடியார் கொன்றையனே கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அடிகே ளென்னமுதே எனக்கார்துணை நீயலதே. க

பிறையா ருஞ்சடையாய் பிரமன்றலை யிற்பலிகொள்
மறையார் வானவனே மறையின்பொரு ளானவனே
கறையா ரும்மிடற்றாய் கடவூர்தனுள் வீரட்டத்தெம்
இறைவா என்னமுதே எனக்கார்துணை நீயலதே. உ

அன்றா லின்நிழற்கீழ் அறம்நால்வர்க் கருள்புரிந்து
கொன்றாய் காலனுயிர் கொடுத்தாய்மறை யோனுக்கு,மான்
கன்றா ருங்கரவா கடவூர்த்திரு வீரட்டத்துள்
என்தா தைபெருமா னெனக்கார்துணை நீயலதே. ங

போரா ருங்கரியின் உரிபோர்த்துப்பொன் மேனியின்மேல்
வாரா ரும்முலையா ளொருபாகம் மகிழ்ந்தவனே
காரா ரும்மிடற்றாய் கடவூர்தனுள் வீரட்டானத்(து)
ஆரா வென்னமுதே எனக்கார்துணை நீயலதே. ச

மையார் கண்டத்தினாய் மதமாவுரி போர்த்தவனே
பொய்யா தென்னுயிருட் புகுந்தாயின்னம் போந்தறியாய்
கையா ராடரவா கடவூர்தனுள் வீரட்டத்தெம்
ஐயா என்னமுதே எனக்கார்துணை நீயலதே. ரு

மண்நீர் தீவெளிகால் வருபூதங்க ளாகி,மற்றும்
பெண்ணோ டாணலியாய்ப் பிறவாவுரு வானவனே

---

(க) வடிஆர் - கூர்மை பொருந்திய. மூஇலைவேல்-மூன்று இலைகளை உடைய சூலத்தொடும். கடிஆர் - வாசனை நிறைந்த. (ங) 2-வது வரி. காலனைக் கொன்றாய், மறையோனுக்கு உயிர் கொடுத்தாய். கரவா - கரத்தை உடையவனே. (ச) ஆரா அமுது - தெவிட்டாத அமிர்தமே. (ரு) போந்து - வெளிப்பட்டு.

கண்ணா ருண்மணியே கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அண்ணா என்னமுதே எனக்கார்துணை நீயலதே. ௬

எரியார் புன்சடைமேல் இளநாகம் அணிந்தவனே
நரியா ருஞ்சுடலை நகுவெண்தலை கொண்டவனே
கரியார் ஈருரியாய் கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அரியாய் என்னமுதே எனக்கார்துணை நீயலதே. ௭

வேறா வுன்னடியேன் விளங்குங்குழைக் காதுடையாய்
தேறேன் உன்னையல்லால் சிவனேயென். செழுஞ்சுடரே
காறார் வெண்மருப்பா கடவூர்த்திரு வீரட்டத்துள்
ஆறார் செஞ்சடையா யெனக்கார்துணை நீயலதே. ௮

அயனோ டன்றரியும் அடியும்முடி காண்பரிய
பயனே எம்பரனே பரமாய பரஞ்சுடரே
கயமா ருஞ்சடையாய் கடவூர்த்திரு வீரட்டத்துள்
அயனே என்னமுதே யெனக்கார்துணை நீயலதே. ௯

காரா ரும்பொழில்சூழ் கடவூர்த்திரு வீரட்டத்துள்
ஏரா ரும்மிறையைத் துணையாஎழில் நாவலர்கோன்
ஆரூ ரன்னடியா னடித்தொண்ட னுரைத்ததமிழ்
பாரோர் ஏத்தவல்லார் பரலோகத் திருப்பாரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

என்னும் மருஈரத் தமிழ்மாலை புனைந்தேத்தி, திருவலம்புரத்தை அடைந்து, மலைவளைத்த பெருவீரர் கழல்வணங்கி,

---

(௬) கண்ஆர் உள்மணி - கண்ணுள் இருக்கும் மணி. 'கண்ணே கண்ணிற் கருமணியே'—அப்பர். (திருவே.) (௭) கரிஆர் ஈர் உரியாய் - யானையைக்கிழித்து எடுத்த தோலை உடையவனே. (௮) விளங்கும் குழைக்காதுடையாய் உன்னடியேன் உன்னை அல்லால் வேறு(க) தேறேன்-உரைநடை.(மற்றொருவரை எனக்குத்துணை என்று தெளிய மாட்டேன்). காறுஆர் வெண் மருப்பா-ஏர்க்கொழுவைப்போல் கூர்மையானதும் வெண்மையானதுமான (பன்றிக்)கொம்பை உடையவனே. (௯) கயம்-(கங்கா)நீர். அயன்-ஐயன். (௧௦) மேகங்கள் தவழும் பொழில்.

# 72. திருவலம்புரம்

**பண் - காந்தாரம்**

*திருச்சிற்றம்பலம்*

எனக்கினித் தினைத்தனைப் புகலிடம் அறிந்தேன்
பனைக்கனி பழம்படும் பரவையின் கரைமேல்
எனக்கினி யவன்தமர்க் கினியவ னெழுமையும்
மனக்கினி யவன்றன(து) இடம்வலம் புரமே. க

புரமவை யெரிதர வளைந்தவில் லினன்அவன்
மரவுரி புலியதள் அரைமிசை மருவினன்
அரவுரி யிரந்தவன் இரந்துண விரும்பிநின்
றிரவெரி யாடிதன் இடம்வலம் புரமே. உ

நீறணி மேனியன் நெருப்புமிழ் அரவினன்
கூறணி கொடுமழு வேந்தியோர் கையினன்
ஆறணி அவிர்சடை அழல்வளர் மழலைவெள்
ஏறணி யடிகள்தம் இடம்வலம் புரமே. ௩

கொங்கணை சுரும்புண நெருங்கிய குளிரிளம்
தெங்கொடு பனைபழம் படுமிடம், தேவர்கள்
தங்கிடு மிடந்தடங் கடற்றிரை புடைதர
எங்கள தடிகள்நல் இடம்வலம் புரமே. ௪

கொடுமழு விரகினன் கொலைமலி சிலையினன்
நெடுமதில் சிறுமையின் நிரவவல் லவனிடம்

---

(க) பரவை-கடல். எழுமையும் மனக்கு இனியவன்-எழுபிறப்பினளவும் மனதிற்கு இனியவன். (உ) 2-வது வரி. மரவுரியையும் புலித்தோலையும். அரவுரி இரந்தவன் - பாம்பின் தோலை விரும்பியவன். (௩) நெருப்பு - விஷாக்நி. கூறு அணி - ஒரு பாகத்தை அலங்கரிக்கின்ற. மழலை - இளமையுடைய. (௪) 1-வது வரி. வண்டுகள் கொங்கு (தேனை) அணைந்து உண்ண. 3-வதுவரி. பெரிய கடல்அலைகள் மோத. (௫) 1-வது வரி. கொடிய மழு ஏந்திய சமர்த்தன். கொலைத்தொழில் மிகுந்த வில்லை உடையவன். சிறுமையில் நிரவ - எளிதில் எரித்து மட்டமாக்க.

படுமணி முத்தமும் பவளமும் மிகச்சுமந்
திடுமண லடைகரை யிடம்வலம் புரமே. ௫

கருங்கடக் களிற்றுரிக் கடவுள திடங்கயல்
நெருங்கிய நெடும்பணை யடும்பொடு விரவிய
மருங்கொடு வலம்புரி சலஞ்சலம் மணம்புணர்ந்
திருங்கட லணைகரை யிடம்வலம் புரமே. ௬

நரிபுரி காடரங் காநட மாடுவர்
வரிபுரி பாடநின் றாடுமெம் மானிடம்
புரிசுரி வரிகுழல் அரிவையோர் பால்மகிழ்ந்(து)
எரியெரி யாடித னிடம்வலம் புரமே. ௭

பாறணி முடைதலை கலனென மருவிய
நீறணி நிமிர்சடை முடியினன் நிலவிய
மாறணி வருதிரை வயலணி பொழிலது
ஏறுடை யடிகள்தம் இடம்வலம் புரமே. ௮

சடசட விடுபெணை பழம்படும் இடவகை
படவட கத்தொடு பலிகலந் துலவிய
கடைகடை பலிதிரி கபாலித னிடமது
இடிகரை மணலடை யிடம்வலம் புரமே. ௯

குண்டிகைப் படப்பினில் விடக்கினை யொழித்தவர்
கண்டவர் கண்டடி வீழ்ந்தவர் கனைகழல்

---

(௬) கடம் - மதம். கருங்கடக் களிற்றுரி - மதநீரைப் பொழியும் யானையின் கரிய தோலை(ப்போர்த்த). கயல் பெணை.........கயல் மீன்கள் மிகுந்த குளங்களை அடுத்து நீண்ட பனைமரங்களும். அடும்பு- அடப்பங்கொடி. வலம்புரி சலஞ்சலம் - சங்குகளின் பேதங்கள். (௭) புரி - விரும்பும். வரிபுரி - வண்டுகள் விரும்பி. புரி - முறுக்கிய. சுரி - மடிந்துள்ள. வரி - நீண்ட. (௮) பாறு அணி - பருந்துகள் சூழ்ந்த. முடை - நாற்றத்தையுடைய. கலன் - பிக்ஷாபாத்திரம். நிமிர் - நீண்ட. மாறு அணி வரு - மாறி மாறி அடுக்காக வருகின்ற. (௯) சடசட...... வகைபட - (காற்றடிப்பதனால்) சடசட என்று சப்திக்கின்ற பனைமரத்தினின்றும் உதிர்கிற பழங்கள் சேரும் வீடுகள் நெருங்கி. வடகம் - தோல், போர்வை. பலி கலந்து உலவிய - நீற்றை அணிந்து உலாவி. கடைகடை - வாயில்தோறும். (௧௦) கமண்டலத்தைக் கையில் ஏந்திய வரும் புலால் உண்ணலை ஒழித்தவரும் ஆன சமணர்கள், தம்முடைய

தண்டுடைத் தண்டித னினமுடை யரவுடன்
எண்டிசைக் கொருசுட ரிடம்வலம் புரமே. க0

வருங்கல மும்பல பேணுதல் கருங்கடல்
இருங்குலப் பிறப்பர்த மிடம்வலம் புரத்தினை
அருங்குலத் தருந்தமி ழூரன்வன் றொண்டன்சொல்
பெருங்குலத் தவரோடு பிதற்றுதல் பெருமையே. கக

திருச்சிற்றம்பலம்

என்னும் 'உரைஓசைத்' திருப்பதிகத்தை ஓதித் திருச்சாய்க்காட்டை எய்தி தேவர்பெருமானைப் பணிந்து திருப்பதிகம்பாடி, திருவெண்காடு பணிந்தேத்தி,

## 6. திருவெண்காடு

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

படங்கொள்நாகஞ் சென்னிசேர்த்திப் பாய்புலித்தோ லரையில்
அடங்கலார் ஊர் எரியச்சீறி அன்றுமூவர்க்கருள்புரிந்தீர் [வீக்கி
மடங்கலானைச் செற்றுகந்தீர் மனைகள்தோறும் தலைகையேந்தி
விடங்கராகித் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே. க

வீரக்கழலை அணிந்த திருவடியில் வீழ்ந்து வணங்கப்பெற்றவரும், கண் காணப்பெற்றவருமான தண்டைத் தாங்கிய தண்டியடிகள் நாயனாரைத் தனக்கு இனமாக (சுற்றமாக) உடையவரும் சர்ப்பாபரணமணிந்தவராய் எட்டுத்திக்குகளையும் விளக்கும் ஒப்பற்ற சோதியாயுள்ளவருமான சிவபெருமான் திருக்கோயில்கொண் டெழுந்தருளியிருக்குந் தலம் வலம்புரமாகும். (கக) 1, 2-வது வரி. கருங்கடலில் வருகிற பல மரக்கலங்களையும் காப்பதில் வல்ல பெரிய குலப்பிறப்பினை உடையோரது இடமாகிய திருவலம்புரத்தினை.

(க) வீக்கி - கட்டி. அடங்கலார் - பகைவர். மூவர்-தாருகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுந்மாலி என்பவர். மடங்கலானை - சிங்க உருவத்தை உடைய நரசிங்க மூர்த்தியை. விடங்கராகி - அழகராகி.

இழித்துகந்தீர் முன்னைவேடம் இமையவர்க்கும் உரைகள்பேணு
தொழித்துகந்தீர் நீர்முன்கொண்ட உயர்தவத்தை அமரர்வேண்ட
அழிக்கவந்த காமவேளை அவனுடைய தாதைகாண
விழித்துகந்த வெற்றியென்னே வேலைசூழ்வெண் காடனீரே. உ

படைகளேந்திப் பாரிடம்உம் பாதம்போற்ற மாதும்நீரும்
உடையோர்கோவ ணத்தராகி உண்மைசொல்லீ ரும்மையன்றே
சடைகள்தாழக் கரணமிட்டுத் தன்மைபேசி இல்பலிக்கு
விடையதேறித் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே.

பண்ணுளீராய்ப் பாட்டுமானீர் பத்தர்சித்தம் பரவிக்கொண்டீர்
கண்ணுளீராய்க் கருத்திலும்மைக் கருதுவார்கள் காணும்வண்ணம்
மண்ணுளீராய் மதியம்வைத்தீர் வானநாடர் மருவியேத்த
விண்ணுளீராய் நிற்பதென்னே வேலைசூழ்வெண் காடனீரே.

குடமெடுத்து நீரும்பூவுங் கொண்டுதொண்ட ரேவல்செய்ய
நடமெடுத்தொன் றாடிப்பாடி நல்குவீர்நீர் புல்கும்வண்ணம்
வடமெடுத்த கொங்கைமாதோர் பாகமாக வார்கடல்வாய்
விடம்மிடற்றில் வைத்ததென்னே வேலைசூழ்வெண் காடனீரே.

மாறுபட்ட வனத்தகத்தின் மருவவந்த வன்களிற்றைப்
பீறிஇட்ட மாகப்போர்த்தீர் பெய்பலிக்கென் றில்லந்தோறுங்
கூறுபட்ட கொடியும்நீருங் குலாவியேற்றை அடரவேறி
வேறுபட்டுத் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே.

---

(உ) முன்னை வேடம் இழித்து உகந்தீர் - உமாதேவியாரோடு இருந்த கோலத்தை நீக்கித் தனித்து யோகியாய் இருக்க விரும்பினீர். இமையவர்க்கும்......ஒழித்துகந்தீர் - தேவர்களுடைய வேண்டுகோளைக் கவனியாதிருக்கத் திருவுளங் கொண்டீர். (ங) பாரிடம்-பூதகணங்கள். தாழ - தொங்க. கரணமிட்டு - கூத்தாடி. தன்மை - தாழ்வு. (ச) மருவி ஏத்த - நெருங்கித் துதிக்க. (ரு) நடமெடுத்து - நடனஞ்செய்து. நல்குவீர் - அருள் செய்வீர். புல்கும் வண்ணம் - தழுவும்படி. வடம் - மாலை. (சு) 1-வது வரி. காட்டினிடத்துச் சேர வந்த பகைமையோடு கூடிய வலிய யானையை. பீறி-கிழித்து. இட்டமாக - விருப்பத்தோடு. அடர ஏறி - போர்செய்ய ஏறி. வேறுபட்டு - வெற்றி பொருந்தி.

காதலாலே கருதுந்தொண்டர் காரணத்த ராகிநின்றே
பூதம்பாடப் புரிந்துநட்டம் புவனியேத்த ஆடவல்லீர்
நீதியாக ஏழிலோசை நித்தராகிச் சித்தர்சூழ
வேதமோதித் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே.

குரவுகொன்றை மதியமத்தங் கொங்கைமாதர் கங்கைநாகம்
விரவுகின்ற சடையுடையீர் விருத்தரானீர் கருத்திலும்மைப்
பரவுமென்மேற் பழிகள்போக்கீர் பாகமாய மங்கையஞ்சி
வெருவவேழம் செற்றதென்னே வேலைசூழ்வெண் காடனீரே.

மாடங்காட்டும் கச்சியுள்ளீர் நிச்சயத்தால் நினைப்புளார்பால்
பாடுங்காட்டில் ஆடலுள்ளீர் பரவும்வண்ணம் எங்ஙனேதான்
நாடுங்காட்டி லயனும்மாலும் நணுகாவண்ணம் அனலுமாய
வேடங்காட்டித் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே.

விரித்தவேதம் ஓதவல்லார் வேலைசூழ்வெண் காடுமேய
விருத்தனாய வேதன்றன்னை விரிபொழில்திரு நாவலூரன்
அருத்தியாலா ரூரன்தொண்ட னடியன்கேட்ட மாலைபத்துந்
தெரித்தவண்ணம் மொழியவல்லார் செம்மையாளர் வானுளாரே.

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடித் திருநனிபள்ளியை அடைந்து,

## 97. திருநனிபள்ளி

பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

ஆதியன் ஆதிரை யன்அயன் மாலறி தற்கரிய
சோதியன் சொற்பொரு ளாய்ச்சுருங் காமறை நான்கினையும்

(எ) புரிந்து-விரும்பி. புவனி-உலகம். ஏழிலோசை வேதம் ஓதி - சப்தசுரங்களோடு வேதம் ஓதி. நித்தராகி - அழியாதவராகி. (அ) பாகமாய மங்கை - உமைப்பிராட்டியார். (கூ) பாடுங் காட்டில் - பூதங்கள் பாடும்படியான சுடுகாட்டில். (க0) அருத்தியால் - அன்பினால். தெரித்த - தெரிவித்த.

(க) ஆதிரையன் - திருவாதிரை நாளைத் தனக்குச் சிறந்த நாளாக உடையவன்.

ஓதியன் உம்பர்தங் கோனுல கத்தினு ளெவ்வுயிர்க்கும்
நாதியன் நம்பெரு மான்நண்ணு மூர்நனி பள்ளியதே. க

உறவிலி யூன மிலியுண ரார்புரம் மூன்றெரியச்
செறுவி(ல்)லி தன்னினை வார்வினை யாயின தேய்ந்தழிய
அறவில கும்அரு ளான்மரு ளார்பொழில் வண்டறையும்
நறைவிரி கொன்றையி னான்நண்ணு மூர்நனி பள்ளியதே. உ

வானுடை யான்பெரி யான்மனத் தாலும் நினைப்பரியான்
ஆனிடை ஐந்தமர்ந் தானனு வாகியோர் தீயுருக்கொண்(டு)
ஊனுடை யிவ்வுட லமொடிங் கிப்புகுந் தான்பரந்தான்
நானுடை மாடெம்பி ரான்நண்ணு மூர்நனி பள்ளியதே. ங

ஓடுடை யன்கல னாவுடை கோவண வன்உமையோர்
பாடுடை யன்பலி தேர்ந்துணும் பண்புடை யன்பயிலக்
காடுடை யன்னிட மாமலை யேழுங் கருங்கடல்சூழ்
நாடுடை நம்பெரு மான்நண்ணு மூர்நனி பள்ளியதே. ச

பண்ணற் கரிய தொருபடை ஆழிதனைப் படைத்துக்
கண்ணற் கருள்புரிந் தான்கரு தாதவர் வேள்விஅவி
உண்ணற் கிமையவ ரைஉருண் டோட வுதைத்துகந்து
நண்ணற் கரியபி ரான்நண்ணு மூர்நனி பள்ளியதே. ரு

மல்கிய செஞ்சடை மேல்மதி யும்அர வும்முடனே
புல்கிய ஆரண னெம்புனி தன்புரி நூல்விகிர்தன்

---

(க) நண்ணும் - வீற்றிருக்கும். நாதியன் - ஞாதியன்; தந்தையாய் இருப்பவன். (உ) செறுவி(ல்)லி - அழித்த வில்லையுடையவன். தேய்ந்து அற அழிய இலகும் அருளான் - அருகி முற்றும் அழிய விளங்கும் அருளை உடையவன். பொழில் மருள் ஆர் வண்டு அறையும் - சோலைகளில் மது உண்ட மயக்கத்தை உடைய வண்டுகள் சப்திக்கும். நறை விரி - வாசனை வீசும். நானுடை மாடு - என்னிடமிருக்கும் செல்வம். (ச) பாடு-பாகம். (ரு) மல்கிய - வளமாக வளர்ந்த. உடனே புல்கிய - ஒருங்கே பகையின்றி வைத்திருந்த. ஆரணன் - வேதத்தை அருளியவன்.

மெல்கிய விற்றொழி லான்விருப் பன்பெரும் பார்த்தனுக்கு
நல்கிய நம்பெரு மான்நண்ணு மூர்நனி பள்ளியதே. ௬

அங்கமோர் ஆறவை யும்அரு மாமறை வேள்விகளும்
எங்கு மிருந்(து)அந் தணரெரி மூன்றவை யோம்புமிடம்
பங்கய மாமுகத் தாளுமை பங்கன் உறைகோயில்
செங்கயல் பாயும் வயற்றிரு வூர்நனி பள்ளியதே. ௭

திங்கட் குறுந்தெரி யல்திகழ் கண்ணியன் நுண்ணியனாய்
நங்கட் பிணிகளை வான்அரு மாமருந்(து) ஏழ்பிறப்பும்
மங்கத் திருவிர லாலடர்த் தான்வல் லரக்கனையும்
நங்கட் கருளும் பிரான்நண்ணு மூர்நனி பள்ளியதே. ௮

ஏன மருப்பி னொடும்எழி லாமையும் பூண்டுகந்து
வான மதில்அர ண(ம்)மலை யேசிலை யாய்வளைத் தான்
ஊனமில் காழிதன் னுள்உயர் ஞானசம் பந்தர்க்கன்று
ஞான மருள்புரிந் தான்நண்ணு மூர்நனி பள்ளியதே. ௯

காலமும் நாள்கழி யுந்நனி பள்ளி மனத்தினுள்கிக்
கோலம தாய வனைக்குளிர் நாவல வூரன்சொன்ன
மாலை மதித்துரைப் பார்மண் மறந்துவா னோருலகில்
சாலநல் லின்பமெய்தித் தவலோகத் திருப்பவரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

என்னும் புனித நறுந்தொடை மாலைபுனைந்து, திருச்செம்பொன் பள்ளி முதலிய பதிபலவும் பணிந்துபோய், திருநின்றியூரைச் சார்ந்து,

---

(௬) மெல்கிய வில் தொழிலான் - வில் தொழிலைச்சிரமமின்றி இலேசாகச் செய்ய வல்லவன். விருப்பன் - எல்லாரிடத்தும் விருப்பத்தை (கருணை) உடையவன். பார்த்தன் - அர்ச்சுனன். நல்கிய - அருள்செய்த. (௮) 1-வது வரி. இளம்பிறையாகிய பிரகாசிக்கும் மாலையையுடையவன். 2-வது வரி. நமது ஏழ்பிறப்பாகிய பிறவிநோயைக் களையும் பொருட்டு அரிய பெரிய மருந்தானவன். மங்க - அழிய. (௯) 2-வது வரி. வானமளாவிய (அல்லது ஆகாயத்தில் சஞ்சரிக்கும்படியான) முப்புரங்கள் அழிய மேரு மலையையே வில்லாக வளைத்தவன். (௧௦) நாள் கழியும் - நாட்கள் பயன் இன்றிக் கழிகின்றன. ஆதலால். நாழிகையும் - என்றும் பாடம். மாலை - பாமாலை. மதித்து - பெருமை உணர்ந்து. மண் மறந்து - நிலவுலகில் பிறப்பதை ஒழிந்து.

நின்றியூர் மேயாரை நேயத்தாற் புக்கிறைஞ்சி
ஒன்றியஅன் புள்ளுருகப் பாடுவார் உடையஅரசு
என்றும்உல கிடர்நீங்கப் பாடியஏ ழெழுநூறும்
அன்றுசிறப் பித்(து)அஞ்சொல் திருப்பதிகம் அருள்செய்தார்.
—பெ. ஏ. 150.

## 65. திருநின்றியூர்

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

திருவும் வண்மையுந் திண்திற லரசுஞ் சிலந்தி யார்செய்த செய்பணி கண்டு, மருவு கோச்செங்க ணான்றனக் களித்த வார்த்தை கேட்டுநுன் மலரடி யடைந்தேன், பெருகு பொன்னிவந்(து) உந்துபன் மணியைப் பிள்ளைப் பல்கணம் பண்ணையுள் நண்ணித், தெருவுந் தெற்றியும் முற்றமும் பற்றித் திரட்டுந் தென்திரு நின்றியூ ரானே. க

அணிகொ ளாடையம் பூணணி மாலை யமுது செய்தமு தம்பெறு சண்டி, இணைகொ ளேழெழு நூறிரும் பனுவ லீன்ற வன்திரு நாவினுக் கரையன், கணைகொள் கண்ணப்ப னென்றிவர் பெற்ற காத லின்னரு ளாதரித் தடைந்தேன், திணைகொள் செந்தமிழ் பைங்கிளி தெரியுஞ் செல்வத் தென்திரு நின்றியூ ரானே. உ

---

(க) திருவும் - செல்வமும். வண்மை - கொடை. திண்திறல் - வலிய வெற்றி. உந்து - தள்ளுகிற. பிள்ளை பல்கணம் - பல பிள்ளைகளின் கூட்டங்கள். பண்ணையுள் நண்ணி-விளையாட்டில் பொருந்தி. தெற்றி - திண்ணை. (உ) அமுதம் பெறு - மோக்ஷம்பெற்ற. ஏழ் எழு நூறு - நாலாயிரத்துத் தொள்ளாயிரம். திணைகொள் - மேம்பட்ட பொருளைக் கொண்ட. இரும்பனுவல் - பெருமைபெற்ற பாடல்கள். பெற்ற காதல் இன்அருள் ஆதரித்து - அன்புசெய்து அதனால் அவர்கள் அடைந்த உன்னுடைய இனிய திருவருளை விரும்பி. தெரியும் - தெரிந்து பாடுகிற.

மொய்த்த சீர்முந்நூற் றறுபது வேலி மூன்று நூறுவே தியரொடு நுனக்கு, ஒத்த பொன்மணிக் கலசங்க ளேந்தி ஓங்கு நின்றியூ ரென்றுனக் களிப்பப், பத்தி செய்தவப் பரசு ராமற்குப் பாதங் காட்டிய நீதிகண் டடைந்தேன், சித்தர் வானவர் தானவர் வணங்குஞ் செல்வத் தென்திரு நின்றியூ ரானே. ௩

இரவி நீள்சுட ரெழுவதன் முன்னம் எழுந்து தன் மூலைக் கலசங்க ளேந்திச், சுரபி பால்சொரிந் தாட்டிநின் பாதம் தொடர்ந்த வார்த்தை திடம்படக் கேட்டுப், பரவி உள் கிவன் பாசத்தை யறுத்துப் பரம வந்துநுன் பாதத்தை யடைந்தேன், நிரவி நித்திலம் அத்தகு செம்பொ னளிக்குந் தென்திரு நின்றியூ ரானே. ௪

வந்தோ ரிந்திரன் வழிபட மகிழ்ந்து வான நாடுநீ ஆள் கென அருளிச், சந்தி மூன்றிலுந் தாபரம் நிறுத்திச் சகளி செய்திறைஞ்(சு) அகத்தியர் தமக்குச், சிந்து மாமணி யணி திருப் பொதியிற் சேர்வு நல்கிய செல்வங்கண் டடைந்தேன், செந்தண் மாமலர்த் திருமகள் மருவுஞ் செல்வத் தென்திரு நின்றியூ ரானே. ௫

---

(௩) மொய்த்தசீர் - மிகுந்த சிறப்பினையுடைய. பரசுராமற்குப் பாதம் காட்டிய நீதி—புராணக் கதையைக் குறிக்கிறது. தானவர் - அசுரர். (௪) இரவி - சூரியன். நீள்சுடர்-நீண்ட கிரணங்கள். மூலைக் கலசம் - மூலையாகிய குடங்கள். சுரபி - காமதேனு. ஆட்டி - அபி ஷேகம்செய்து. திடம்பட - உறுதி உண்டாக. பரவி உள்கி வன் பாசத்தை அறுத்து - வாயினால் துதித்துக் காயத்தால் வணங்கி, மனத் தால் நினைந்து ஆகிய இம்மூவகை வழிபாட்டாலும் வேறு வகையினால் அறுப்பதற்குக் கூடாத வலிய மும்மலங்களாகிய பாசத்தை அறுத்து. நிரவி நித்திலம் அத்தகு செம்பொன்-வரிசையாகக் கட்டப்படுவதான முத்துக்களும், தகுதியுள்ள சிவந்த பொன்னும். (௫) சந்தி மூன்று - திரிசந்தியாகாலம் - காலை, உச்சி, மாலை. தாபரம் கோயில். "தழைத்த தோர் ஆத்தியின்கீழ் தாபரம் மணலாற் கூப்பி"—(அப்பர்.) சகளி செய்து இறைஞ்சி - சகளவுருவம் செய்து வணங்கி. சிந்துமாமணி அணிதிருப்பொதியில் - சிந்திக் கிடக்கின்ற பெரிய மாணிக்கங்களால் அழகுபெற்ற பொதிய மலையில்.

காது பொத்தரைக் கின்னர ருழுவை கடிக்கும் பன்ன கம் பிடிப்பருஞ் சீயம், கோதில் மாதவர் குழுவுடன் கேட்பக் கோல ஆல்நிழற் கீழறம் பகர, வேதஞ் செய்தவ ரெய்திய இன்பம் யானுங் கேட்டுநின் இணையடி யடைந்தேன், நீதி வேதியர் நிறைபுக ழுலகில் நிலவு தென்திரு நின்றியூ ரானே.

கோடு நான்குடைக் குஞ்சரம் குலுங்க நலங்கொள் பாதம்நின் றேத்திய பொழுதே, பீடு விண்மிசைப் பெருமையும் பெற்ற பெற்றி கேட்டுநின் பொற்கழ லடைந்தேன், பேடை மஞ்ஞையும் பிணைகளின் கன்றும் பிள்ளைக் கிள்ளையு மெனப்பிறை நுதலார், நீடு மாடங்கள் மாளிகை தோறும் நிலவு தென்திரு நின்றியூ ரானே. எ-அ-கூ-கய

திருச்சிற்றம்பலம்

## 19. திருநின்றியூர்

### பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

அற்றவ னாரடி யார்தமக்(கு) ஆயிழை பங்கினராம்
பற்றவ னீசன் பராபர னென்று பலர்விரும்பும்

(கூ) காது பொத்தர் ஐக்கின்னரர் - காதுகளைப் பொத்திக் கொண்டிருப்பவரும் அழகிய கின்னரர்கள். உழுவை - புலி. பன்னகம் - பாம்பு. பிடிப்பு அருஞ்சீயம் - பிடிப்பதற்கரிய சிங்கம். கோது-குற்றம். மாதவர் குழுவு - பெரிய தவசிக்கூட்டங்கள். அறம் பகர வேதம் செய்தவர் - தர்மத்தைக் கூறும்பொருட்டு வேதங்களைச் சிவபெருமான் (செய்து+அவர்) அருளிச் செய்து, அம்மாதவர். (அல்லது) தர்மத்தைச் சிவபெருமான் கூற, அதனைக்கேட்டு வேதங்களைச் (செய்+தவர்) தொடுத்துச் செய்த தவசிகள். (எ) கோடு நான்குடைக் குஞ்சரம் - நான்கு கொம்புகளை உடைய யானை, ஐராவதம். குலுங்க-உடல் குலுங்க. பீடு விண்மிசை - பெருமையுள்ள விண்ணுலகில். பெற்றி - செய்தி. பேடை மஞ்ஞை - பெண் மயில். பிணைகளின் கன்றும்-பெண் மான்களின் கன்றும். பிள்ளைக்கிள்ளை-கிளிப்பிள்ளை.

(க) அடியார் தமக்கு அற்றவனார் - அடியார்களுக்குப் பற்றுகளை ஒழித்தவர்.

கொற்றவ னார்குறு காதவ ரூர்நெடு வெஞ்சரத்தால்
செற்றவ னார்க்கிட மாவது நந்திரு நின்றியூரே. க

வாசத்தின் ஆர்மலர்க் கொன்றையுள் ளார்வடி வார்ந்தநீறு
பூசத்தி னார்புக லிந்நகர் போற்றுமெம் புண்ணியத்தார்
நேசத்தி னலென்னை யாளுங்கொண் டார்நெடு மாகடல்சூழ்
தேசத்தி னார்க்கிட மாவது நந்திரு நின்றியூரே. ௨

அங்கையின் மூவிலை வேலர் அமரர் அடிபரவச்
சங்கையை நீங்க அருளித் தடங்கடல் நஞ்சமுண்டார்
மங்கையோர் பாகம் மகிழ்ந்த விடம்வளம் மல்குபுனற்
செங்கயல் பாயும் வயல்பொலி யுந்திரு நின்றியூரே. ௩

ஆறுகந் தார்அங்கம் நான்மறை யாரெங்கு மாகிஅடல்
ஏறுகந் தார்இசை யேழுகந் தார்முடிக் கங்கைதன்னை
வேறுகந் தார்விரி நூலுகந் தார்பரி சாந்தமதாம்
நீறுகந் தாருறை யும்மிட மாந்திரு நின்றியூரே. ௪

வஞ்சங்கொண் டார்மனம் சேரகில் லார்நறு நெய்தயிர்பால்
அஞ்சுங்கொண் டாடிய வேட்கையி னாதி கைப்பதியே
தஞ்சங்கொண் டார்,தமக் கென்றும் இருக்கை சரணடைந்தார்
நெஞ்சங்கொண் டார்க்(கு) இட மாவது நந்திரு நின்றியூரே. ௫

ஆர்த்தவர் ஆடர வம்அரை மேற்புலி யீருரிவை
போர்த்தவ ரானையின் தோலுடல் வெம்புலால் கையகலப்
பார்த்தவர் இன்னுயிர் பார்படைத் தான்சிரம் அஞ்சிலொன்றைச்
சேர்த்தவ ருக்குறை யும்மிட மாந்திரு நின்றியூரே. ௬

---

(௨) 1-வது வரி. மணத்தால் நிரம்பிய கொன்றைமலரின் கண் உள்ளார். திருமேனி முழுமையும் திருநீற்றைப் பூசியவர். 2-வது வரி. சீகாழிப்பதியை மேன்மையாகப் போற்றுகின்ற எமது தருமவடிவினர். (௩) அங்கையின் மூஇலை வேலர் - மூன்று இலையோடு கூடிய சூலத்தை அழகிய கையில் ஏந்தியவர். சங்கை - அச்சம். (௪) பரி சாந்தமதாம் - உயர்ந்த வாசனைச் சாந்தாக. (௫) தஞ்சம் - பற்றுக் கோடு; சரண் அடைந்தார் நெஞ்சம் தமக்கு என்றும் இருக்கை கொண்டார். (௬) ஆனை.........கையகலப் பார்த்தவர் - கையினால் யானையின் உடற்றசையினின்றும் தோலை யுரித்தவர். இன் உயிர் பார் - இன் உயிரையும், உலகத்தையும். சேத்தவர் - சேதித்தவர்; கொய்தவர்.

தலையிடை யார்பலி சென்(று)அகந் தோறுந் திரிந்தசெல்வர்
மலையுடை யாளொரு பாகம்வைத் தார்கல்து தைந்தநன்னீர்
அலையுடை யார்சடை எட்டுஞ் சுழல அருநடம்செய்
நிலையுடை யாருறை யும்இட மாந்திரு நின்றியூரே. எ

எட்டுகந் தார்திசை ஏழுகந் தாரெழுத்(து) ஆறுமன்பர்
இட்டுகந் தார்மலர்ப் பூசையிச் சிக்கும் இறைவர்முன்னாள்
பட்டுகும் பாரிடைக் காலனைக் காய்ந்து பலியிரந்தூண்
சிட்டுகந் தார்க்கிட மாவதுநந்திரு நின்றியூரே. அ

காலமும் ஞாயிறு மாகிநின் றார்கழல் பேணவல்லார்
சீலமுஞ் செய்கையுங் கண்டுகப் பார்அடி போற்றிசைப்ப
மாலொடு நான்முக னிந்திரன் மந்திரத் தால்வணங்க
நீலநஞ் சுண்டவ ருக்கிட மாந்திரு நின்றியூரே. கூ

வாயார் மனத்தால் நினைக்கு மவருக் கருந்தவத்தில்
தூயார் சுடுபொடி யாடிய மேனியர் வானிலென்றும்
மேயார் விடையுகந் தேறிய வித்தகர் போந்தவர்க்குச்
சேயார் அடியார்க் கணியவ ரூர்திரு நின்றியூரே. கO

---

(எ) தலையிடை ஆர் பலி சென்று - தலை ஓட்டில் அரிய பிச்சைக்குச் சென்று. கல் துதைந்த.........சடை - கல்லின் வழியே பெருகி ஓடும் பரிசுத்தமான கங்காநதியின் அலையைச் சடையின்மீது உடையவர். (அ) திசை எட்டு - எட்டுத் திக்குகளும். எழுத்து ஏழ் உகந்தார் - ஏழு எழுத்துக்களாலாகிய சப்தசுரங்களை விரும்பியவர். ஆறும் அன்பர்.........சிட்டுகந்தார் - மலர்களால் மகிழ்ச்சியுடன் அர்ச்சித்து வணங்கும் மனச்சாந்தியை உடைய அன்பர்கள் பூசையை விரும்புகின்ற இறைவர், முன் காலத்தில் பூமியினிடத்து உதைபட்டு விழும்படி யமனைக் கோபித்து, பலி ஏற்றுக் கிடைத்த அற்ப உணவை விரும்பியவர். (கூ) கழல்பேண......போற்றிசைப்ப - தமது திருவடியின்மீது அன்புடைய அடியார் திருவடியைத் தொழுதுபாட, அவர்களுடைய சீலமும், செய்கையும் கண்டு உகப்பார். சீலம் - ஒழுக்கம். (கO) அருந்தவத்தில் வாய் ஆர் மனத்தால் நினைக்குமவர்க்குத் தூயார்- அரிய தவத்தின் பயனாக வாயார வாழ்த்தி மனத்தால் நினைப்பவர்களுக்கு (மலங்களை ஒழித்து) பரிசுத்தத்தைச் செய்பவர். "வாயாரத்தன்னடியே பாடுந் தொண்டர் இனத்தகத்தான்"—**அப்பர்**. (மனத்த.) சுடுபொடி......மேயார் - திருநீற்றைப் பூசிய மேனியர். சிதாகாயத்தில் எப்போதும் இருப்பவர். வித்தகர் - ஞானசொரூபர். தன்னைவிட்டு நீங்கியவர்க்குத் தூரத்திலிருப்பவர், அடியவர்க்குச் சமீபத்திலிருப்பவர்.

சேரும் புகழ்த்தொண்டர் செய்கை யருத்திரு நின்றியூரில்
சீருஞ் சிவகதி யாயிருந் தானைத் திருநாவலா
ரூர னுரைத்த உறுதமிழ் பத்தும்வல் லார்வினைபோய்ப்
பாரும் விசும்புந் தொழப்பர மன்னடி கூடுவரே. கக

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகங்கள் பாடினார்.

பிறகு அப்பதியை நீங்கி வழியில் திருநீடூரைப் பணியாமல், செல்லும்போது 'ஒப்பரிய உணர்வினால் நினைந்தருளி மெய்ப்பொருள் வண்டமிழ்மாலை' பாடி மீண்டும் திருநீடூரை அடைந்து,

## 56. திருநீடூர்

### பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

ஊர்வ தோர்விடை ஒன்றுடை யானை ஒண்ணு தல்த
னிக் கண்ணுத லானைக், கார தார்கறை மாமிடற் றானைக் கருத
லார்புரம் மூன்றெரித் தானை, நீரில் வாளை வரால்குதி கொ
ள்ளும் நிறைபு னற்கழ னிச்செல்வ நீடூர்ப், பாரு ளார்பர வித்
தொழ நின்ற பரம னைப்பணி யாவிட லாமே. க

துன்னு வார்சடைத் தூமதி யானைத் துயக்கு றுவகை
தோன்றுவிப் பானைப், பன்னும் நான்மறை பாடவல் லானைப்
பார்த்த னுக்கருள்செய்த பிரானை, என்னை இன்னரு ளெய்து
விப் பானை ஏதி லார்தமக் கேதிலன் றன்னைப், புன்னை
மாதவி போதலர் நீடூர்ப், புனித னைப்பணி யாவிட லாமே. உ

---

(கக) 2-வது வரி. சிறப்பையும் சிவகதி (முத்தி)யையும் கொடுப்பவனாய் இருந்தவனை. உறு - பயன் பொருந்திய.

(க) ஊர்வதோர் விடை ஒன்று - ஏறிச்செல்வதற்கு ஒப்பற்ற இடபம் ஒன்றை. கறை - நஞ்சு. பணியா விடலாமே-வணங்காதுவிடலாமோ? அவசியம் வணங்கவேண்டும். (உ) துன்னு - நெருங்கிய. வார் - நீண்ட. துயக்குறுவகை - தொடர்பு நீங்கும் வழி. ஏதிலார் - அயலார்.

கொல்லும் மூவிலை வேலுடை யானைக் கொடிய காலனை யுங்குமைத் தானை, நல்ல வாநெறி காட்டுவிப் பானை நாளும் நாம்உகக் கின்ற பிரானை, அல்ல லில்லரு ளேபுரி வானை ஆடும் நீர்வயல் சூழ்புனல் நீடூர்க், கொல்லை வெள்ளெரு தேறவல் லானைக் கூறி நாம்பணி யாவிட லாமே. ௩

தோடு காதிடு தூநெறி யானைத் தோற்ற முந்துறப் பாயவன் றன்னைப், பாடும் மாமறை பாடவல் லானைப் பைம் பொழிற் குயில் கூவிட மாடே, ஆடும் மாமயில் அன்னமோ டாட அலைபு னற்கழ னித்திரு நீடூர், வேட னாய பிரானவன் றன்னை விரும்பி நாம்பணி யாவிட லாமே. ௪

குற்ற மொன்றடி யார்இல ராகுற் கூடு மாறத னைக்கொ டுப் பானைக், கற்ற கல்வியி லும்மினி யானைக் காணப் பேணும வர்கேளி யானை, முற்ற ஐஞ்சுந் துறந்திருப் பானை மூவ ரின் முத லாயவன் றன்னைச், சுற்றுநீள்வயல் சூழ்திரு நீடூர்த் தோன்ற லைப்பணி யாவிட லாமே. ௫

காடி லாடிய கண்ணுத லானைக் கால னைக்கடிந் திட்ட பிரானை, பாடி யாடும் பரிசே புரிந்தானைப் பற்றி னோர்க்கேசூற் றம் மொழிப் பானைத், தேடி மாலயன் காண்பரி யானைச் சித்த முந்தெளி வார்க்கெளி யானைக், கோடி தேவர்கள் கும்பிடு நீடூர்க் கூத்த னைப்பணி யாவிட லாமே. ௬

விட்(டு) இலங்கெரி யார்கையி னானை வீடி லாத வியன்புக ழானைக், கட்டு வாங்கந் தரித்த பிரானைக் காதி லார்கன கக்

(௩) உகக்கின்ற - விரும்புகின்ற. அல்லல்இல் - (1) துன்பம் இல்லாமைக்கு ஏதுவாகிய; (2) துன்பத்திலும் அருளையே பாலிப்பானை (மறக்கருணை). (௪) தோற்றமும் துறப்பு(ம்) ஆயவன்-முதலும் முடிவு மாய் இருப்பவன். மாடே - பக்கமே. (௫) கூடும் ஆறு அதனை - தன்னை அடையும் நெறியை. முற்ற ஐஞ்சும்-ஐம்புலன்கள் முழுதும். (௬) பரிசே புரிந்தானை - தொழிலையே எனக்கு அருள் செய்தவனை. (எ) விட்டு இலங்கு - ஒளிவிட்டுப் பிரகாசிக்கும். வீடுஇலாத - அழிவு இல்லாத. வியன் - அகன்ற. கட்டு வாங்கம் - தண்டு, கட்டங்கம்.

குழை யானை, விட்டி லங்குபுரி நூலுடை யானை வீந்த வர்தலை யோடுகை யானைக், கட்டி யின்கரும் போங்கிய நீடூர்க் கண்டு நாம்பணி யாவிட லாமே. எ

மாய மாய மனங்கெடுப் பானை மனத்து ளேமதி யாயிருப் பானைக், காய மாயமும் ஆக்குவிப் பானைக் காற்று மாய்க்கன லாய்க்கழிப் பானை, ஒயு மாறுறு நோய்புணர்ப் பானை ஒல்லை வல்வினை கள்கெடுப் பானை, வேய்கொள் தோளுமை பாகனை நீடூர் வேந்த னைப்பணி யாவிட லாமே. அ

கண்ட மும்கறுத் திட்டபி ரானைக் காணப் பேணு மவர்க் கெளி யானைத், தொண்ட ரைப்பெரி தும்முகப் பானைத் துன்ப மும்துறந் தின்பினி யானைப், பண்டை வல்வினை கள்கெடுப் பானைப் பாக மாம்மதி யானவன் றன்னைக், கெண்டை வாளை கிளர்புனல் நீடூர்க் கேண்மை யாற்பணி யாவிட லாமே. கூ

அல்ல லுள்ளன தீர்த்திடு வானை அடைந்த வர்க்கமு தாயிடு வானைக், கொல்லை வல்லர வம்மசைத் தானைக் கோல மார்கரி யின்னுரி யானை, நல்ல வர்க்கணி யானவன் றன்னை நானுங் காதல்செய் கின்ற பிரானை, எல்லி மல்லிகை யேகமழ் நீடூ ரேத்தி நாம்பணி யாவிட லாமே. கo

பேரோ ராயிர மும்முடை யானைப் பேசினுற் பெரி தும்மினி யானை, நீரூர் வார்சடை நின்மலன் றன்னை நீடூர் நின்று கந்திட்ட பிரானை, ஆரூ ரன்னடி காண்பதற் கன்பாய் ஆத

---

(எ) கட்டிஇன் கரும்பு - கற்கண்டைத்தரும் இனிய கரும்பு.
(அ) மாயம் ஆய - வஞ்சகம் பொருந்திய. காயம் மாயம் - உடம்பாகிய பொய்ப் பொருள். ஓயும் ஆறு உறு நோய் புணர்ப்பானை - தளர்ச்சி அடையும் விதமாக வந்து அடைகிற பிணியைச் சேர்ப்பிப்பவனை.
(கூ) உகப்பானை-விரும்புபவனை. துன்பத்தை ஒழித்து இன்பம் தரும் இனியவனை. பாகமாம் மதியானவன் - பிளவாகிய (பிறைச்) சந்திரனைத் தரித்தவன். கேண்மையால் - விருப்பத்தால், அன்பினால்.
(கo) அணியானவன் - சமீபத்தில் இருப்பவன்.

ரித்தழைத் திட்டவிம் மாலை, பாரூ ரும்பர வித்தொழ வல்லார்
பத்த ராய்முத்தி தாம்பெறு வாரே. கக

திருச்சிற்றம்பலம்

'மடலாரும் புனல்நீேர் மருவினர் தாள்வணங்காது விடலாமே எனுங்காதல் விருப்புறும் அத்திருப்பதிகம்' பாடி, சூலப்படையாரை வணங்கி, திருப்புன்கூர் அணைந்திறைஞ்சித் திருக்கோலக்காவை நெருங்கியபோது சிவபெருமான் எதிர்காட்சி கொடுத்தருள, பொங்கு விருப்பால் தொழுது,

திருஞான சம்பந்தர் திருக்கைக ளால்ஒற்றிப்
பெருகார்வத் துடன்பாடப் பிஞ்ஞகனார் கண்டிரங்கி
அருளாலே திருத்தாளம் அளித்தபடி சிறப்பித்துப்
பொருள்மாலைத் திருப்பதிகம் பாடியே போற்றிசைத்தார்.

—பெ. ஏ. 154.

## 62. திருக்கோலக்கா

### பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

புற்றில் வாள அர(வு) ஆர்த்த பிரானைப் பூத நாதனைப் பாதமே தொழுவார், பற்று வான்துணை யெனக்கெளி வந்த பாவ நாசனை மேவரி யானை, முற்ற லார்திரி புரமொரு மூன்றும் பொன்ற வென்றிமால் வரைஅரி அம்பாக், கொற்ற வில் அங்கை ஏந்திய கோனைக் கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. க

---

(க) புற்றில் வாள் அரவு - புற்றில் வாழும் தன்மை உடைய (மாணிக்கம் உடைமையால்) பிரகாசம் பொருந்திய பாம்பு. பற்றுவான் துணை - பற்றிக் கொண்டிருக்கும் பெரிய துணையாய் இருப்பவனை. மேவு அரியான் - அடைதற்கு அரியவன். முற்றலார் - பகைவர். அரியை அம்பாகவும், மால்வரையைக் கொற்ற (வெற்றி தரும்) வில்லாகவும்.

அங்கம் ஆறும்மா மறையொரு நான்கும் ஆய நம்பனை வேய்புரை தோளி, தங்கு மாதிரு வுருவுடை யானைத் தழல்ம திச்சடை மேற்புனைந் தானை, வெங்கண் ஆனையின் ஈருரி யானை விண்ணு ளாரொடு மண்ணுளார் பரசும், கொங்கு லாம்பொ ழிற் குரவெறி கமழுங் கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. உ

பாட்ட கத்(து)இசை யாகிநின் றானைப் பத்தர் சித்தம் பரிவினி யானை, நாட்ட கத்தேவர் செய்கையு ளானை நட்ட மாடியை நம்பெரு மானைக், காட்ட கத்துறு புலியுரி யானைக் கண்ணோர் மூன்றுடை அண்ணலை அடியேன், கோட்ட கப்புன லார்செழுங் கழனிக் கோலக் காவினிற் கண்டு கொண் டேனே. ௩

ஆத்தம் என்றெனை ஆளுகந் தானை அமரர் நாதனைக் குமரனைப் பயந்த, வார்த்த யங்கிய முலைமட மானை வைத்து வான்மிசைக் கங்கையைக் கரந்த, தீர்த்த னைச்சிவ னைச்செழுந் தேனைத் தில்லை யம்பலத் துள்நிறைந் தாடும், கூத்த னைக்குரு மாமணி தன்னைக் கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. ௪

அன்று வந்தெனை அகலிடத் தவர்முன் ஆள தாகஎன்(று) ஆவணங்காட்டி, நின்று வெண்ணெய்நல் லூர்மிசை யொளித்த நித்தி லத்திரள் தொத்தினை முத்திக், கொன்றி ருன்றனை உம்பர் பிரானை உயரும் வல்லர ணங்கெடச் சீறுங், குன்ற

(உ) வேய்புரை - மூங்கிலை ஒத்த. தழல் - பிரகாசிக்கும். வெங்கண் - கோபத்தைக் காட்டும்கண். பரசும் - வழிபடும். கொங்கு - மகரந்தம். குரவெறி - குராமலர்களின் வாசனை. (௩) 1-வது வரி. பத்தர்கள் மனத்தில் எழுந்த அன்பினால் இன்ப உணர்ச்சியாய் இருப்பவனை. நாட்டகத் தேவர் - அந்தணர். கோடு அகப்புனல் ஆர் - கரையினுள்ளே நிறைந்த நீரையுடைய. (௪) ஆத்தம் - சிநேகம். தீர்த்தன் - பரிசுத்தன். குருமாமணி - ஒளியுள்ள மேன்மையான மாணிக்கம். "கோலக்காவிற் குருமணியை"—**அப்பர்**. (௫) 1-வது வரி. அடிமை ஆகுக என்று அடிமை ஓலையைக்காட்டி. 2, 3 வது வரி. முத்துத் திரளால் ஆகிய கொத்தினை. முத்தி அளித்தற்கென்றே ஒருப்பட்டிருப்பவனை.

வில்லியை மெல்லிய லுடனே கோலக்காவினிற் கண்டுகொண் டேனே. ரு

காற்றுத் தீப்புன லாகிநின் ருனைக் கடவு ளைக்கொடு மால்விடை யானை, நீற்றுத் தீயுரு வாய்நிமிர்ந் தானை நிரம்பு பல்கலை யின்பொரு ளாலே, போற்றித் தன்கழல் தொழுமவ னுயிரைப் போக்கு வானுயிர் நீங்கிடத் தாளால், கூற்றைத் தீங்குசெய் குமைகழ லானைக் கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. சு

அன்ற யன்சிரம் அரிந்ததிற் பலிகொண் டமர ருக்கருள் வெளிப்படுத் தானைத், துன்று பைங்கழ லிற்சிலம் பார்த்த சோதி யைச்சுடர் போலொளி யானை, மின்த யங்கிய இடை மட மங்கை மேவும் ஈசனை வாசமா முடிமேல், கொன்றை யஞ்சடைக் குழகனை யழகார் கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. எ

நாளும் இன்னிசை யால்தமிழ் பரப்பும் ஞான சம்பந்த னுக்(கு)உல கவர்முன், தாளம் ஈந்(து)அவன் பாடலுக் கிரங்குந் தன்மை யாளனை என்மனக் கருத்தை, ஆளும் பூதங்கள் பாடநின் ருடும் அங்க ணன்றனை யெண்கணம் இறைஞ்சுங், கோளி லிப்பெருங் கோயிலுள் ளானைக் கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. அ

அரக்கன் ஆற்ற லழித்(து) அவன் பாட்டுக்(கு) அன்றி ரங்கிய வென்றியி னானைப், பரக்கும் பாரளித் துண்டுகந் தவர்கள் பரவி யும்பணி தற்கரி யானைச், சிரக்கண் வாய்செவி மூக்குயர் காய மாகித் தீவினை தீர்த்தஎம் மானைக், குரக்கி

(சு) நீற்றுத்தீ - நீறுபூத்த நெருப்பு. (எ) 2-வது வரி. பசிய திருவடிகளில் நெருங்கிய சிலம்புகள் ஒலிக்கின்ற. (அ) என்மனக் கருத்தை - என் மனத்திலுள்ள கருத்தாயிருப்பவனை. "மனத்துள் நின்ற கருத்தானை"—**அப்பர்.** (வாயானை.) (கூ) 2-வது வரி. பரந்த உலகத்தைப் படைத்து உகந்த பிரமனும் உண்டு உகந்த திருமாலும் துதித்தற்கும், வணங்குதற்கும் அரியவனை. 3-வது வரி. பஞ்சேந்திரியங்களோடு கூடிய சரீரத்தைக் கொடுத்து அதன் மூலமாய்த் தீவினையைத் தீர்த்த எமது பெருமானை. இறைவன் வினைதீர்த்தற் பொருட்டுத் தநுகரணங்களைத் தருகின்றான்.

னம்குதி கொண்(டு)உகள் வயல்சூழ் கோலக் காவினிற்
கண்டுகொண் டேனே. சு

கோட ரம்பயில் சடையுடைக் கரும்பைக் கோலக் காவுளம் மானைமெய்ம் மானப், பாட ரங்குடி அடியவர் விரும்பப் பயிலும் நாவலா ரூரன்வன் தொண்டன், நாடி ரங்கிமுன் னறியுமந் நெறியால் நவின்ற பத்திவை விளம்பிய மாந்தர், கா(டு)அ ரங்கென நடம்நவின் றான்பாற் கதியு மெய்துவர் பதியவர்க் கதுவே. க0

திருச்சிற்றம்பலம்

பிறகு சீகாழியை வலங்கொண்டு தாழ்ந்திறைஞ்சி, நாவார் முத்தமிழ்விரகர் நற்பதங்கள் பரவிப்போய், பரவை கொழுநர் மிக்க பசியினாலும் தாகத்தினாலும் வருந்தித் திருக்குருகாவூரைக் குறுகியபோது, அவர் வரும் வழியில் மலர்த்தடாகம் போன்ற பந்தர் ஒன்றை அமைத்துத் தண்ணீரும் பொதி சோறும் வைத்துக்கொண்டு சிவபெருமான் மறை வேதியராய் அருள்வேடங் கொண்டு வழிபார்த்திருக்க, அவ்வழி வந்துகொண்டிருந்த தம்பிரான் தோழர் திருத்தொண்டர்களுடன் அப்பந்தரிடைப் புகுந்து, மறை வேதியர் தந்த பொதி சோற்றை உண்டு, ஏலநறுங்குளிர் தண்ணீரைக் குடித்து இளைப்புத் தீர்ந்து,

**சங்கரனுர் திருவருள்போல் தண்ணீரின் சுவை ஆர்ந்து**
**பொங்கிவரும் ஆதரவால் அவர்நாமம் புகழ்ந்தேத்தி**
அங்கயர்வால் பள்ளிஅமர்ந் தருகணைந்தார் களுந்துயிலக்
கங்கைசடைக் கரந்தார்அப் பந்தரொடுந் தாம்கரந்தார்.

—பெ. ஏ. 162.

திருநாவலூர் மன்னர் விழித்தெழுந்து மறையவரையும்,பந்தரையும் காணுமையால் வேதியராய் வந்தவர் சிவபெருமானே என உணர்ந்து,

---

(க0) கோடரம்பயில் - மயிர்ச்சாந்து அணிந்த. மெய்ம்மானப் பாடரங்குடி - மெய்மானம் பாடர் அம்குடி அடியவர் - உண்மையான அன்புடன் பாடும்படியான அழகிய கூட்டத்தவராகிய அடியார்கள். நாடு இரங்கி முன்அறியும் அந்நெறியால் நவின்றபத்து - நாட்டிலுள்ளவர் மனம் உருகி அறியும்படியான வழியைக் காட்டுவதற்குச் சொன்ன பாடல்கள் பத்து. அரங்கு - நடனசாலை.

# 29. திருக்குருகாவூர்

## பண் - நட்டராகம்

*திருச்சிற்றம்பலம்*

இத்தனை யாமாற்றை அறிந்திலே னெம்பெருமான்
பித்தரே யென்றும்மைப் பேசுவார் பிறரெல்லாம்
முத்தினை மணிதன்னை மாணிக்கம் முளைத்தெழுந்த
வித்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே. க

ஆவியைப் போகாமே தவிர்த்தென்னை ஆட்கொண்டாய்
வாவியிற் கயல்பாயக் குளத்திடை, மடைதோறுங்
காவியுங் குவளையுங் கமலஞ்செங் கழுநீரும்
மேவிய குருகாவூர் வெள்ளடை நீயன்றே. உ

பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவாய்
ஓடுநன் கலனாக உண்பலிக்(கு) உழல்வானே
காடுநல் லிடமாகக் கடுவிருள் நடமாடும்
வேடனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே. ங

வெப்பொடு பிணியெல்லாந் தவிர்த்தென்னை ஆட்கொண்டாய்
ஒப்புடை யொளிநீலம் ஓங்கிய மலர்ப்பொய்கை
அப்படி யழகாய அணிநடை மடவன்னம்
மெய்ப்படு குருகாவூர் வெள்ளடை நீயன்றே. ச

வரும்பழி வாராமே தவிர்த்தென்னை ஆட்கொண்டாய்
சுரும்புடை மலர்க்கொன்றைச் சுண்ணவெண் ணீற்றானே
அரும்புடை மலர்ப்பொய்கை அல்லியும் மல்லிகையும்
விரும்பிய குருகாவூர் வெள்ளடை நீயன்றே. ரு

---

(க) 1-வது வரி. இப்படியாக எளிவரும் தன்மையை. மாணிக்கம் முளைத்தெழுந்த வித்தனே-மாணிக்கம் முளைத்து எழுவதற்குக்காரண மாய் உள்ள வித்துப்போன்றவனே. வெள்ளடை - திருக்குருகாவூர் திருக்கோயிலுக்குப் பெயர். இவ்விடத்தில் அந்தத் திருக்கோயிலில் வீற்றிருக்கும் சிவபெருமானைக் குறிக்கிறது. (உ) தடாகங்களிலும் குளங்களிலும் கயல்கள் பாய. (ங) வேடன் - வேடத்தை உடையவன். (ச) வெப்பு - சுரம். மெய்ப்படு - நிலைபெற்ற.

பண்ணிடைத் தமிழொப்பாய் பழத்தினிற் சுவையொப்பாய்
கண்ணிடை மணியொப்பாய் கடுவிருட் சுடரொப்பாய்
மண்ணிடை யடியார்கள் மனத்திடர் வாராமே
விண்ணிடைக் குருகாவூர் வெள்ளடை நீயன்றே. சு

போந்தனை தரியாமே நமன்தமர் புகுந்தென்னை
நோந்தனை செய்தாலும் நுன்னல தறியேன்நான்
சாந்தனை வருமேலுந் தவிர்த்தென்னை யாட்கொண்ட
வேந்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே. எ

மலக்கில்நின் அடியார்கள் மனத்திடை மால்தீர்ப்பாய்
சலச்சலம் மிடுக்குடைய தருமனார் தமரென்னைக்
கலக்குவான் வந்தாலுங் கடுந்துயர் வாராமே
விலக்குவாய் குருகாவூர் வெள்ளடை நீயன்றே. அ

படுவிப்பாய் உனக்கேயாட் பலரையும் பணியாமே
தொடுவிப்பாய் துகிலொடுபொன் தோலுடுத்(து) உழல்வானே
கெடுவிப்பாய் அல்லாதார் கேடிலாப் பொன்னடிக்கே
விடுவிப்பாய் குருகாவூர் வெள்ளடை நீயன்றே. கூ

வளங்கனி பொழில்மல்கு வயலணிந் தழகாய
விளங்கொளி குருகாவூர் வெள்ளடை யுறைவானை

---

(சு) பண் இடைத் தமிழ் ஒப்பாய் - பண் அமைப்போடு கூடிய தமிழ்ப்பாடலை ஒப்பாய். சுடர் - ஒளி. (எ) 1-2-வது வரி. மரண காலத்தில் நான் சகிக்கமுடியாதபடி எமதூதர்கள் என்னை வருத்தினாலும், உன்னை அன்றி வேறொன்றையும் உணரமாட்டேன். 3-வது வரி. இனிமேல் வரக்கடவதாகிய சாதலைத் தவிர்த்து. (அ) மலக்கு இல் - (எப்படிப்பட்ட துன்பம் வந்தாலும்) கலங்குதல் இல்லாத. மால் - மயக்கம். சலச்சலம் மிடுக்கு - மிக்க கோபமும் வலிமையும். (கூ) பலரையும் (நான்) பணியாமல் உனக்கே தொண்டு செய்யும்படி செய்வாய். ஆடையோடு பொன்னையும் எனக்குப் பொருந்தச் செய்வாய், உனக்கு ஆட்படாதவரைக் கெடும்படி செய்வாய், நாசமில்லாத உன் பொன் அடிக்கு என்னைச் சேர்ப்பாய்.

இளங்கிளை ஆரூரன் வனப்பகை யவளப்பன்
உளங்குளிர் தமிழ்மாலை பத்தர்கட் குரையாமே. க0

திருச்சிற்றம்பலம்

என்னும் 'மெய்த்தகைய திருப்பதிகம்' பாடிக் குருகாவூர் கோயிலுக்குச் சென்று சிவபெருமானை வணங்கிப் 'பருகா இன்னமுதத்தைக் கண்களாற் பருகினார்.'

பிறகு அவ்வூரை விட்டு நீங்கி, மின்னார் செஞ்சடை முடியார் விரும்புமிடம் பல வணங்கிக் கழிப்பாலை தொழுதேத்தி,

## 23. திருக்கழிப்பாலை

### பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

செடியேன் தீவினையில் தடுமாற்றங் கண்டாலும்
அடியான் ஆவவென தொழிதல் தகவாமே
முடிமேல் மாமதியும் அரவுமு டன்துயிலும்
வடிவே தாமுடையார் மகிழுங்கழிப் பாலையதே. க

எங்கே னுமிருந்துன் அடியேன்உனை நினைந்தால்
அங்கே வந்தென்னொடும் உடனாகி நின்றருளி
இங்கே என்வினையை அறுத்திட் டெனையாளுங்
கங்கா நாயகனே கழிப்பாலை மேயானே. உ

---

(க0) 3-4 வது வரி. இளங்கிள்ளை (கிளி) போன்ற வனப்பகையின் தந்தையாகிய ஆரூரன் சொன்ன உள்ளத்தைக் குளிர்விக்கும் தன்மை வாய்ந்த தமிழ்மாலை பத்தர்களுக்கு ஓதுதற்கு உரியதாகும்.

(க) செடியேன் - குற்றத்தையுடையேன். தீவினையில் தடுமாற்றம் - தீவினையினால் கலங்குதல். 2-வது வரி. ஐயோ இவன் என் அடியவன் என்று இரங்கித் தடுமாற்றத்தைத் தீர்க்காதொழிதல் தகுதியாமோ.

ஒறுத்தாய் நின்னருளில் அடியேன் பிழைத்தனகள்
பொறுத்தாய் எத்தனையும் நாயேனைப் பொருட்படுத்திச்
செறுத்தாய் வேலைவிடம் மறியாம லுண்டுகண்டம்
கறுத்தாய் தண்கழனிக் கழிப்பாலை மேயானே. ௩

சுரும்பார் விண்டமல ரவைதூவித் தூங்குகண்ணீர்
அரும்பா நிற்குமனத் தடியாரோடும் அன்புசெய்வன்
விரும்பே னுன்னையல்லா லொருதெய்வம் என்மனத்தால்
கரும்பா ருங்கழனிக் கழிப்பாலை மேயானே. ௪

ஒழிப்பாய் என்வினையை உகப்பாய் முனிந்தருளித்
தெழிப்பாய் மோதுவிப்பாய் விலையாவ ணமுடையாய்
கழிப்பால் கண்டடங்கச் சுழியேந்து மாமறுகிற்
கழிப்பா லைமருவுங் கனலேந்து கையானே. ௫

ஆர்த்தாய் ஆ(டு)அரவை அரையார் புலிஅதள்மேற்
போர்த்தாய் யானையின்தோ லுரிவை புலால்நாறக்
காத்தாய் தொண்டுசெய்வார் வினைக ளவைபோகப்
பார்த்தா னுக்கிடமாம் பழியில்கழிப் பாலையதே. ௬

பருத்தாள் வன்பகட்டைப் படமாகமுன் பற்றிஅதள்
உரித்தாய் யானையின்தோல் உலகந்தொழும் உத்தமனே
எரித்தாய் முப்புரமும் இமையோர்கள் இடர்கடியுங்
கருத்தா தண்கழனிக் கழிப்பாலை மேயானே. ௭

(௩) 1-2-3 வது வரி. உன் அருளினால் தண்டித்தாய். அடியேன் செய்த பிழைகள் எல்லாவற்றையும் பொறுத்தாய். நாய்த்தன்மை போன்ற என்னைப் பொருட்படுத்தி எனது குற்றங்களைக் களைந்தாய். கடலில் எழுந்த நஞ்சை உண்டு அதனால் சாகாமல் கண்டம் கறுத்தாய். (௪) சுரும்பு ஆர் விண்ட மலர் அவை தூவி-வண்டுகள் மொய்க்கும் புதிய மலர்ந்த மலர்களால் அர்ச்சித்து. தூங்கு-தொங்கி நிற்கின்ற. அரும்பா நிற்கும் - சுரந்து நிற்கின்ற. (௫) முனிந்தருளித் தெழிப்பாய் - உன் கருணையினால் கோபித்து அதட்டுவாய். மோதுவிப்பாய் - அடிப்பாய். விலை ஆவணம் - அடிமைச் சீட்டு. 3-வது வரி. நீர்ச்சுழிகளையுடைய உப்பாறு பக்கத்திலுள்ள உப்பளங்களில் பெறப்படும் கண்டாகிய உப்பு முதலாக விற்கப்படும் பெரியகடைவீதிகளையுடைய. (௭)1-2-வது வரி. முற்காலத்தில் பருத்த அடியையுடைய வலிய யானையைப் பிடித்துப் போர்வை ஆகும்படி அதன் தோலை உரித்தாய். கடியும் - போக்கும்.

*படைத்தாய் ஞாலமெலாம் படர்புன் சடை எம்பரமா*
*உடைத்தாய் வேள்வி தனை உமையாளையோர் கூறுடையாய்*
*அடர்த்தாய் வல்லரக்கன் தலைபத்தொடு தோள்நெரியக்*
*கடற்சா ருங்கழனிக் கழிப்பாலை மேயானே.* அ

பொய்யா நாவதனாற் புகழ்வார்கள் மனத்தினுள்ளே
மெய்யே நின்றெரியும் விளக்கேயொத்த தேவர்பிரான்
*செய்யா னுங்கரிய நிறத்தானுந் தெரிவரியான்*
*மையார் கண்ணியொடு மகிழ்வான்கழிப் பாலையதே.* கூ

*பழிசே ரில்புகழான் பரமன் பரமேட்டி*
*கழியார் செல்வமல்குங் கழிப்பாலை மேயானைத்*
*தொழுவான் நாவலர்கோன் ஆரூரன் உரைத்ததமிழ்*
வழுவா மாலைவல்லார் வானோருல காள்பவரே. கo

*திருச்சிற்றம்பலம்*

*என்னுந் திருப்பதிகம் பாடி, தென்னாவலூர் மன்னர்* **திருத்தில்லை** *வந்து மன்றுள் எடுத்த சேவடி இறைஞ்சி,* **திருத்தினை நகரினை** *அடைந்து, அங்கு அமர்ந்துள்ள சிவக்கொழுந்தினைப் பணிந்து,* **திருநாவலூரில்** *உள்ள தொண்டர்களும் பிறரும் ஊரை அலங் கரித்து எதிர்கொள்ளக் கோயிலை அடைந்து, முதல்வனார் திருமுன்பு எய்தி, 'ஆவியினும் அடைவுடையார் அடிக்கமலத்து அருள்போற்றி'*

## 17. திருவெண்ணெய்நல்லூரும் திருநாவலூரும்

**பண் - நட்டராகம்**

*திருச்சிற்றம்பலம்*

*கோவலன் நான்முகன் வானவர் கோனுங்குற் றேவல்செய்ய*
*மேவலர் முப்புரம் தீயெழு வித்தவன் ஓரம்பினால்*

---

(அ) அடர்த்தாய் - நெருக்கினாய். (கூ) செய்யான் - பிரமன். கரிய நிறத்தான் - திருமால். (கo) பழிசேர் இல் - பழி சேராத. கழி ஆர் - மிகப் பெருகிய.

(க) கோவலன் - திருமால். மேவலர் - பகைவர்.

ஏவல னார்வெண்ணெய் நல்லூரில் வைத்தென்னை ஆளுங்கொ
நாவல னார்க்கிட மாவது நந்திரு நாவலூரே. [ண்ட

தன்மையி னாலடி யேனைத்தா மாட்கொண்ட நாட்சபை
முன், வன்மைகள் பேசிட வன்றொண்ட னென்பதோர்வாழ்வு
தந்தார், புன்மைகள் பேசவும் பொன்னைத்தந் தென்னைப்போ
கம்புணர்த்த, நன்மையி னார்க்கிட மாவது நந்திரு நாவலூரே.

வேகங்கொண் டோடிய வெள்விடை ஏறியோர் மெல்லி
யலை, ஆகங்கொண் டார்வெண்ணெய் நல்லூரில் வைத்தென்னை
ஆளுங் கொண்டார், போகங்கொண் டார் *கடற் கோடியின்
மோடியைப் பூண்பதாக, நாகங்கொண் டார்க்கிட மாவது நந்
திரு நாவலூரே. ௩

அஞ்சுங்கொண் டாடுவர் ஆவினிற் சேவினை ஆட்சி
கொண்டார், தஞ்சங்கொண் டார்அடிச் சண்டியைத் தாமென
வைத்துகந்தார், நெஞ்சங்கொண் டார்வெண்ணெய் நல்லூரில்
வைத்தென்னை ஆளுங்கொண்டு, நஞ்சங்கொண் டார்க்கிட
மாவது நந்திரு நாவலூரே. ௪

---

(௧) ஏ வலனார் - அம்பு விடுவதில் வல்லவர். (௨) தன்மையினால்-தன் கருணையினால். (௩) ஆகம் கொண்டார் - தமது திருமேனியில் வைத்துக்கொண்டார். போகங்......மோடியை - கோடிக்குழகர் என்னும் தலத்தில் துர்க்கையைப் போகத்திற்கு உரியவளாக்கிக் கொண்டார். (௪) 1-வது வரி. பசுவினிடத்துண்டாகிய பஞ்சகவ்வியத்தினால் அபிஷேகம் செய்து கொள்வார். எருதை வாகனமாகக் கொண்டார். 2-வது வரி. சண்டியைத் தஞ்சம்கொண்டார் - சண்டேச நாயனாரைத் தமக்கு அடைக்கலமாகக் கொண்டார். தாமென வைத்து உகந்தார் நெஞ்சம் கொண்டார் - தம்மைப்போல சிவபெருமானை நேசிப்பவருடைய நெஞ்சைத் தமக்கு இடமாகக் கொண்டார். "என்னில் ஆரும் எனக் கினியாரிலை, என்னிலும் இனியான் ஒருவன் உளன்"—அப்பர்.

*கடற்கோடி யென்பது - கோடிக்குழக ரென்னுந் தலம். மோடி என்பது அங்ஙனங் கோயில்கொண்டிருக்குந் துர்க்கை.

உம்பரார் கோனைத்திண் தோள்முரித் தார்உரித் தார்க
ளிற்றைச், செம்பொனார் தீவண்ணர் தூவண்ண நீற்றர்ஓர்
ஆவணத்தால், எம்பிரா னார்வெண்ணெய் நல்லூரில் வைத்
தென்னை ஆளுங்கொண்ட, நம்பிரா னார்க்கிட மாவது நந்திரு
நாவலூரே. ரு

கோட்டங்கொண் டார்குட மூக்கிலுங் கோவலுங் கோத்
திட்டையும், வேட்டங்கொண் டார்வெண்ணெய் நல்லூரில்
வைத்தென்னை ஆளுங்கொண்டார், ஆட்டங்கொண் டார்தில்
லைச் சிற்றம்பலத்தே அருக்கனைமுன், நாட்டங்கொண் டார்க்
கிட மாவது நந்திரு நாவலூரே. சு

தாயவ ளாய்த்தந்தை யாகிச், சாதல் பிறத்தலின்றிப் [த்த
போயக லாமைத்தன் பொன்னடிக் கென்னைப் பொருந்தவை
வேயவ னார்வெண்ணெய் நல்லூரில் வைத்தென்னை யாளுங்
நாயக னார்க்கிட மாவது நந்திரு நாவலூரே. [கொண்ட

வாயாடி மாமறை ஓதியோர் வேதிய னாகிவந்து
தீயாடி யார்சினக் கேழலின் பின்சென்றோர் வேடுவனாய்
வேயாடி யார்வெண்ணெய் நல்லூரில் வைத்தென்னை ஆளுங்
நாயாடி யார்க்கிட மாவது நந்திரு நாவலூரே. [கொண்ட

படமாடும் பாம்பணை யானுக்கும் பாவைநல் லாள்தனக்கும்
வடமாடு மால்விடை ஏற்றுக்கும் பாகனாய் வந்தொருநாள்

---

(ரு) உம்பரார்கோன் - இந்திரன். (சு) கோட்டம் - திருக்கோவில். வேட்டம்கொண்டு ஆர் - விருப்பங்கொண்டு அரிய. நாட்டம்-கண். (எ) வேயவனார் - மூங்கிலில் இருப்பவர். (அ) வாயாடி - வாய் திறந்து. வேயாடியார் - வேட்டை ஆடுபவர். நாயாடியார் - பேயோடு ஆடுபவர். (கூ) பாகன் - ஒரு பாகத்தில் உடையவன் என்றும் வாகனமாகக்கொண்டு செலுத்துவோன் என்றும் பொருள்படும். பாம்பணையான் - சர்ப்ப சயனன், திருமால். இவருக்குப் பாகன் என்பது இரண்டு பொருளிலும், உமாதேவிக்கு முதற்பொருளிலும் விடை ஏற்றுக்கு இரண்டாவது பொருளிலும் வருதல் காண்க. வடம் ஆடும் மால்விடை ஏறு - (1) ஆலிலைமேல் பள்ளிகொண்ட திருமாலாகிய இடபம். (2) கழுத்தில் கயிறு பூண்ட பெரிய இடபம்.

இடமாடி யார்வெண் ணெய் நல்லூரில் வைத்தென்னை ஆளுங்
கொண்டமாடி யார்க்கிட மாவது நந்திரு நாவலூரே.

மிடுக்குண்டென் றோடியோர் வெற்பெடுத் தான்வலி
யைநெரித்தார், அடக்கங்கொண் டாவணங் காட்டிநல் வெண்
ணெயூர் ஆளுங்கொண்டார், தடுக்கவொண் ணாததோர் வேழ
த்தி னையுரித் திட்டுமையை, நடுக்கங்கண் டார்க்கிட மாவது
நந்திரு நாவலூரே. ௧0

நாதனுக் கூர்நமக் கூர்நர சிங்க முனையரையன்
ஆதரித்(து)ஈசனுக் காட்செயு மூர்அணி நாவலூரென்(று)
ஓதநற் றக்கவன் தொண்டன் ஆரூரன் உரைத்ததமிழ்
காதலித் துங்கற்றுங் கேட்பவர் தம்வினை கட்டறுமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடி வணங்கிப் பிறபதியும் தொழுது அடியார்
கள் எதிர்கொள்ளத் திருக்கழுக்குன்றத்தை அடைந்து,

## 18. திருக்கழுக்குன்றம்

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

கொன்று செய்த கொடுமை யாற்பல சொல்லவே
நின்ற பாவ வினைகள் தாம்பல நீங்கவே
சென்று சென்று தொழுமின் தேவர் பிரானிடம்
கன்றி னோடு பிடிசூழ் தண்கழுக் குன்றமே. ௧

(௯) இடமாடியார் - இடப்பாகம் கொண்டவர் என்றும் இடத்
தில் ஆடியவர் என்றும் பொருள்படும். (௧0) மிடுக்கு - வலிமை. அடக்
கம் கொண்டு-சிவபெருமான் தம்முடைய சொரூபத்தைக் காட்டாமல்
கிழவேதியராய்வந்து. (௧௧) ஓத நற்றக்க - சொல்லுதற்கு நல்லதகுதி
யுடை (திருநாவலூரில்).

(௧) பல சொல்ல நின்ற பாவவினைகள் தாம்பல - உலகத்தார்
பலவிதமாக இழித்துக் கூறும்படி பொருந்திய பாவத்தினால் வந்த
பல தீவினைகள். ஏ - அசை.

இறங்கிச் சென்று தொழுமின் இன்னிசை பாடியே
பிறங்கு கொன்றைச் சடைய னெங்கள் பிரானிடம்
நிறங்கள் செய்த மணிகள் நித்திலங் கொண்டிழி
கறங்கு வெள்ளை யருவித் தண்கழுக் குன்றமே. உ

நீள நின்று தொழுமின் நித்தலும் நீதியால்
ஆளும் நம்ம வினைகள் அல்கி யழிந்திடத்
தோளு மெட்டு முடைய மாமணிச் சோதியான்
காள கண்ட னுறையுந் தண்கழுக் குன்றமே. ங

வெளிறு தீரத் தொழுமின் வெண்பொடி யாடியை
முளிறி லங்கு மழுவாளன் முந்தி உறைவிடம்
பிளிறு தீரப் பெருங்கைப் பெய்மதம் மூன்றுடைக்
களிறி னோடு பிடிசூழ் தண்கழுக் குன்றமே. ச

புலைகள் தீரத் தொழுமின் புன்சடைப் புண்ணியன்
இலைகொள் சூலப் படைய னெந்தைபி ரானிடம்
முலைக ளுண்டு தழுவிக் குட்டியொ டுமுசுக்
கலைகள் பாயும் புறவில் தண்கழுக் குன்றமே. ரு

மடமு டைய அடியார் தம்மனத் தேயுற
விடமு டைய மிடறன் விண்ணவர் மேலவன்
படமு டைய அரவன் தான்பயி லும்மிடம்
கடமு டைய புறவிற் றண்கழுக் குன்றமே. சு

ஊன மில்லா அடியார் தம்மனத் தேயுற
ஞான மூர்த்தி நட்ட மாடி நவிலும்மிடம்

---

(உ) இறங்கி - பணிவோடு. பிறங்கு - விளங்குகிற. கறங்கு - ஒலிக்கின்ற. (ங) நீள - நெடு நேரம். நீதியால் - முறைப்படி ஆளும் - நம்மை ஆளாகக் கொண்டு துன்புறுத்துகிற. அல்கி - சுருங்கி. (ச) வெளிறு - அறியாமை. முளிறு - கூர்மை. பிளிறு தீர - பிளிறுதல் தீரும்படி. பிளிறு - யானையின் ஒலி. (ரு) புலை - பொல்லாங்கு. முசு - ஒருவகைக் குரங்கு. கலை - குரங்கின் ஆண். புறவில் - குறிஞ்சி நிலத்தையுடைய. (சு) உற - பொருந்தும்படி. கடம் - யானைக் கூட்டம். (எ) நவிலும் - பழகும்.

தேனும் வண்டும் மதுவுண் டின்னிசை பாடியே
கான மஞ்ஞை உறையுந் தண்கழுக் குன்றமே. எ

அந்தமில்லா அடியார் தம்மனத் தேயுற
வந்து நாளும் வணங்கி மாலொடு நான்முகன்
சிந்தை செய்த மலர்கள் நித்தலுஞ் சேரவே
கந்தம் நாறும் புறவிற் றண்கழுக் குன்றமே. அ

பிழைகள் தீரத் தொழுமின் பின்சடைப் பிஞ்ஞகன்
குழைகொள் காதன் குழகன் தானுறை யும்மிடம்
மழைகள் சாலக் கலித்து நீடுயர் வேயவை
குழைகொள் முத்தஞ் சொரியுந் தண்கழுக் குன்றமே. கூ

பல்லில் வெள்ளைத் தலையன் தான்பயி லும்மிடம்
கல்லில் வெள்ளை யருவித் தண்கழுக் குன்றினை
மல்லின் மல்கு திரள்தோ ளூரன் வனப்பினால்
சொல்லல் சொல்லித் தொழுவா ரைத்தொழு மின்களே. க0

திருச்சிற்றம்பலம்

என்னும் இன்னிசைத் திருப்பதிகம் பாடித் திருக்கச்சூர்ச் சென்று அவ்வூரில் உள்ள **ஆலக்கோயில்** என்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் இன்அமுதை அன்புருகக் கும்பிட்டுப் பசி வருத்தத்துடன் கோயில் மதிற்புறத்தே இருந்தார். அப்போது **மலையின்மேல் மருந்தான** திருக்கச்சூரீசர் அந்தணர் வடிவங்கொண்டு கையில் ஒரு வெற்றோடு ஏந்தி "உமது பசியை அகற்ற சோறு இரந்துகொண்டு வருகிறேன்" என்று அன்பர் முகம் நோக்கி அருள்கூரச் செப்பிப்போய்த் திருக்கச்சூர் மனைதோறும் சென்று இரந்து அன்னம் கொண்டுவந்து ஆரூரருக்குக் கொடுத்து 'அவரும் திருத்தொண்டருடன் அருந்தியபின் எப்பொருளும் நீங்காத நிலைமையினார் மறைந்தருளினார்.' சுந்தரர், வந்த மறையவனார் இறையவனார் என மதித்தே, மனம் கசிந்துருகி,

(அ) அந்தம்இல்லா - (பெருமைக்கு) முடிவு இல்லாத. கந்தம் நாறும் - வாசனை வீசும். (கூ) குழைகொள் - வளப்பத்தை உடைய. (க0) பல்இல் - பல் இல்லாத. மல்லின் மல்கு - வலிமை மிக்க.

" முதுவா யோரி" என்றெடுத்து [1]முதல்வ னார்தம் பெருங்கருணை
அதுவாம் இதுஎன் றதிசயம்வந் தெய்தக் கண்ணீர் மழைஅருவிப்
புதுவார் புனலின் மயிர்ப்புளகம் புதையப் பதிகம் போற்றிசைத்து
மதுவார் இதழி முடியாரைப் பாடி மகிழ்ந்து வணங்கினார்.

## 41. திருக்கச்சூர் ஆலக்கோயில்

### பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

முதுவாயோரி கதறமுதுகாட் டெரிகொண்டாடல் முயல்
வானே, மதுவார் கொன்றைப் புதுவீசூடும் மலையான் மகள்
தன் மணவாளா, கதுவாய்த் தலையில் பலிநீகொள்ளக் கண்டா
லடியார் கவலாரே, அதுவேயாமா றிதுவோகச்சூ ராலக்
கோயி லம்மானே. க

கச்சேரரவொன் றரையிலசைத்துக் கழலுஞ் சிலம்புங்
கலிக்கப் பலிக்கென், றச்சம்போதா வூரூர்திரியக் கண்டாலடி
யார் உருகாரே, இச்சைஅறியோ மெங்கள்பெருமா னேழேழ்
பிறப்பும் எனையாள்வாய், அச்சமில்லாக் கச்சூர்வடபால் ஆலக்
கோயி லம்மானே. உ

சாலக்கோயி லுளநின்கோயில் அவையென் தலைமேற்
கொண்டாடி, மாலைத்தீர்ந்தேன் வினையுந் துரந்தேன் வானோ
ரறியா நெறியானே, கோலக் கோயில் குறையாக் கோயில்
குளிர்பூங்கச்சூர் வடபாலை, ஆலக்கோயில் கல்லால் நிழற்கீழ்
அறங்களுரைத்த அம்மானே. ங

---

(க) முதுவாய் ஓரி - கிழநரி. புதுவீ - புதுமலர். கதுவாய் - பிளந்த வாயையுடைய. (உ) கச்சு ஏர் அரவு ஒன்று-கச்சாக அழகிய பாம்பு ஒன்றை. அசைத்து - கட்டி. (ங) மாலை - மயக்கத்தை. துரந் தேன் - ஓட்டிவிட்டேன் நெறியானே - முத்திநெறியை உடைய வனே.

[1]முதல்வனார்.........இது - சிவபெருமானுடைய பெரிய திரு வருளே இவ்வாறு வந்தது என்று.

விடையுங் கொடியுஞ் சடையுமுடையாய் மின்னேருரு வத் தொளியானே, கடையும் புடைசூழ் மணிமண்டபமுங் கன்னிமாடம் கலந்தெங்கும், புடையும் பொழிலும் புனலுந் தழுவிப் பூமேல்திருமா மகள்புல்கி, அடையுங் கழனிப் பழனக்கச்சூ ராலக்கோயி லம்மானே. ௪

மேலைவிதியே வினையின் பயனே விரவார் புரம்மூன் றெரி செய்தாய், காலையெழுந்து தொழுவார்தங்கள் கவலைகளைவாய் கறைக்கண்டா, மாலைமதியே மலைமேல் மருந்தே மறவேனடி யேன் வயல்சூழ்ந்த, ஆலைக்கழனிப் பழனக்கச்சூ ராலக்கோயி லம்மானே. ௫

பிறவாயிறவாய் பேணாய்மூவாய் பெற்றமேறிப் பேய்சூழ்தல் துறவாய்மறவாய் சுடுகாடென்றும் இடமாக்கொண்டு நடமாடி ஒறுவாய்த்தலையில் பலிநீகொள்ளக் கண்டாலடியார் உருகாரே அறவேஒழியாய் கச்சூர் வடபால் ஆலக்கோயி லம்மானே. ௬

பொய்யேயுன்னைப் புகழ்வார் புகழ்ந்தால் அதுவும் பொரு ளாக் கொள்வானே, மெய்யே யெங்கள் பெருமானுன்னை நினை வாரவரை நினைகண்டாய், மையார் தடங்கண் மடந்தைபங்கா கங்கார்மதியஞ் சடைவைத்த, ஐயாசெய்யாய் வெளியாய்கச்சூ ராலக்கோயி லம்மானே. ௭

ஊனைப்பெருக்கி உன்னைநினையா தொழிந்தேன் செடி யேன் உணர்விலேன், கானக்கொன்றை கமழமலருங் கடிநா றுடையாய் கச்சூராய், மானைப்புரையும் மடமென் நோக்கி மடவாளஞ்ச மறைத்திட்ட, ஆனைத்தோலாய் ஞானக்கண்ணா யாலக்கோயி லம்மானே. ௮

---

(௪) கன்னி மாடம் - கன்னிப்பெண்கள் வசித்துத் தவம் செய்யும் இடம். புடையும் - பக்கங்களில். (௫) மேலை விதியே - பிற் காலத்து உதவும் செல்வமே. மலைமேல் மருந்தே என்பது திருக்கச் சூரின் அருகில் சிறு குன்றின்மேல் கோயில்கொண்டு எழுந்தருளி யிருக்கும் பெருமானைக் குறிப்பது. (௬) பேணாய்-பற்று இல்லாதவனே. ஒறுவாய் - உடைந்த வாயையுடைய. அறவே ஒழியாய் - பலி ஏற் பதை முற்றிலும் ஒழியாய். (௭) செய்யாய் வெளியாய் - செந்நிறம் உடையவனே, திருநீற்றைப் பூசுவதால் வெண்ணிற முடையவனே. (௮) கடிநாறு - மிக்க வாசனை. புரையும் - ஒத்த.

காதல்செய்து களித்துப் பிதற்றிக் கடிமாமலரிட் டுனை யேத்தி, ஆதல் செய்யும் அடியாரிருக்க ஐயங்கோள்வ(து) அழ கிதே, ஓதக் கண்டேன் உன்னைமறவேன் உமையாள் கணவா எனையாள்வாய், ஆதற்பழனக் கழனிக்கச்சூ ராலக்கோயி லம்மானே. கூ.

அன்னம் மன்னும் வயல்சூழ்கச்சூ ராலக்கோயி லம் மானை, உன்னமுன்னும் மனத்தாரூரன் ஆரூரன்பேர் முடி வைத்த, மன்னுபுலவன் வயல்நாவலர்கோன் செஞ்சொல்நா வன் வன்றொண்டன், பன்னுதமிழ்நூல் மாலைவல்லா ரவரெந் தலைமேற் பயில்வாரே. கo.

திருச்சிற்றம்பலம்

பிறகு அவ்விடம்விட்டு, அடியார்கள் எதிர்கொள்ளக் காஞ்சீ புரத்தை அடைந்தார். அந்நகரில் திருஏகாம்பரம் பணிந்து பதிகம் பாடி, திருக்காமக்கோட்டம் சென்றிறைஞ்சி, திருமேற்றளி சென்று ஆராஅன்பிற் பணிந்தேத்தி,

## 21. திருவேகம்பந் திருமேற்றளி

### பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

நொந்தா வொண்சுடரே நுனையேநி னைந்திருந்தேன்
வந்தாய் போயறியாய் மனமேபு குந்துநின்ற
சிந்தா யெந்தைபிரான் திருமேற்ற ளியுறையும்
எந்தா யுன்னையல்லா லினியேத்த மாட்டேனே. க

(கூ) ஆதல் - ஆகுதல், ஆக வேண்டியவற்றை. ஆதற் பழனம் - சாகுபடி ஆகும் வயல். (கo) முன்னும் - முற்படும். பயில்வார் - இருத் தற்கு உரியவர்.

(க) நொந்தா ஒண் சுடரே - அழிவில்லாத ஒளி மிக்க தீபமே. சிந்தாய் - (கருணைக்) கடலே (அல்லது) சிந்தையில் இருப்பவனே.

ஆள்தான் பட்டமையா லடியார்க்குத் தொண்டுபட்டுக்
கேட்டேன் கேட்பதெல்லாம் பிறவாமை கேட்டொழிந்தேன்
சேட்டார் மாளிகைசூழ் திருமேற்ற ளியுறையும்
மாட்டே யுன்னையல்லால் மகிழ்ந்தேத்த மாட்டேனே. ௨

மோறாந்(து) ஓரொருகால் நினையாதி ருந்தாலும்
வேறா வந்தென்னுள்ளம் புகவல்ல மெய்ப்பொருளே
சேறார் தண்கழனித் திருமேற்ற ளியுறையும்
ஏறே யுன்னையல்லா லினியேத்த மாட்டேனே. ௩

உற்றார் சுற்றமெனும் அதுவிட்டு நுன்னடைந்தேன்
எற்றா லென்குறை(வு)என் இடரைத் துறந்தொழிந்தேன்
செற்றாய் மும்மதிலுந் திருமேற்ற ளியுறையும்
பற்றே நுன்னையல்லால் பணிந்தேத்த மாட்டேனே. ௪

எம்மா னெம்அ(ன்)னையென் றவரிட்(டு) இறந்தொழிந்தார்
மெய்ம்மா லாயினதீர்த் தருள்செய்யும் மெய்ப்பொருளே
கைம்மா ஈருரியாய் கனமேற்ற ளியுறையும்
பெம்மா னுன்னையல்லால் பெரிதேத்த மாட்டேனே. ௫

நானே லுன்னடியே நினைந்தேன் நினைதலுமே
ஊனே ரிவ்வுடலம் புகுந்தாயென் ஒண்சுடரே
தேனே யின்னமுதே திருமேற்ற ளியுறையும்
கோனே யுன்னையல்லாற் குளிர்ந்தேத்த மாட்டேனே. ௬

(௨) ஆள்தான் பட்டமையால் - நான் உமக்கு அடிமைப்பட்டமையால். 2-வது வரி. நான் தேவரீரை வேண்டிக்கேட்பது யாதெனில் பிறவாமை ஒன்று மாத்திரமே. "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை"—திருக்குறள். சேட்டார் - சேடு ஆர், அழகு மிக்க. மாட்டே - மாடு ஏ - செல்வமே. (௩) மோறாந்து ஓர் ஒருகால் - ஒரு ஒரு காலத்தில் உம்மை மறந்து. ஏறே - ஆண் சிங்கமே. (௪) எற்றால் என் குறைவு - எவ்விதத்தாலும் எனக்குக் குறைவு இல்லை. பற்றே - ஆதாரமே. (௫) எம்மான் - எம் தந்தை. எம் அ(ன்)னை - எம் தாய். இட்டு - என்னை இருத்தி. மெய்ம்மால் ஆயின - உண்மையாக மயக்கத்தைக் கொடுப்பனவாகியவற்றை. (௬) நானேல் - நானோ எனில். ஊன் நேர் - ஊனுல் ஆகிய. குளிர்ந்து - மனம் குளிர்ந்து. குளிர்ந்து-குளிர, குளிரும்படியாக என்னும் பொருளில் வந்தது.

கையார் வெஞ்சிலைநா ணதன்மேற் சரங்கோத்தே
எய்தாய் மும்மதிலும் எரியுண்ண எம்பெருமான்
செய்யார் பைங்கமலத் திருமேற்ற ளியுறையும்
ஐயா வுன்னையல்லால் அறிந்தேத்த மாட்டேனே. எ

விரையார் கொன்றையினாய் விமலாஇனி யுன்னையல்லால்
உரையேன் நாவதனால் உடலில்லுயி ருள்ளளவும்
திரையார் தண்கழனித் திருமேற்ற ளியுறையும்
அரையா வுன்னையல்லால் அறிந்தேத்த மாட்டேனே. அ

நிலையாய் நின்னடியே நினைந்தேன் நினைதலுமே
தலைவா நின்னினையப் பணித்தாய்ச லமொழிந்தேன்
சிலையார் மாமதில்சூழ் திருமேற்ற ளியுறையும்
மலையே யுன்னையல்லால் மகிழ்ந்தேத்த மாட்டேனே. கூ

பாரூர் பல்லவனூர் மதிற்காஞ்சி மாநகர்வாய்ச்
சீரூ ரும்புறவிற் றிருமேற்ற ளிச்சிவனை
ஆரூ ரன்னடியா னடித்தொண்ட னூரன்சொன்ன
சீரூர் பாடல்வல்லார் சிவலோகஞ் சேர்வாரே. க0

திருச்சிற்றம்பலம்

என்னும் 'பாரார் பெருமைத்' திருப்பதிகம் பாடி மகிழ்ந்து பரவினார்.

ஓண காந்தன் றளிமேவும் ஒருவர் தம்மை உரிமையுடன்
பேணி அமைந்த தோழமையாற் பெருகும் அடிமைத் திறம்பேசிக்
[1]காண மோடு பொன்வேண்டி "நெய்யும் பாலும்" கலைவிளங்கும்
[2]யாணர்ப் பதிகம் எடுத்தேத்தி எண்ணில் நிதிபெற் றினிதிருந்தார்.
—பெ. ஏ. 191.

(எ) சரம் கோத்தே - அம்பு தொடுத்து. செய்ஆர் - வயல்களில் நிறைந்த. (அ) நிலையாய் - இடைவிடாமல். (கூ) சலம் - சஞ்சலம்.

[1]காணம் - பொற்காசு. [2]யாணர் - அழகிய.

## 5. திருஓணகாந்தன்தளி

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

நெய்யும்பாலுந் தயிருங்கொண்டு நித்தல்பூசனை செய்ய லுற்றார், கையிலொன்றுங் காணமில்லைக் கழலடிதொழு துய்யினல்லால், ஐவர்கொண்டிங் காட்டவாடி ஆழ்குழிப்பட் டழுந்துவேனுக்(கு), உய்யுமாறொன் றருளிச்செய்யீர் ஓணகாந் தன் தளியுளீரே. க

திங்கள் தங்கு சடையின்மேலோர் திரைகள்வந்து புரள வீசும், கங்கையாளேல் வாய்திறவாள் கணபதியேல் வயிறு தாரி, அங்கைவேலோன் குமரன்பிள்ளை தேவியார்கோற் றட் டியாளால், உங்களுக்காட் செய்யமாட்டோம் ஓணகாந்தன் தளியுளீரே. உ

பெற்றபோழ்தும் பெறுதபோழ்தும் பேணிஉம்கழல் ஏத்துவார்கள், மற்றோர்பற்றில ரென்றிரங்கி மதியுடையவர் செய்கைசெய்யீர், அற்றபோழ்தும் அலந்தபோழ்தும் ஆபற் காலத் தடிகேளும்மை, ஒற்றிவைத்திங் குண்ணலாமோ ஓண காந்தன் தளியுளீரே. ௩

வல்லதெல்லாம் சொல்லிஉம்மை வாழ்த்தினாலும் வாய் திறந்தொன்(று), இல்லையென்னீர் உண்டுமென்னீ ரெம்மை யாள்வா னிருப்பதென்னீர், பல்லையுக்க படுதலையிற் பகலெலாம் போய்ப் பலிதிரிந்திங், கொல்லைவாழ்க்கை யொழியமாட்டீர் ஓணகாந்தன் தளியுளீரே. ச

---

(க) செய்யல் உற்றார் - (உன் அன்பர்கள்) செய்யத் தொடங்கி னார்கள். காணம் - பொற்காசு. ஐவர் - பஞ்சேந்திரியங்கள். ஆறு ஒன்று - ஒரு வழியை. (உ) ஏல் - எனின். கோற்றட்டியாள் - யாழ் வாசிப்பவள். ஆல் - ஆதலால். (௩) பற்று - ஆதரவு. அற்றபோழ் தும் - கைப்பொருள் இல்லாதகாலத்தும். அலந்தபோழ்தும் - துன் பப்படும் காலத்தும். ஒற்றி - அடகு. (ச) ஒல்லைவாழ்க்கை - பழமை யாக வரும் பலி ஏற்கும் தொழில்.

கூடிக்கூடித் தொண்டர்தங்கள் கொண்டபாணி குறை படாமே, ஆடிப்பாடி அழுதுநெக்கங் கன்புடையவர்க் கின்ப மோரீர், தேடித்தேடித் திரிந்தெய்த்தாலுஞ் சித்தமென்பால் வைக்கமாட்டீர், ஓடிப்போகீர் பற்றுந்தாரீர் ஓணகாந்தன் தளி யுளீரே. ரு

வாரிருங்குழல் வாள்நெடுங்கண் மலைமகள்மது விம்மு கொன்றைத், தாரிருந்தட(ம்) மார்புநீங்காத் தையலாள்உல குய்யவைத்த,காரிரும்பொழிற் கச்சிமூதூர்க் காமக்கோட்டம் உண்டாகநீர்போய், ஊரிடும்பிச்சை கோள்வதேன்னே ஓண காந்தன் தளியுளீரே. சு

பொய்ம்மையாலே போது போக்கிப் புறத்து மில்லை அகத்து மில்லை, மெய்ம்மை சொல்லி ஆளமாட்டீர் மேலைநா ளொன் றிடவுங்கில்லீர், எம்மைப்பெற்றா லேதும்வேண்டீர் ஏதுந்தாரீர் ஏதும்ஓதீர், உம்மை யன்றே எம்பெருமான் ஓணகாந்தன் தளியுளீரே. எ

வலையம் வைத்த கூற்ற(ம்)மீவான் வந்துநின்ற வார்த்தை கேட்டுச், சிலையமைத்த சிந்தையாலே திருவடி தொழு(து) உய்யினல்லால், கலையமைத்த காமச்செற்றக் குரோதலோபம் மதவருடை, உலையமைத்திங் கொன்ற மாட்டேன் ஓணகாந் தன் தளியுளீரே. அ

---

(ரு) பாணி - பாட்டு. நெக்கு அங்கு அன்புடையவர்க்கு - மனம் கசிந்து அவ்வாறு அன்பை வெளிப்படுத்துபவர்க்கு. இன்பம் ஓரீர் - இன்பம் தரமாட்டீர். பற்று - பிடி. (சு) வார்இருங்குழல் - நீண்டு அடர்ந்த கூந்தல். மதுவிம்மு - தேன் பெருகுகின்ற. காமக்கோட் டம் - காஞ்சீபுரத்தில் உமாதேவியாரால் 32 அறங்களை நடத்தின அறச்சாலை. (எ) மேலைநாள் - பிற்காலத்தில். உம்மை யன்றே - உம்மை அல்லாது இல்லை. (அ) வலையம் வைத்த - பிடிப்பதற்குப் பாசத்தைவைத்த. மீவான் - மேலிடமாகிய ஆகாயத்தில். சிலை அமை த்த சிந்தையாலே - தளர்ச்சி அடையாத மனதுடன். கலை அமைத்த- நூல்களில் (இழித்துக்) கூறப்படும். உலை அமைத்து இங்கு ஒன்றமாட் டேன் - கெடுவழியிற் சென்று உம்முடன் கூடமாட்டேன்.

வாரமாகித் திருவடிக்குப் பணிசெய்தொண்டர்பெறுவதென்னே
ஆரம்பாம்பு வாழ்வதாரூர் ஒற்றியூரேல் உம்மதன்று
தாரமாகக் கங்கையாளைச் சடையில்வைத்த அடிகேள்உந்தம்
ஊரும்காடு உடையுந்தோலே ஓணகாந்தன் தளியுளீரே. ௯

ஓவணமேல் எருதொன்றேறும் ஓணகாந்தன் றளியுளார்தாம், ஆவணஞ்செய் தாளுங் கொண்டு அரைதுகிலொடு பட்டு வீக்கிக், கோவணமேற் கொண்ட வேடங் கோவையாகஆரூரன்சொன்ன, பாவணத்தமிழ் பத்தும் வல்லார் பறையும் தாஞ்செய்த பாவந்தானே. ௧0

*திருச்சிற்றம்பலம்*

இவ்வாறு பாடி **எண்ணில் நிதிபெற்று,** அதன்பிறகு திருக்கச்சி **அநேகதங்காபதத்தை** அடைந்து செங்கண் விடையாரைப் பணிந்து,

## 10. திருக்கச்சியனேகதங்காவதம்

**பண் - இந்தளம்**

*திருச்சிற்றம்பலம்*

தேன்நெய் புரிந்துழல் செஞ்சடை எம்பெரு மான(து) இடம்திகழ் ஐங்கணையக், கோனை எரித்தெரி யாடியிடம்குல வானதிடம்குறை யாமறையாம், மானையிடத்ததொர் கைய

(௯) வாரம் ஆகி - அன்பு பூண்டு. ஒற்றியூர் - ஒற்றிவைக்கப்பட்ட ஊர். தாரம் - மனைவி. (௧0) ஓவ(ண்)ணம் ஏல்-ஓங்காரத்தின் வடிவத்தை ஏற்றுக்கொண்ட. "ஊனங்கத்துயிர்ப்பாய் உலகெல்லாம் ஓங்காரத்துருவாகி நின்றானை"—**சுந்தரர்.** ஆவணம் செய்து - அடிமை ஓலை ஒன்றை உண்டாக்கிக்கொண்டு. வீக்கி - கட்டி. கோவையாக - வரிசையாக. பாவணத் தமிழ் - பாட்டின் வண்ணமாய் இருக்கும் தமிழ். பறையும் - கெட்டு ஒழியும்.

(௧) தேன் நெய் புரிந்து உழல்-தேன்வண்டுகள் நெய்யை விரும்பி உழல்கின்ற. குலவான் அதுஇடம் - மேன்மைக்குணம் பொருந்திய வனது இடம். மறையாம் மானை - வேதமாகிய அல்லது புள்ளியுடைய மானை. இடத்ததோர்கையனிடம் - இடக்கையில் ஏந்தியவனிடம்.

னிடம்மத மாறுபடப்பொழி யும்மலைபோல்,யானையுரித் தபிரா
னதிடம்கலிக் கச்சியனேகதங் காவதமே. க

கூறு நடைக்குழி கட்பகுவாயன பேயுகந்தாடநின்
றோரியிட, வேறுபடக்குட கத்தி(ல்) லையம்பல வாணன்நின்
றுடல் விரும்புமிடம், ஏறுவிடைக்கொடி எம்பெருமான் இமை
யோர் பெருமான்உமை யாள்கணவன் ஆறுசடைக்குடை
யப்பனிடம்கலிக் கச்சியனேகதங் காவதமே. உ

கொடிகளிடைக்குயில் கூவுமிடம்மயி லாலும்மிடம்மழு
வாளுடைய, கடிகொள் புனற்சடை கொண்ட நுதற்கறைக்
கண்டனிடம் பிறைத் துண்டமுடிச், செடிகொள் வினைப்பகை
தீருமிடம்திரு வாகுமிடந்திரு மார்பகலத்(து), அடிகளிடம்
அழல் வண்ணனிடங்கலிக் கச்சியனேகதங் காவதமே. ௩

கொங்கு நுழைத்தன வண்டறை கொன்றையுங் கங்கை
யுந்திங்களுஞ் சூடுசடை, மங்குல் நுழைமலை மங்கையை நங்
கையைப் பங்கினிற்றங்க உவந்தருள்செய், சங்கு குழைச்
செவி கொண்டருவித்திரள் பாயவியாத்தழல் போலுடைத்
தம், அங்கை மழுத்திகழ் கையனிடங்கலிக் கச்சியனேகதங்
காவதமே. ச

பைத்தபடத்தலை ஆடரவம்பயில் கின்றவிடம்பயி லப்
புகுவார், சித்த மொருநெறி வைத்தவிடம்திகழ் கின்றவிடம்

---

(க) மதம் ஆறு படப்பொழியும் மலைபோல் யானை - மதநீரை ஆறுபோலப் பொழியும்படியான மலையைப்போன்ற யானை. (உ) கூறு நடை - குறுகிய நடை. பகுவாய் - பிளந்தவாய். ஓரி - நரி. குடகம் - மேற்கில். தில்லை-தில்லை. அம்பலவாணன் - நடராஜப்பெருமான். இது பேரூர்த் தலத்தைக் குறிக்கும். (௩) நுதல் - நெற்றி, இவ்விடத்தில் தலையைக் குறிக்கிறது. (ச)கொங்கு நுழைத்த(ன்)ன...கொன்றையும்- வண்டுகள் சப்திக்கின்ற, மகரந்தத்தை நுழைத்து வைத்ததுபோன்ற கொன்றை மலரையும். மங்குல்நுழை - மேகங்கள் தவழ்கின்ற. சங்கு குழைச் செவி - சங்குகளையும் செவிகளில் அணியும்படியான குழைகளையும். அருவி......போல் - அருவிக்கூட்டம் பாய்ந்தும் அவியாத நெருப்பைப்போன்று. (ரு) பயிலப் புகுவார்-தவத்தில் பழகுபவர்கள்.

திரு வானடிக்கே, வைத்த மனத்தவர் பத்தர் மனங்கொள வைத்தவிடம்மழு வாளுடைய, அத்தனிடம் அழல் வண்ணனிடம்கலிக் கச்சியனேகதங் காவதமே. ரு

தண்ட முடைத்தரு மன்தமரென்றம ரைச்செயும் வன்துயர் தீர்க்குமிடம், பிண்டமுடைப்பிற வித்தலைநின்று நினைப்பவராக்கையை நீக்குமிடம், கண்டமுடைக்கரு நஞ்சைநுகர்ந் தபி ரானதிடங்கட லேழுகடந்(து), அண்ட முடைப்பெரு மானதிடம்கலிக் கச்சியனேகதங் காவதமே. சு

கட்டு மயக்கம் அறுத்தவர் கைதொழு தேத்துமிடம்கதி ரோனொளியால், விட்டவிடம்விடை யூர்தியிடங்குயிற் பேடைதன் சேவலொ டாடுமிடம், மட்டுமயங்கி அவிழ்ந்த மலரொரு மாதவியோடு மணம்புணரும், அட்டபுயங்கப் பிரானதிடம் கலிக் கச்சியனேகதங் காவதமே. எ

புல்லி யிடந்தொழு துய்து மெ(ன்)னுதவர் தம்புரம் மூன்றும் பொடிபடுத்த, வில்லி யிடம்விர வாதுயி ருண்ணும்வெங் காலனைக் கால்கொடு வீந்(து)அவியக், கொல்லி யிடங்குளிர் மாதவி மவ்வல் குராவகுளங்குருக் கத்திபுன்னை, அல்லி யிடைப்பெடை வண்டுறங்குங்கலிக் கச்சியனேகதங் காவதமே. அ

சங்கையவர்புணர் தற்கரியான்றள வேனகையாள் தவிரா மிகுசீர், மங்கையவள்மகி ழச்சுடுகொட்டிடை நட்ட(ம்) நின்று

---

(ரு) திருவான் - எல்லா ஐசுவரியங்களையும் உடையவன். (சு) தண்டம் - தண்டாயுதம். தருமன் தமர் - யமதூதர். (எ) கட்டு மயக்கம் - பாசத்தினால் உண்டாகிய மயக்கம். அறுத்தவர் - அறுத்தவராகிய அடியார்கள். விட்டவிடம் - பிரகாசிக்கும் இடம். மட்டுமயங்கி ......அட்டபுயங்கப் பிரானதிடம்-தேன் கசிந்து மலர்ந்த மாதவி என்னும் மலரின் நறுமணம் வீசப்பெற்ற அட்டபுயங்கம் என்னும் கூத்து ஆடுபவன் இடம். (அ) புல்லி-எல்லாப் பொருள்களிலும் நீக்கமற நிறைந்திருப்பவன். விரவாது - பகைத்து. வீந்துஅவிய - இறந்துபட. மாதவி - வசந்த மல்லிகை. மவ்வல் - முல்லை. அல்லி - உள் இதழ். (கூ) சங்கையவர் - சந்தேகமுள்ளவர்கள். புணர்தற்கு - அடைவதற்கு. தளவுஎல் நகையாள் தவிரா மிகுசீர் - முல்லை அரும்பு என்னும்படியான பல்லையுடையவளும் நீங்காத மிக்க புகழையுடைய.

டிய சங்கரனெம், அங்கையினல்லன லேந்துமவன் கனல்சே ரொளியன்னதோர் பேரகலத், தங்கைய வன்னுறை கின்ற விடங்கலிக் கச்சியனேகதங் காவதமே. கூ

வீடுபெறப்பல வூழிகள்நின்று நினைக்குமிடம்வினை தீரு மிடம், பீடுபெறப்பெரி யோரதிடங்கலிக் கச்சியனேகதங் காப்பனிடம், பாடுமிடத்தடி யான்புகழூர னுரைத்தவிம்மாலை கள் பத்தும்வல்லார், கூடுமிடம்சிவ லோகனிடம்கலிக் கச்சி யனேகதங் காவதமே. க0

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் ஓதி, ஏகாம்பரநாதரைப் பணிந்து, வன்பார்த் தான் பனங்காட்டூரை அடைந்து,

செல்வம் மல்கு திருப்பனங்காட் டூரிற் செம்பொற் செழுஞ்சுடரை
அல்லல் அறுக்கும் அருமருந்தை வணங்கி அன்பு பொழிகண்ணீர்
மல்க நின்று "விடையின்மேல் வருவான்" எனும்வண் தமிழ்ப்பதிகம்
நல்ல இசையி னுடன்பாடிப் போந்து புறம்பு நண்ணுவார்.

—பெ. ஏ. 194.

## 86. திருவன்பார்த்தான் பனங்காட்டூர்

### பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

விடையின்மேல் வருவானை வேதத்தின் பொருளானை
அடையிலன் புடையானை யாவர்க்கும் அறியொண்ணா
மடையில்வா ளைகள்பாயும் வன்பார்த்தான் பனங்காட்டூர்ச்
சடையிற்கங்கை தரித்தானைச் சாராதார் சார்வென்னே. க

(கூ) அங்கையில் நல்அனல் ஏந்துமவன் - அங்கையினிடத்து நல்ல அக்கினியை ஏந்திக்கொண்டிருப்பவன்.

(க) அடையில் அன்புடையானை - யாரேனும் தன்னைச்சரணாக அடைந்தால் அவரிடத்து அன்பு உள்ளவனை. சாராதார் சார் வென்னே - சாராதவரது சார்பினால் என்ன பயன்? ஒன்றுமில்லை. அல்லது, சாராதவரது சார்பை என்னென்று கூறுவேன்.

அறையும்பைங் கழலார்ப்ப அரவாட அனலேந்திப்
பிறையுங்கங் கையுஞ்சூடிப் பெயர்ந்தாடும் பெருமானூர்
பறையுஞ்சங் கொலியோவாப் படிறன்றன் பனங்காட்டூர்
உறையுமெங்கள் பிரானை உணராதா ருணர்வென்னே. ௨

தண்ணார்மா மதிசூடித் தழல்போலுந் திருமேனிக்
கெண்ணார்நாண் மலர்கொண்டங் கிசைந்தேத்தும் அடியார்கள்
பண்ணார்பா டலறாத படிறன்றன் பனங்காட்டூர்ப்
பெண்ணாணாய பிரானைப் பேசாதார் பேச்சென்னே. ௩

நெற்றிக்கண் ணுடையானை நீறேறுந் திருமேனிக்
குற்றமில் குணத்தானைக் கோணாதார் மனத்தானைப்
பற்றிப்பாம்(பு) அரையார்த்த படிறன்றன் பனங்காட்டூர்ப்
பெற்றொன்றே றும்பிரானைப் பேசாதார் பேச்சென்னே. ௪

உரமென்னும் பொருளானை உருகிலுள் உறைவானைச்
சிரமென்னுங் கலனானைச் செங்கண்மால் விடையானை [டூர்ப்
வரம்முன்னம் அருள்செய்வான் வன்பார்த்தான் பனங்காட்
பரமனெங்கள் பிரானைப் பரவாதார் பரவென்னே. ௫

எயிலார்பொக்க மெரித்த எண்டோள்முக்க ணிறைவன்
வெயிலாய்க்காற் றெனவீசி மின்னாய்த்தீ யெனநின்றான்
மயிலார்சோலை கள்சூழ்ந்த வன்பார்த்தான் பனங்காட்டூர்
பயில்வானுக் கடிமைக்கட் பயிலாதார் பயில்வென்னே. ௬

---

(௨) பெயர்ந்து ஆடும் - மேலே கிளம்பி ஆடும். படிறன் - வஞ்சகன், கள்வன். (௩) எண் ஆர் நாண்மலர்-எண்ணிக்கையில் நிறைந்த(மிகுந்த) புதிய பூக்களை. இசைந்து - அன்புடன். (௪) கோணாதார் - ஒழுக்கம் தவறாதவர். (௫) உரம்-ஞானம். பொருளானை-பொருளாய் இருப்பவனை. உருகில் உள் உறைவானை - மனம் உருகி நினைப்பவர் மனத்தினுள்ளே கோயில் கொண்டிருப்பவனை. செங்கண்மால் விடையானை - சிவந்த கண்ணை உடைய திருமாலாகிய விடையை ஊர்தியாக உடையவனை. "இடபமதாய்த் தாங்கினான் திருமால் காண் சாழலோ"—**திருவாசகம்.** (கடகரி). (௬) எயிலார் பொக்கம் எரித்த - மும்மதில்களை யுடையவரது செருக்கை அழித்த. 4 வது வரி. வாழ்பவனுக்குத் தொண்டு செய்தலின் கண்ணே பழகாதவருடைய நட்பு என்ன பயன்தரும்.

மெய்யன்வெண் பொடிபூசும் விகிர்தன்வேத முதல்வன்
கையின்மான் மழுவேந்திக் காலன்காலம் அறுத்தான்
பைகொள்பாம் பரையார்த்த படிறன்றன் பனங்காட்டூர்
ஐயனெங்கள் பிரானை அறியாதா ரறிவென்னே. எ

வஞ்சமற்ற மனத்தாரை மறவாத பிறப்பிலியைப்
பஞ்சிச்சீ றடியாளைப் பாகம்வைத் துகந்தானை
மஞ்சுற்ற மணிமாட வன்பார்த்தான் பனங்காட்டூர்
நெஞ்சத்தெங்கள் பிரானை நினையாதார் நினைவென்னே. அ

மழையானுந் திகழ்கின்ற மலரோனென் றிருவர்தாம்
உழையாநின்(று) அவர்உள்க உயர்வானத் துயர்வானைப்
பழையானைப் பனங்காட்டூர் பதியாகத் திகழ்கின்ற
குழைகாதற் கடிமைக்கட் குழையாதார் குழைவென்னே. கூ

பாரூரும் பனங்காட்டூர்ப் பவளத்தின் படியானைச்
சீரூருந் திருவாரூர்ச் சிவன்பேர்சென் னியில்வைத்த
ஆரூரன் அடித்தொண்டன் அடியன்சொல் லடிநாய்சொல்
ஊரூரன் உரைசெய்வா ருயர்வானத் துயர்வாரே. கய

திருச்சிற்றம்பலம்

பின்பு திருமாற்பேறு சென்று வணங்கி, திருவல்லம் எய்தி இறைஞ்சி, திருக்காளத்தி மலையை அடைந்தார். அன்பிற் றலைசிறந்த கண்ணப்ப நாயனாருடைய அன்பத்தைக் களைந்தருளிய இறைவர் மகிழ்ந்த காளத்தி மலையைப் பணிந்து, அருளால் ஏறி, அன்பில் மூழ்கி, மலைமேல் மருந்தை வணங்கி, உள்ளம் களிகூர மகிழ்ந்து போற்றி,

(எ) விகிர்தன்-ஞானசொரூபன். பைகொள்-படத்தை உடைய. (அ) பஞ்சிற் சீறடி யாள் - பஞ்சுபோல் மிருதுவான சிறிய பாதங்களையுடைய உமாதேவியார் "பஞ்சின் மெல் அடியாள்."—திருவாசகம். (கூ) மழையான் - மேக வண்ணனான திருமால். உழையா நின்று அவர் உள்க - வருந்தி நின்று அவர்கள் நினைக்க. உயர் வானத்து உயர்வானை - உயர்ந்த வானத்தையும் ஊடுருவி அதற்கு அப்பாலும் உயர்ந்து நிற்பவனை. குழைதல் - உருகுதல். (கய) பாரூரும் - இப் பரவிய புகழை உடைய பூமியின்கண். ஊரூரன் உரை செய்வார் - ஊர் தோறும் திரிந்து பலி இரப்பவன்மீது பாடிய பாடல்களைப் பாடுபவர்கள்.

# 26. திருக்காளத்தி

## பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

செண்டா டும்விடையாய் சிவனேயென் செழுஞ்சுடரே
வண்டா ருங்குழலாள் உமைபாகம் மகிழ்ந்தவனே
கண்டார் காதலிக்குங் கணநாதனெங் காளத்தியாய்
அண்டா உன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. க

இமையோர் நாயகனே இறைவாஎன் னிடர்த்துணையே
கமையார் கருணையினாய் கருமாமுகில் போல்மிடற்றாய்
உமையோர் கூறுடையா யுருவேதிருக் காளத்தியுள்
அமைவே யுன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. உ

படையார் வெண்மழுவா பகலோன்பல் லுகுத்தவனே
விடையார் வேதியனே விளங்குங்குழைக் காதுடையாய்
கடையார் மாளிகைசூழ் கணநாதனெங் காளத்தியாய்
உடையாய் உன்னையல்லா லுகந்தேத்த மாட்டேனே. ங

மறிசேர் கையினனே மதமாவுரி போர்த்தவனே
குறியே யென்னுடைய குருவேயுன் குற்றேவல்செய்வேன்
நெறியே நின்றடியார் நினைக்குந்திருக் காளத்தியுள்
அறிவே யுன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. ச

செஞ்சே லன்னகண்ணார் திறத்தேகிடந்(து) உற்றலறி
நஞ்சேன் நான்அடியேன் நலமொன்றறி யாமையினால்
துஞ்சேன் நானொருகால் தொழுதேன்திருக் காளத்தியாய்
அஞ்சா துன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. ரு

---

(க) செண்டு ஆடும் - செண்டு என்னும் நடை பழகுகிற. அறிந்து - வேறு தெய்வத்தை நாடி. (உ) கமை - க்ஷமை, பொறுமை. அமைவே - ஞான உருவினனே, உறைபவனே. (ச) மறி - மான் கன்று. (ரு) உற்று அலறி - மிகவும் அலறி. நஞ்சேன் - நைந்தேன். துஞ்சேன் - உறங்கேன்.

பொய்யவ னுயடியேன் புகவேநெறி யொன்றறியேன்
செய்யவ னாகிவந்திங் கிடரானவை தீர்த்தவனே
மெய்யவ னேதிருவே விளங்குந்திருக் காளத்தியென்
ஐயநுன் றன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. சு

கடியேன் காதன்மையாற் கழற்போதறி யாதவென்னுள்
குடியாக் கோயில்கொண்ட குளிர்வார்சடை யெங்குழகா
முடியால் வானவர்கள் முயங்குந்திருக் காளத்தியாய்
அடியே னுன்னையல்லா லறியேன்மற் றொருவரையே. எ

நீறார் மேனியனே நிமலாநினை யன்றிமற்றுக்
கூறேன் நாவதனாற் கொழுந்தேயென் குணக்கடலே
பாறார் வெண்டலையிற் பலிகொண்டுழல் காளத்தியாய்
ஏறே யுன்னையல்லா லினிதேத்த மாட்டேனே. அ

தளிர்போல் மெல்லடியாள் தனையாகத் தமர்ந்தருளி
எளிவாய் வந்தென்னுள்ளம் புகுதவல்ல எம்பெருமான்
களியார் வண்டறையுந் திருக்காளத்தி யுள்ளிருந்த
ஒளியே யுன்னையல்லா லினியொன்றும் உணரேனே. கூ

காரா ரும்பொழில்சூழ் கணநாதனெங் காளத்தியுள்
ஆரா இன்னமுதை அணிநாவலா ரூரன்சொன்ன
சீரூர் செந்தமிழ்கள் செப்புவார்வினை யாயினபோய்ப்
பேரா விண்ணுலகம் பெறுவார்பிழைப் பொன்றிலரே. க0

திருச்சிற்றம்பலம்

என்னும் மதுர இசைப்பதிகம் பாடி, கண்ணப்பரை வணங்கித் தொண்டர்களோடு அவ்வூரில் தங்கி இருக்கும்போது, வடதிசையி

---

(சு) செய்யவன் - செம்மையானவன், குற்றமில்லாதவன். (எ) 1-வது வரி. நான் கொடியவன். அன்பினால் உன் திருவடித் தாமரையை அறியாத என் உள்ளத்தில். காதன்மையால் கோயில் கொண்ட என்றும் கூட்டிப்பொருள் சொல்லலாம். முடியால் முயங்கும் - தலையினால் வணங்கும். (அ) பாறு ஆர் - பருந்துகள் சூழ்ந்துள்ள. ஏறே - ஆண் சிங்கமே. (க0) ஆரா - தெவிட்டாத. பேரா - நிலைபெயராத. பிழைப்பு - தவறுதல்.

லுள்ள திருப்பருப்பதம், திருக்கேதாரம் முதலிய தலங்களை அவ்விடத்தில் இருந்தபடியே தொழுது, நடமாடிய சேவடியாரை நண்ணினார்போல் எண்ணித் திருப்பதிகம் பாடினார்.

## 79. சீபர்ப்பதம்

### பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

மானும்மரை யினமும்மயில் இனமுங்கலந் தெங்கும்
தாமேமிக மேய்ந்துதடஞ் சுனைநீர்களைப் பருகிப்
பூமாமரம் உரிஞ்சிப்பொழி லூடேசென்று புக்குத்
தேமாம்பொழில் நீழல்துயில் சீபர்ப்பத மலையே. க

மலைச்சாரலும் பொழிற்சாரலும் புறமேவரும் இனங்கள்
மலைப்பாற்கொணர்ந் திடித்தூட்டிட மலங்கித்தன களிற்றை
அழைத்தோடியும் பிளிறீயவை அலமந்துவந் தெய்த்துத்
திகைத்தோடித்தன் பிடிதேடிடுஞ் சீபர்ப்பத மலையே. உ

மன்னிப்புனங் காவல்மட மொழியாள்புனம் காக்கக்
கன்னிக்கிளி வந்துகவைக் கோலிக்கதிர் கொய்ய
என்னைக்கிளி மதியாதென்று எடுத்துக்கவண் ஒலிப்பத்
தென்னற்கிளி திரிந்தேறிய சீபர்ப்பத மலையே. ங

---

(க) உரிஞ்சி - உராய்ந்து. சீபர்ப்பத மலையே - ஸ்ரீ சைலம் என்னும் மலையே எம்பெருமானுக்கு இருப்பிடமாவது. (உ) இனங்கள் மலைப்பாற் கொணர்ந்து இடித்து ஊட்டிட - யானைக்கூட்டங்கள் தம் கன்றுகளை மலைப்பக்கங்களில் அழைத்துச் சென்று அவைகள் தம் மடிகளை இடிக்கப் பாலைச்சுரந்து தர. மலங்கி - கலங்கி. பிளிறி - கர்ச்சித்து. (ங) 1-வது வரி. புனங்களைக் காக்கும் இளம் பெண்கள் நிலைபெற்று இருந்து காத்தற்றொழிலைச் செய்ய. கன்னிக்கிளி-இளங்கிளி. கவைகோலிக் கதிர் கொய்ய - மரக்கிளைகளில் சூழ்ந்திருந்து கதிர்களைப் பறிக்க. கவண் ஒலிப்ப - கவண் கல்லால் விசையோடு அடிக்க. தென்னற்கிளி - அழகிய நல்ல கிளிகள்.

மையார்தடங் கண்ணாள்மட மொழியாள்புனம் காக்கச்
செவ்வேதிரிந் தாயோவெனப் போகாவிட விளிந்து
கைபாவிய கவணால்மணி யெறியஇரிந் தோடிச்
செவ்வாயின கிளிபாடிடுஞ் சீபர்ப்பத மலையே. ௪

ஆனைக்குலம் இரிந்தோடித்தன் பிடிசூழலில் திரியத்
தானப்பிடி செவிதாழ்த்திட அதற்குமிக இரங்கி
மானக்குற அடல்வேடர்கள் இலையாற்கலை கோலித்
தேனைப்பிழிந் தினிதூட்டிடுஞ் சீபர்ப்பத மலையே. ரு

மாற்றுக்களி றடைந்தாயென்று மதவேழங்கை யெடுத்தும்
மூற்றிக்கன லுமிழ்ந்துமதம் பொழிந்தும்முகஞ் சுழியத்
தூற்றத்தரிக் கில்லேனென்று சொல்லிஅய லறியத்
தேற்றிச்சென்று பிடிசூழறுஞ் சீபர்ப்பத மலையே. சு

அப்போதுவந் துண்டீர்களுக் கழையாதுமுன் னிருந்தேன்
எப்போதும்வந் துண்டாலெமை யெமர்கள்சுளி யாரோ
இப்போதுமக் கிதுவேதொழி லென்றோடியக் கிளியைச்
செப்பேந்திள முலையாளெறி சீபர்ப்பத மலையே. ௭

திரியும்புரம் நீறாக்கிய செல்வன்தன கழலை
அரியதிரு மாலோடயன் றானும்மவ ரறியார்
கரியின்னின மோடும்பிடி தேனுண்டவை களித்துத்
திரிதந்தவை திகழ்வாற்பொலி சீபர்ப்பத மலையே. அ

(௪) 2-வது வரி. வாயினால் அதட்டி ஓட்டவும், போகாதபடியால் கோபித்து, கைபாவிய - கையில் பற்றியுள்ள. (ரு) சூழல் - கூட்டம். தானப்பிடி - வலிமையுள்ள பெண் யானை. 3-வது வரி. பெருமை பொருந்திய குறவர் குலத்து வலிமையுள்ள வேடர்கள் இலைகளால் தொன்னை தைத்து. (சு) மாற்றுக்களிறு - வேறு ஆண் யானை. கை எடுத்தும்-துதிக்கையை உயர்த்தியும். மூற்றிக்கனல் உமிழ்ந்து-கோபம் மூண்டு நெருப்பைக் கக்கி. சுழிய - சுளித்து. தூற்றி - பலர் அறியச் சொல்லி. சூழறும் - சூழ்தலை ஒழிக்கும். (௭) 1-வது வரி. இதற்கு முன் வந்து கதிர்களைத் தின்று கொண்டிருந்த உங்களைக் கூவி ஓட்டாமல் விட்டிருந்தேன். எமை எமர்கள் சுளியாரோ - எம்மை எம் ஐயன்மார் கோபிக்க மாட்டார்களா? எறி - கவணால் அடிக்கின்ற.

ஏனத்திரள் கிளைக்களரி போலமணி சிதர்த்தி
ஏனல்லவை மலைச்சாரலில் திரியுங்கர டியும்
மானும்மரை யினமும்மயில் மற்றும்பல வெல்லாம்
தேனுண்பொழில் சோலைமிகு சீபர்ப்பத மலையே.

நல்லாரவர் பலர்வாழ்தரு வயல்நாவல வூரன்
செல்லலுற வரியசிவன் சீபர்ப்பத மலையை
அல்லலவை தீரச்சொன தமிழ்மாலைகள் வல்லார்
ஒல்லைச்செல உயர்வானகம் ஆண்டங்கிருப் பாரே. கo

திருச்சிற்றம்பலம்

## 78. திருக்கேதாரம்

பண் - நட்டபாடை

தி ரு ச் சி ற் ற ம் ப ல ம்

வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய்செய்த பறிதான்
தாழா(து)அறஞ் செய்மின்தடங் கண்ணான்மல ரோனும்
கீழ்மேலுற நின்றான்திருக் கேதாரமெ னீரே. க

(கூ) ஏனத்திரள் கிளைக்க - பன்றிக் கூட்டங்கள் நிலத்தைத் தோண்ட. எரிபோலம் மணி சிதர்த்தி - நெருப்புப்போல் ஒளி வீசும் இரத்தினங்களைச் சிதரச்செய்து. ஏனல் அவை - தினை (விளையும்). (கo) செல்லல் உற அரிய - செல்வதற்கு அருமையான. ஒல்லைச் செல - விரைவாகச் சென்று.

(க) வாழ்வு - உலகத்தில் செல்வம் முதலியவற்றோடு வாழும் வாழ்க்கை. மாயம் - பொய், நிலையில்லாதது. பாழ்போவது......... பறிதான் - பிறவியாகிய கடல் பாழடைய வேண்டியது (ஒழிந்துபோக வேண்டியது). பசி என்று சொல்லும்படியான நோய் எல்லா நற்குணங்களையும் கொள்ளை கொள்ளும் தன்மை உடையது. (ஆகையால்) தாழாது - தாமதிக்காமல். கீழ்மேல் உறநின்றான் - முறையே பன்றி உருவுடன் பூமியைத் தோண்டி அடியைத் தேடிச் செல்லவும், அன்ன வடிவோடு ஆகாயத்திற் பறந்து முடியைத் தேடவும் நின்றவனாகிய சிவபெருமான். கேதாரம் எ(ன்)னீரே - திருக்கேதாரம் என்று சொல்லுங்கள்.

பறியேசுமந் துழல்வீர்பறி நரிகீறுவ தறியீர்
குறிகூவிய கூற்றங்கொளும் நாளால்அறம் உளவே
அறிவானிலும் அறிவான்ந(ல்)ல நறுநீரொடு சோறு
கிறிபேசிநின் றிடுவார்தொழு கேதாரமெ னீரே. உ.

கொம்பைப்பிடித் தொருக்காலர்க ளிருக்கான்மலர் தூவி
நம்பன்நமை யாள்வானென்று நடுநாளையும் பகலும்
கம்பக்களிற் றினமாய் நின்று சுனைநீர்களைத் தூவிச்
செம்பொற்பொடி சிந்துந்திருக் கேதாரமெ னீரே. ங.

உழக்கேஉண்டு படைத்(து)ஈட்டிவைத் திழப்பார்களுஞ் சிலர்
வழக்கேயெனிற் பிழைக்கேமென்பர் மதிமாந்திய மாந்தர் [கள்
சழக்கேபறி நிறைப்பாரொடு தவமாவது செயன்மின்
கிழக்கேசல மிடுவார்தொழு கேதாரமெ னீரே. ச

வாளோடிய தடங்கண்ணியர் வலையிலழுந் தாதே
நாளோடிய நமனார்தமர் நணுகாமுனம் நணுகி
ஆளாயுய்ம்மின் அடிகட்கிட மதுவேயெனி லிதுவே
கீளோடர வசைத்தானிடங் கேதாரமெ னீரே. ரு

---

(உ) பறி-உடம்பு, பொன். பறிநரி கீறுவது-உடலை நரி தோண்டிக் கிழிப்பதை. 2-வது வரி. இலட்சியத்தினிடத்து கூவிக்கொண்டு வரும் யமன் உயிரைக்கொண்டு போகும் நாளில் அறம் செய்ய முடியுமா? அறிவானிலும் அறிவான் - அறிகின்றவனிடத்தும் உடனிருந்து அறிகின்றவன். நல நறுநீரொடு சோறு கிறிபேசி நின்று இடுவார் - நல்ல மணம் கமழும் நீரொடு ஆகாரத்தையும் பரிகாச வார்த்தைகள் பேசி நின்று இடுபவர்கள். (ங) 1-வது வரி. ஒருக்காலர்கள் நம்பன்நமை ஆள்வானென்று கொம்பைப் பிடித்து இருக்கான் மலர்தூவி—உரைநடை. ஒருக்கு காலர்கள் ஒருக் காலர்கள் என நின்றது; பிராணவாயுவைத் தம்பித்தவர்கள்; மனத்தை ஒடுக்கிய வழியை யுடையவர்களுமாம்; கால் - வழி. இருக்கால் - இருக்குவேத மந்திரங்களால். கொம்பு - யோகதண்டம். (ச) வழக்கேயெனிற் பிழைக்கேமென்பர் - அறஞ் செய்வாயாக என்றால் பிழைத்தலரிது என்று கூறுவர். சழக்கு - அறியாமை. பறி - பொன். கிழக்கே சலமிடுவார் - கிழக்கு நோக்கி அநுட்டானம் செய்பவர். சலம் - நீர். (ரு) 1-2-வது வரி. ஒளி வீசும் விசாலமான கண்களையுடைய மாதர்கள் வலையில் சிக்காமல், நாட்கள் விரைவாகச் செல்ல, யமதூதர்களும் வருவதற்கு முன்னமே விரைந்து சென்று சிவபெருமானுக்கு அடிமைப்பட்டுப் பிழையுங்கள்.

தளிசாலைகள் தவமாவது தம்மைப்பெறி லன்றே
குளிகீருளங் குருக்கேத்திரங் கோதாவிரி குமரி
தெளியீருளஞ் சீபர்ப்பதந் தெற்குவடக் காகக்
கிளிவாழையொண் கனிகீறியுண் கேதாரமெ னீரே. ௬

பண்ணின்தமி ழிசைபாடலின் பழவேய்முழ வதிரக்
கண்ணின்னொளி கனகச்சுனை வயிரம்மவை சொரிய
மண்ணின்றன மதவேழங்கள் மணிவாரிக்கொண் டெறியக்
கிண்ணென்றிசை முரலுந்திருக் கேதாரமெ னீரே. ௭

முளைக்கைப்பிடி முகமன்சொலி முதுவேய்களை யிறுத்துத்
துளைக்கைக்களிற் றினமாய்நின்று சுனைநீர்களைத் தூவி
வளைக்கைப்பொழி மழைகூர்தர மயில்மான்பிணை நிலத்தைக்
கிளைக்கமணி சிந்துந்திருக் கேதாரமெ னீரே. ௮

பொதியேசுமந் துழல்வீர்பொதி அவமாவதும் அறியீர்
மதிமாந்திய வழியேசென்று குழிவீழ்வதும் வினையால்

---

(௬) தம்மைப்பெறில் அன்றே தளி சாலைகள் தவமாவது, அம் குருக்கேத்திரம் கோதாவரி குமரி உள் குளியீர் தெளியீர் உளம் - சிவபெருமானை (அடைக்கலமாகப்) பெற்றால் மாத்திரமே கோயில்களும் அறச்சாலைகளும் தவத்தின் பயனைக் கொடுக்கும்; அழகிய குருக்ஷேத்திரம் கோதாவிரி கன்னியாகுமரி முதலிய தீர்த்தங்களில் மூழ்கி மனம் தெளிவீர். (௭) பண் இன் தமிழ் இசை பாடலின் பழ வேய் முழவு அதிர - பண்ணோடு கூடிய இனிய தமிழ் இசைப்பாட்டுகளோடு முதிர்ந்த மூங்கில்களால் செய்த குழலும், மத்தளமும் சப்திக்கவும். (௮) முளைக்கைப்பிடி.....தூவி - முளைபோல் வளைந்த துதிக்கையை உடைய பெண்யானைகள் முகஸ்துதியான மொழிகளைச் சொல்லி முதிர்ந்த மூங்கில்களை ஒடித்து, துவாரமுள்ள கையையுடைய ஆண் யானைகளோடு கூட்டமாய் நின்று சுனைகளில் உள்ள நீரை இறைப்பதனால். 3, 4 வரி. வளைந்த துதிக்கைகளின் நின்றும் நீரானது மழைபோல்; மிகுதியாகப் பெய்ய, மயில்களும் பெண் மான்களும் நிலத்தைக் கீறுதலால் மணிகள் சிதறுகிற திருக்கேதாரம் என்று சொல்லுங்கள். (௯) பொதி - உடற்சுமை. அவமாவதும் அறியீர் - உடலால் ஆகும் பயனை (முத்தி அடைதலை) அடையாமல் உடம்பு வீணாக அழிந்து போவதை அறியமாட்டீர்.

கதிசூழ்கட லிலங்கைக்கிறை மலங்கவரை யடர்த்துக்
கெதிபேறுசெய் திருந்தானிடங் கேதாரமெ னீரே. கூ

நாவின்மிசை அரையன்னெடு தமிழ்ஞானசம் பந்தன்
யாவர்சிவ னடியார்களுக் கடியானடித் தொண்டன்
தேவன்திருக் கேதாரத்தை ஊரன்னுரை செய்த
பாஇன்தமிழ் வல்லார்பர லோகத்திருப் பாரே. கo

திருச்சிற்றம்பலம்

சிலநாள் திருக்காளத்தியில் தங்கியிருந்து, பொருவிடையார் வீற்றிருக்கும் பிறபதிகளையும் வணங்கித் திருப்பதிகம் பாடி 'புவியுட் சிவலோகம் போலத் திங்கள் முடியார் அமர்ந்த திருஒற்றியூரைச் சென்றடைந்தார்'. அவ்விடத்தில் அடியார்கள் எதிர்கொள்ளக் கோயிலினுட்சென்று 'ஊனும் உயிரும் கரைந்துருக உச்சி குவித்த கையினுடன், ஆன காதலுடன் வீழ்ந்தார் ஆரா அன்பின் ஆரூரர்' சிவபெருமான் சேவடியில் கூட்டும் உணர்வு கொண்டெழுந்து,

## 91. திருஒற்றியூர்

### பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

பாட்டும் பாடிப் பரவித் திரிவார்
ஈட்டும் வினைகள் தீர்ப்பார் கோயில்
காட்டுங் கலமுந் திமிலுங் கரைக்கே
ஓட்டுந் திரைவாய் ஒற்றி யூரே. க

---

(கூ) கதி சூழ் கடல் இலங்கைக்கு இறை - விரைவுடன் கூடிய கடலினாற் சூழப்பட்ட இலங்கைக்கு அரசனான இராவணன். கெதி பேறு - நற்கதி. (கo) பா இன் தமிழ் - இனிய தமிழ்ப் பா.

(க) காட்டும்......ஒற்றியூரே - காணப்படுகிற கப்பலும், தெப்பமும் கரையினிடத்துச் செலுத்துகின்ற அலைமோதுகிற திருவொற்றியூராகும்.

பந்துங் கிளியும் பயிலும் பாவை
சிந்தை கவர்வார் செந்தீ வண்ணர்
எந்தம் அடிகள் இறைவர்க் கிடம்போல்
உந்தும் திரைவாய் ஒற்றி யூரே. உ

பவளக் கனிவாய்ப் பாவை பங்கன்
கவளக் களிற்றின் உரிவை போர்த்தான்
தவழும் மதிசேர் சடையாற் கிடம்போல்
உகளுந் திரைவாய் ஒற்றி யூரே. ௩

என்ன தெழிலும் நிறையுங் கவர்வான்
புன்னை மலரும் புறவில் திகழும்
தன்னை முன்னம் நினைக்கத் தருவான்
உன்னப் படுவா னொற்றி யூரே. ௪

பணங்கொள் அரவம் பற்றிப் பரமன்
கணங்கள் சூழக் கபாலம் ஏந்தி
வணங்கும் இடைமென் மடவா ரிட்ட
உணங்கல் கவர்வா னொற்றி யூரே. ௫

படையார் மழுவன் பால்வெண் ணீற்றன்
விடையார் கொடியன் வேத நாவன்
அடைவார் வினைக ளறுப்பா னென்னை
உடையான் உறையும் ஒற்றி யூரே. ௬

சென்ற புரங்கள் தீயில் வேவ
வென்ற விகிர்தன் வினையை வீட்ட

---

(உ) பயிலும் பாவை - பழகுகிற உமாதேவியாருடைய. (௩) கவளக்களிறு-கவளத்தை உண்கின்ற யானை. கவளம் - வாயளவு கொண்ட உணவு. உகளும் - தாவும். (௪) எழில் - அழகு. நிறை - கற்பு. கவர்வான் - கொள்ளை கொள்பவன். புறவு - முல்லை நிலம். (௫) பணம்கொள் - படத்தை உடைய. கணங்கள் - பூதகணங்கள். வணங்கும் - துவளும். உணங்கல் - சோறு. (௬) உடையான் - ஆளாக உடையவன். (எ) சென்ற - திரியும்.

நன்று நல்ல நாதன் நரையே(று)
ஒன்றை யுடையா னொற்றி யூரே. எ

கலவம் மயில்போல் வளைக்கை நல்லார்
பலரும் பரவும் பவளப் படியான்
உலகி லுள்ளார் வினைகள் தீர்ப்பான்
உலவுந் திரைவா யொற்றி யூரே. அ

பற்றி வரையை யெடுத்த அரக்கன்
இற்று முரிய விரலால் அடர்த்தார்
எற்றும் வினைகள் தீர்ப்பார் ஓதம்
ஒற்றுந் திரைவா யொற்றி யூரே. கூ

ஒற்றி யூரும் அரவும் பிறையும்
பற்றி யூரும் பவளச் சடையான்
ஒற்றி யூர்மேல் ஊர னுரைத்த
கற்றுப் பாடக் கழியும் வினையே. க0

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகத்தைக் 'கோதில் அமுத இசைகூடப்' பாடினார். திருவொற்றியூர் பெருமானைக் கூடுங் காலங்களில் அணைந்து பரவிக் கும்பிட்டு இனிதிருந்தார். இவ்வாறிருக்குநாளில், முன்னர்க் கூறிய அநிந்திதையார், சிவபெருமான் திருஅருளால் கயிலையைவிட்டு நீங்கி, ஞாயிறு என்னும் ஊரில், வேளாளர் குலத்தில், ஞாயிறுகிழார் என்பவர்க்குப் புத்திரியாக அவதரித்தார். அவர், சங்கிலியார் என்னும் திருநாமத்துடன் மலையான் மடந்தை மலர்ப்பாதம் மறவாத உணர்வுடன் வளர்ந்து,மணப்பருவமுற்றார். அவர்தம் பெற்றோர் தம்முடைய அருமை மகளுக்கு மணம் செய்யவேண்டும் என்று பேசினார்கள்.

---

(எ) நரை ஏறு - வெள்ளெருது. (அ) கலவம் - தோகை. (கூ) எற்றும் - வருத்துகிற. ஓதம் - கடலினிடத்து உண்டாகும். ஒற்றும் திரைவாய் - மோதும் அலைகளை உடைய. (க0) ஒற்றி........ சடையார்-பகைமைகொண்டு தனித்து இயங்கும் பாம்பையும், பிறையையும் ஒன்று சேர்த்துத் தவழும்படிச் செய்த பவளம்போலும் சடையையுடையவர்.

இதைக் கேட்ட சங்கிலியார் "நான் சிவபெருமான் திருவருள் பெற்ற ஒருவர்க்கு உரியவள்; வேறு எப்படி முடியுமோ" என்று எண்ணி அஞ்சி, உணர்வு மயங்கி மூர்ச்சித்தார். அருகில் நின்ற பெற்றோர் மனம் பதைத்து அன்புடன் எடுத்து விரைப்பனிநீர் தெளித்து, மூர்ச்சை தெளிவித்து "உனக்கு என்ன நேரிட்டது" என்று வினவ, சங்கிலியார் "எனக்கு நீங்கள் பார்த்து மணம் செய்வது தகாது. யான் சிவபெருமான் அருள்பெற்றவர் ஒருவர்க்கே உரியவள். இனி யான் திருவொற்றியூரை அடைந்து சிவனருள் வழிச் செல்வேன்" என்று தங் கருத்தை வெளிப்படையாய்க் கூற, அது கேட்ட பெற்றோர் பயமும் அதிசயமும் அடைந்து, இந்த விஷயத்தை மற்றவர்க்குத் தெரிவியாமல் மறைத்து இல்லறம் நடத்தி வந்தார்கள். அப்போது சங்கிலியாரை மணக்க விரும்பிய ஒருவன் சிலரை மகட்பேசி முடிக்க அனுப்பிவைத்தான். அவர்கள் ஞாயிறு கிழாரிடம்போந்து பெண்கேட்க, அவர் உண்மையைக் கூறாமல் தந்திரமாய்ப் பேசி அவர்களை அனுப்பிவிட்டார். பெண்பேச அனுப்பினவனும், பேச வந்தவர்களும் சில தினங்களில் இறந்துபோனார்கள். அது கேட்ட சங்கிலியின் பெற்றோர்கள் அச்சமுற்று, இந்த விஷயத்தை முக்கியமானவர்களுக்குச் சொல்லி, தெய்வத் தன்மை வாய்ந்த சங்கிலியாரைத் திருவொற்றியூருக்கு அழைத்துக்கொண்டுபோய்க் கன்னிமாடம் ஒன்று கட்டுவித்து, அதில் அம்மையாரை இருக்கச்செய்து தம்மூருக்கு வந்து சேர்ந்தார்கள். சங்கிலியார் திருவொற்றியூரில் கன்னிமாடத்தி லிருந்துகொண்டு, காலம் தவறாது திருக்கோயிலுக்குச் சென்று தொழுது, பண்டு கயிலையில் தாம் செய்துகொண்டிருந்த மலர் மாலைதொடுக்கும் பணியின் உணர்வு தலைப்பட்டதனால், அத்திருத்தொண்டே செய்துகொண்டு வருங்காலத்து, ஒருநாள் மாலை தொடுத்துச் சிவபெருமானுக்குச் சாத்தக் கொடுத்து, திரையின்பின் மின்போல் மறைந்த சங்கிலியாரை நம்பிஆரூரர் திருவருள் கூட்டுவிக்கக் கண்டு மனம் தடுமாறி, அவர்மேல் காதல்கொண்டு அருகிருந்தவர்களை நோக்கி, "மின்னுக் கொடிபோல்வாள் யார்" என்று வினவுதலும்,

அருகு நின்றார் விளம்புவார் "அவர்தாம் நங்கை சங்கிலியார்
பெருகுந் தவத்தால் ஈசர்பணி பேணுங் கன்னி யார்"என்ன,

"இருவ ரால்இப் பிறவியைஎம் பெருமான் அருளால் எய்துவித்தார்
மருவும் பரவை ஒருத்தி,இவள் மற்றை யவளாம்" எனமருண்டார்.

"மின்னார் சடையார் தமக்காளாம் விதியால் வாழும் எனைவருத்தித்
தன்ஆர் அருளால் வரும்பேறு தவத்தால் அணையா வகைதடுத்தே
என்னு நயிரும் எழில்மலருங் கூடப் பிணைக்கும் இவள்தன்னைப்
பொன்னார் இதழி முடியார்பால் பெறுவேன்" என்று போய்ப்புக்கார்.

—பே. ஏ. 229, 230.

பிறகு சங்கிலியாரைத் தமக்கு மணம் செய்விக்கும்படி ஒற்றியூர் அமர்ந்த இலகுசோதிப் பரம்பொருளைப் பின்வருமாறு தொழுதார்.

"மங்கை யொருபால் மகிழ்ந்ததுவும் அன்றி மணிநீள் முடியின்கண்
கங்கை தன்னைக் கரந்தருளுங் காதல் உடையீர்! அடியேனுக்
கிங்கு நுமக்குத் திருமாலை தொடுத்தென் உள்ளத் தோடைஅவிழ்த்த
திங்கள் வதனச் சங்கிலியைத் தந்தென் வருத்தந் தீரும்"என.

அண்ண லார்முன் பலவும்அவர் அறிய உணர்த்திப் புறத்தணைந்தே, "எண்ண மெல்லாம் உமக்கடிமை யாமா றெண்ணும் என் நெஞ்சில், திண்ண மெல்லாம் உடைவித்தாள் செய்வ தொன்றும் அறியேன்யான், தண்ணி லாமின் னொளிர் பவளச் சடையீர்! அருளும்" எனத்தளர்வார்.

—பே. ஏ. 232, 233.

இவ்வாறு சங்கிலியார் மீது கொண்ட காதலால் மனம் தளர்ந்து, சிவபெருமானை நோக்கிச் சங்கிலியாரை மணம் செய்விக்க வேண்டுமென்று பிரார்த்திக்க, வேலை விடமுண்ட தம்பிரானார் வன்தொண்டர்பால் எய்தி "சங்கிலியை உனக்குத் தருகின்றோம்; கொண்ட கவலை ஒழி" என்று கூறியருளிச் சங்கிலியார் கனவில் சிவபெருமான் கருணை பொழிந்தனைய நீற்றுக்கோல வேதியராய்த் தோன்றி,

"சாருந் தவத்துச் சங்கிலிகேள்! சால என்பால் அன்புடையான்
மேரு வரையின் மேம்பட்ட தவத்தான் வெண்ணெய் நல்லூரில்
யாரும் அறிய யான்ஆள உரியான் உன்னை எனைஇரந்தான் [ன்றார்.
வார்கொள் முலையாய்! நீஅவனை மணத்தால் அணைவாய் மகிழ்ந்"தெ

—பே. ஏ. 239.

உடனே சங்கிலியார் நமஸ்கரித்து "எம்பிரானே, தேவரீர் அருள்செய்த ஒருவர்க்கு உரியேன். ஆனால் அவர் திருவாரூரில்

மகிழ்ந்துறைவதை அறிந்தருளும்" என்று நம்பிஆரூரர் பரவையாரை முன்னமே மணந்திருப்பதைக் குறிப்பாய்த் தெரிவித்தார். அதற்கு ஒற்றியூர்ப் பிரான் "அவன் உன்னை விட்டுப் பிரியாமைக்கு ஒரு சபதம் செய்வான்" என்று கூறி, வன்தொண்டரிடம் சென்று "நீ சங்கிலியை மணந்துகொள்ள விரும்பினால், 'நான் உன்னைப் பிரியேன்' என்று நீ அவளிடம் இன்றிரவே சபதம் செய்து தரல் வேண்டும்" என்று சிவபிரான் அருள் செய்ய, வன்தொண்டர் "சிவபெருமான் எழுந்தருளியுள்ள தலங்களைத் தரிசிக்கும் கடமை பூண்ட எனக்கு இந்த சபதம் தடை ஆகும்" என்று எண்ணி, ஒரு சூழ்ச்சி செய்ய நினைத்து, "நான் சபதம் செய்துகொடுக்கத் திருக்கோயிலுக்கு வரும் போது, தேவரீர் கோயிலை விட்டு மகிழமரத்தின்கீழ் எழுந்தருள வேண்டும்" என்று வேண்டினார். அதற்குச் சிவபிரான் உடன்பட்டுச் சங்கிலியாரிடம் முன்போலக் கனவில் சென்று "ஆரூரன் உனக்கு நம் சந்நிதிக்கெதிரில் சபதம் கொடுக்க இசைந்து வருவான்; நீ அதற்கு இசையாது மகிழின்கீழ் சபதம் செய்யும்படிச் சொல்" என்று தெரிவித்து மறைந்தார். உடனே சங்கிலியார் விழித்தெழுந்து இறைவன் கருணைத் திறத்தை நினைந்து நினைந்து உருகி, தாம் கண்ட கனவைத் தோழியர்க்குக் கூறி, திருப்பள்ளி எழுச்சிக்கு மலர் தொடுப்பதற்குக் கோயிலுக்கு வந்தார். சங்கிலியார் வரவை எதிர்பார்த்திருந்த ஆரூரர், அவ்வம்மையாருக்கு அருகே சென்று சிவபெருமான் திருவருள் திறத்தினைக் கூறி, சபதம் செய்து கொடுத்தற் பொருட்டு, சந்நிதிக்கு வரவேண்டுமென்று அழைத்தார். சங்கிலியார் கனவில் நிகழ்ந்ததை அறிந்த தோழியர்கள் "சுவாமீ, இதற்காக சிவபெருமான் சந்நிதியில் சபதம் செய்வது தகாது; மகிழமரத்தின் கீழ் செய்தால் போதும்" என்று கூறினார்கள். அது கேட்ட வன்தொண்டர் சிவபெருமான் திருவிளையாடலை அறியாது திகைத்து, உடன்படாவிட்டால் மணம் தவறும் என்று நினைத்து, சபதம் செய்து கொடுக்கத் துணிந்து, அவர்களை மகிழின்கீழ் அழைத்துச்சென்று, சங்கிலியாரும் காணும்படி மூவாத திருமகிழை முக்காலும் வலம்வந்து "திருவொற்றியூரை விட்டு அகலேன்" என்று சபதம் செய்தார். ஒற்றியூர்ப் பெருமான் அன்றிரவே அப்பதியிலுள்ள தொண்டர்கள் கனவில் தோன்றி நம்பிஆரூரருக்கும் சங்கிலியாருக்கும் மணம்செய்து

வைக்கும்படி கட்டளை யிட்டருளினர். அப்படியே திருத்தொண்டர்களும் மற்றவர்களும் மிக்க மகிழ்ச்சியுடன் இருவர்க்கும் கலியாணம் செய்துமுடித்தார்கள்.

[1]பண்டுநிகழ் பான்மையினற் பசுபதிதன் அருளாலே
வண்டமர்பூங் குழலாரை மணம்புணர்ந்த வன்றொண்டர்
புண்டரிகத் தவள்வனப்பைப் புறங்கண்ட தூநலத்தைக்
கண்டுகேட் டுண்டுயிர்த்துற் [2]றமர்ந்திருந்தார் காதலினல்.

யாழின்மொழி எழில்முறுவல் இருகுழைமேற் கடைபிறழும்
மாழைவிழி வனமுலையார் மணியல்குல் துறைபடிந்து
வீழுமவர்க் கிடைதோன்றி மிகும்புலவி புணர்ச்சிக்கண்
ஊழியாம் ஒருகணந்தான் அவ்வூழி ஒருகணமாம்.

பெ. ஏ. 267, 268.

நம்பிஆரூரர் இவ்வாறு பலகாலம் சங்கிலியாருடன் பேரின்பத்தை நுகர்ந்துகொண்டும், திருவொற்றியூர் மன்னிய சிவபெருமானைத் தொழுதுகொண்டும் அவ்விடத்தில் வாழ்ந்து வந்தார்.

## திருவொற்றியூர் நீங்கிக் கண்ணிழந்தது

வன்றொண்டர் இவ்வாறு இருக்கும்போது, தென்றற் காற்று வீசத் தொடங்கியவுடன், அவர்க்குத் திருவாரூர் அழகருடைய வசந்த விழா நினைவு வந்தது ; வீதிவிடங்கப் பெருமானுடைய திருவிழாவில் பரவையார் பாடுதலையும் ஆடுதலையும் கண்டு கேட்டவர்போல நினைந்தார்.

பூங்கோயில் அமர்ந்தாரைப் புற்றிடங்கொண் டிருந்தாரை
[3]நீங்காத காதலினல் நினைந்தாரை நினைவாரைப்
[4]பாங்காகத் தாம்முன்பு பணியவரும் பயன்உணர்வார்
"ஈங்குநான் மறந்தேன்" என்(று) ஏசறவால் மிகஅழிவார்.

---

[1]பண்டுநிகழ் பான்மையினல் - திருக்கயிலையில் முன்னே நிகழ்ந்த முறைப்படி.

[2]அமர்ந்திருந்தார் - அநுபவித்திருந்தார். கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும் - ஒண்தொடி கண்ணே உள.—(திருக்குறள்.)

[3]நீங்காத காதலினல் நினைந்தாரை நினைவாரை - இடையறாப் பேரன்பால் தம்மை நினையும் அடியாரைத் தாம் நினைந்து அவர்க்கு அருள்புரியும் இயல்புடைய தியாகேசப்பெருமானை.

[4]பாங்காக - முறைப்படி.

மின்னொளிர்செஞ் சடையானை வேதமுதல் ஆனானை
மன்னுபுகழ்த் திருவாரூர் மகிழ்ந்தானை மிகநினைந்து
பன்னியசொற் "பத்திமையும் அடிமையையும் கைவிடுவான்"
என்னும்இசைத் திருப்பதிகம் எடுத்தியம்பி இரங்கினார்.

பெ. ஏ. 272, 273.

## 51. திருவாரூர்

### பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

பத்திமையும் அடிமையையுங் கைவிடுவான் பாவியேன், பொத்தினநோ யதுவிதனைப் பொருளறிந்தேன் போய்த் தொழுவேன், முத்தினைமா மணிதன்னை வயிரத்தை மூர்க்க னேன், எத்தனைநாள் பிரிந்திருக்கேன் என்னாரூர் இறைவ னையே. க

ஐவணமாம் பகழியுடை அடல்மதனன் பொடியாகச்
செவ்வணமாம் திருநயனம் விழிசெய்த சிவமூர்த்தி
மையணவுங் கண்டத்து வளர்சடையெம் ஆரமுதை
எவ்வணம்நான் பிரிந்திருக்கேன் என்னாரூ ரிறைவனையே. உ

சங்கலக்குந் தடங்கடல்வாய் விடஞ்சுடவந் தமரர்தொழ
அங்கலக்கண் தீர்த்துவிடம் உண்டுகந்த அம்மானை
இங்கலக்கும் உடற்பிறந்த அறிவிலியேன் செறிவின்றி
எங்குலக்கப் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. ௩

---

(க) 1-2-வது வரி. அன்புடைமையையும் அடிமைத் தொண்டையும் கைவிடும்படியாகப் பாவியேனாகிய என்னை மூடியுள்ள நோயின் தன்மையை அறிந்தேன். அந்த நோய் கெடும்படியாகத் திருவாரூர் சென்று தொழுவேன். (உ) ஐவணமாம் பகழி - ஐந்துவிதமான புஷ்பபாணம். தாமரை, அசோகு, மா, முல்லை, நீலம். எவ்வ(ண்)ணம் - எவ்விதம். (௩) சங்கு அலக்கும் - சங்குகளை எறிகிற. 3, 4-வது வரி. இவ்வுலகில் துன்பத்தை அனுபவிக்கும் பொருட்டு இந்த உடலோடு பிறந்த அறிவில்லாத நான் உன்னைச் சார்ந்து இன்பம் பெறாமல், எவ்விடத்தில் அழியும்படி நான் ஆரூர் இறைவனைப் பிரிந்திருப்பேன். செறிவு - கலத்தல்.

இங்ஙனம்வந் திடர்ப்பிறவிப் பிறந்தயர்வேன் அயராமே
அங்ஙனம்வந் தெனையாண்ட அருமருந்தென் னாரமுதை
வெங்கனல்மா மேனியனை மான்மருவுங் கையானை
எங்ஙனம்நான் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. ச

செப்பரிய அயனொடுமால் சிந்தித்துந் தெரிவரிய
அப்பெரிய திருவினையே அறியாதே அருவினையேன்
ஒப்பரிய குணத்தானை இணையிலியை அணைவின்றி
எப்பரிசு பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. ரு

வன்னாகம் நாண்வரைவில் அங்கிகணை அரிபகழி
தன்னாகம் உறவாங்கிப் புரமெரித்த தன்மையனை
முன்னாக நினையாத மூர்க்கனேன் ஆக்கைசுமந்(து)
என்னாகப் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. சு

வன்சயமாய் அடியான்மேல் வருங்கூற்றின் உரங்கிழிய
முன்சயமார் பாதத்தால் முனிந்துகந்த மூர்த்திதனை
மின்செயும்வார் சடையானை விடையானை அடைவின்றி
என்செயநான் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. எ

முன்னெறிவா னவர்கூடித் தொழுதேத்தும் முழுமுதலை
அந்நெறியை அமரர்தொழும் நாயகனை அடியார்கள்
செந்நெறியைத் தேவர்குலக் கொழுந்தைமறந் திங்ஙனநான்
என்னறிவான் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. அ

கற்றுளவான் கனியாய கண்ணுதலைக் கருத்தார
உற்றுளனாம் ஒருவனைமுன் இருவர்நினைந் தினிதேத்தப் (டு)
பெற்றுளனாம் பெருமையனைப் பெரிதடியேன் கையகன்றிட்
டெற்றுளனாய்ப் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. கூ

---

(ச) அயர்வேன் - தளர்வேன். அங்ஙனம் வந்து - திருவெண்ணெய்நல்லூரில் கிழவேதியனாகி வந்து அடிமை ஓலை காட்டி. (ரு) எப்பரிசு - எவ்விதம். (சு) கணைஎன்பது அம்பினிற் பூட்டிய அலகு. பகழி - அம்பு. ஆகம் உற - மார்பிற் பொருந்த. வாங்கி - வளைத்து. (எ) சயம் - வெற்றி. உரம் - மார்பு. (அ) அந்நெறி - அம்நெறி, அழகிய நெறி, நல்ல நெறி. செந்நெறி - செம்மையான நெறி, திரு அருள் நெறி. (கூ) வான்கனி - மேலான கனி. கையகன்றிட்டு - விட்டு நீங்கி.

ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான்செய்யுந் துரிசுகளுக் குடனாகி
மாழையொண்கண் பரவையைத்தந் தாண்டானை மதியில்லா
ஏழையேன் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. க0

வங்கம்மலி கடல்நஞ்சை வானவர்கள் தாம்உய்ய
நுங்கிஅமு தவர்க்கருளி நொய்யேனைப் பொருட்படுத்துச்
சங்கிலியோ டெனைப்புணர்த்த தத்துவனைச் சழக்கனேன்
எங்குலக்கப் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. கக

பேரூரும் மதகரியின் உரியானைப் பெரியவர்தஞ்
சீரூருந் திருவாரூர்ச் சிவனடியே திறம்விரும்பி
ஆரூரன் அடித்தொண்டன் அடியன்சொல் அகலிடத்தில்
ஊரூர னிவைவல்லார் உலகவர்க்கு மேலாரே. கஉ

திருச்சிற்றம்பலம்

பின்பு திருவாரூருக்குச் செல்லவேண்டும் என்னும் அவா மேலிட, உன்ன இனியராகிய ஒற்றிப்பெருமான் கோயில் புக்கு வணங்கி, திருவொற்றியூரைவிட்டு நீங்கியவுடன் தாம்செய்த சபதவழி நில்லாது வழுவினமையால் கண்கள் மறைய மூர்ச்சித்தார்.

செய்வதனை அறியாது திகைத்தருளி நெடிதுயிர்ப்பார்
"மைவிரவு கண்ணார்பால் சூளுறவு மறுத்ததனால்
இவ்வினைவந் தெய்தியதாம்" எனநினைந்"தெம் பெருமானை
எய்தியஇத் துயர்நீங்கப் பாடுவேன்" எனநினைந்து.

"அழுக்கு மெய்கொடென் றெடுத்தசொற் பதிகம் ஆதி
நீள்புரி அண்ணலை ஓதி, வழுத்தும் நெஞ்சொடு தாழ்ந்துநின்

(க0) துரிசு - குற்றம். உடனாகி - துணையாகி. மாழை - மாவடுவின் பிளப்பைப் போன்ற. (கக) வங்கம் - கப்பல். நுங்கி - விழுங்கி. நொய்யேன் - அற்பன். சழக்கன் - மூடன், பொய்யன். (கஉ) பேர் ஊரும் - பெருமை பொருந்திய. பெரியவர்தம் சீர் ஊரும் திருவாரூர் - சிவனடியார்களாகிய பெரியோர்கள் புகழ் மிக்கு விளங்குகின்ற திருவாரூரில் வீற்றிருக்கும். சிவனடியே திறம்விரும்பி - சிவனடித்திறமே விரும்பி.

றுரைப்பார் மாதொர் பாகனூர் மலர்ப்பதம் உன்னி, "இழுக்கு நீக்கிட வேண்டும்" என் றிரந்தே எய்து வெந்துயர்க் கையற வினுக்கும், பழிக்கும் வெள்கிநல் லிசைகொடு பரவிப் பணிந்து சாலவும் பலபல நினைவார். —பெ. ஏ. 275, 276.

## 54. திருவொற்றியூர்

### பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

அழுக்கு மெய்கொடுன் திருவடி யடைந்தேன் அதுவும் நான்படப் பாலதொன் றானால், பிழுக்கை வாரியும் பால்கோள்வர் அடிகேள் பிழைப்ப னாகிலுந் திருவடிப் பிழையேன், வழுக்கி வீழினுந் திருப்பெய ரல்லால் மற்றுநான் அறியேன் மறுமாற்றம், ஒழுக்க என்கணுக் கொருமருந் துரையாய் ஒற்றி யூரெனும் ஊருறை வானே. க

கட்ட னேன்பிறந் தேனுனக் காளாய்க் காதற் சங்கிலி காரண மாக, எட்டி னால்திக ழுந்திரு மூர்த்தி யென்செய் வானடி யேனெடுத் துரைக்கேன், பெட்ட னாகிலுந் திருவடிப் பிழையேன் பிழைப்ப னாகிலுந் திருவடிக் கடிமை, ஒட்டி னேனெனை நீசெய்வ தெல்லா மொற்றி யூரெனும் ஊருறை வானே. உ

கங்கை தங்கிய சடையுடைக் கரும்பே கட்டி யேபலர்க் குங்களை கண்ணே, அங்கை நெல்லியின் பழத்திடை யமுதே அத்தா என்னிடர் ஆர்க்கெடுத் துரைக்கேன், சங்கும் இப்பி

(க) 2-வது வரி. பாலில் பிழுக்கை விழுந்துவிட்டால், அதை வாரி எறிந்துவிட்டுப் பாலை எடுத்துக்கொள்ளுவார்கள்; அதைப்போல் என்னிடம் இருக்கும் குற்றங்களை நீக்கிவிட்டுக் குணத்தை மாத்திரம் எடுத்துக்கொண்டு எனக்குக் கண் கொடுக்கவேண்டும். மறுமாற்றம் - வேறு சொற்கள். (ஐயோ அப்பாபோன்றவை). (உ) கட்டனேன் - இடுக்கண் உடையேன். 2-வது வரி. அட்டமூர்த்தம். பெட்டன் - பொய்யன், குருடன். என்னைநீ செய்வதெல்லாம் ஒட்டினேன் - என்னை நீ செய்வதற்கு எல்லாம் சம்மதித்தேன். (ங) களைகண் - புகலிடம். இப்பி - முத்துச்சிப்பி.

யுஞ் சலஞ்சலம் முரல வயிரம் முத்தொடு பொன்மணி வரன்றி, ஒங்கு மாகடல் ஓதம்வந் துலவும் ஒற்றி யூரெனும் ஊருறை வானே. ௩

ஈன்று கொண்டதோர் சுற்றமொன் றன்றால் யாவ ராகிலென் அன்புடை யார்கள், தோன்ற நின்றருள் செய் தளித் திட்டாற் சொல்லு வாரையல் லாதன சொல்லாய், மூன்று கண்ணுடை யாயடி யேன்கண் கோள்வ தேகணக் குவழக் காகில், ஊன்று கோலெனக் காவதோன் றருளாய் ஒற்றி யூரெனும் ஊருறை வானே. ௪

வழித்த லைப்படு வான்முயல் கின்றேன் உன்னைப்போ லென்னைப் பாவிக்க மாட்டேன், சுழித்தலைப் பட்ட நீரது போலச் சுழல்கின் றேன்சுழல் கின்றதென் னுள்ளம், கழித் தலைப்பட்ட நாயது போல ஒருவன் கோல்பற்றிக் கறகற இழுக்கை, ஒழித்து நீயரு ளாயின செய்யாய் ஒற்றி யூரெனும் ஊருறை வானே. ரு

மானை நோக்கியர் கண்வலைப் பட்டு வருந்தி யானுற்ற வல்வினைக் கஞ்சித், தேனை யாடிய கொன்றையி னாயுன் சீல முங் குணமுஞ் சிந்தியாதே, நானு மித்தனை வேண்டுவ தடி யேன் உயிரோடு நரகத் தழுந்தாமை, ஊன முள்ளன தீர்த் தருள் செய்யாய் ஒற்றி யூரெனும் ஊருறை வானே. சு

மற்றுத் தேவரை நினைந்துனை மறவேன் எஞ்சி னொரொடு வாழவு மாட்டேன், பெற்றி ருந்து பெருதொழி கின்ற பேதை யேன்பிழைத் திட்டதை யறியேன், முற்றும் நீயெனை

---

(௩) சலஞ்சலம்-ஒருவகைச் சங்கு. முரல-சப்திக்க. வரன்றி-வாரி. ஒங்கு - ஓங்கு, பெருமைபொருந்திய. (௪) அளித்திட்டால்-காப்பாற்றி னால். அல்லாதன-கடுஞ்சொல். (ரு) வழித்தலைப்படுவான் - திருவருள் நெறியில் வாழும் பொருட்டு. கழித்தலைப்பட்ட நாய் - கொம்பின் நுனியை வாயினால் கௌவிச் செல்லும் நாய். (சு) மான் ஐ நோக்கி யர் - மான்போலும் அழகிய பார்வையுடைய மாதர். ஊனம் - குற்றம். (எ) எஞ்சினொரொடு - உன் அன்பரல்லாத மற்றவரோடு. 2-வது வரி. உன்னுடைய திருவருளைப் பெற்றிருந்த நான், இப்போது உன் திரு வருளைப் பெறுமைக்குக் காரணமாக என்ன தவறு செய்தேன் என்பதை அறியமாட்டேன்.

முனிந்திட அடியேன் கடவ தென்னுனை நான்மற வேனேல், உற்ற நோயுறு பிணிதவிர்த் தருளாய் ஒற்றி யூரெனும் ஊருறை வானே. எ

கூடி னுய்மலை மங்கையை நினையாய் கங்கை யாயிர முக முடையாளைச், சூடி னுயென்று சொல்லிய புக்கால் தொழும்ப னேனுக்குஞ் சொல்லலு மாமே, வாடி நீயிருந் தென்செய்தி மனனே வருந்தி யானுற்ற வல்வினைக் கஞ்சி, ஊடி னுலினி யாவதொன் றுண்டே யொற்றி யூரெனும் ஊருறை வானே.

மகத்திற் புக்கதோர் சனியெனக் கானுய் மைந்தனே மணியே மணவாளா, அகத்திற் பெண்டுகள் நானொன்று சொன்னுல் அழையேற் போகுரு டானெனத் தரியேன், முகத் திற் கண்ணிழந் தெங்ஙனம் வாழ்வேன் முக்கணு முறையோ மறையோதீ, உகைக்குந் தண்கடல் ஓதம்வந் துலவும் ஒற்றி யூரெனும் ஊருறை வானே. ௯

ஓதம் வந்துல வுங்கரை தன்மேல் ஒற்றி யூருறை செல்வனை நாளும், ஞாலந் தான்பர வப்படு கின்ற நான் மறை அங்கம் ஓதிய நாவன், சீலந் தான்பெரி தும்மிக வல்ல சிறுவன் வன்றொண்டன் ஊரனுரைத்த, பாடல் பத்திவை வல்லவர் தாம்போய்ப் பரகதி திண்ணம் நண்ணுவர் தாமே.

திருச்சிற்றம்பலம்

---

(எ) அடியேன் கடவது என் - அடியேன் செய்யக் கூடியது என்ன இருக்கிறது. உற்றநோய், உறுபிணி - அடைந்துள்ள நோய், இனி வரக்கடவனவாகிய நோய். (அ) கூடினுய்........ஆமே - பார்வதிதேவியாரை முன் கூடினவராய்ப் பிறகு அவரை மறந்து ஆயிர முகமுடைய கங்காதேவியைச் சிரசின்மேல் தரித்தாய் என்று சொல்லப்புகுந்தால், அதுபோல உமது அடியவனுகிய யானும் உம் மைப் பின்பற்றித் திருவொற்றியூர் சங்கிலியை மறந்து திருவாரூர் பரவையை நினைந்தேன் என்று சொல்லவும் கூடும். ஆகையால் இது என்னுடைய தவருகாது. ஊடினுல் - பிணங்கினுல். (௯) மணவாளா - நாயகனே. உகைக்கும் ஓதம் - மேல் எழுகின்ற அலைகள். (௧0) பர கதி - மேலான கதி, முத்தி.

அங்கு நாதர்செய் யருள தாக அங்கை கூப்பிஆ நூர்தொழு நினைந்தே, பொங்கு காதல்மீ ளாநிலை மையினாற் போது வார் வழி காட்டமுன் போந்து, திங்கள் வேணியார் திருமுல்லை வாயில் சென்றி றைஞ்சிநீ டியதிருப் பதிகம், "சங்கி லிக்காக என்கண்களை மறைத்தீர்" என்று சாற்றிய தன்மையிற் பாடி.

—பெ. ஏ. 277.

## 69. திருவடமுல்லைவாயில்

### பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

திருவும்மெய்ப் பொருளும் செல்வமும் எனக்குன் சீருடைக் கழல்களேன் றெண்ணி, ஒருவரை மதியா(து) உறாமைகள் செய்து முடியும் உறைப்பனாய்த் திரிவேன், முருகமர் சோலை சூழ்திரு முல்லை வாயிலாய் வாயினா லுன்னைப், பரவிடும் அடியேன் படுதுயர் களையாய் பாசுப தாபரஞ் சுடரே.

கூடிய இலயஞ் சதிபிழை யாமைக் கொடியிடை உமையவள் காண, ஆடிய அழகா அருமறைப் பொருளே அங்கணா எங்குற் றாயென்று, தேடிய வானோர் சேர்திரு முல்லை வாயிலாய் திருப்புகழ் விருப்பால், பாடிய அடியேன் படுதுயர் களையாய் பாசுப தாபரஞ் சுடரே. உ

விண்பணிந் தேத்தும் வேதியா மாதர் வெருவிட வேழம் அன் றுரித்தாய், செண்பகச் சோலை சூழ்திரு முல்லை வாயிலாய் தேவர்தம் அரசே, தண்பொழில் ஒற்றி மாநக ருடையாய் சங்கிலிக் காஎன் கண்கொண்ட, பண்பநின் அடியேன் படுதுயர் களையாய் பாசுப தாபரஞ் சுடரே. ந

(க) திரு-முத்திச்செல்வம். உறாமைகள் செய்து முடியும் - தகாத காரியங்களைச் செய்து அவைகளை மறைத்தும். உறைப்பன் - வன்மனத்தன். முருகு-வாசனை. (உ) இலயம்-கூத்து. சதி - தாளவொத்து.

பொன்னலங் கழனிப் புதுவிரை மருவிப் பொறிவரி வண் டிசை பாட, அந்நலங் கமலத் தவிசின்மேல் உறங்கும் அல வன்வந் துலவிட வள்ளல்,செந்நெலங் கழனி சூழ்திரு முல்லை வாயிலாய் திருப்புகழ் விருப்பால்,பன்னலந் தமிழாற் பாடுவேற் கருளாய் பாசுப தாபரஞ் சுடரே. ச

சந்தன வேருங் காரகிற் குறடுந் தண்மயிற் பீலியுங் கரி யின், தந்தமுந் தரளக் குவைகளும் பவளக் கொடிகளுஞ் சும ந்துகொண் டுந்தி, வந்திழி பாலி வடகரை முல்லை வாயிலாய் மாசிலா மணியே, பந்தனைகெடுத்தென் படுதுயர் களையாய் பாசுப தாபரஞ் சுடரே. ௫

மற்றுநான் பெற்ற தார்பெற வல்லார் வள்ளலே கள்ளமே பேசிக், குற்றமே செயினுங் குணமெனக் கொள்ளுங் கொள் கையால் மிகைபல செய்தேன், செற்றுமீ தோடுந் திரிபுர மெரித்த திருமுல்லை வாயிலாய் அடியேன், பற்றிலேன் உற்ற படுதுயர் களையாய் பாசுப தாபரஞ் சுடரே. ௬

மணிகெழு செவ்வாய் வெண்ணகைக் கரிய வார்குழல் மாமயிற் சாயல், அணிகெழு கொங்கை அங்கயற் கண்ணார் அருநடம் ஆடல் அறாத, திணிபொழில் தழுவு திருமுல்லை வாயிற் செல்வனே எல்லியும் பகலும், பணியது செய்வேன் படுதுயர் களையாய் பாசுப தாபரஞ் சுடரே. ௭

நம்பனே அன்று வெண்ணெய்நல் லூரில் நாயினேன் தன்னைஆட் கொண்ட, சம்புவே உம்ப ரார்தொழு தேத்துந் தடங்கடல் நஞ்சுண்ட கண்டா, செம்பொன்மா ளிகைசூழ்

(ச) பொன்நலம் கழனிப் புதுவிரைமருவி - வளப்பமிகுதியால் பொன்னைமிகுதியாய்த் தருகின்ற வயல்களில் புதியமணம் பொருந்தி. பொறிவரி - புள்ளிகளையும் கீற்றுகளையும் உடைய. கமலத்தவிசு - தாமரை மலராகிய படுக்கை. அலவன் - நண்டு. அள்ளல் - சேறு. பல்நலம் தமிழ் - பலநலங்களையுடைய தமிழ்ப்பாட்டுகள். (௫) குறடு - கட்டை. பந்தனை - பாசம். (௬) கள்ளம் - வஞ்சகம். மிகை - குற்றம். (௭) மணிகெழு - பவளம் அல்லது மாணிக்கத்தைப் போன்ற. வெண் நகை - வெண்மையான பற்கள்.

திருமுல்லை வாயில் தேடியான் திரிதர்வேன் கண்ட, பைம் பொனே அடியேன் படுதுயர்களையாய் பாசுப தாபரஞ் சுடரே.

மட்டுலா மலர்கொண்(டு) அடியிணை வணங்கும் மாணிதன் மேல்மதியாதே, கட்டுவான் வந்த காலனை மாளக் காலினால் ஆருயிர் செகுத்த, சிட்டனே செல்வத் திருமுல்லை வாயிற் செல்வனே செழுமறைபகர்ந்த, பட்டனே அடியேன் படுதுயர் களையாய் பாசுப தாபரஞ் சுடரே. ௯

சொல்லரும் புகழான் தொண்டைமான் களிற்றைச் சூழ் கொடிமுல்லையாற் கட்டிட்(டு), எல்லையில் இன்பம் அவன்பெற வெளிப்பட் டருளிய இறைவனே என்றும், நல்லவர் பரவுந் திருமுல்லை வாயில் நாதனே நரைவிடை ஏறீ, பல்கலைப் பொருளே படுதுயர் களையாய் பாசுப தாபரஞ் சுடரே. (௧0)

விரைதரு மலர்மேல் அயனொடு மாலும் வெருவிட நீண்ட எம்மானைத், திரைதரு புனல்சூழ் திருமுல்லை வாயிற் செல்வனை நாவலா ரூரன், உரைதரு மாலை ஓரைஞ்சி னோடைஞ்சும் உள்குளிர்ந் தேத்தவல் லார்கள், நரைதிரை மூப்பும் நடலையு மின்றி நண்ணுவர் விண்ணவர்க் கரசே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

**தொண்டை மானுக்கன் றருள்கொடுத் தருளுந் தொல்லை** வண்புகழ் முல்லைநா யகரைக், "**கொண்ட வெந்துயர் களை**" யெனப் பரவிக்[1]குறித்த காதலின் நெறிக்கொள வருவார், வண்டு லாமலர்ச் சோலைகள் சூழ்ந்து மாடமாளிகை நீடு**வெண்பாக்கம்**, கண்ட தொண்டர்கள் எதிர்கொள வணங்கிக் காயும் நாகத்தர் கோயிலை அடைந்தார்.

---

(௯) மட்டு உலாம் மலர்-தேன் துளிக்கின்ற (புதிய) மலர். மாணி-பிரமசாரியாகிய மார்க்கண்டேயன். சிட்டன் - பெரியோன். பட்டன் - ஞானி. (௧0) இதன் விரிவைத் திருமுல்லைவாயில் தலபுராணத்தில் காண்க.

[1]திருவாரூர்ப் பெருமானை வணங்கவேண்டும் என்னும் விருப்பத்தோடு அவ்வூர்க்குச் செல்லும் வழியே செல்கின்றவரான நம்பி ஆரூரர்.

அணைந்த தொண்டர்கள் உடன்வல மாக அங்கண் நாயகர் கோயில் முன் எய்திக், குணங்கள் ஏத்தியே பரவிஅஞ் சலியாற் குவித்த கைதலை மேற்கொண்டு நின்று, வணங்கி "நீர்மகிழ் கோயி லுளீரே" என்ற வன்தொண்டர்க்கு ஊன்றுகோல் அருளி, [1]இணங்கி லாமொழியால் "உளோம்போகீர்" என்றி யம்பினர் ஏதிலார் போல.

"பிழையுளன பொறுத்திடுவர்" என்றெடுத்துப் பெண்பாகம்
விழைவடிவிற் பெருமானை வெண்பாக்கம் மகிழ்ந்தானை
[2]இழைஎனமா சுணம்அணிந்த இறையானைப் பாடினார்
[3]மழைதவழும் நெடும்புரிசை நாவலூர் மன்னவனார்.

—பெ. ஏ. 278, 279, 280

## 89. திருவெண்பாக்கம்

**பண் - சீகாமரம்**

திருச்சிற்றம்பலம்

பிழையுளன பொறுத்திடுவ ரென்றடியேன் பிழைத்தக்கால்
பழியதனைப் பாராதே படலமென்கண் மறைப்பித்தாய்
குழைவிரவு வடிகாதா கோயில் உளாயேஎன்ன
உழையுடையான் உள்ளிருந்(து) உளோம்போகீர் என்றானே.

இடையறியேன் தலையறியேன் எம்பெருமான் சரணமென்
அடையுடையன் நம்மடியான் என்றவற்றைப் பாராதே[பேன்
விடையுடையான் விடநாகன் வெண்ணீற்றன் புலியின்தோல்
உடையுடையான் எனையுடையான் உளோம்போகீர்என்றானே.

செய்வினையொன் றறியாதேன் திருவடியே சரண்என்று
பொய்யடியேன் பிழைத்திடினும் பொறுத்திடநீ வேண்டாவோ
பையரவா இங்கிருந்தா யோஎன்னப் பரிந்தென்னை
உய்யஅருள் செய்யவல்லான் உளோம்போகீர் என்றானே. ௩

(க) படலம்-நேத்திரரோகம். வடிகாது - தாழ்ந்த காது. உழை - மான். (உ) அடை உடையான் - அடைதலை உடையவன், சரணமாக அடைந்தவன். (௩) செய்வினை - செய்யத்தகுந்த காரியம்.

[1]ஆரூரருக்குக் கண் கொடுக்க இசையாத சொற்களால். [2]இழை என-ஆபரணமாக. [3]மேகங்களை அளாவும் நெடிய மதில்கள் சூழ்ந்த.

கம்பமருங் கரியுரியன் கறைமிடற்றன் காபாலி
செம்பவளத் திருவுருவன் சேயிழையோ டுடனாகி
நம்பியிங்கே யிருந்தீரே என்றுநான் கேட்டலுமே
உம்பர்தனித் துணையெனக்(கு) உளோம்போகீர் என்றானே.

பொன்இலங்கு நறுங்கொன்றை புரிசடைமேற் பொலிந்திலங்க
மின்இலங்கு நுண்ணிடையாள் பாகமா எருதேறித்
துன்னியிரு பாலடியார் தொழுதேத்த அடியேனும்
உன்னதமாய்க் கேட்டலுமே உளோம்போகீர் என்றானே. ரு

கண்ணுதலாற் காமனையுங் காய்ந்ததிறற் கங்கைமலர்
தெண்ணிலவு செஞ்சடைமேல் தீமலர்ந்த கொன்றையினான்
கண்மணியை மறைப்பித்தாய் இங்கிருந்தா யோஎன்ன
ஒண்ணுதலி பெருமானார் உளோம்போகீர் என்றானே. சு

பார்நிலவு மறையோரும் பத்தர்களும் பணிசெய்யத்
தார்நிலவு நறுங்கொன்றைச் சடையனார் தாங்கரிய
கார்நிலவு மணிமிடற்றீர் இங்கிருந்தீ ரேஎன்ன
ஊரரவம் அரைக்கசைத்தான் உளோம்போகீர் என்றானே. எ

வாரிடங்கொள் வனமுலையாள் தன்னோடு மயானத்துப்
பாரிடங்கள் பலசூழப் பயின்றாடும் பரமேட்டி
காரிடங்கொள் கண்டத்தன் கருதுமிடம் திருஒற்றி
ஊரிடங்கொண் டிருந்தபிரான் உளோம்போகீர் என்றானே. அ

பொன்னவிலுங் கொன்றையினாய் போய்மகிழ்க்கீழ் இருஎன்று
சொன்னஎனைக் காணாமே சூளறவு மகிழ்க்கீழே
என்னவல்ல பெருமானே இங்கிருந்தா யோஎன்ன
ஒன்னலரைக் கண்டாற்போல் உளோம்போகீர் என்றானே.

---

(ச) கம்பு அமரும் - தம்பத்தில் கட்டப்படுவதான. உம்பர் தனித் துணை - தேவர்களுக்கு ஒப்பற்ற துணை. (ரு) பொன்இலங்கு - பொன் நிறத்தோடு விளங்குகின்ற. மின்இலங்கு-மின்னற் கொடிபோல் விளங்கும். உன்னதமாய் - பெருமையாய். (சு) கண்ணுதலால் - நுதற்கண்ணால், நெற்றிக் கண்ணால். கங்கை மலர் தெண்நிலவு - கங்கையையும், மலரையும் தெளிந்த நிலாவையும். ஒண்நுதலி - ஒளி பொருந்திய நெற்றியை யுடைய உமாதேவியார். (கூ) பொன் நவிலும் - பொன் என்று சொல்லும்படியான தன்மை வாய்ந்த. எனைக்காணாமே - எனக்குத் தெரியாமல். சூளறவு - சபதம். ஒன்னலர் - பகைவர்.

மான்திகழுஞ் சங்கிலியைத் தந்துவரு பயன்களெல்லாம்
தோன்றஅருள் செய்தளித்தா யென்றுரைக்க உலகமெலாம்
ஈன்றவனே வெண்கோயி லிங்கிருந்தா யோவென்ன
ஊன்றுவதோர் கோலருளி யுளோம்போகீ ரென்றானே. ௧0

ஏராரும் பொழில்நிலவு வெண்பாக்கம் இடங்கொண்ட
காராரும் மிடற்றானைக் காதலித்திட்(டு) அன்பினொடும்
சீராருந் திருவாரூர்ச் சிவன்பேர்சென் னியில்வைத்த
ஆரூரன் தமிழ்வல்லார்க்(கு) அடையாவல் வினைதானே. ௧௧

திருச்சிற்றம்பலம்

முன்னின்று [1]முறைப்பாடு போல்மொழிந்த மொழிமாலைப்
பன்னும்இசைத் திருப்பதிகம் பாடியபின் "பற்றாய
என்னுடைய பிரான்அருளிங் கித்தனைகொ லாம்" என்று
மன்னுபெருந் தொண்டருடன் வணங்கியே வழிக்கொள்வார்.
—பெ. ஏ. 281.

## இடக்கண் பெறுதல்

பிறகு திருவெண்பாக்கத்தை விட்டு நீங்கி, பழையனூருக்குச் சென்று தங்கி, காரைக்கால் அம்மையார் திருத்தலையாலே வலங் கொண்டதும், திங்கள் முடியார் நடனம் செய்யும்படியானதும் ஆன திருவாலங்காட்டின் அயலே நின்று,

## 52. திருவாலங்காடு

**பண் - பழம்பஞ்சுரம்**

திருச்சிற்றம்பலம்

முத்தா முத்தி தரவல்ல முகிழ்மென் முலையாள் உமைபங்கா
சித்தா சித்தித் திறங்காட்டுஞ் சிவனே தேவர் சிங்கமே
பத்தா பத்தர் பலர்போற்றும் பரமா பழைய னூர்மேய
அத்தாஆலங் காடாவுன் அடியார்க் கடியேன் ஆவேனே. ௧

(௧0) மான்திகழும்-மான்போல் கண்களுடைய. (௧௧) ஏர்-அழகு.

(௧) முத்தா-அநாதிமல முத்தனே,(பாசநீக்க முள்ளவனே).முகிழ்-மலரும் பருவத்து அரும்புபோல். சித்தா - சித்திகளில் வல்லவனே, ஞான சொரூபனே. பத்தா - அடியவர்களிடத்து அன்புடையவனே.

[1]முறைப்பாடு - குறைகளைத் தெரிவித்தல்.

பொய்யே செய்து புறம்புறமே திரிவேன் தன்னைப் போகாமே
மெய்யேவந்திங் கெனையாண்ட மெய்யா மெய்யர் மெய்ப்பொரு
பையா டரவம் அரைக்கசைத்த பரமாபழைய னூர்மேய[ளே
ஐயா ஆலங் காடாவுன் அடியார்க் கடியே னாவேனே. உ

தூண்டாவிளக்கின் நற்சோதீ தொழுவார் தங்கள் துயர்தீர்ப்பாய்
பூண்டாய்எலும்பைப்புரமூன்றும் பொடியாச்செற்றபுண்ணிய
பாண்டாழ்வினைகளவைதீர்க்கும்பரமாபழையனூர்மேய[னே
ஆண்டா ஆலங் காடாவுன் அடியார்க் கடியே னாவேனே. ௩

மறிநே ரொண்கண் மடநல்லார் வலையிற் பட்டு மதிமயங்கி
அறிவே அழிந்தேன் ஐயாநான் மையார்கண்டம் உடையானே
பறியா வினைக ளவைதீர்க்கும் பரமா பழைய னூர்மேய
அறிவே ஆலங் காடாவுன் அடியார்க் கடியே னாவேனே. ௪

வேலங்காடு தடங்கண்ணார் வலையுட் பட்டேன் நெறிமறந்து
மாலங்காடி மறந்தொழிந்தேன் மணியே முத்தே மரகதமே
பாலங்காடீ நெய்யாடீ படர்புன் சடையாய் பழையனூர்
ஆலங் காடா உன்னுடைய அடியார்க் கடியே னாவேனே. ௫

எண்ணார் தங்கள் எயிலெய்த எந்தாய் எந்தை பெருமானே
கண்ணாய் உலகங் காக்கின்ற கருத்தா திருத்த லாகாதாய்
பண்ணார் இசைகள் அதுகொண்டு பலரும்வாத்தும் பழையனூர்
அண்ணா ஆலங் காடாவுன் அடியார்க் கடியே னாவேனே. ௬

(உ) போகாமே - (கெட்டுப்) போகாமல். மெய்யர் மெய்ப் பொருளே - மெய்யர்களுக்கு உண்மைப் பொருளாய் இருப்பவனே. (௩) தூண்டா விளக்கின் நற்சோதீ—"தூண்டா விளக்கின் சுடரனை யாய்"—திருவாசகம் (வேண்டும்வே.) பண்டு ஆழ் வினைகள் - ஆழ்ந்து போகச் செய்யும் பழைய வினைகள். ஆண்டா - ஆண்டவனே. (௪)மறி நேர் - பெண்மானை ஒத்த. பறியா - ஒழியாத. (௫) வேல்அங்கு ஆடு - கூர்மையிலும் துன்பம் செய்வதிலும் வேலைப் போன்றதும், இங்கும் அங்கும் ஆடிக்கொண்டிருப்பதுமான. உன்நெறி - உன்னை அடையும் வழி. மால் அங்கு ஆடி-மயக்கத்தினால் அலைந்து. (௬) 2-வது வரி. கண்ணைப்போல் உலகங்களெல்லாவற்றையும் காக்கின்ற இறைவனே, எவராலும் திருத்தப்படாதவனே.

வண்டார் குழலி உமைநங்கை பங்கா கங்கை மணவாளா
விண்டார் புரங்கள் எரிசெய்த விடையாய் வேத நெறியானே
பண்டாழ் வினைகள் பலதீர்க்கும் பரமா பழைய னூர்மேய
அண்டா ஆலங் காடாவுன் அடியார்க் கடியே னாவேனே. எ

பேழ்வாய் அரவின் அணையானும் பெரியமலர்மேல்உறைவானு
தாழா துன்றன் சரண்பணியத் தழலாய்நின்ற தத்துவனே [ம்
பாழாம் வினைக ளவைதீர்க்கும் பரமா பழைய னூர்தன்னை
ஆள்வாய் ஆலங் காடாவுன் னடியார்க் கடியே னாவேனே. அ

எம்மான் எந்தை மூத்தப்பன் ஏழேழ் படிகால் எமையாண்ட
பெம்மான் ஈமப் புறங்காட்டிற் பேயோ டாடல் புரிவானே
பன்மா மலர்க ளவைகொண்டு பலரும் ஏத்தும் பழையனூர்
அம்மா ஆலங் காடாவுன் அடியார்க் கடியே னாவேனே. கூ

பத்தர் சித்தர் பலரேத்தும் பரமன் பழைய னூர்மேய
அத்தன் ஆலங் காடன்றன் அடிமைத் திறமே அன்பாகிச்
சித்தர் சித்தம் வைத்தபுகழ்ச் சிறுவ னூரன் ஒண்தமிழ்கள்
பத்தும் பாடி ஆடுவார் பரம னடியே பணிவாரே. க0

திருச்சிற்றம்பலம்

என்னும் இசைத்திருப்பதிகம் பாடி மகிழ்ந்து ஏத்தி, திருவூறலுக்குச் சென்று தொழுது, காஞ்சீபுரத்தைச் சேர்ந்து, கச்சித்திருக் காமக் கோட்டத்தில் 'ஊனில் வளர் உயிர்க்கெல்லாம் ஒழியாத கருணையினால் ஆன திருஅறம் புரக்கும் அம்மை' திருக்கோயிலின் முன் வணங்கி, பிறகு தொல் உலகம் முழுதும் அளித்து, அழித்து, ஆக்கும் முதல்வர் திருஏகம்பம் புக்குப் பணிந்து,

"விண்ணுள்வார் அமுதுண்ண மிக்கபெரு விடமுண்ட
கண்ணுளா! கச்சிஏ கம்பனே! கடையானேன்
எண்ணுத பிழைபொறுத்(து)இங் குயான்காண எழிற்பவள
வண்ணு!கண் ணளித்தருளாய்" எனவீழ்ந்து வணங்கினார்.

---

(அ) பேழ்வாய் - பெரிய வாய். தாழாது - தாமதியாமல். (கூ) ஏழ் ஏழ் படிகால் - ஏழேழு தலைமுறையும். (க0) அடிமைத் திறமே அன்பாகி - திருத்தொண்டு செய்வதிலேயே அன்புடையவனாகி.

பங்கயச்செங் கைத்தளிரால் பனிமலர்கொண் டருச்சித்துச்
செங்கயற்கண் மலைவல்லி பணிந்தசே வடிநினைந்து
பொங்கியஅன் பொடுபரவிப் போற்றியஆ நாருக்கு
மங்கைதழு வக்குழைந்தார் மறைந்தஇடக் கண்கொடுத்தார்.

ஞாலந்தான் இடந்தவனும் நளிர்விசும்பு கடந்தவனும்
மூலந்தான் அறிவரியார் கண்ணளித்து முலைச்சுவட்டுக்
கோலந்தான் காட்டுதலுங் குறுகிவிழுந் தெழுந்துகளித்(து)
"ஆலந்தான் உகந்தவன்" என் றெடுத்தாடிப் பாடினார்.

—பே. ஏ. 286. 287. 288.

## 61. திருவேகம்பம்

### பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

ஆலந் தான்உகந்(து) அமுதுசெய் தானை ஆதி யைஅம ரர்தொழு தேத்துஞ், சீலந் தான்பெரி தும்முடை யானைச் சிந்திப் பாரவர் சிந்தையு ளானை, ஏல வார்குழ லாளுமை நங்கை யென்றும் ஏத்தி வழிபடப் பெற்ற, கால காலனைக் கம்பனெம் மானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. க

உற்ற வர்க்குத வும்பெரு மானை ஊர்வ தொன்றுடை யானும்பர் கோனைப், பற்றி னார்க்கென்றும் பற்றவன் றன்னைப் பாவிப் பார்மனம் பாவிக்கொண் டானை, அற்ற மில்புக ழாளுமை நங்கை ஆத ரித்து வழிபடப் பெற்ற, கற்றை வார்சடைக் கம்பனெம் மானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. உ

---

(க) உகந்து - விரும்பி. சீலம் - மேன்மைக்குணம். ஏலவார் - மணம் உள்ளதும் நீண்டதுமான. கம்பன் எம்மான் - ஏகாம்பரநாதர். பெற்றவாறு ஏ - பெற்றது என்ன ஆச்சரியம்! (உ) உற்றவர்க்கு - தன்னை அடைந்தவர்க்கு. பற்றவன் - அன்புடையவன். பாவிப்பார் - நினைப்பவர். பாவிக்கொண்டானை - பற்றிக்கொண்டவனை. அற்றம் இல் - அழிவு இல்லாத. ஆதரித்து - விரும்பி.

திரியும் முப்புரந் தீப்பிழம் பாகச் செங்கண் மால்விடை மேல் திகழ்வானைக், கரியி னீருரி போர்த்துகந் தானைக் காம னைக்கன லாவிழித் தானை, வரிகொள் வெள்வளை யாளுமை நங்கை மருவி யேத்தி வழிபடப் பெற்ற, *பெரிய கம்பனை யெங்கள் பிரானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. ௩

குண்ட லந்திகழ் காதுடை யானைக் கூற்று தைத்த கொடுந்தொழி லானை, வண்ட லம்புமலர்க் கொன்றையி னானை வாள ராமதி சேர்சடை யானைக், கெண்டை யந்தடங் கண் ணுமை நங்கை கெழுமி யேத்தி வழிபடப் பெற்ற, கண்டம் நஞ்சுடைக் கம்பனெம் மானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. ௪

வெல்லும் வெண்மழு ஒன்றுடை யானை வேலை நஞ் சுண்ட வித்தகன் தன்னை, அல்லல் தீர்த்தருள் செய்யவல் லானை அருமறையவை அங்கம் வல்லானை, எல்லை யில்புக ழாளுமை நங்கை யென்றும் ஏத்தி வழிபடப் பெற்ற, †நல்ல கம்பனை யெங்கள் பிரானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. ௫

திங்கள் தங்கிய சடையுடை யானைத் தேவ தேவனைச் செழுங் கடல் வளரும், சங்க வெண்குழைக் காதுடை யானைச் சாம வேதம் பெரிதுகப் பானை, மங்கை நங்கை மலை

(௩) மருவி - கலந்து. (௪) அலம்பும் - சப்திக்கின்ற. கெழுமி - அன்பு பொருந்தி. (௫) வித்தகன் - சாமர்த்தியமுள்ளவன்.

*காமாக்ஷியம்மையால் பூசிக்கப்பட்ட ஏகாம்பரநாதரே பெரிய கம்பர்.

†உருத்திரரால் பூசிக்கப்பட்ட சிவலிங்கப் பெருமானுக்கு நல்ல கம்பனென்று பெயர். இதனைக் காஞ்சி புராணம் - திருவேகம்பப் படலம் அ௮-வது செய்யுள், "உருத்திர னலத்தகு மொருமை பூண் டியர், கருத்தொடும் வழிபடு நல்ல கம்பனை" என்பதனு லறிக. உமை நங்கை யென்று மேத்தி வழிபடப்பெற்ற நல்ல கம்பனை யென்பது - ஏகாம்பர நாதனுக்கும் நல்ல கம்பனுக்கும் பேதமின்மை காட்டு கின்றது.

மகள் கண்டு மருவி யேத்தி வழிபடப் பெற்ற, கங்கை யாளனைக் கம்பனெம் மானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. கா

விண்ணவர்தொழு தேத்தநின் றானை வேதந் தான்விரித் தோதவல் லானை, நண்ணினார்க்கென்றும் நல்லவன் றன்னை நாளும் நாமுகக்கின்ற பிரானை, எண்ணில் தொல்புகழாளுமை நங்கை யென்றும் ஏத்தி வழிபடப் பெற்ற, கண்ணுமூன்றுடைக் கம்பனெம் மானைக் காணக் கண்ணடி யேன் பெற்ற வாறே. எ

சிந்தித் தென்றும் நினைந்தெழு வார்கள் சிந்தை யில்திகழுஞ்சிவன் றன்னைப், பந்தித் தவினைப் பற்றறுப் பானைப் பாலோ(டு) ஆனஞ்சும் ஆட்டுகந் தானை, அந்த மில்புகழாளுமை நங்கை ஆத ரித்து வழிபடப் பெற்ற, கந்த வார்சடைக் கம்பனெம் மானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. அ

வரங்கள் பெற்றுழல் வாளரக் கர்தம் வாலி யபுரம் மூன்றெரித்தானை, நிரம்பி யதக்கன் றன்பெரு வேள்வி நிரந்தரஞ்செய்த நிட்கண் டகனைப், பரந்த தொல்புக ழாளுமை நங்கை பரவி யேத்தி வழிபடப் பெற்ற, கரங்க ளெட்டுடைக் கம்பனெம் மானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. கூ

எள்க லின்றி யிமையவர் கோனை ஈச னைவழி பாடுசெய் வாள்போல், உள்ளத் துள்கி உகந்துமை நங்கை வழிப டச்சென்று நின்றவா கண்டு, வெள்ளங் காட்டி வெருட்டிட வஞ்சி

---

(எ) நாளும் நாம் உகக்கின்ற - எப்போதும் நாம் விரும்புகின்ற. (அ) அந்தம் இல் புகழ் - எல்லை இல்லாத புகழ். ஆதரித்து - அன்பு கொண்டு. (கூ) வாலிய - வலிமையுள்ள. நிரந்தரம்செய்த - மறையும் படிச்செய்த, அழித்த. நிட்கண்டகன் - பட்சபாத மில்லாதவன். (க0) எள்கல் - இகழ்தல். நின்றவா - நின்ற தன்மையை.

வெருவி யோடித் தழுவவெளிப் பட்ட, *கள்ளக் கம்பனை எங்கள் பிரானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. ௧0

பெற்றம் ஏறுகந் தேறவல் லானைப் பெரிய எம்பெரு மானென் றெப்போதுங், கற்ற வர்பர வப்படு வானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற தென்று, கொற்ற வன்கம்பன் கூத்த னெம் மானைக் குளிர்பொ ழிற்றிரு நாவலா ரூரன், நற்ற மிழிவை ஈரைந்தும் வல்லார் நன்னெறியுல கெய்துவர் தாமே.

திருச்சிற்றம்பலம்

இவ்வாறு இடக்கண் பெற்றுத் திருப்பதிகம்பாடி மிகப் பரவசத் தோடு பணிந்த வன்தொண்டருக்கு உமாதேவியாருடன் தம்முடைய திருக்கோலம் காட்டியருள வணங்கித்,தொண்டர்களுடன் அங்கிருந்து புறப்பட்டுப் போகும்போது திருவாரூர்ப் பெருமான் நினைவு வர,

## 83. திருவாரூர்

**பண் - புறநீர்மை**

திருச்சிற்றம்பலம்

அந்தியும் நண்பகலும் அஞ்சுப தஞ்சொல்லி
முந்தியெ ழும்பழைய வல்வினை மூடாமுன்
சிந்தை பராமரியாத் தென்திரு வாரூர்புக்(கு)
எந்தை பிரானாரை என்றுகொ லெய்துவதே. ௧

---

*விஷ்ணுவினாற் பூசிக்கப்பட்ட சிவலிங்கப் பெருமானுக்குக் கள்ளக் கம்ப னென்று பெயர். இதனை ஷெ படலம் அஎ-வது செய் யுள் "மருள்புரி கருத்தினன் மாய னேத்தலுங், கருதுமப் பெயரிய கள்ளக் கம்பனை" என்பதனு லறிக. ஈண்டு கூறப்பட்ட - நல்லக்கம் பன் - கள்ளக்கம்ப னென்னும் இரண்டு மூர்த்திகளுமேயன்றி, பிரம னால் பூசிக்கப்பட்ட வெள்ளக்கம்பன் - என்னும் ஒரு சிவலிங்கப் பெரு மானு முண்டு. இதனை "வாலிய சிந்தையான் மலர்ப் பொகுட்டணை, மேலவன் வழிபடு வெள்ளக்கம்பனை" - அ௬-வது செய்யுளா லறிக.

(௧) நண்பகல் - நடுப்பகல். அஞ்சுபதம்சொல்லி - ஐந்தெழுத்தை ஓதி. சிந்தை பராமரியா - சிந்தையால் ஆராய்ந்து.

நின்ற வினைக்கொடுமை நீங்க இருபொழுதும்
துன்று மலரிட்டுச் சூழும் வலஞ்செய்து
தென்றல் மணங்கமழுந் தென்திரு வாரூர்புக்(கு)
என்றன் மனங்குளிர என்றுகொ லெய்துவதே. உ

முன்னை முதற்பிறவி மூதறி யாமையினால்
பின்னை நினைந்தனவும் பேதுற வும்மொழியச்
செந்நெல் வயற்கழனித் தென்திரு வாரூர்புக்(கு)
என்னுயிர்க் கின்னமுதை யென்றுகொ லெய்துவதே. ங

நல்ல நினைப்பொழிய நாள்களில் ஆருயிரைக்
கொல்ல நினைப்பனவுங் குற்றமும் அற்றொழியச்
செல்வ வயற்கழனித் தென்திரு வாரூர்புக்(கு)
எல்லை மிதித்தடியே னென்றுகொ லெய்துவதே. ச

கடுவரி மாக்கடலுட் காய்ந்தவன் தாதையைமுன்
சுடுபொடி மெய்க்கணிந்த சோதியை வன்தலைவாய்
அடுபுலி ஆடையனை ஆதியை யாரூர்புக்(கு)
இடுபலி கொள்ளியைநா னென்றுகொ லெய்துவதே. ரு

சூழொளி நீர்நிலந்தீத் தாழ்வளி யாகாசம்
வானுயர் வெங்கதிரோன் வண்தமிழ் வல்லவர்கள்
ஏழிசை யேழ்நரம்பி னோசையை யாரூர்புக்(கு)
ஏழுல காளியைநா னென்றுகொ லெய்துவதே. சு

(உ) நின்ற - நிலைபெற்ற. இருபொழுது - காலை, மாலை. துன்றும் - நெருங்கிய. "துதிசெய்து துன்றுமலர் கொண்டு தூவிச், சூழும் வலம்செய்து தொண்டுபாடி"—அப்பர். (மதிதருவன்). (ங) 1-வது வரி. முற்பிறப்புகளில் மிகுந்த அறியாமையால். 2-வது வரி. பின்னே விரும்பினவையும் மதிமயக்கமும் நீங்க. (ச) நாள்களில் - வாழ்நாட்களில். (ரு) 1-வது வரி. உயரமாக வளர்ந்த மாமரத்தின் வடிவு கொண்ட சூரபதுமனைக் கடலின்கண் வெட்டிய முருகவேளின் தந்தையை. சுடுபொடி - திருநீறு. அடுபுலி - கொல்லும்புலி. இடுபலி கொள்ளி - மாதர் இடும் பிச்சையை ஏற்றுக்கொள்பவனை.

கொம்பன நுண்ணிடையாள் கூறனை நீறணிந்த
வம்பனை யெவ்வுயிர்க்கும் வைப்பினை ஒப்பமராச்
செம்பொனை நன்மணியைத் தென்றிரு வாரூர்புக்(கு)
என்பொனை யென்மணியை யென்றுகொ லெய்துவதே. ௭

ஆறணி நீண்முடிமேல் ஆடர வஞ்சூடிப்
பாறணி வெண்டலையிற் பிச்சைகொள் நச்சரவன்
சேறணி தண்கழனித் தென்றிரு வாரூர்புக்(கு)
ஏறணி யெம்மிறையை யென்றுகொ லெய்துவதே. ௮

மண்ணினை உண்டுமிழ்ந்த மாயனும் மாமலர்மேல்
அண்ணலும் நண்ணரிய ஆதியை மாதினொடும்
திண்ணிய மாமதில்சூழ் தென்றிரு வாரூர்புக்(கு)
எண்ணிய கண்குளிர என்றுகொ லெய்துவதே. ௯

மின்னெடுஞ் செஞ்சடையான் மேவிய ஆரூரை
நன்னெடுங் காதன்மையால் நாவலர் கோனூரன்
பன்னெடுஞ் சொன்மலர்கொண் டிட்டன பத்தும்வல்லார்
பொன்னுடை விண்ணுலகம் நண்ணுவர் புண்ணியரே. ௧0

திருச்சிற்றம்பலம்

"அந்தியும்நண் பகலும்" என எடுத்தார்வத் துடன்[1]அசைவால்
"எந்தைபிரான் திருவாரூர் என்றுகொல்எய் துவ"தென்று
சந்தஇசை பாடிப்போய்த் [2]தாங்கரிய ஆதரவு
வந்தணைய அன்பருடன் மகிழ்ந்துவழிக் கொள்கின்றார்.

—பெ. ஏ. 291.

(௭) கொம்பு அன - பூங்கொம்பை ஒத்த. வம்பன் - வாது செய்பவன், போராடுபவன். வைப்பினை - சேமித்து வைக்கப்பட்ட நிதி போன்றவனை. "வைப்பு மாடென்னும் மாணிக்கத்தொளி யென்றும்"—திருவாசகம். (௮) நச்சு அரவன் - நஞ்சு அரவன் - விஷத்தையுடைய பாம்பை அணிந்தவன். ஏறு - இடபக்கொடி. (௯) மண் - பூமி. எண்ணிய - நினைத்து அதனால். (௧0) இட்டன - அர்ச்சித்தன.

[1]அசைவால் - (திருவாரூருக்குச் செல்ல வேண்டும் என்னும் அவா மிகுதியால் உண்டான) சோர்வினால்.

[2]தாங்கரிய ஆதரவு - அளவில்லாத பேரன்பு.

சிவபெருமான் வீற்றிருக்கும் திருப்பதிகள் பலவற்றிற்கும் சென்று தொழுது திருப்பதிகங்கள் பாடி, திருஆமாத்தூரை அடைந்து, அங்கணரை ஆமாத்தூர் அழகர்தமை அடிவணங்கி,

## 45. திரு ஆமாத்தூர்

### பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

காண்டனன் காண்டனன் காரிகை யாள்தன் கருத்தனாய்
ஆண்டனன் ஆண்டனன் ஆமாத் தூரெம் மடிகட்காட் [கள்
பூண்டனன் பூண்டனன் பொய்யன்று சொல்லுவன் கேண்மின்
மீண்டனன் மீண்டனன் வேதவித் தல்லா தவர்கட்கே. க

பாடுவன் பாடுவன் பார்ப்பதி தன்னடி பற்றிநான்
தேடுவன் தேடுவன் திண்ணெனப் பற்றிச் செறிதர
ஆடுவ னாடுவன் ஆமாத் தூரெம் மடிகளைக்
கூடுவன் கூடுவன் குற்றம(து) அற்றென் குறிப்பொடே. உ

காய்ந்தவன் காய்ந்தவன் கண்அழ லால்அன்று காமனைப்
பாய்ந்தவன் பாய்ந்தவன் பாதத்தி னலன்று கூற்றத்தை
ஆய்ந்தவன் ஆய்ந்தவன் ஆமாத் தூரெம் மடிகளார்
ஏய்ந்தவன் ஏய்ந்தவன் எம்பி ராட்டியைப் பாகமே. ந

---

(க) காரிகையாள் தன் கருத்தனாய் - உமாதேவியார் நாயகனாய். 'காரிகையாள் தன் கருத்தனாய்' என்பதை காண்டனன் என்பதோடும் ஆண்டனன் என்பதோடும்கூட்டுக. ஆமாத்தூர்............ ...கேண்மின்கள் - திருஆமாத்தூரில்வீற்றிருக்கும் எமது பெருமானுக்கு அடிமை பூண்டேன் அடிமை பூண்டேன்; இது பொய்மொழி அன்று சத்தியமாய்ச் சொல்லுகிறேன் கேளுங்கள். வேதவித்தல்லாதவர்கட்கே மீண்டனன் - சிவஞானிகள் அல்லாதாரிடமிருந்தே திரும்பிவிட்டனன். (உ) பார்ப்பதி - உலகநாதன். 2-வது வரி. உறுதியாகப் பிடித்து அவனோடு கூடும்பொருட்டுத் தேடுவேன். குறிப்பொடு - விருப்பத்துடன் அல்லது நினைவுடன். (ந) ஆய்ந்தவன் - சிறிது சிறிதாக அன்பர்களது பழவினைகளை ஆராய்பவன். "பாதம் பணிவார்தம் பல்பிறவி, ஆய்ந்தாய்ந்து அறுப்பாய்"— **அப்பர்.** (காய்ந்தாய்). 4-வது வரி. பாகத்தில் ஏய்ந்தவன் (பொருந்தினவன்).—உரைநடை.

ஓர்ந்தனன் ஓர்ந்தனன் உள்ளத்துள் ளேநின்ற ஒண்பொருள்
சேர்ந்தனன் சேர்ந்தனன் சென்று திருவொற்றி யூர்புக்குச்
சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலி மென்தோள் தடமுலை
ஆர்ந்தனன் ஆர்ந்தனன் ஆமாத்து ரைய னருளதே. ச

வென்றவன் வென்றவன் வேள்வியில் விண்ணவர் தங்களைச்
சென்றவன் சென்றவன் சில்பலிக் கென்று தெருவிடை
நின்றவன் நின்றவன் நீதி நிறைந்தவர் தங்கள்பால்
அன்றவ னன்றவன் செய்யரு ளாமாத்து ரையனே. ரு

காண்டவன் காண்டவன் காண்டற் கரிய கடவுளாய்
நீண்டவன் நீண்டவன் நாரணன் நான்முகன் நேடவே
ஆண்டவ னாண்டவ னாமாத்து ரையுமென் னையுமாட்
பூண்டவன் பூண்டவன் மார்பிற் புரிநூல் புரளவே. ௬

எண்ணவ னெண்ணவ னேழுல கத்துயிர் தங்கட்குக்
கண்ணவன் கண்ணவன் காண்டுமேன் பாரவர் தங்கட்குப்
பெண்ணவன் பெண்ணவன் மேனியோர் பாகமாம் பிஞ்ஞகன்
அண்ணவ னண்ணவ னாமாத் தூரெம் மடிகளே. எ

பொன்னவன் பொன்னவன் பொன்னைத்தந் தென்னைப் போக
மின்னவன் மின்னவன் வேதத்தி னுட்பொரு ளாகிய [விடா
அன்னவன் அன்னவன் ஆமாத்தூ ரையனை ஆர்வத்தால்
என்னவன் என்னவன் என்மனத் தின்புற் றிருப்பனே. அ

---

(ச) 1-வது வரி. என்மனத்தினுள்ளே நின்ற மேலான பொரு ளாகிய சிவபெருமானை அறிந்தனன் அறிந்தனன். 4-வது வரி. சங் கிலியைச் சார்ந்ததன் மூலமாய்த் திருஆமாத்தூர் ஐயன் அருளை அனு பவித்தேன் அனுபவித்தேன். (ரு) வேள்வியில் - தக்கன் யாகத்தில். 4-வது வரி. ஆமாத்தூர் எம்ஐயன் அன்று அவன் அன்று அவன் செய்அருளே—உரைநடை. (௬) 1-வது வரி. காண்பதற்கு அரிய கட வுளாய்க் காணப்பட்டவன். நேட - தேட. 3-வது வரி. ஆமாத்தூரை ஆண்டவன் என்னையும் அடிமையாக ஆட்கொண்டவன். (எ) எண்ண வன் - மதிக்கத்தகுந்தவன். அண்ணவன் - சமீபத்திலிருப்பவன். (அ) பொன்னவன் - பொன்னை உடையவன் அல்லது பொன் நிறத்த வன். மின்னவன் - மின்னலைப்போலப் பிரகாசம் பொருந்தியவன். 4-வது வரி. அன்பினால் என்னவன் என்னவன் என்று எண்ணி என் மனத்தில் மகிழ்ந்திருப்பேன்.

தேடுவன் தேடுவன் செம்மலர்ப் பாதங்கள் நாடொறும்
நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலேயோர் நால்விரல்
மாடுவன் மாடுவன் வன்கை பிடித்து மகிழ்ந்துளே
ஆடுவன் ஆடுவன் ஆமாத் தூரெம் மடிகட்கே. க0

உற்றனன் உற்றவர் தம்மை யொழிந்துள்ளத் துள்பொருள்
பற்றினன் பற்றினன் பங்கயச் சேவடிக் கேசெல்ல
அற்றனன் அற்றனன் ஆமாத் தூர்மேயான் அடியார்கட்காள்
பெற்றனன் பெற்றனன் பெயர்த்தும் பெயர்த்தும் பிறவாமைக்கே.

ஐயனை அத்தனை ஆளுடை ஆமாத்து ரண்ணலை
மெய்யனை மெய்யர்க்கு மெய்ப்பொரு ளான விமலனை
மையனை மையணி கண்டனை வன்தொண்ட னூரன்சொல்
பொய்யொன்று மின்றிப் புலம்புவார் பொற்கழல் சேர்வரே. கக

திருச்சிற்றம்பலம்

என்னும் தங்கும் இசைத் திருப்பதிகம் பாடி, **திருநெல்வாயில் அரத்துறையை** அடைந்து சிவபெருமானைப் பணிந்து,

---

(க) 2-வது வரி. நாபிக்குமேல் ஓர் நான்கு விரலளவிலுள்ள இடத்தில் நாடுவேன். இது யோகமுறை. மாடுவன் - இறுமாந்திருப்பேன். வன்கை பிடித்து உள்ளே மகிழ்ந்து ஆடுவன் - கைகளால் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு மனதில் மகிழ்ந்து கூத்தாடுவேன். (க0) உற்றவர் தம்மை ஒழிந்து உற்றனன் உள்ளத்து உள்பொருள் பற்றினன் பற்றினன் - உறவினர் முதலியோரை (எனக்கு உறுதுணை என்று கருதுதல்) ஒழிந்து உன்னையே துணையாக அடைந்தேன். உள்ளத்தினுள்ளே இருக்கும் (எக்காலத்தும்) உள்ள பொருளாகிய உன்னைப் பற்றிக்கொண்டேன். செல்ல - செல்லும்பொருட்டு. அற்றனன் - பற்றுகளை ஒழித்தேன். ஆமாத்தூர்... பிறவாமைக்கே - மீண்டும் மீண்டும் பிறக்காமல் இருக்கும்பொருட்டு ஆமாத்தூர் மேவிய சிவபெருமானுடைய அடியார்கட்கு ஆளாகப் பெற்றனன். (கக) மையன் - நடுநிலையா யிருப்பவன். புலம்புவார் - மனம் உருகிக் கண்ணீர் வாரப் பாடுவார்.

## 3. திருநெல்வாயில் - திருஅரத்துறை

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

கல்வாய்அகி லுங்கதிர் மாமணியுங் கலந்துந்தி வரும்நிவ வின்கரைமேல், நெல்வாயி லரத்துறை நீடுறையும் நிலவெண் மதி சூடிய நின்மலனே, நல்வாயில்செய் தார்நடந் தாருடுத்தார் நரைத்தாரிறந் தாரென்று நானிலத்திற், சொல்லாய்க்கழி கின்ற(து) அறிந்தடியேன் தொடர்ந்தே னுய்யப் போவதோர் சூழல்சொல்லே. க.

கறிமாமிள குந்மிகு வன்மரமும் மிகவுந்தி வரும்நிவ வின்கரைமேல், நெறிவார்குழ லாரவர் காணநடஞ்செய் நெல் வாயி லரத்துறை நின்மலனே, வறிதேநிலை யாதஇம் மண் ணுலகின் நரனாக வகுத்தனை நானிலையேன், பொறிவாயிலிவ் வைந்தினை யும்அவியப் பொரு(து)உன்னடி யேபுகும் சூழல் சொல்லே. உ.

புற்றாடர வம்அரை ஆர்த்துகந்தாய் புனிதாபொரு வெள்விடை ஊர்தியினாய், எற்றேஒரு கண்ணிலன் நின்னை யல்லால் நெல்வாயி லரத்துறை நின்மலனே, மற்றேலொரு பற் றிலன் எம்பெருமான் வண்டார்குழ லாள்மங்கை பங்கினனே, அற்றார்பிற விக்கடல் நீந்தியேறி யடியேனுய்யப் போவதோர் சூழல்சொல்லே. ௩.

(க) கல்வாய் - மலையினிடத்துள்ள. கதிர் - ஒளிபொருந்திய. நீடு உறையும் - நெடுங்காலமாய் வாழ்கின்ற. நல்வாயில் செய்தார் - நல் வாழ்க்கை வாழ்ந்தார். சூழல் - உபாயம். (உ) நெறிவார் குழலார் - ஒழுங்கு செய்யப்பட்ட நீண்ட கூந்தலையுடைய உமாதேவியார். நர னாக வகுத்தனை - மானிடனாகப் படைத்தாய். அவியப்பொருது - அடங்குமாறு வென்று. 4-வது வரி. "பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கம், நெறிநின்றார் நீடுவாழ் வார்"—**திருக்குறள்.** (௩) பொரு - போர் செய்கிற. ஊர்தியினாய் - வாகனமாக உடைய வனே. எற்று - இரக்கக் குறிப்பு. அற்றார் - பாசம் நீங்கியவர். நீந்தி ஏறி - கடந்து முத்திக் கரை ஏறி. 4-வது வரி. "பிறவிப் பெருங் கடல் நீந்துவர் நீந்தார், இறைவ னடிசேரா தார்"—**திருக்குறள்.**

கோடுயர் கோங்கலர் வேங்கையலர் மிகஉந்தி வரும்நிவ வின்கரைமேல், நீடுயர் சோலைநெல் வாயிலரத் துறைநின்மல னேநினை வார்மனத்தாய், ஓடு புனற்கரை யாம்இளமை உறங்கிவிழித் தாலொக்கு மிப்பிறவி, வாடியி ருந்து வருந்தல் செய்யா(து) அடியேனுய்யப் போவதோர் சூழல் சொல்லே. ச

உலவும்முகி லில்தலை கற்பொழிய உயர்வேயோ டிழிநிவ வின்கரைமேல், நிலவும்மயி லாரவர் தாம்பயிலும் நெல்வாயி லரத்துறை நின்மலனே, புலனைந்தும் மயங்கி அகங்குழை யப் பொருவேலொர் நமன்தமர் தாம்நலிய, அலமந்து மயங்கி அயர்வதன்முன் அடியேனுய்யப் போவதோர் சூழல் சொல்லே. ரு

ஏலம்இல வங்கம் எழிற்கனகம் மிகவுந்தி வரும்நிவ வின் கரைமேல், நீலம்மலர்ப் பொய்கையில் அன்னம்மலி நெல் வாயி லரத்துறை யாயொருநேல், வாலூன்ற வருந்தும் உடம் பிதனை மகிழா(து)அழ காஅலந் தேனினியான், ஆலந்நிழலி லமர்ந்தாய் அமரா அடியேனுய்யப் போவதோர் சூழல் சொல்லே. சு

சிகரம்முகத்தில் திரளா ரகிலும் மிகவுந்தி வரும்நிவ வின்கரைமேல், நிகரின்மயி லாரவர் தாம்பயிலும் நெல்வாயி லரத்துறை நின்மலனே, மகரக்குழை யாய்மணக் கோல

---

(ச) கோடுஉயர் - உயர்ந்த கிளைகளில் இருக்கும்படியான. ஓடு புனற்கரை - ஆற்றின்கரை. 3-வது வரி. "உறங்குவது போலும் சாக் காடு உறங்கி, விழிப்பது போலும் பிறப்பு"—திருக்குறள். (ரு) 1-வது வரி. உலவும் முகிலில் கல்தலை பொழிய - சஞ்சரிக்கின்ற மேகங் களின் நின்றும் பெய்யும் மழை கல்லினிடத்து (மலையின்மீது) பொழிய. உயர்வேயோடு இழி - உயர்ந்த மூங்கில்களோடு இறங்கு கின்ற. நிலவும் மயிலார் - ஒளியுடைய மயிற் சாயலோடு கூடிய மாதர்கள். பயிலும் - வாழும். அலமந்து - வருந்தி. (சு) உடம்பிதனை மகிழாது அலந்தேன் - உடம்பினால் இன்பம் நுகராமல் துன்பம் அடைந்தேன். அமரா - இறவாதவனே. (எ) மகரக்குழையாய் - மகர (மகரமீன் வடிவாய்ச் செய்யப்பட்ட) குண்டலம் அணிந்தவனே.

மதே பிணக்கோலம தாம்பிற வியிதுதான், அகரம்முத லின் எழுத் தாகிநின்ருய் அடியேனுய்யப் போவதோர் சூழல் சொல்லே. ௭

திண்டேர்நெடு வீதிஇ லங்கையர்கோன் திரள்தோளிரு பஃதும் நெரித்தருளி, ஞெண்டாடு நெடுவயல் சூழ்புறவின் நெல்வாயி லரத்துறை நின்மலனே, பண்டேமிக நான்செய்த பாக்கியத்தாற் பரஞ்சோதி நின்னுமம் பயிலப்பெற்றேன், அண்டாஅம ரர்க்கமரர் பெருமா னடியேனுய்யப் போவதோர் சூழல்சொல்லே. ௮

மாணுஉரு வாகியோர் மண்ணளந்தான் மலர்மேலவன் நேடியுங் காண்பரியாய், நீணீண்முடி வானவர் வந்திறைஞ்சும் நெல்வாயி லரத்துறை நின்மலனே, வாணுர்நுத லார்வலைப் பட்டடியேன் பலவின்கனி ஈயது போல்வதன்முன், ஆணேடு பெண் ணுமுரு வாகிநின்ருய் அடியேனுய்யப் போவதோர் சூழல்சொல்லே. ௯

நீரூரும் நெடுவயல் சூழ்புறவின் நெல்வாயி லரத்துறை நின்மலனைத், தேரூர்நெடு வீதிநன் மாட(ம்)மலி தென்னாவலர் கோனடித் தொண்டனணி, ஆரூர னுரைத்தன நற்றமிழின் மிகுமாலையோர் பத்திவை கற்றுவல்லார், காரூர்களி வண் டறை யானைமன்னர் அவராகியோர் விண்முழு தாள்பவரே. ௧0

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடி, மற்றும் பல பதிகளுக்குச் சென்று

(௭) "அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி, பகவன் முதற்றே உலகு"—திருக்குறள். (௮) ஞெண்டு ஆடு - நண்டுகள் சஞ்சரிக்கின்ற. பரஞ்சோதி-பேரொளி வடிவமாய் இருப்பவனே. அண்டா-தேவனே. (௯) மாணு உரு - சிறிய உருவம் (வாமனுவதாரம்). வாள் நார் நுதலார்- ஒளி பொருந்தியதும் அன்பை உண்டாக்குகிறதும் ஆன நெற்றியை உடைய மாதர்களின். பலவின் கனி ஈயது போல்வதன்முன் - பலாக் கனியில் ஒட்டிக்கொண்ட ஈயைப்போல வருந்துவதற்குமுன். "உழை தரு நோக்கியர் கொங்கைப் பலாப்பழத்து ஈயினொப்பாய், விழைதரு வேனை விடுதிகண்டாய்"—திருவாசகம். (௧0) மிகுமாலை - (நலங் களால்) மிகுந்த பாமாலை. கார் ஊர் களி வண்டு அறை - கருமை நிற முடைய களிப்புடைய வண்டுகள் சப்திக்கின்ற.

வணங்கி, காவிரியில் மூழ்கி, திருஆவடுதுறையைச் சேர்ந்து, ஒரு கண்ணில்லாமையைக் குறித்து வருந்தி,

## 70. திருவாவடுதுறை

### பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

கங்கை வார்சடை யாய்கண நாதா கால காலனே காமனுக் கனலே, பொங்கு மாகடல் விடம்மிடற் றானே பூதநாதனே புண்ணியா புனிதா, செங்கண் மால்விடை யாய்தெளி தேனே தீர்த்த னேதிரு வாவடு துறையுள், அங்க ணாளனே அஞ்சலென் றருளாய் யாரே னக்(கு)உற(வு) அமரர்க ளேறே. க

மண்ணின் மேல்மயங் கிக்கிடப் பேனைவலிய வந்தெனை ஆண்டுகொண் டானே, கண்ணி லேன்உடம் பில்லடுநோயாற் கருத்த ழிந்துனக் கேபொறை யானேன், தெண்ணி லாஎறிக் குஞ்சடை யானே தேவ னேதிரு வாவடு துறையுள், அண்ணலே யெனை யஞ்சலென் றருளாய் யாரெ னக்குற வமரர்க ளேறே. உ

ஒப்பி லாமுலை யாளொரு பாகா உத்தமா மத்தம் ஆர்தரு சடையாய், முப்பு ரங்களைத் தீவளைத் தங்கே மூவ ருக்கருள் செய்யவல் லானே, செப்ப ஆல்நிழற் கீழிருந் தருளுஞ் செல்வ னேதிரு வாவடு துறையுள், அப்ப னேயெனை யஞ்சலென் றருளாய் யாரெ னக்குற வமரர்க ளேறே. ங

கொதியி னால்வரு காளிதன் கோபம் குறைய ஆடிய கூத்துடை யானே, மதியி லேன்உடம் பில்லடு நோயால்

---

(க) யார் எனக்கு உறவு அமரர்கள் ஏறே - தேவர்களுக்குத் தலைவனே ! உன்னையல்லாமல் உறவாவார் வேறு யார் உளர். (உ) கருத்து அழிந்து - மனம் நொந்து. பொறை - சுமை, பாரம். எறிக்கும் - ஒளி வீசும். (ங) மத்தம்-ஊமத்தமலர். செப்ப - அறம் உரைக்க. (ச) கொதியினால்வரு - கொதிப்போடு வந்த.

மயங்கி னேன்மணி யேமணவாளா, விதியி னாலிமை யோர்தொழு தேத்தும் விகிர்த னேதிரு வாவடு துறையுள், அதிபனேயெனை யஞ்சலென் றருளாய் யாரெ னக்குற வமரர்க ளேறே. ௪

வந்த வாளரக் கன்வலி தொலைத்து வாழும் நாள்கொடுத் தாய்வழி முதலே, வெந்த வெண்பொடி பூசவல் லானே வேட னாய்விச யற்கருள் புரிந்த, இந்து சேகர னேயிமையோர்சீ ரீச னேதிரு வாவடு துறையுள், அந்த ணாவெனை யஞ்சலென் றருளாய் யாரெ னக்குற வமரர்க ளேறே. ௫

குறைவி லாநிறை வேகுணக் குன்றே கூத்த னேகுழைக் காதுடை யானே, உறவி லேனுனை யன்றிமற் றடியேன் ஒருபிழை பொறுத் தாலிழி வுண்டே, சிறைவண் டார்பொழில் சூழ்திரு வாரூர்ச் செம்பொ னேதிரு வாவடு துறையுள், அறவ னேயெனை யஞ்சலென் றருளாய் யாரெ னக்குற வமரர்க ளேறே. ௬

வெய்ய மாகரி ஈருரி யானே வேங்கை ஆடையி னாய்விதி முதலே, மெய்ய னேஅட லாழியன்(று) அரிதான் வேண்ட நீகொடுத் தருள்புரி விகிர்தா, செய்ய மேனிய னேதிக ழொளியே செங்க ணாதிரு வாவடு துறையுள், ஐயனேயெனை யஞ்சலென் றருளாய் யாரெ னக்குற வமரர்க ளேறே. ௭

கோதி லாஅமு தேஅருள் பெருகு கோல மேயிமையோர்தொழு கோவே, பாதி மாதொரு கூறுடை யானே பசுபதீபர மாபர மேட்டீ, தீதி லாமலை யேதிரு வருள்சேர் சேவகாதிரு வாவடு துறையுள், ஆதி யேயெனை யஞ்சலென் றருளாய் யாரெ னக்குற வமரர்க ளேறே. ௮

(௪) விதியினால் - முறைமையாக. அதிபன் - இறைவன். (௭) விதி முதலே - முதற்காரணமாய் இருப்பவனே. (௮) கோலமே - வடிவம் உடையவனே. சேவகா - வீரனே.

வான நாடனே வழித்துணை மருந்தே மாசி லாமணியே மறைப் பொருளே, ஏன மாஎயி றாமையும் எலும்பும் ஈடு தாங்கிய மார்புடை யானே, தேன்நெய் பால்தயி ராட்டுகந் தானே தேவ னேதிரு வாவடு துறையுள், ஆனை யேயெனை யஞ்சலென் றருளாய் யாரெ னக்குற வமரர்க ளேறே. கூ

வெண்த லைப்பிறை கொன்றையும் அரவும் வேரி மத்த மும் விரவி முன்மு டித்த, இண்டை மாமலர்ச் செஞ்சடை யானை ஈச னைத்திரு வாவடு துறையுள், அண்ட வாணனைச் சிங்கடி யப்பன் அணுக்க வன்தொண்டன் ஆர்வத்தா லுரைத்த, தண்த மிழ்மலர் பத்தும்வல் லார்கள் சாத லும் பிறப் பும்அறுப் பாரே. (கo)

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகத்தில் " உன்னை யன்றி இங்கு எனக்கு ஆர் உறவு " என்று பாடி, திருத்துருத்தியை அடைந்து, விமலர் கழல் அருத்தியினால் புக்கிறைஞ்சி " அடியேன்மேல் உற்றபிணி வருத்தம் ஒழித்தருள வேண்டும் " எனப் பிரார்த்தித்து வணங்கிச், சிவபெரு மான் கட்டளைப்படி அப்பதியிலுள்ள குளத்தில் மூழ்கியவுடன் பிணி நீங்கப்பெற்று "மணி யொளிசேர் திருமேனி ஆயினார்."

கண்டவர்கள் அதிசயிப்பக் கரையேறி உடைபுனைந்து
மண்டுபெருங் காதலினாற் கோயிலினை வந்தடைந்து
தொண்டர்எதிர் " மின்னுமா மேகம் "எனுஞ் சொற்பதிகம்
[1]எண்டிசையும் அறிந்துய்ய ஏழிசையால் எடுத்திசைத்தார்.

—பெ. ஏ. 300.

(கo) வேரி மத்தமும் - மணமுள்ள ஊமத்த மலரும். அண்ட வாணன் - சிவபுரத்தில் வாழ்பவன்.

[1]எண் திசையும் அறிந்துய்ய - எட்டுத் திக்கிலுள்ளவர்களும் சிவ பெருமான் அடியார்க்கு அருளும் பெருங் கருணையை அறிந்து நற்கதி அடையும்படி.

# 74. திருத்துருத்தியும் - திருவேள்விக்குடியும்

## பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

மின்னுமா மேகங்கள் பொழிந்திழிந் தருவி வெடிபடக் கரையொடுந் திரைகொணர்ந் தெற்றும், அன்னமாங் காவிரி அகன்கரை யுறைவார் அடியிணை தொழுதெழும் அன்பராம் அடியார், சொன்னவா றறிவார் துருத்தியார் வேள்விக் குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன், என்னைநான் மறக்குமா றெம்பெரு மானை என்னுடம்(பு) அடும்பிணி யிடர்கெடுத் தானை. க

கூடுமா றுள்ளன கூடியுங் கோத்துங் கொய்புன லேனலோடைவனஞ் சிதறி, மாடுமா கோங்கமே மருதமே பொருது மலையெனக் குலைகளை மறிக்குமா றுந்தி, ஓடுமா காவிரித் துருத்தியார் வேள்விக் குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன், பாடுமா றறிகிலே னெம்பெரு மானைப் பழவினை யுள்ளன பற்றறுத் தானை. உ.

கொல்லுமால் யானையின் கொம்பொடு வம்பார் கொழுங்கனிச் செழும்பயன் கொண்டுகூட் டெய்திப், புல்கியுந் தாழ்ந்தும் போந்துத வஞ்செய்யும் போகரும் யோகரும் புலரிவாய் மூழ்கச், செல்லுமா காவிரித் துருத்தியார் வேள்விக் குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன், சொல்லுமா றறிகிலேன் எம்பெரு மானைத் தொடர்ந்தடுங் கடும்பிணித் தொடர்வறுத் தானை. ங

---

(க) வெடிபட - முழக்கத்துடன். எற்றும் - மோதுகிற. அன்னமாங்காவிரி - உணவுகொடுப்பதான காவிரி. செடியனேன் - குற்றமுடையேன். நான் மறக்குமாறு என்னை - நான் மறக்கும் வழி எது, நான் மறக்கக்கூடாது. அடும்பிணி - வருத்துகின்ற பிணி. (உ) கொய்புனல் ஏனலோடு - கொய்யப்படுவதான கொல்லைத்தினையோடு. ஐவனம் - மலைநெல். மாடு - பக்கங்களில் உள்ள. மறிக்குமாறு உந்தி - ஆற்றின் குறுக்கே வழியைத் தடைசெய்வதுபோல் தள்ளிக்கொண்டு. (ங) வம்பு - மணம். செழும்பயன் - செழுஞ்சாறு. போகரும் யோகரும் இல்லறத்தினரும் துறவறத்தினரும். புலரிவாய் - விடியற்காலத்தில்.

பொறியுமா சந்தனத் துண்டமோ டகிலும் பொழிந்திழிந் தருவிகள் புன்புலங் கவரக், கறியுமா மிளகொடு கதலியும் உந்திக் கடலுற விளைப்பதே கருதித்தன் கைபோய், எறியுமா காவிரித் துருத்தியார் வேள்விக் குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன், அறியுமா றறிகிலேன் எம்பெரு மானை யருவினை யுள்ளன ஆசறுத் தானை. ச

பொழிந்திழி மும்மதக் களிற்றின மருப்பும் பொன்மலர் வேங்கையின் நன்மல ருந்தி, இழிந்திழிந் தருவிகள் கடும்புன லீண்டி எண்டிசை யோர்களும் ஆடவந் திங்கே, சுழிந்திழி காவிரித் துருத்தியார் வேள்விக் குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன், ஒழிந்திலேன் பிதற்றுமா றெம்பெரு மானை உற்றநோய் இற்றையே அறவொழித் தானை. ரு

புகழுமா சந்தனத் துண்டமோ டகிலும் பொன்மணி வரன்றிய நன்மல ருந்தி, அகழுமா அருங்கரை வளம்படப் பெருகி ஆடுவோர் பாவந்தீர்த் தஞ்சனம் அலம்பித், திகழுமா காவிரித் துருத்தியார் வேள்விக் குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன், இகழுமா றறிகிலேன் எம்பெரு மானை இழித்தநோய் இம்மையே யொழிக்கவல் லானை. சு

வரையின்மாங் கனியொடு வாழையின் கனியும் வருடியும் வணக்கியு மராமரம் பொருது, கரையுமா கருங்கடல் காண்பதே கருத்தாய்க் காம்பீலி சுமந்தொளிர் நித்திலங் கைபோய், விரையுமா காவிரித் துருத்தியார் வேள்விக் குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன், உரையுமா றறிகிலேன் எம்பெரு மானை உலகறி பழவினை அறவொழித் தானை. எ

---

(ச) பொறி - கணுக்களையுடைய. புன்புலம் - புன்செய்நிலம். ஆசு - குற்றம். (ரு) உற்றநோய் இற்றையே அற ஒழித்தானை - அடைந்துள்ள நோயை இன்றே முழுமையும் ஒழித்தவனை. (சு) வரன்றி - வாரி. அஞ்சனம்-இருளாகிய ஆணவம். (எ) வருடியும் வணக்கியும்-தள்ளியும் வளைத்தும். மராமரம் பொருது-அரசமரங்களை மோதியும். காம்பீலி - விரும்பப்படுகிற மயிற்பீலி. உரையுமாறு - புகழும் விதத்தை.

ஊருமா தேசமே மனமுகந்(து) உள்ளிப் புள்ளினம் பல படிந் தொண்கரை யுகளக், காருமா கருங்கடல் காண்பதே கருத்தாய்க் கவரிமா மயிர்சுமந்(து) ஒண்பளிங் கிடறித், தேருமா காவிரித் திருத்தியார் வேள்விக் குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன், ஆருமா றறிகிலேன் எம்பெரு மானை அம்மைநோய் இம்மையே ஆசறுத் தானே. அ

புலங்களை வளம்படப் போக்கறப் பெருகிப் பொன் களை சுமந்தெங்கும் பூசல்செய் தார்ப்ப, இலங்குமா முத் தினோ டினமணி யிடறி யிருகரைப் பெருமரம் பீழ்ந்து கொண் டெற்றிக், கலங்குமா காவிரித் திருத்தியார் வேள் விக் குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன், விலங்குமா றறிகிலேன் எம்பெரு மானை மேலைநோய் இம்மையே வீடுவித் தானே. கூ

மங்கையோர் கூறுகந் தேறுகந் தேறி மாறலார் திரிபுரம் நீறெழச் செற்ற, அங்கையான் கழலடி யன்றிமற் றறியான் அடியவர்க் கடியவன் தொழுவனா ரூரன், கங்கையார் காவிரித் திருத்தியார் வேள்விக் குடியுளா ரடிகளைச் சேர்த்திய பாடல், தங்கையால் தொழுதுதந் நாவின்மேற் கொள்வார் தவநெறி சென்றமா ருலகமாள் பவரே. க0

திருச்சிற்றம்பலம்

என்னும் பண் நிறைந்த தமிழ்ப்பதிகம் பாடிப் பரமர் திருவருள் மற வாது அவ்விடத்தில் தங்கிப் பிறகு பல பதிகளுக்கும் சென்று வண ங்கி, திருவாரூர் முன்னே தோன்றக் கண்டார்.

---

(அ) ஊரும் மாதேசமும் - ஊராரும் பெரியதேசத்தாரும். உகள - துள்ள. காரும் - உவர்ப்பாயுள்ள. தேரும் - தெளிகிற. ஆருமாறு - கூடும் விதம். (கூ) பூசல்செய்து ஆர்ப்ப - மோதி ஆரவாரம்செய்ய. இன மணி இடறி - கூட்டமாகிய இரத்தினங்களைச் சிதறி. மேலை நோய்- இனி வரக்கடவதான நோய். விலங்குமாறு - நீங்கும் வழி. (க0) மாறலார் - பகைவர். தொழுவன் - தொழும்பன், அடிமை.

## மற்றைக் கண் பெறுதல்

சிவபெருமானைக் கண்ணாரக் கண்டு இன்புறுவதற்கு ஒற்றைக் கண் போதாமையால், வன்தொண்டர் நிலமிசை வீழ்ந்து வணங்கி, பெருமூச்செறிந்து, முதலில், **திருவாரூரில் பரவையுண் மண்டளி** என்னும் ஆலயத்திற்குச் சென்று,

பொங்குதிருத் தொண்டருடன் உள்ளணைந்து புக்கிறைஞ்சித்
துங்கஇசைத் திருப்பதிகந் "தூவாயா" என்றெடுத்தே
**"இங்கெமது துயர்களைந்து கண்காணக் காட்டாய்"** என்(று)
அங்கணர்தம் முன்னின்று பாடிஅருந் தமிழ்புனைந்தார்.

—பெ. ஏ. 303.

## 96. திருவாரூர்ப் பரவையுண்மண்டளி

**பண் - பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

தூவாயா தொண்டுசெய் வார்படு துக்கங்கள்
காவாயா கண்டுகொண் டாரைவர் காக்கிலும்
நாவாயால் உன்னையே நல்லன சொல்லுவேற்(கு)
ஆவாஎன் பரவையுண் மண்டளி அம்மானே. க

பொன்னானே புலவர்க்கு நின்புகழ் போற்றலாம்
தன்னானே தன்னைப் புகழ்ந்திடுந் தற்சோதி
மின்னானே செக்கர்வா னத்திள ஞாயி(று)
அன்னானே பரவையுண் மண்டளி அம்மானே. உ

---

(க) தூவாயா - பரிசுத்தமான திருவாக்கை யுடையவனே. துக்கங்கள் காவாயா - துக்கங்களினின்றும் காப்பாற்ற மாட்டாயா? கண்டு கொண்டார் - விஷயங்களை அறிந்துகொள்வதற்கு உதவியாயுள்ள. ஐவர் காக்கிலும் - ஐம்பொறிகள் (நான் உன்வழிச் செல்லாமல்) தடுத்தாலும். நாவாயால் - நாவை உடைய வாயினால். ஆவாஎன் - அந்தோ என்று இரங்குவாயாக. (உ) புலவர்க்கு......தன்னானே - புலவர்களால் உனதுபுகழ் போற்றற்குரியதான தகுதியுடையவனே. தன்னைப் புகழ்ந்திடும் தற்சோதி - தன்னைப் பாமாலைகளால் புகழச்செய்யும் சுயஞ்சோதியே. மின்னானே - மின்னொளி வடிவினனே.

நாமாறு(து) உன்னையே நல்லன சொல்லுவார்
போமாறென் புண்ணியா புண்ணிய மாறுனே
பேய்மாறாப் பிணம்இடு கா(டு)உகந் தாடுவாய்க்(கு)
ஆமாறென் பரவையுண் மண்டளி அம்மானே. ௩

நோக்குவேன் உன்னையே நல்லன நோக்காமைக்
காக்கின்றாய் கண்டுகொண் டாரைவர் காக்கிலும்
வாக்கென்னும் மாலைகொண் டுன்னை என்மனத்(து)
ஆர்க்கின்றேன் பரவையுண் மண்டளி அம்மானே. ௪

பஞ்சேரும் மெல்லடி யாளையோர் பாகமாய்
நஞ்சேரும் நன்மணி கண்டம் உடையானே
நெஞ்சேர நின்னையே உள்கி நினைவாரை
அஞ்சேலென் பரவையுண் மண்டளி அம்மானே. ௫

அம்மானே ஆகம சீலர்க் கருள்நல்கும்
பெம்மானே பேரரு ளாளன் பிடவூரன்
தம்மானே தண்தமிழ் நூற்புல வாணர்க்கோர்
அம்மானே பரவையுண் மண்டளி அம்மானே. ௬

விண்டானே மேலையார் மேலையார் மேலாய
எண்தானே எழுத்தொடு சொற்பொரு ளெல்லாம்முன்

(௩) நா மாறாது - நா மாறுபடுதல் இல்லாமல். "நாத்தான் உன்திறமே திறம்பாது நண்ணி"—சுந்தரர். போம்ஆறு - போகிற வழி. ஆமாறு - விரும்புகிற வழி. (௪) நல்லன நோக்காமைக் காக்கின்றாய் - நல்லனவாகிய (நன்மையைத் தருவனவாகிய) பொருள்களைப் பாராமல் தடுக்கின்றாய். வாக்கென்னு மாலை - சொல்மாலை, பாமாலை. ஆர்க்கின்றேன் - கட்டுகின்றேன். (௫) பஞ்சு ஏரும் - பஞ்சை ஒத்த. நஞ்சு ஏரும் - நஞ்சினால் அழகுசெய்யப்பட்ட. நெஞ்சேர - நெஞ்சிலே. உள்கி நினைவாரை - மிகுதியாய் நினைப்பவரை. (௬) ஆகம சீலர் - ஆகமங்களினால் கூறப்பட்ட ஒழுக்கத்தை உடையவர். பிடவூரன் - பிடவூர் என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள பரமன்; வைப்புத் தலங்களில் ஒன்று. அம்மான் - தந்தை. (௭) விண்டானே - பற்றில்லாதவனே. மேலையார் மேலையார் மேலாய - மிக மேம்பட்ட பதவியில் இருப்பவர்களுக்கும் மேலானவனாகிய. எண்தானே - அறிவுருவனே. எழுத்தொடு......கண்டானே - எழுத்து, சொல், பொருள், இலக்கணம் எல்லாம் முன்னமே அறிந்திருப்பவனே.

கண்டானே கண்டனைக் கொண்டிட்டுக் காட்டாயே
அண்டானே பரவையுண் மண்டளி அம்மானே. எ

காற்றானே கார்முகில் போல்வதோர் கண்டத்தெம்
கூற்றானே கோல்வளை யாளையோர் பாகமாய்
நீற்றானே நீள்சடை மேல்நிறை வுள்ளதோர்
ஆற்றானே பரவையுண் மண்டளி அம்மானே. அ

செடியேன்நான் செய்வினை நல்லன செய்யாத
கடியேன்நான் கண்டதே கண்டதே காமுறும்
கொடியேன்நான் கூறுமா றுன்பணி கூறாத
அடியேன்நான் பரவையுண் மண்டளி அம்மானே. ௯

காந்தையும் வன்னியும் மத்தமுங் கூவிளம்
பாந்தசீர்ப் பரவையுண் மண்டளி அம்மானை
நிரம்பிய வூரன் உரைத்தன பத்திவை
விரும்புவார் மேலையார் மேலையார் மேலாரே. க0

திருச்சிற்றம்பலம்

பிறகு திருத்தொண்டர்களுடன் திருவாரூர் திருமூலட்டானத்துள் இறைவனைத் தொழுவதற்கு வரும்போது,

ஆதிதிரு அன்பர்எதிர் அணையஅவர் முகநோக்கிக்
கோதில்இசை யாற்"குருகு பாய"எனக் கோத்தெடுத்தே
ஏதிலார் போல்வினவி ஏசறவால் திருப்பதிகம்
காதல்புரி [1]கைக்கிளையாற் பாடியே கலந்தணைவார்.

—பெ. ஏ. 3(5.

(எ) அண்டானே - நெருங்க முடியாதவனே, மனம் வாக்கு காயங்களுக்கு எட்டாதவனே. (அ) கூற்றானே - காலகாலனே. (௯) கடியேன் - தீயவன். கூறுமாறு உன்பணி கூறாத-கூறவேண்டிய விதமாக உனக்குப் பாடல் திருப்பணியைச் செய்யாத. (க0) பாந்தசீர் - பரவிய சிறப்பு வாய்ந்த.

[1]கைக்கிளை தலைவன் தலைவி என்னும் இருவருள் ஒருவரிடத்து நிகழும் காதல்.

## 37. திருவாரூர்

### பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

குருகுபா யக்கொழுங் கரும்புகள் நெரிந்தசா(று)
அருகுபா யும்வயல் அந்தணா ரூரரைப்
பருகுமா றும்பணிந் தேத்துமா றுந்நினைந்(து)
உருகுமா றும்மிவை உணர்த்தவல் லீர்களே. க

பறக்குமெங் கிள்ளைகாள் பாடுமெம் பூவைகாள்
அறக்கண்என் னத்தகும் அடிகளா ரூரரை
மறக்ககில் லாமையும் வளைகள்நில் லாமையும்
உறக்கமில் லாமையும் உணர்த்தவல் லீர்களே. உ

சூழுமோ டிச்சுழன் றுழலும்வெண் நாரைகாள்
ஆளும்அம் பொற்கழல் அடிகளா ரூரர்க்கு
வாழுமா றும்வளை கழலுமா றும்மெனக்(கு)
ஊழுமா றும்மிவை உணர்த்தவல் லீர்களே. ௩

சக்ரவா ளத்திளம் பேடைகாள் சேவல்காள்
அக்ரமங் கள்செயும் அடிகளா ரூரர்க்கு
வக்ரமில் லாமையும் வளைகள்நில் லாமையும்
உக்ரமில் லாமையும் உணர்த்தவல் லீர்களே. ௪

---

(க) குருகுபாய - பறவைகள் பாய்ந்து ஓடுவதனால். பருகுமாறும் - துய்க்கும் விதமும். உணர்த்த வல்லீர்களே - என் நாயகனுக்கு அறிவிக்க வல்லீர்களோ? இப்பதிகத்தில் சுந்தரமூர்த்திசுவாமிகள் தன்னை நாயகியாகவும் சிவபெருமானை நாயகனாகவும் வைத்துப் பாடியிருக்கின்றார். (உ) கிள்ளை-கிளி. பூவை - நாகணவாய்ப்புள். அறக்கண் என்னத் தகும் - தருமதேவதைக்குக் கண் என்று சொல்லத்தகுந்த. (௩) வாழுமாறும் - நான் (துன்புற்று) வாழும் விதமும். ஊழுமாறும் - ஊழ்வலியின் தன்மையும். (௪) வக்ரம் - கோணல், பிணக்கு. உக்ரம் கோபம்.

இலைகள்சோ லைத்தலை இருக்கும்வெண் நாரைகாள்
அலைகொள்சூ லப்படை அடிகளா ரூரர்க்குக்
கலைகள்சோர் கின்றதும் கனவளை கழன்றதும்
முலைகள்பீர் கொண்டதும் மொழியவல் லீர்களே. ௫

வண்டுகாள் கொண்டல்காள் வார்மணற் குருகுகாள்
அண்டவா ணர்தொழும் அடிகளா ரூரரைக்
கண்டவா றுங்காமத் தீக்கனன்(று) எரிந்துமெய்
உண்டவா றும்மிவை உணர்த்தவல் லீர்களே. ௬

தேன்நலங் கொண்டதேன் வண்டுகாள் கொண்டல்காள்
ஆன்நலங் கொண்டஎம் அடிகளா ரூரர்க்குப்
பால்நலங் கொண்டஎம் பணைமுலை பயந்துபொன்
ஊன்நலங் கொண்டதும் உணர்த்தவல் லீர்களே. ௭

சுற்றுமுற் றுஞ்சுழன் றுழலும்வெண் நாரைகாள்
அற்றமுற் றப்பகர்ந் தடிகளா ரூரர்க்குப்
பற்றுமற் றின்மையும் பாடுமற் றின்மையும்
உற்றுமற் றின்மையும் உணர்த்தவல் லீர்களே. ௮

குரவம்நா றக்குயில் வண்டினம் பாடநின்(று)
அரவமா டும்பொழில் அந்தணு ரூரரைப்
பரவிநா டும்மதும் பாடிநா டும்மதும்
உருகிநா டும்மதும் உணர்த்தவல் லீர்களே. ௯

கூடும்அன் னப்பெடை காள்குயில் வண்டுகாள்
ஆடும்எம் பொற்கழல் அடிகளா ரூரரைப்

---

(௫) இலைகள் சோலை - இலைகள் அடர்ந்துள்ள சோலை. அலைகொள் - வருத்துதலைக் கொண்ட. கலை - ஆடை. சோர்கின்றதும் - அவிழ்ந்துபோவதும். பீர் - பசலை அல்லது பால். (௭) ஆன்நலம் - பசுவின் பஞ்சகவ்வியங்கள். (௭) பணைமுலை......கொண்டதும் - பருத்த தனபாரங்கள் பசலைஅடைந்து சரீரம் பொன்னின் நிறத்தை அடைந்ததும். (௮) அற்றமுற்றப் பகர்ந்து - சமயம் பார்த்துச் சொல்லி. பாடு - பெருமை. உற்று - உறவினர். (௯) குரவம் - குரவமலர். நாடும்மதும் - விரும்புவதையும்.

பாடுமா றும்பணிந் தேத்துமா றுங்கூடி
ஊடுமா றும்மிவை யுணர்த்தவல் லீர்களே. ௧௦

நித்தமா கந்நினைந் துள்ளமேத் தித்தொழும்
அத்தன்அம் பொற்கழல் அடிகளா ரூரரைச்
சித்தம்வைத் தபுகழ்ச் சிங்கடி அப்பன்மெய்ப்
பத்தனூ ரன்சொன்ன பாடலின் பத்தரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடி, தேவாசிரியமண்டபத்தின் முன் சென்று வணங்கி, கோபுரத்தைத் தொழுது, பூங்கோயிலுட் சென்று மிக்க அன்போடு,

வீழ்ந்தெழுந்து கைதொழுது முன்னின்று விம்மியே
[1]வாழ்ந்தமலர்க் கண்ணொன்றால் ஆராமல் மனம் அழிவார்
"ஆழ்ந்ததுயர்க் கடலிடைநின் றடியேனை எடுத்தருளித்
தாழ்ந்தகருத் தினைநிரப்பிக் "கண்தாரும்" எனத்தாழ்ந்தார்.

திருநாவ லூர்மன்னர் திருவாரூர் வீற்றிருந்த
பெருமானைத் திருமூலட் டானம்சேர் பிஞ்ஞகனைப்
பருகாஇன் னமுதத்தைக் கண்களாற் பருகுதற்கு
மருவார்வத் துடன்"மற்றைக் கண்தாரீர்" எனவணங்கி.

"மீளா அடிமை" எனஎடுத்து மிக்க தேவர் குலமெல்லாம்
மாளா மேநஞ் சுண்டருளி மன்னி இருந்த பெருமானைத்
[2]தாள்ஆ தரிக்கும் மெய்யடியார் தமக்காம் இடர்நீர் தரியீர்" என்(று)
[3]ஆளாந் திருத்தோ ழமைத்திறத்தால் அஞ்சொற் பதிகம் பாடினார்.
—பெ. பு. 307, 308, 309.

---

(௧௧) 1-வது வரி. தினந்தோறும் உள்ளத்தால் நினைந்து, வாயினால் துதித்து, உடம்பால் வணங்குவதை—சித்தம் வைத்த என்பதோடு கூட்டுக.

[1]வாழ்ந்த - விளக்கமுற்ற.

[2]"தாள்ஆதரிக்கும்............தரியீர்" என்று - தேவரீர் திருவடிகளை விரும்பிய உண்மை அடியார்களுக்கு உண்டாகிய துன்பத்தைப் பார்த்துக்கொண்டு வாளா இருக்கமாட்டீர் என்னும் கருத்துடன்.

[3]ஆளாம் திருத்தோழமை - அடிமையும் திருத்தோழமையும் ஆகும்.

## 95. திருவாரூர்

பண் - செந்துருத்தி

திருச்சிற்றம்பலம்

மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று முகத்தால் மிகவாடி
ஆளா யிருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே. ௧

விற்றுக் கொள்வீர் ஒற்றி யல்லேன் விரும்பி ஆட்பட்டேன்
குற்ற மொன்றுஞ் செய்த தில்லை கொத்தை யாக்கினீர்
எற்றுக் கடிகேள் என்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்
மற்றைக் கண்தான் தாரா தொழிந்தால் வாழ்ந்து போதீரே.

அன்றில் முட்டா(து) அடையுஞ் சோலை ஆரூ ரகத்தீரே
கன்று முட்டி யுண்ணச் சுரந்த காலி யவைபோல
என்றும் முட்டாப் பாடும் அடியார் தங்கண் காணாது
குன்றின் முட்டிக் குழியில் வீழ்ந்தால் வாழ்ந்து போதீரே.

துருத்தி உறைவீர் பழனம் பதியாச் சோற்றுத் துறையாள்வீர், இருக்கை திருவா ரூரே உடையீர் மனமே எனவேண்டா, அருத்தி யுடைய அடியார் தங்க ளல்லல் சொன்னக்கால், வருத்தி வைத்து மறுமை பணித்தால் வாழ்ந்து போதீரே. ௪

---

(௧) மீளா அடிமை - ஒரு காலத்தும் மீட்சி இல்லாத அடிமை; சைவ சித்தாந்தத்தின்படி உயிர்கள் இறைவனுக்குப் பெத்த (மலங்களோடுகூடிய) நிலையிலும் முத்தி (மலங்களை விட்டுப் பேரின்பத்தை நுகரும்) நிலையிலும் அடிமைகள். வாளாங்கு - வாளா + அங்கு, ஒன்றும் பேசாமல். வாழ்ந்துபோதீரே - நீரே வாழ்ந்துபோம். நிந்தா ஸ்துதி. (௨) கொத்தை - அறிவிலி. (௩) அன்றில் - ஒரு பறவை. காலி - பசு. என்றும் முட்டாது-எப்போதும் தவறாமல். (௪) மனமே எனவேண்டா-மனம் சென்றவழி விரும்பாத. அருத்தி - அன்பு. வருத்திவைத்து மறுமைப் பணித்தால் - இம்மையில் வருந்தும்படிவிட்டு மறுமையில் அருள்செய்வோமென்று சொன்னால்.

செந்தண் பவளம் திகழுஞ் சோலை இதுவோ திருவாரூர்
எந்தம் அடிகள் இதுவே யாமா(று) உமக்காட் பட்டோர்க்குச்
சந்தம் பலவும் பாடும் அடியார் தங்கண் காணாது
வந்தெம் பெருமான் முறையோ என்றால் வாழ்ந்து போதீரே.

தினைத்தாள் அன்ன செங்கால்நாரை சேருந் திருவாரூர்ப்
புனத்தார் கொன்றைப் பொன்போல் மாலைப் புரிபுன் சடையீரே
தனத்தா லின்றித் தாந்தாம் மெலிந்து தங்கண் காணாது
மனத்தால் வாடி அடியா ரிருந்தால் வாழ்ந்து போதீரே. ௬

ஆயம் பேடை அடையுஞ் சோலை ஆரூ ரகத்தீரே
ஏயெம் பெருமான் இதுவே ஆமா றுமக்காட் பட்டோர்க்கு
மாயங் காட்டிப் பிறவி காட்டி மறவா மனங்காட்டிக்
காயங் காட்டிக் கண்ணீர் கொண்டால் வாழ்ந்து போதீரே. ௭

கழியாய்க் கடலாய்க் கலனாய் நிலனாய்க் கலந்த சொல்லாகி
இழியாக் குலத்திற் பிறந்தோம் உம்மை இகழா தேத்துவோம்
பழிதான் ஆவ தறியீ ரடிகேள் பாடும் பத்தரோம்
வழிதான் காணா(து) அலமந் திருந்தால் வாழ்ந்து போதீரே.

பேயோ டேனும் பிரிவொன்று இன்னா தென்பர் பிறரெல்லாங்
காய்தான் வேண்டிற் கனிதா னன்றோ கருதிக்கொண்டக்கால்
நாய்தான் போல நடுவே திரிந்தும் உமக்காட் பட்டோர்க்கு
வாய்தான் திறவீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே. ௯

---

(௫) 2-வது வரி. எம்முடைய சுவாமீ! உமக்கு ஆட்பட்டவர்களுக்கு அருள் செய்யும் விதம் இதுதானோ? சந்தம்-சந்தக் கவிகள். (௬) தனத்தால் இன்றி - பொருள் இல்லாமல். (௭) ஆயம்பேடை - அன்னப்பேடைக்கூட்டம். ஏ எம்பெருமான் - எம்பெருமானே. மாயம் - நிலையாமை. கண்ணீர் கொண்டால் - நீர் கண்ணைக் கொண்டீரானால். (௮) 1 வது வரி. கழி, கடல், கலன், நிலம் ஆகிய பொருள்களாகி நின்ற உம்முடைய தன்மையைக் குறிக்கும் சொற்களால் ஏத்துவோம் என்று கூட்டுக. இகழாது ஏத்துவோம் - (நீர் எத்தனை அருளாது ஒழிந்தாலும்) உம்மை இகழ்ந்து கூறாது துதிப்போம். இழியாக்குலம் - உயர்ந்த குலம்; மாதொரு பாகனார்க்கு வழிவழி அடிமை செய்யும் வேதியர் குலம். (௯) 2-வது வரி. கருதிக்கொண்டக்கால் காய்தான் வேண்டில் கனிதான் அன்றோ - நீர் நினைத்தால் காயை விரும்புகின்ற கனியாகச்செய்யவல்லீர்.

செருந்தி செம்பொன் மலருஞ் சோலை இதுவோ திருவாரூர்
பொருந்தித் திருமூ லட்டா னம்மே இடமாக் கொண்டீரே
இருந்தும் நின்றுங் கிடந்தும் உம்மை இகழா தேத்துவோம்
வருந்தி வந்தும் உமக்கொன் றுரைத்தால் வாழ்ந்துபோதீரே.

காரூர் கண்டத் தெண்தோள் முக்கண் கலைகள் பலவாகி
ஆரூர்த் திருமூ லட்டா னத்தே அடிப்போ ராரூரன்
பாரூர் அறிய என்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்
வாரூர் முலையாள் பாகங் கொண்டீர் வாழ்ந்து போதீரே. கக

திருச்சிற்றம்பலம்

பூத முதல்வர் புற்றிடங்கொண் டிருந்த புனிதர் வன்தொண்டர்
[1]காதல் புரிவே தனைக்கிரங்கிக் கருணைத் திருநோக் களித்தருளிச்
சீத மலர்க்கண் கொடுத்தருளச் செவ்வே விழித்து முகமலர்ந்து
பாத மலர்கள் மேற்பணிந்து வீழ்ந்தார் உள்ளம் பரவசமாய்.

விழுந்தும் எழுந்தும் பலமுறையால் மேவிப் பணிந்து மிகப்பரவி
எழுந்த களிப்பி னால்ஆடிப் பாடி இன்ப வெள்ளத்தில்
அழுந்தி இரண்டு கண்ணாலும் அம்பொற் புற்றின் இடைஎழுந்த
செழுந்தண் பவளச் சிவக்கொழுந்தின் அருளைப் பருகித் திளைக்கின்றார்.
—பெ. ஏ. 310, 311.

பின்பு ஞாலம் உய்ய வரும் நம்பி கனகமணி மாளிகைக் கோயிலை வலங்கொண்டு சீலமுடைய அன்பருடன் தேவாசிரிய மண்டபத் தருகில் வந்து சேர்ந்தார்.

## பரவையார் மனைக்குப் பரமன் தூது போதல்

நம்பிஆரூரர் பரவையாரைப் பிரிந்தமையால், பரவையார் தனியே இருந்து "பொங்கு காதல் மீதூர" மிக வருந்திக்கொண் டிருந்தார். பிறகு நாவலூரர் திருவொற்றியூரில் சங்கிலியாரை மணஞ்

---

(௧0) செருந்தி - ஒருமரம். (கக) கலைகள் - கல்வி நூல்கள்.

[1]காதல்புரிவேதனைக்கு - திருவாரூருக்குச் செல்லவேண்டும் என்னும் காதல் மிகுதியினால் சபதத்தை மறந்து அதனால் கண் இழந்த துன்பத்திற்கு.

செய்துகொண்டார் என்னும் செய்தியைக் கேட்டவுடன், கோபம் மூண்டெழுத் தம்மையும் மறந்து துன்பக் கடலுள் மூழ்கியிருந்தார்.

ஆரூரர் பூங்கோயிலுக்குச் சென்று வணங்கும்போது அவருடைய பரிசனங்கள் பரவையார் மாளிகையில் செல்ல முயலுகையில், பரவையார் ஆரூரர்மீது கொண்ட கோபத்தினால் அவர்களைத் தடுக்க, அவர்கள் ஆரூரரிடம் சென்று பரவையார் கோபங் கொண்டிருப்பதைத் தெரிவித்தார்கள். வன்தொண்டர் இதைக் கேட்டுப் பெரிதும் வருந்திக், கற்ற மாந்தர் சிலரைப் பரவையார்பால் அனுப்பி அவர் கோபத்தைத் தணிக்கும்படிச் சொல்ல, அவர்களும் பரவையாருக்குப் பல நீதிகளை எடுத்துச் சொல்லவும், பரவையார் கோபம் தணியாதவராய், "குற்றம் பொருந்திய ஆரூரர் சார்பாக நீர் வார்த்தைகள் சொன்னால் நிச்சயமாய் என் உயிர் போகும்" என்று சொல்ல, அவர்கள் அஞ்சித் திரும்பினார்கள். நம்பிஆரூரர் துயரக் கடலுள் மூழ்கிக் கரையேறுவதற்கு வேறு புணை காணாதவராய், சிவபெருமானைச் சிந்தித்து "என்னை ஆட்கொண்ட பெருமானே! நீர் பரவையார் ஊடலைத் தவிர்க்காவிட்டால் நான் இறந்துபடுவேன்" என்று விண்ணப்பித்தார். உடனே,

அடியார் இடுக்கண் தரியாதார் ஆண்டு கொண்ட தோழர்குறை
முடியா திருக்க வல்லரே முற்றும் அளித்தாள் பொற்றளிர்க்கைத்
தொடியார் தழும்பும் முலைச்சுவடும் உடையார் தொண்டர் தாங்காணும்
படியால் அணைந்தார் நெடியோனும் காணா அடிகள் படிதோய.

—பெ. ஏ. 324.

நம்பிஆரூரரும் அன்புக்கு எளிவந்த பெருமானைக் கண்டு, தாங் கற்கரிய மகிழ்ச்சியினால் உடல் நடுங்க, மயிர்க்கூச்செறிய, கைகளைத் தலைமேற் குவித்து, திருவடியில் வீழ்ந்து வணங்கினார். சிவபெருமான் "உனக்கு உற்றது என்ன" என்று வினவ, ஆரூரர் "குற்றம்செய்த என் குற்றத்தைப் பொறுத்து ஆட்கொள்ள வேண்டும்" என்று சொல்லி,

"அடியேன் அங்குத் திருஒற்றி யூரில் நீரே அருள்செய்ய, வடிவேல் ஒண்கண் சங்கிலியை மணஞ்செய்(து) அணைந்த திறமெல்லாம், கொடியே ரிடையாள் பரவைதான் அறிந்து தன்

பால் யான்குறுகில், 'முடிவேன்' என்று துணிந்திருந்தாள் என்
நான் செய்வ(து)?" எனமொழிந்து.

"நாயன் நீரே நான்உமக்கிங் கடியே னாகில் நீர்எனக்குத்
தாயின் நல்ல தோழருமாம் தம்பி ரானு ரேயாகில்
[1]ஆய அறிவும் இழந்தழிவேன் அயர்வும் நோக்கி அவ்வளவும்
போய்இவ் விரவே பரவையுறு புலவி தீர்த்துத் தாரும்" என.

அன்பு வேண்டுந் தம்பெருமான் அடியார் வேண்டிற் றே[2]வேண்டி
முன்பு நின்று விண்ணப்பஞ் செய்த நம்பி முகநோக்கித்
"துன்பம் ஒழிநீ யாம்உனக்கோர் தூத னாகி இப்பொழுதே [தார்.
பொன்செய் மணிப்பூண் பரவைபால் போகின் றோம்" என் றருள்செய்

—பெ. ஏ. 327, 328, 329.

இவ்வாறு அருள்செய்தவுடன் தம்மை அர்ச்சிக்கும் ஆதி சைவர் வேடம் பூண்டு பரவையார் மாளிகைக்குச் சென்று கதவைத் தட்டிக் கூப்பிட, பரவையாரும் "சிவபெருமானைப் பூசிக்கும் ஆதி சைவர் பாதி இரவில் வந்தது என்ன காரணமோ" என்று மனம் பதைத்துக் கதவைத் திறந்தார்; வந்த காரணம் என்னவென்று விசாரித்தார். பிரானுர், "நம்பி இங்கு வரவேண்டும்" என்றார். பரவையார் உடன்படாதவராய் ஆதிசைவராய் வந்த சிவபிரானை நோக்கி "இது உமது பெருமைக்குத் தக்கதன்று. நான் இசையேன்; நீரும் போம்" என்று மறுக்க, நம்பரும் தம்முடைய சொரூபத்தைக் காட்டாதவராய்த், தம் தோழனுர்பால் திருவிளையாடல் செய்ய எண்ணி, ஆரூரரிடம் வந்து "நாம் என்ன சொல்லியும் பரவை உடன்படாமல் மறுத்தாள்" என்று கூற, நம்பிஆரூரர் "பரவைபாற் சென்று நான் அவளிடம் போகும்படி செய்யீராயின் என் உயிர் போய்விடும்" என்று திருவடியில் வீழ்ந்தார். தம்பிரான் நம்பியை அருளால் நோக்கி "நீ இப்போதே பரவையை அடையச் செய்வோம். துயரப்படாதே" என்று கூறித், தம் உண்மைத் திருவுருவோடு பரவையிடத்துச்சென்றுஅவள் கோபத்தைத் தணிவித்துப் பின்னும் வன்தொண்டர்பால் வந்து "நாம் பரவையின் கோபத்தைத் தணிவித்தோம்; நீ அவளிடம் போகலாம்"

---

[1]ஆய அறிவு - இயற்கை அறிவு. [2]வேண்டி - முடிக்க விரும்பி.

என்ன, ஆரூரரும் "பந்தமும் வீடும் நீர் அருள்செய்யும்படி செய்தீர். எந்தை பிரானே, என் இனி என்பால் இடர்" என்று கூறிப் பூங் கோயிலுக்குச் சென்ற தம்பிரானார் பின்சென்று தொழுது, தொண்டர்களுடன் பரவையார் மனைக்கு அவர் எதிர்கொள்ளச் சென்று, இருவரும் ஓருயிர் என்று சொல்லும்படியான நிலைமையில் வாழ்ந்து, பூங்கோயிலில் புற்றிடங்கொண்ட பெருமானை எப்போதும் பணிந்து போற்றி, செஞ்சொற் பாமாலைகளும் சாத்தி மிக்க மகிழ்ச்சியோடு இருந்தனர்.

## கலிக்காமனார் பகையும் நட்பும்

திருப்பெருமங்கலம் என்னும் ஊரிலே ஏயர்கோக்குடியில் கலிக்காமர் என்னும் பெயருடைய வேளாளர் இறைவனிடத்தும் அடியவரிடத்தும் மிக்க அன்பு பூண்டு, திருப்புன்கூர் என்னும் பதியில் திருப்பணி பலவும் செய்து வாழ்ந்து வந்தார். நம்பிஆரூரர் தம்பிரானாரைப் பரவைபால் தூது அனுப்பிய செய்தியைக் கலிக்காமர் கேட்டு,

"அரிவைகா ரணத்தி னாலே ஆளுடைப் பரமர் தம்மை
இரவினில் தூது போக ஏவிஅங் கிருந்தான் தன்னை
வரவெதிர் காண்பே னாகில் வருவதென் னாங்கொல்?" என்று
விரவிய செற்றம் பற்றி விள்ளும்உள் ளத்த ராகி.

—பெ. ஏ. 387.

இவ்வாறு கோபங்கொண்டு இருந்த காலையில், நம்பிஆரூரர் தாம் இறைவனைத் தூது அனுப்பியதற்காக, கலிக்காமனார் தம்மீது கோபம் கொண்டிருந்ததை அறிந்து, அவருடைய கோபத்தைத் தீர்க்கும்படி சிவபெருமானுக்கு விண்ணப்பம் செய்து நாள்தோறும் வேண்டினார். இறைவனும் இருவரையும் கூட்டும்படிச் செய்யக் கருதிக் கலிக்காமனார்க்குக் கொடிய சூலைநோயை அருள்செய்ய, அந்நோயால் மிக வருந்தி அவர் சூலைநோயைத் தீர்க்கும்படி பெருமானுடைய திருவடிகளை

வணங்க, ஈசனார் அவர்முன் தோன்றி "உன்னை வருத்தும் சூலை வன்தொண்டன் தீர்க்கில் அன்றி ஒழியாது" என்று அருள்செய்தார். கலிக்காமர் அதனைக் கேட்டு "தேவரீருக்கு வழிவழி அடிமை செய்யும் குடியிற் பிறந்த அடியேனுடைய நோயை வன்தொண்டனா தீர்ப்பது? அவன் தீர்ப்பதினும், நோயினால் வருந்துவதே நன்று" என்றார். பெருமான் உடனே அவர்முன் மறைந்து வன்தொண்டர்பால் சென்று "இன்று நம் ஏவலாலே ஏயர்கோனுக்கு உற்ற சூலையைச் சென்று நீ தீர்ப்பாயாக" என்று அருளிச்செய்ய, நாவலூராரும் மிக மகிழ்ந்து, கலிக்காமரிடத்துத் தாம் வரும் செய்தியைச் சொல்லி அனுப்பித் தாமும் விரைந்து போனார். அவர் வரும் செய்திகேட்ட கலிக்காமனார், "சிவபெருமானைத் தூது அனுப்பிய ஆரூரன் வந்து என்னுடைய சூலையைத் தீர்ப்பதன்முன் நான் வயிற்றைக் கிழித்துக் கொண்டு இறப்பேன்" என்று சொல்லி உடைவாளினால் வயிற்றைக் கிழித்துக்கொண்டு இறந்தார். அவரோடு உடன் இறக்க முயற்சி செய்த கலிக்காமர் தேவியார் நம்பிஆரூரர் வந்தார் என்பது கேட்டு அவரை முறைப்படி உபசரித்தார். பின்பு ஆரூரர் "கலிக்காமனார் சூலையைத் தீர்த்து அவருடன் இருக்க விரும்புகிறேன்" என்று கூற, கலிக்காமருடைய மனைவியார் கட்டளைப்படி வேலையாட்கள் "அவருக்குத் தீங்கு ஒன்றும் இல்லை. நித்திரை செய்கிறார்" என்றார்கள். வன்தொண்டர் "தீது ஒன்றும் இல்லாவிட்டாலும் அவரைக் கண்டாலொழிய என்மனம் தெளியாது" என்று அருளினார். இறந்து கிடந்த கலிக்காமரை அவர்கள் காட்டக்கண்டு, "நிகழ்ந்தது நன்று! நானும் உயிர் துறப்பேன்" என்று கூறி உடைவாளைப்பற்ற, இறைவன் அருளால் கலிக்காம நாயனார் உயிர் பெற்றெழுந்து, வன்தொண்டர் கையிலிருந்த வாளைப் பிடித்துக்கொள்ள, வன்தொண்டர் நாயனார் அடியில் வீழ்ந்து வணங்க, நாயனாரும் வன்தொண்டரைப் பணிந்தார். இருவரும் ஒருவரை ஒருவர் கட்டித் தழுவிக்கொண்டு நண்பராயினர். பின்பு திருப்புன்கூர் ஆலயத்திற்குச் சென்று சிவபெருமானை வணங்கினார்கள். வன்தொண்டர் தம்பிரானார் அருளினை நினைந்து,

# 55. திருப்புன்கூர்

## பண் - தக்கேசி

*திருச்சிற்றம்பலம்*

அந்த ணாளனுன் அடைக்கலம் புகுத அவனைக் காப்பது காரண மாக, வந்த காலன்தன் ஆருயி ரதனை வவ்வி னாய்க்(கு) உன்தன் வண்மைகண் டடியேன், எந்தை நீஎனை நமன்தமர் நலியில் இவன்மற் றென்னடி யானென விலக்குஞ், சிந்தையால் வந்துன் திருவடி யடைந்தேன் செழும் பொழில்திருப் புன்கூ ருளானே. க

வையகம் முற்றும் மாமழை மறந்து வயலில் நீரிலை மாநிலந் தருகோம், உய்யக் கொள்கமற் றெங்களை யென்ன ஒளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும், பெய்யும் மாமழைப் பெருவெள்ளந் தவிர்த்துப் பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளுஞ், செய்கை கண்டுநின் திருவடி யடைந்தேன் செழும் பொழில்திருப் புன்கூ ருளானே. உ

ஏதம் நன்னிலம் ஈரறு வேலி ஏயர்கோ னுற்ற இரும்பிணி தவிர்த்துக், கோத னங்களின் பால்கறந் தாட்டக் கோல வெண்மணற் சிவன்தன்மேற் சென்ற, தாதை தாளற எறிந்த சண் டிக்குன் சடைமிசை மலர் அருள்செயக் கண்டு, பூத வாளிநின் பொன்னடி யடைந்தேன் பூம்பொ ழில்திருப் புன்கூ ருளானே. ௩

---

(க) அந்தணாளன் - வேதியனான மார்க்கண்டேயன். வண்மை - வள்ளன்மை, வரையாது கொடுக்கும் தன்மை. வன்மை என்றும் பாடம். நலியில் - துன்பப்படுத்தினால். (உ) மறந்து - மறந்ததனால், பெய்யாதபடியால். தருகோம் - கொடுப்போம். பெயர்த்தும் - மறுபடியும். (௩) நல்நிலம் ஈரறுவேலி(யைக் கொடுத்த) ஏயர்கோன் உற்ற ஏதம் (துன்பத்தைச் செய்யும்) இரும்பிணி தவிர்த்து—உரைநடை. கோதனம் - பசுக் கூட்டம், பசுமடி. கோல வெண்மணற் சிவன் - அழகிய வெண்மணலாற் செய்த சிவலிங்கத்தின்மேல். பூத ஆளி - பூதநாதரே.

நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன் நாவினுக் கரையன் நாளைப்போ வானும், கற்ற சூதன்நற் சாக்கியன் சிலந்தி கண் ணப்பன் கணம் புல்லனென் றிவர்கள், குற்றஞ் செய்யினுங் குணமெனக் கருதுங் கொள்கை கண்டுநின் குரைகழ லடைந் தேன், பொற்றி ரள்மணிக் கமலங்கள் மலரும் பொய்கை சூழ்திருப் புன்கூ ருளானே. ச

கோல மால்வரை மத்தென நாட்டிக் கோளரவு சுற்றிக் கடைந் தெழுந்த, ஆல நஞ்சுகண் டவர்மிக இரிய அமரர் கட் கருள் புரிவது கருதி, நீல மார்கடல் விடந்தனை யுண்டு கண் டத் தேவைத்த பித்தநீ செய்த, சீலங் கண்டுநின் திருவடி யடைந்தேன் செழும்பொ ழில்திருப் புன்கூ ருளானே. ரு

இயக்கர் கின்னரர் யமனொடு வருண ரியங்கு தீவளி ஞாயிறு திங்கள், மயக்க மில்புலி வானரம் நாகம் வசுக்கள் வானவர் தானவ ரெல்லாம், அயர்ப்போன் றின்றிநின் திருவடி யதனை அர்ச்சித் தார்பெறும் ஆரருள் கண்டு, திகைப்போன் றின்றிநின் திருவடி யடைந்தேன் செழும்பொ ழில்திருப் புன்கூ ருளானே. சு

போர்த்த நீள்செவி யாளர்அந் தணர்க்குப் பொழில் கொள் ஆல்நிழற் கீழறம் புரிந்து, பார்த்த னுக்கன்று பாசுப தங்கொடுத் தருளினாய் பண்டு பகீரதன் வேண்ட, ஆர்த்து வந் திழியும் புனற்கங்கை நங்கை யாளைநின் சடைமிசைக் கரந்த, தீர்த்தனே நின்தன் திருவடி யடைந்தேன் செழும் பொ ழில்திருப் புன்கூ ருளானே. எ

---

(ச) பொன்திரள் மணிக் கமலங்கள் மலரும் - பொன்திரளும் மணிகளும் தாமரைகளும் பரந்து விளங்கும். (ரு) ஆலநஞ்சு - ஆலகால விஷம். இரிய - ஓட. சீலம் - உபகார குணம். (சு) அயர்ப்பு ஒன்று இன்றி - சோர்வு ஒன்றும் இல்லாமல். திகைப்பு - மயக்கம், ஐயம். (எ) போர்த்த - பொதிந்த. நீள்செவியாளர் - நீண்ட கேள்வியை யுடையவரான. பார்த்தன் - அர்ச்சுனன். கரந்த - பனித்துளி அள வாக ஒளித்த.

மூவெயில் செற்றஞான்(று) உய்ந்த மூவரி லிருவர் நின் திருக் கோயிலின் வாய்தல், காவ லாளரேன் றேவிய பின்னை யொருவன்நீ கரிகாடரங் காக, மானை நோக்கியோர் மாநடம் மகிழ மணிமு ழாமுழக் கஅருள் செய்த, தேவ தேவநின் திரு வடி யடைந்தேன் செழும்பொ ழில்திருப் புன்கூ ருளானே.

அறிவி னால்மிக்க அறுவகைச் சமயம் அவ்வவர்க் கங்கே ஆரருள் புரிந்து, எறியும் மாகடல் இலங்கையர் கோனைத் துலங்க மால்வரைக் கீழடர்த் திட்டுக், குறிகொள் பாடலின் இன்னிசை கேட்டுக் கோல வாளொடு நாளது கொடுத்த, செறிவு கண்டுநின் திருவடி யடைந்தேன் செழும்பொ ழில் திருப் புன்கூ ருளானே. கூ

கம்ப மால்களிற் றின்னுரி யானைக் காமற் காய்ந்ததோர் கண்ணுடை யானைச், செம்பொ னேயொக்குந் திருவுருவானைச் செழும்பொ ழில்திருப் புன்கூ ருளானை, உம்ப ராளியையுமை யவள் கோனை ஊரன் வன்றொண்டன் உள்ளத் தாலுகந்(து) அன்பி னாற்சொன்ன அருந்தமி ழைந்தோ டைந்தும் வல்லவர் அருவினை யிலரே. கo

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடி, சில நாட்களுக்குப்பின், கலிக்காம நாய னார் நம்பிஆரூரரோடு திருவாரூருக்குச் சென்று பூங்கோயில் அமர்ந்த பிரானை வணங்கி ஆரூரரிடம் விடைபெற்றுத் தம் ஊருக்குத் திரும்பி னார்.

---

(அ) மூவெயில் - மூன்று எயில், முப்புரம். வாய்தல் - வாயில். கரிகாடு - சுடுகாடு. மான்ஐநோக்கி - மான்போலும் அழகிய கண்ணையுடைய உமாதேவியார். முழா - மத்தளம். (கூ) அங்கே - அவ்வச் சமயங் களினிடத்தே. எறியும் - அலைகளை எறியும்படியான. துலங்க - நடுங் கும்படி. குறிகொள் - அருள்புரிய வேண்டும் என்னும் குறிப்பினை யுடைய. செறிவு - நிறைந்த அன்பு. (கo) கம்பம் - அசைதலையுடைய. மால் - மத மயக்கத்தையுடைய.

## ஆரூரர் சேரவேந்தருக்குத் தோழராதல்

மலைநாட்டிலே திருவஞ்சைக்களம் என்னும் ஆலயமுள்ள கொடுங்கோளூரிலே சேரர்குடியில் வந்த பெருமாக்கோதையார் என்னும் இயற்பெயருடைய அரசர் ஒருவர் இருந்தார். அவருக்குக் கழறிற்றறிவார் என்றும் சேரமான் பெருமாள் என்றும் வேறு பெயர்கள் உண்டு. அவர் சிவபெருமானிடத்துப் பேரன்பு வாய்ந்தவர். அவர் நாள்தோறும் செய்யும் சிவபூசை முடிவில் கூத்தப்பெருமானுடைய சிலம்பொலியைக் கேட்பது வழக்கம். ஒரு நாள் சிலம்பொலி கேட்கவில்லை. உடனே அவர் "நான் என்ன பிழை செய்தேன். இவ்வுடம்பால் அடையும் பயன் யாது உளது" என்று எண்ணி உடைவாளை உருவி மார்பிலே நாட்ட, சிலம்பொலி கேட்டது. சேரர்பிரானும் அவ்வொலியைக் கேட்டு, உடைவாளை அகற்றி, மகிழ்ந்து, சிவபிரானை வணங்கித் "திருவருள் முன்னமே செய்யாத காரணம் யாது?" என வினவினார். அப்போது இறைவனார் அசரீரி வாக்கால், நம்பிஆரூரரை நினைப்பிக்கும்பொருட்டு "வன்தொண்டன் பொன்னம்பலத்தில் நம் கூத்தாடலைக் கண்டு ஒன்றும் உணர்வால் நமைப் போற்றி பதிகம் பாடுவதால் அதைக் கேட்டு வரத்தாழ்த்தோம்" என்று அருளினார். உடனே சேரர்பிரான் "பொன்னம்பலத்தை வணங்கி வன்தொண்டரையும் காண்பேன்" என்று விரும்பித், தம்மூரினின்றும் புறப்பட்டுத் தில்லையை அடைந்து பொன்னம்பலத்தில் "அளவில் இன்பப் பெருங் கூத்தர் ஆட எடுத்த கழல்காட்ட உளமும் புலனும் ஒருவழிச் சென்று உருகப் போற்றி" ஆனந்தக்கடலுள் மூழ்கித் திருவருளால் பொன்வண்ணத்தந்தாதி பாடினார். உடனே கூத்தப்பெருமான் தம்முடைய எடுத்த பாதத்திருச்சிலம்பின் ஒலியை நேரே கேட்பித்தார். பொன்னம்பலத்தில் பெருமானுடைய திருக்கூத்தைத் தரிசித்துக்கொண்டு சிலநாள் அங்கே இன்புற்றிருக்கும்போது, நாவலூரரைக் காணவேண்டும் என்னும் விருப்பம் மிக்கெழத் திருவாரூருக்குச் செல்லப் புறப்பட்டார். வழியில் சீகாழி முதலிய தலங்களைத் தரிசித்துக்கொண்டு திருவாரூர் வந்து சேர்ந்தார்.

நம்பிஆரூரரும் அந்தக் காலத்தில் நாகைக்காரோணம் பாடிப் பொன், நவமணிகள், ஆடைமுதலியவற்றைச் சிவபிரானிடம் பெற்றுக்கொண்டு திருவாரூரில் வந்திருந்தார்.

# 46. திருநாகைக்காரோணம்

## பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

பத்தூர்புக் கிரந்துண்டு பலபதிகம் பாடிப்
பாவையரைக் கிறிபேசிப் படிறாடித் திரிவீர்
செத்தார்தம் எலும்பணிந்து சேவேறித் திரிவீர்
செல்வத்தை மறைத்துவைத்தீ ரெனக்கொருநாளிரங்கீர்
முத்தாரம் இலங்கிமிளிர் மணிவயிரக் கோவை
அவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நாறும்
கத்தூரி கமழ்சாந்து பணித்தருள வேண்டுங்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. க

வேம்பினொடு தீங்கரும்பு விரவிஎனைத் தீர்த்தீர்
விருத்திநா னுமைவேண்டத் துருத்திபுக்கங் கிருந்தீர்
பாம்பினொடு படர்சடைக ளவைகாட்டி வெருட்டிப்
பகட்டநான் ஒட்டுவனோ பலகாலும் உழன்றேன்
சேம்பினொடு செங்கழுநீர் தண்கிடங்கில் திகழுந்
திருவாரூர் புக்கிருந்த தீவண்ணர் நீரே
காம்பினொடு நேத்திரங்கள் பணித்தருள வேண்டுங்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. உ

---

(க) பத்து ஊர் - பலவூர். பாவையரைக் கிறிபேசி-பெண்களோடு பரிகாச வார்த்தைகள் பேசி. படிறாடி - வஞ்சனைசெய்து. (உ) வேம்பினொடு தீங்கரும்பு விரவி - வேம்புபோலவும் இனிமையான கரும்பு போலவும் என்னுடன் கலந்து. எனைத் தீர்த்தீர்-என்னைத் தூய்மையனாக்கினீர். விருத்தி - அடிமை. துருத்தி - காவிரியின் தென்கரையில் ஒரு ஸ்தலம். சரீரம் என்றும் கொள்ளலாம். பகட்ட - வெளிவேஷம் காட்ட. ஒட்டுவனோ-அடிமை செய்ய சம்மதிப்பேனோ? சேம்பு - ஒரு செடி. கிடங்கு-குளம். காம்பினொடு நேத்திரங்கள்-மூக்குக் கண்ணாடி,

பூண்பதோர் இளவாமை பொருவிடையொன் றேறிப்
பொல்லாத வேடங்கொண் டெல்லாருங் காணப்
பாண்பேசிப் படுதலையிற் பலிகொள்கை தவிரீர்
பாம்பினொடு படர்சடைமேல் மதிவைத்த பண்பீர்
வீண்பேசி மடவார்கை வெள்வளைகள் கொண்டால்
வெற்பரையன் மடப்பாவை பொறுக்குமோ சொல்லீர்
காண்பினிய மணிமாடம் நிறைந்தநெடு வீதிக்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. ரு.

விட்டதோர் சடைதாழ வீணைவிடங் காக
வீதிவிடை ஏறுவீர் வீணடிமை யுகந்தீர்
துட்டரா யினபேய்கள் சூழநட மாடிச்
சுந்தரராய்த் தூமதியஞ் சூடுவது சுவண்டே
வட்டவார் குழல்மடவார் தம்மைமயல் செய்தல்
மாதவமோ மாதிமையோ வாட்டமெலாந் தீரக்
கட்டியெமக் கீவதுதா னெப்போது சொல்லீர்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. சு

மிண்டாடித் திரிதந்து வெறுப்பனவே செய்து
வினைக்கேடு பலபேசி வேண்டியவா திரிவீர்
தொண்டாடித் திரிவேனைத் தொழும்புதலைக் கேற்றுஞ்
சுந்தரனே கந்தம்முத லாடையா பரணம்

---

(ரு) பூண்பது ஓர் இளஆமை - ஒரு இள ஆமை ஓட்டை யணிந்து. பொருவிடை - போர்செய்கின்ற எருது. பாண்பேசி - பாட்டுப்பாடி. வெற்பரையன் மடப்பாவை - மலையரையன் மகளான இளமையான தோற்றத்தை உடைய உமாதேவியார். (சு) விட்டது- திரித்துவிட்டதாகிய. வீணைவிடங்காக - வீணையேந்திய அழகாக. சுவண்டு - கபடம். மாதிமை - அழகு. வாட்டம் - துன்பம். கட்டி - பொன்கட்டி. (எ) மிண்டாடித் திரிதந்து - மதங் கொண்டு திரிந்து. 3-வது வரி. தொண்டுசெய்து திரிகின்ற வென்னை உன் அடிமைத் திறத்திலேயே ஈடுபடச் செய்யும். கந்தம் - வாசனைத் திரவியங்கள்.

பண்டாரத் தேனெனக்குப் பணித்தருள வேண்டும்
பண்டுதான் பிரமாண மொன்றுண்டே நும்மைக்
கண்டார்க்குங் காண்பரிதாய்க் கனலாகி நிமிர்ந்தீர்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. ௫

இலவஇதழ் வாயுமையோ டெருதேறிப் பூதம்
இசைபாட இடுபிச்சைக் கெச்சுச்சம் போது
பலஅகம்புக் குழிதருவீர் பட்டோடு சாந்தம்
பணித்தருளா திருக்கின்ற பரிசென்ன படிறே
உலவுதிரைக் கடல்நஞ்சை அன்றமரர் வேண்ட
உண்டருளிச் செய்ததுமக் கிருக்கொண்ணா திடவே
கலவமயில் இயலவர்கள் நடமாடுஞ் செல்வக்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. ௬

தூசுடைய அகலல்குல் தூமொழியா ளூடல்
தொலையாத காலத்தோர் சொற்பாடாய் வந்து
தேசுடைய இலங்கையர்கோன் வரையெடுக்க அடர்த்துத்
திப்பியகீ தம்பாடத் தேரோடுவாள் கொடுத்தீர்
நேசமுடை அடியவர்கள் வருந்தாமை யருந்த
நிறைமறையோ ருறைவீழி மிழலைதனில் நித்தல்
காசருளிச் செய்தீரின் றெனக்கருள வேண்டுங்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே.

---

(௫) பண்டாரம் - பொக்கிஷம். (௬) இலவ இதழ் - இலவம் பூப்போல சிவந்த உதடு. எச்சு உச்சம்போது - (வெப்பம்) மிகுந்த உச்சிக்காலத்து. படிறே - வஞ்சனையோ. கலவமயில் இயலவர்கள் - தோகையோடு கூடிய மயிற் சாயலை உடைய மாதர்கள். (௭) தூசு - சீலை. தூமொழியாள் - பரிசுத்தமான மொழியையுடைய உமாதேவியார். சொற்பாடாய் - பெருமைபொருந்திய சொற்களைப் பேசுபவராய். நிறைமறையோர் - கல்வி கேள்விகளால் நிரம்பின அந்தணர். திப்பிய - இனிய.

மாற்றமே லொன்றுரையீர் வாளாநீ ரிருந்தீர்
வாழ்விப்ப னெனவாண்டீர் வழியடியே னுமக்கு
ஆற்றவேல் திருவுடையீர் நல்கூர்ந்தீ ரல்லீர்
அணியாரூர் புகப்பெய்த அருநிதிய மதனில்
தோற்றமிகு முக்கூறி லொருகூறு வேண்டுந்
தாரீரே லொருபொழுதும் அடியெடுக்க லொட்டேன்
காற்றனைய கடும்பரிமா ஏறுவது வேண்டுங்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. அ

மண்ணுலகும் விண்ணுலகும் உம்மதே யாட்சி
மலையரையன் பொற்பாவை சிறுவனையுந் தேறேன்
எண்ணிலியுண் பெருவயிறன் கணபதியொன் றறியான்
எம்பெருமா னிதுதகவோ இயம்பியருள் செய்யீர்
திண்ணெனஎன் னுடல்விருத்தி தாரீரே யாகில்
திருமேனி வருந்தவே வளைக்கின்றே னுனைக்
கண்ணறையன் கொடும்பாட னென்றுரைக்க வேண்டா
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. கூ

மறியேறு கரதலத்தீர் மாதிமையே லுடையீர்
மாநிதியந் தருவனென்று வல்லீரா யாண்டீர்
கிறிபேசிக் கீழ்வேளூர் புக்கிருந்தீ ரடிகேள்
கிறியும்மாற் படுவேனோ திருவாணை யுண்டேல்

---

(அ) மாற்றம் - பேச்சு. வாளா - சும்மா. வழியடியேன் உமக்கு - நான் உனக்குப் பரம்பரையாய் அடியவன். ஆற்ற - மிகுதியாக. ஏல் - அசை. திருவுடையீர் - செல்வமுடையீர். அருநிதியம் - அருஞ்செல்வம். கடு - வேகம். பரிமா - குதிரை. (கூ) எண்இலிஉண் - அளவற்ற பண்டங்களையுண்கிற. கண்ணறையன்-வன்நெஞ்சன். கொடும்பாடன் - கொடுமை உடையவன். திண்ணென என் உடல்விருத்தி - வலிமை செய்யும்படியான உடலை வளர்க்கும்படியான நல்ல உணவு. வளைக்கின்றேன்-கட்டுகின்றேன். (௧௦) மறியேறு கரதலத்தீர்-மானேறின கையையுடையீர். மாதுஇமைஏல் உடையீர் - இமையமாதை (பார்வதிதேவியாரை) ஒருபாகத்தில் ஏற்றுக்கொண்டு உடையவரே. வல்லீராய் ஆண்டீர் - என்னை வலியவந்து ஆட்கொண்டீர். "மண்ணின்மேல் மயங்கிக் கிடப்பேனை வலிய வந்தெனை யாண்டுகொண்டானே"—சுந்தரர். கிறி பேசி - மாய வார்த்தைக் கூறி.

பொறிவிரவு நற்புகர்கொள் பொற்சுரிகை மேலோர்
பொற்பூவும் பட்டிகையும் புரிந்தருள வேண்டும்
கறிவிரவு நெய்சோறு முப்போதும் வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. ௧௦

பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கு மெனக்கும்
பற்றாய பெருமானே மற்றாரை யுடையேன்
உண்மயத்த உமக்கடியேன் குறைதீர்க்க வேண்டும்
ஒளிமுத்தம் பூணாரம் ஒண்பட்டும் பூவும்
கண்மயத்த கத்தூரி கமழ்சாந்தும் வேண்டுங்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரென்(று)
அண்மயத்தா லணிநாவ லாரூரன் சொன்ன
அருந்தமிழ்க ளிவைவல்லா ரமருலகாள் பவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

சேரர்பெருமான் திருவாரூரைச் சேர்ந்தபோது நம்பிஆரூரர் அவரை எதிர்கொண்டழைத்தார். உடனே சேரர்பெருமான் ஆரூரரைத் தாழ்ந்து வணங்கத், தாமும் பெருமானை வணங்கி அவரை வாரி எடுத்து ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டு, இன்பவெள்ளத்துள் மூழ்கி, என்பும் உருக, இருவருக்கும் உயிர் ஒன்றே என்று சொல்லும் படி நண்பர் ஆயினர். அதனால் முனைப்பாடிவேந்தர் ‘சேரமான் தோழர்’ என்னும் மேன்மைத் திருநாமமும் பெற்றார். பின்பு இருவரும் சென்று திருவாரூர்ப் பெருமானை வணங்கிப் பரவையார் மாளிகைக்குச் சென்று அமுதுண்டு அவரால் பலவித உபசாரங்கள் செய்யப்பெற்றார்கள். திருவாரூரில் சில நாட்கள் தங்கி யிருந்து வன்மீக நாதரை வணங்கியும், வீதிவிடங்கப்பெருமான் பவனி சேவித்தும் மனம் மகிழ்ந்து வாழ்ந்து வந்தார்கள்.

---

(௧௦) பொறிவிரவும்-புள்ளிகளோடு கூடின. நல் புகர்கொள்-நன்னிறத்தைக் கொண்ட. சுரிகை - உடைவாள். பட்டிகை - அரைக் கச்சு. (௧௧) பற்றாய - பற்றுக்கோடாகிய. உள்மயத்த - அந்தர்யாமியாயிருக்கிற. கண்மயத்த - கண்ணுக்கினியதாகிய. அண்மயத்தால் - பொருந்தும் வகையால். சமீபத்திலிருப்பவன் (தோழன்) என்னும் உரிமையால்.

## ஆரூரர் மூவேந்தருடன் கூடுதல்

இவ்வாறு இருக்கும் நாளில், வன்றொண்டர் நீலகண்டப்பெருமான் வீற்றிருக்கும் பதிகள் பல வணங்கிக் கன்னிநாட்டு மதுரை முதலான தலங்களை வணங்கப் புறப்பட்டார். சேரர்பெருமானும் ஆரூரரைப் பிரியாது உடன் சென்றார். திருவாரூரை அகன்று கீழ்வேளூர் நாகைக்காரோணம் முதலிய தலங்களுக்குச் சென்று சிவபெருமானை வணங்கித் திருமறைக்காடு சேர்ந்தார்கள். அவ்விடத்தில் திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும் திறக்க அடைக்கப்பாடிய திருவாயிலைக் கடந்து மறைக்காட்டருமணியை இறைஞ்சி வீழ்ந்து பணிந்தெழுந்து போற்றி,

## 71. திருமறைக்காடு

### பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

யாழைப்பழித் தன்னமொழி மங்கையொரு பங்கன்
பேழைச்சடை முடிமேற்பிறை வைத்தானிடம் பேணில்
தாழைப்பொழி லூடேசென்று பூழைத்தலை நுழைந்து
வாழைக்கனி கூழைக்குரங் குண்ணும்மறைக் காடே. க

சிகரத்திடை இளவெண்பிறை வைத்தானிடந் தெரியில்
முகரத்திடை முத்தின்னொளி பவளத்திர ளோதத்
தகரத்திடை தாழைத்திரள் ஞாழற்றிரள் நீழல்
மகரத்தொடு சுறவங்கொணர்ந் தெற்றும்மறைக் காடே. உ

(க) பேழைச்சடை - பெரிய அல்லது பெருமையுடைய சடை. பூழை - துவாரத்தில். கூழை - குறுகிய. மறைக்காடே - திருமறைக்காடு (வேதாரணியம்) ஆகும். (உ) சிகரத்திடை - திருமுடியில். முகரத்திடை - சங்கினிடத்து உண்டாகிற. தகரத்திடை - தகர மரத்தினிடத்து. ஞாழல் - குங்கும மரம். மகரம் சுறவம் - மீன்வகைகள். ஓதம் எற்றும் - அலைகள் (கரையின்மீது) எறிகிற.

அங்கங்களும் மறைநான்குடன் விரித்தானிடம் அறிந்தோம்
தெங்கங்களும் நெடும்பெண்ணையும் பழம்வீழ்மணற் படப்பைச்
சங்கங்களும் இலங்கிப்பியும் வலம்புரிகளும் இடறி
வங்கங்களும் உயர்கூம்பொடு வணங்கும்மறைக் காடே. ௩

நரைவிரவிய மயிர்தன்னொடு பஞ்சவ்வடி மார்பன்
உரைவிரவிய உத்தமனிடம் உணரல்லுறு மனமே
குரைவிரவிய குலைசேகரக் கொண்டல்தலை விண்ட
வரைபுரைவன திரைபொருதிழிந் தெற்றும்மறைக் காடே. ௪

சங்கைப்பட நினையாதெழு நெஞ்சேதொழு தேத்தக்
கங்கைச்சடை முடியுடையவர்க் கிடமாவது பரவை
அங்கைக்கடல் அருமாமணி உந்திக்கரைக் கேற்ற
வங்கத்தொடு சுறவங்கொணர்ந் தெற்றும்மறைக் காடே. ௫

அடல்விடையினன் மழுவாளினன் அலராலணி கொன்றைப்
படருஞ்சடை முடியுடையவர்க் கிடமாவது பரவைக்
கடலிடையிடை கழியருகினிற் கடிநாறுதண் கைதை
மடலிடையிடை வெண்குருகெழு மணிநீர்மறைக் காடே. ௬

---

(௩) விரித்தான் - விரிவாகச் செய்தவன். பெண்ணை - பனை மரம். படப்பை - பரப்பு. இலங்கு இப்பி - பிரகாசிக்கிற முத்துச் சிப்பி. வங்கம் - மரக்கலம். கூம்பு - பாய்மரம். (௪) 1-வது வரி. வெண்மையான மயிரினாற் செய்யப்பட்ட பஞ்சவடி என்னும் பூணூல் அணிந்த மார்பை உடையவன். 2-வது வரி. மிக்க புகழினை உடைய மேலோனது இடத்தை அறிய விரும்பும் மனமே. 3, 4-வது வரி. இடி முழக்கஞ் செய்யும் கூட்டமாய்ச் சேர்ந்துள்ள மேகங்கள் மழையாகப் பொழிந்து மலைகளைப் போன்று உயர்ந்த அலைகளாக மோதும்படியான திருமறைக்காடு ஆகும். (௫) 1-வது வரி. நெஞ்சமே! சந்தேகமாக நினையாமல், சிவபெருமானை வணங்கித் துதிக்க எழுவாயாக. பரவை அங்கைக் கடல் அருமாமணி உந்திக் கரைக்கு ஏற்ற - பரவிய கடலினது அழகிய கைகள்போன்ற அலைகள் கடலில் அமிழ்ந்து கிடக்கும் அரிய பெரிய இரத்தினங்களை தள்ளிக்கொண்டு வந்து கரைமீது எறிய. (௬) அலரால் அணிகொன்றை - கொன்றை மலர்களால் அலங்கரிக்கப்பட்ட. பரவைகடல் - பரவிய கடல்.

முளைவளரிள மதியுடையவர் முன்செய்தவல் வினைகள்
களைகளைந்தெனை ஆளல்லுறு கண்டன்னிடஞ் செந்நெல்
வளைவிளைவயற் கயல்பாய்தரு குணவார்மணற் கடல்வாய்
வளைவளையொடு சலஞ்சலங்கொணர்ந் தெற்றும்மறைக் காடே.

கலம்பெரியன சுரும்பார்ந்தன நங்கோனிடம் அறிந்தோம்
கலம்பெரியன சாருங்கடற் கரைபொருதிழி கங்கைச்
சலம்புரிசடை முடியுடையவர்க் கிடமாவது பரவை
வலம்புரியொடு சலஞ்சலங்கொணர்ந் தெற்றும்மறைக் காடே.

குண்டாடியுஞ் சமணாடியுங் குற்றுடுக்கையர் தாமும்
கண்டார்கண்ட காரணம்மவை கருதாதுகை தொழுமின்
எண்டோளினன் முக்கண்ணினன் ஏழிசையினன் அறுகால்
வண்டாடுதண் பொழில்சூழ்ந்தெழு மணிநீர்மறைக் காடே. ௯

பாரூர்பல புடைசூழ்வள வயல்நாவலர் வேந்தன்
வாரூர்வன முலையாளுமை பங்கன்மறைக் காட்டை
ஆரூரன தமிழ்மாலைகள் பாடும்மடித் தொண்டர்
நீரூர்தரு நிலனோடுயர் புகழாகுவர் தாமே. ௧0

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடினார். பிறகு அகத்தியான்பள்ளியைத் தொழுது கோடிக்குழகர் கோயிலைச் சேர்ந்து,

(எ) முளை வளர் - முளையைப் போன்று வளர்ந்து வளை வாகிய. களைகளைந்து - வேரறுத்து. கண்டன் - நீலகண்டன். 3, 4-வது வரி. செந்நெல் கதிர்கள் வளைந்து விளைவைக் கொடுக்கின்ற கயல்கள் பாயும்படியான வயல்கள் சூழ்ந்ததும், கிழக்கில் நீண்ட மணற் பரப்பை உடைய கடற்கரையின்மீது கூன் சங்குகளையும், சலஞ்சலம் என்னும் சங்குகளையும் கொண்டுவந்து வீசுகிற மறைக்காடே. (அ) கலம் - மரக்கலம். கங்கைச்சலம் புரிசடை - கங்கா நதி பாய்கின்ற முறுக்கோடு கூடிய சடை. (௯) குண்டாடியும் சமண் காடியும்.........காரணம் அவை - கோட்சொல்வோரும், சமண சமயத்தை விரும்புவோரும், சிறிய ஆடையை உடுத்தவருமான சமணர்கள் உண்மை என்று தெளிவதற்கு ஏதுவாகிய காரணங்களை. மணி நீர் - முத்துக்களையுடைய நீர் (கடல்) சூழ்ந்துள்ள. (௧0) வார் ஊர் - கச்சு அணிந்த.

கோடிக் குழகர் கோயில்அயல் குடிகள் ஒன்றும் புறத்தெங்கும்
நாடிக் காணு துள்புக்கு நம்பர் பாதந் தொழுதுள்ளம்
வாடிக் "கடிதாய்க் கடற்காற்"றென் றெடுத்து மலர்க்கண் நீர்வாரப்
பாடிக் காடு காள்புணர்ந்த பரிசும் பதிகத் திடைவைத்தார்.
—பெ. கழ. 89.

## 32. திருக்கோடிக்குழகர்

### பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

கடிதாய்க் கடற்காற்று வந்தெற்றக் கரைமேல்
குடிதானய லேயிருந் தாற்குற்ற மாமோ
கொடியேன் கண்கள்கண் டனகோடிக் குழகீர்
அடிகேள் உமக்கார் துணையாக இருந்தீரே. க

முன்தான் கடல்நஞ்ச முண்ட அதனாலோ
பின்தான் பரவைக் குபகாரஞ் செய்தாயோ
குன்றாப் பொழில்சூழ் தருகோடிக் குழகா
என்தான் தனியே இருந்தாய் எம்பிரானே. உ

மத்தம்மலி சூழ்மறைக் காடதன் தென்பால்
பத்தர்பலர் பாட இருந்த பரமா
கொத்தார்பொழில் சூழ்தரு கோடிக் குழகா
எத்தால்தனி யேஇருந் தாயெம் பிரானே. ௩

காடேல்மிக வாலிது காரிகை அஞ்சக்
கூடிப்பொந்தி லாந்தைகள் கூகை குழற

---

(க) கடிதாய் - வேகமாய். எற்ற - மோத. 2-வது வரி. பக்கத்திலே குடிகள் இருந்தால் குற்றமாகுமோ? திருக்கோயிலுக்குப் பக்கத்தில் வீடுகள் ஒன்றும் இல்லாது இருந்தமையால் அவ்வாறு கூறினார். (உ) பரவை - கடல், பரவையார். என்தான் - என்ன காரணத்தினால். (௩) மத்தம் - குயில், ஊமத்தை. (ச) காடேல் மிக வாலிது - சுடுகாடே மிகவும் பரிசுத்தமானது அல்லது மேலானது. காரிகை - அழகினை உடையவள் (உமாதேவியார்).

வேடித்தொண்டர் சாலவுந் தீயர் சழக்கர்
கோடிக்குழ காஇடங் கோயில் கொண்டாயே. ௪

மையார் தடங்கண்ணி பங்காகங் கையாளும்
மெய்யாகத் திருந்தனள் வேறிட மில்லை
கையார் வளைக்காடு களோடு முடனாய்க்
கொய்யார் பொழிற்கோடி யேகோயில் கொண்டாயே. ௫

அரவேரல்கு லாளை யோர்பாகம் அமர்ந்து
மரவங்கமழ் மாமறைக் காடதன் தென்பால்
குரவம்பொழில் சூழ்தரு கோடிக் குழகா
இரவேதுணை யாயிருந் தாயெம் பிரானே. ௬

பறையுங் குழலும் ஒலிபாட லியம்ப
அறையுங் கழலார்க்க நின்றாடும் அமுதே
குறையாப் பொழில்சூழ் தருகோடிக் குழகா
இறைவாதனி யேயிருந் தாயெம் பிரானே. ௭

ஒற்றியூரென்ற வூனத்தி னாலது தானோ
அற்றப்பட ஆரூர தென்(று)அகன் றாயோ
முற்றாமதி சூடிய கோடிக் குழகா
எற்றால்தனி யேயிருந் தாயெம் பிரானே. ௮

நெடியானொடு நான்முக னும்அறி வொண்ணாப்
படியான்பலி கொள்ளு மிடங்குடி யில்லை

---

(௪) வேடித்தொண்டர்......சழக்கர் - வேட்டை ஆடும் தொழிலைச் செய்வோர் மிக்க தீயோர், பொய்யர்கள் (இருக்கும்படியான). (௫) மெய்ஆகத்து - அழிவில்லாத உன்னுடைய சரீரத்தில். 3-வது வரி. இடப்பாகம்கொண்ட உமாதேவியார் கையில் அணிந்த வளையல்களோடும், சுடுகாட்டிற்குச் சமீபமாய். (௬) மரவம் - குங்கும மரம். குரவம்பொழில் - குராமரச் சோலை. (௭) அறையும் கழல் ஆர்க்க - ஒலிக்கின்ற வீரக்கழல் ஆரவாரிக்க. (௮) 1, 2-வது வரி. ஒற்றிவைக்கப்பட்ட ஊரென்கிற குற்றத்தினால் திருவொற்றியூருக்குக் குறைவு ஏற்பட அதைவிட்டும், யாருடைய ஊர் அது என்று (ஆர் ஊர்) திருவாரூரைவிட்டும் நீங்கினாயோ? (௯) நெடியான் - நீண்டவனான திருமால். அறிவொண்ணா-அறியவொண்ணா. படியான் - தன்மையான்.

கொடியார்பலர் வேடர்கள் வாழுங் கரைமேல்
அடிகேள்அன்ப தாயிடங் கோயில்கொண் டாயே. ௯

பாரூர்மலி சூழ்மறைக் காடதன் தென்பால்
ஏரார்பொழில் சூழ்தரு கோடிக் குழகை
ஆரூர னுரைத்தன பத்திவை வல்லார்
சீரார்சிவ லோகத் திருப்பவர் தாமே. ௧0

திருச்சிற்றம்பலம்

நம்பிஆரூரரும் சேரர் பெருமானும் பிறகு சோழ நாட்டை அகன்று பாண்டி நாட்டைச் சார்ந்து, **திருப்புத்தூரைத்** தொழுது **மதுரையை** அடைந்தனர். பாண்டியன் அவர் வருகையை அறிந்து நகரை அலங்கரித்து எதிர் கொண்டான். பாண்டியனும், அவன் மகளை மணந்து மதுரையில் வந்திருந்த சோழனும், சேரர் பெருமானும், ஆரூரரும் திருவாலவாய்க் கோயிலை வலம் வந்து இறைவனை வணங்கினார்கள். ஆரூரர் தமிழ்ப்பாமாலை புனைந்து பெருமகிழ்ச்சி எய்தினார். பின்பு பாண்டியன் சேரருக்கும் ஆரூரருக்கும் தன்னுடைய மாளிகையில் தக்க உபசாரங்கள் செய்தான். திருநாவலூரார் மதுரைக்கு அருகிலுள்ள தலங்களைப் பணிய விரும்பி மூவேந்தர்களோடும் **திருப்பூவணத்தைச்** சமீபித்தபோது கூடவரும் திருத்தொண்டர்கள் அப்பதியினைக் காட்ட,

## 11. திருப்பூவணம்

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

திருவுடை யார்திரு மாலய னாலும்
உருவுடை யாருமை யாளையோர் பாகம்
பரிவுடை யார்அடை வார்வினை தீர்க்கும்
புரிவுடை யார்உறை பூவணம் ஈதோ. ௧

---

(௧0) பார் ஊர் மலிசூழ் - இந்த உலகில், பல ஊர்களால் சூழப்பட்டுள்ள.

(௧) ஒரு பாகம் பரிவு உடையார் - ஒரு பாகத்தில் அன்புடன் வைத்திருப்பவர். புரிவு - அருள்.

எண்ணி யிருந்து கிடந்தும் நடந்தும்
அண்ண லெனுநினை வார்வினை தீர்ப்பார்
பண்ணிசை யார்மொழி யார்பலர் பாடப்
புண்ணிய னுருறை பூவண மீதோ. உ

தெள்ளிய பேய்பல பூதம வற்றொடு
நள்ளிருள் நட்டம தாடல் நவின்றோர்
புள்ளுவ ராகு மவர்க்கவர் தாமும்
புள்ளுவ னுருறை பூவண மீதோ. ௩

நிலனுடை மான்மறி கையது தெய்வக்
கனலுடை மாமழு ஏந்தியோர் கையில்
அனலுடை யாரழ கார்தரு சென்னிப்
புனலுடை யாருறை பூவண மீதோ. ௪

நடையுடை நல்லெரு தேறுவர் நல்லார்
கடைகடை தோறிடு மின்பலி என்பார்
துடியிடை நன்மட வாளொடு மார்பில்
பொடியணி வாருறை பூவண மீதோ. ரு

மின்னனை யாள்திரு மேனிவி ளங்கவோர்
தன்னமர் பாகம தாகிய சங்கரன்

---

(உ) பண் இசைஆர் மொழியார் - பண்ணோடு கூடிய இசைநிரம்பிய மொழியை யுடையவர். (௩) ஆடல்நவின்றோர் - ஆடலைச் செய்தவர். புள்ளுவர் - வஞ்சகர். (௪) தெய்வக்கனல் உடைமாமழு - தெய்வீகம் பொருந்திய அனலை வீசும்படியான பெரிய மழுவாயுதம். (ரு) நல்லார்......என்பார் - மாதர்களுடைய வாயில்கள்தோறும் சென்று பிச்சை இடுங்கள் என்பார். துடி-உடுக்கை (போன்ற). பொடி-விபூதி. (சு) மின் அனையாள் - மின்னலைப்போல் ஒளி மிக்க உமாதேவியாரை. திருமேனி விளங்க - தன் திருமேனியில் விளங்கும்படியாக. தன் அமர்பாகம் அது ஆகிய - தன்னுடைய இடப்பாகத்தில் அமரும்படியாகச் செய்த.

முன்னினை யார்புரம் மூன்றெரி யூட்டிய
பொன்னனை யானுறை பூவண மீதோ. ௬

மிக்கிறை யேயவன் துன்மதி யாலிட
நக்கிறை யேவிர லால்இற வூன்றி
நெக்கிறை யேநினை வார்தனி நெஞ்சம்
புக்குறை வான்உறை பூவண மீதோ. ௭, ௮, ௯

சீரின் மிகப்பொலி யுந்திருப் பூவணம்
ஆர விருப்பிட மாவுறை வானை
ஊர னுரைத்தசொன் மாலைகள் பத்திவை
பாரில் உரைப்பவர் பாவம் அறுப்பரே. ௧0

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகத்தில் "பூவணம் ஈதோ" என்று பாடி, கோயி லுட் சென்று வணங்கி மீண்டும் மதுரை வந்து சேர்ந்து, பெரு மானைப் பணிந்து இன்புற்றுச் சிலநாள் அங்கு தங்கி யிருந்தார். பிறகு **திருஆப்பனூர், திருஏடகம்** முதலாம் பதிகளிற் சென்று வணங்கி மீண்டும் மதுரை வந்து சேர்ந்தார்.

பின்பு மூவேந்தருடன் **திருப்பரங்குன்றிற்குச்** சென்று பெரு மானை வணங்கி, சிவபெருமான் திருவடிக்கீழ் ஆட்செய்யும் அரு மையை நினைந்து, 'ஆட்செய அஞ்சுதும்' என்று ஆரூரர் பாடினார்.

---

(௭) மிக்கு இறை ஏயவன் - மிகுந்த பெருமை பொருந்தின இராவணன். இட - மண்டியிட்டுக் கயிலையைத் தூக்க. 2-வது வரி. நகைத்து விரலால் அவன் நசுங்கும்படி சிறிதே ஊன்றி. 3-வது வரி. அன்போடு உருகி சிறிதாவது நினைப்பவர்களுடைய ஒப்பற்ற நெஞ்சில் புகுந்து கோயிலாக் கொள்பவனாகிய சிவபெருமான். (௧0) 2-வது வரி. மிகுந்த விருப்பத்துடன் தனக்கு உரிய இடமாக வாழ்பவனை.

## 2. திருப்பரங்குன்றம்

### (திருக்கோத்திட்டையும் - திருக்கோவலூரும்)

**பண் - இந்தளம்**

*தி ரு ச் சி ற் ற ம் ப ல ம்*

கோத்திட் டையுங்கோ வலுங்கோ யில்கொண் டுமைக் கொண் டுழல்கின் றதோர்கொல் லைச்சில்லைச், சேத்திட்டுக் குத்தித் தெருவே திரியுஞ் சில்பூ தமும்நீ ருந்திசை திசை யன, சோத்திட்டு விண்ணோர் பலருந் தொழநும் அரைக்கோ வணத்தோ டொருதோல் புடைசூழ்ந், தார்த்திட் டதும்பாம் புகைக்கொண் டதும்பாம்(பு) அடிகே ளுமக்காட் செயஅஞ் சுதுமே. க

முண்டம் தரித்தீர் முதுகா டுறைவீர் முழுநீ றுமெய்பூ சுதிர்மூக்கப் பாம்பைக், கண்டத்தி லுந்தோளி லுங்கட்டி வைத்தீர் கடலைக் கடைந்திட்ட தோர்நஞ்சை யுண்டீர், பிண் டஞ் சுமந்தும் மொடுங்கூட மாட்டோம் பெரியா ரொடுநட் பினிதென் றிருத்தும், அண்டம் கடந்தப் புறத்து மிருந்தீர் அடிகே ளுமக்காட் செயஅஞ் சுதுமே. உ

மூடாய முயலகன் மூக்கப் பாம்பு முடைநாறி யவெண் தலைமொய்த்த பல்பேய், பாடாவ ருபூதங் கள்பாய் புலித் தோல் பரிசொன் றறியா தனபா ரிடங்கள், தோடார்ம லர்க்

---

(க) கொல்லைச்சில்லை - காட்டின் கண்ணே மேய்வதாயும் இளம் பருவத் துடுக்குள்ளதுமான இடபம். "கொல்லைச்சில்லை வெள்ளேறு" —**சுந்தரர்** (தூறன்றி). சேத்திட்டு-சினந்து, (கோபித்து). சோத்திட்டு- அஞ்சலிசெய்து. சோத்தம் - அஞ்சலி. ஆர்த்திட்டது - கட்டினது. (உ) முண்டம் - தலை. முதுகாடு - மயானம், இடுகாடு, சுடுகாடு என் னும் இரண்டும் அடங்கும். மூக்கப் பாம்பு - கோபத்தை உடைய பாம்பு. ஓர் - ஒப்பற்ற. பிண்டம் சுமந்து - உடம்பைச் சுமந்து. இருத்தும் - இருப்போம். அண்டம் கடந்து - எல்லா உலகங்களையுங் கடந்து. (ங) மூடுஆய முயலகன் - மறைத்தலைச் செய்யும் முயலகன் (ஆணவம்). முடைநாறிய - முடை நாற்றம் வீசுகின்ற. பாடாவரு பூதங்கள்-பாடிக்கொண்டு வருகிற பூதங்கள். தோடுஆர்-இதழ் நிறைந்த.

கொன்றை யுந்துன் னெருக்குந் துணைமா மணிநா கமரைக் கசைத்தொன், ருடாதே னவேசெய் திரேம் பெருமான் அடிகே ளுமக்காட் செயஅஞ் சுதுமே. ரு

மஞ்சுண்ட மாலைம திகூடு சென்னி மலையான் மடந்தை மணவாள நம்பி, பஞ்சுண்ட அல்குற் பணைமென் முலையா ளொடுநீரு மொன்று யிருந்த லொழியீர், நஞ்சுண்டு தேவர்க் கமுதங் கொடுத்த நலமொன் றறியோம்உங் கைநா கமதற்(கு) அஞ்சுண்டு படமது போகவிடீ ரடியோம் உமக்காட் செயஅஞ் சுதுமே. ௬

பொல்லாப் புறங்காட் டகத்(து)ஆட் டொழியீர் புலால்வா யனபே யொடுபூச் சொழியீர், எல்லா மறிவீர் இதுவே யறியீ ரென்றிரங் குவேனல் லியும்நண் பகலும், கல்லால் நிழற்கீ ழொருநாள் கண்டதுங் கடம்பூர்க் கரக்கோயி லின்முன் கண்டதும், அல்லால் விரகொன் றிலமெம் பெரு மான் அடிகே ளுமக்காட் செயஅஞ் சுதுமே. ௭

தென்னாத் தெனாத்தெத் தெனாஎன்று பாடிச் சிலபூ தமும்நீ ருந்திசை திசையன, பன்னான் மறைபா டுதிர்பா சூருளீர் படம்பக் கங்கொட்டுந் திருவொற்றி யூரீர், பண்ணார் மொழியாளை யோர்பங் குடையீர் படுகாட் டகத்தென்று மோர்பற் றொழியீர், அண்ணா மலையேனென் றீர்ஆ ரூருளீர் அடியோம் உமக்காட் செயஅஞ் சுதுமே. ௮

---

(ரு) துன்னெருக்கும் - மிக்க எருக்கம்பூ மாலையையும். மாமணி - மாணிக்கத்தையுடைய. (௬) மஞ்சுண்ட மாலை மதி - மேகத்தால் மறைக்கப்படும் மாலைக் காலத்துத் தோன்றும் இளம்பிறை. பணை - பருத்த. ஒன்றாயிருத்தல் - ஒருவடிவாயிருத்தல். (௭) புறங் காட் டகத்து - மயானத்தில். ஆட்டு ஒழியீர் - ஆடுதலை யொழியீர். புலால்வாயன - புலால்வாயினவாகிய. பூச்சு - நட்பு. எல்லியும் - இரவும். விரகு ஒன்று இலம் - வேறோருபாயமுடையோமல்லோம். (௮) படம்பக்கங் கொட்டுந் திருவொற்றியூரீர் - படம்பக்கம் என்னும் பறையையடிக்கு நியமமுடைய திருவொற்றியூருடையீர். பண்ஆர் - இசையோடு கூடிய. படுகாடு-மயானம்.

சிங்கத் துரிமூ டுதிர்தே வர்கணம் தொழநிற்றீர் பெற் றம் உகந்தே றிடுதீர், பங்கம் பலபே சிடப்பாடுந் தொண்டர் தமைப்பற்றிக் கொண்டாண்டு விடவுங் கில்லீர், கங்கைச் சடையீ ருங்கருத் தறியோங் கண்ணு(ம்)மூன் றுடையீர் கண் ணேயா யிருந்தால், அங்கத் (து)றுநோய் களைந்தாள கில்லீ ரடியோ முமக்காட் செயஅஞ் சுதுமே. எ

பிணிவண் ணத்தவல் வினைதீர்த் தருளீர் பெருங்காட் டகத்திற் பெரும்பேயும் நீருந், துணிவண்ணத் தின்மேலு மோர்தோ லுடுத்துச் சுற்றுநா கத்தராய்ச் சுண்ண நீறுபூசி, மணிவண் ணத்தின்மே லுமோர்வண் ணத்தராய் மற்று மற் றும்பல் பலவண் ணத்தராய், அணிவண் ணத்தராய் நிற்றீ ரெம் பெருமான் அடிகே ளுமக்காட் செயஅஞ் சுதுமே. அ

கோளா ளியகுஞ் சரங்கோ ளிழைத்தீர் மலையின் தலை யல்லது கோயில் கொள்ளீர், வேளா ளியகா மனைவெந் தழிய விழித்தீ ரதுவன்றி யும்வேய் புரையுந், தோளாள் உமை நங்கை யோர்பங் குடையீர் உடுகூறை யுஞ்சோறுந் தந்தாள கில்லீர், ஆளா ளியவேகற் றீரெம் பெருமான் அடிகே ளுமக் காட் செயஅஞ் சுதுமே. கூ

பாரோடு விண்ணும் பகலு மாகிப் பனிமால் வரையாகிப் பரவையாகி, நீரோடு தீயும் நெடுங்காற் றுமாகி நெடுவெள்

---

(எ) உரிமூடுதிர் - தோலைப் போர்த்தீர். பெற்றம் - இடபம். பங்கம் - நிந்தாஸ்துதி. விடவுங்கில்லீர் - விடமாட்டீர். கண்ணேயாய் இருந்தால் - உம்மிடம் அன்பு பூண்டவராய் இருந்தால். (அ) பிணி வண்ணத்த - நோயுருவாகிய. துணிவண்ணத்தின்மேலும் - ஆடையழ குக்குமேலும். மணிவண்ணம் - மாணிக்கத்தின் நிறம். அணிவண்ணத்த ராய்-அழகுருவராய். (கூ) கோள்ஆளிய...இழைத்தீர் - துன்பம் செய் கிற யானைக்குத் துன்பம் செய்தீர். வேள்ஆளிய - ஆசையை யுண் டாக்குகிற. வேய்புரையும் - மூங்கில் போலும். உடுகூறை - உடுக்கப் படுவதான ஆடை. ஆள் ஆளியவேகற்றீர் - ஆள் படைக்கவே கற்றீர். (க0) பனி மால் வரையாகி-இமயமலையாகி. பரவையாகி - கடல்களாகி.

ளிடையாகி நிலனுமாகித், தேரோ டவரை யெடுத்த அரக்கன் சிரம்பத்(து) இறுத்தீ ருமசெய்கை எல்லாம், ஆரோடுங் கூடா அடிகே ளிதுவென் அடியோ மூமக்காட் செயஅஞ் சுதுமே. ௧0

அடிகே ளுமக்காட் செயஅஞ் சுதுமென் றமரர் பெருமானை ஆரூர னஞ்சி, முடியா லுலகாண்ட மூவேந்தர் முன்னே மொழிந்தாறு மோர்நான்கு மோரொன் றினையும், படியா இவைகற்று வல்ல அடியார் பரங்குன்றம் மேய பரமனடிக்கே, குடியாகி வானோர்க்கு மோர்கோவு மாகிக் குலவேந்த ராய் விண் முழுதாள் பவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இறைவர்திருத் தோண்டிபுரி அருமையினை இருநிலத்து
முறைபுரியும் முதல்வேந்தர் மூவர்களுங் கேட்டஞ்சி
மறைமுந்நூல் மணிமார்பின் வன்தொண்டர் தமைப்பணிந்தார்
நிறைதவத்தோர் அப்பாலும் திருத்தர்பதி தொழநினைந்தார்.

—பெ. கழு. 104.

பாண்டிநாட்டுத் திருப்பதிகள் பலவும் சென்று வணங்க நம்பி ஆரூரர் சேரருடன் எழுந்தருள, மற்ற வேந்தர் இருவரும் மதுரைக்கு மீண்டார்கள். நம்பியும் சேரரும் பல தலங்களை வணங்கிக் 'குருமணிகள் வெயிலெறிக்கும் **குற்றாலம்**' சென்றடைந்து, அங்கு 'கூத்தர் குறை கழல்' வணங்கிப் பதிகம் பாடி, **குறும்பலா** தொழுது, **திருநெல்வேலியை** அணைந்து நெல்வேலி நீற்றழகர் தமைப் பணிந்து பாடி, **திருஇராமேச்சரம்** வந்து வணங்கிப் பாடினார். பின்பு அவ்விடத்திலிருந்தபடியே மாதோட்டத்துத் திருக்கேதீச்சரம் தொழுது,

---

(௧0) வெள்ளிடையாகி - வெற்றிடமாகி. (௧௧) முடியால் - கிரீடம் சூடிக்கொண்டு. மூவேந்தர் - சேரசோழ பாண்டியர். குலவேந்தராய் - மேலான வேந்தருமாகி.

# 80. திருக்கேதீச்சரம்

## பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

நத்தார்படை ஞானன்பசு வேறிந்நனை கவிழ்வாய்
மத்தம்மத யானைஉரி போர்த்தமண வாளன்
பத்தாகிய தொண்டர்தொழு பாலாவியின் கரைமேல்
செத்தாரெலும் பணிவான்திருக் கேதீச்சரத் தானே. க

சுடுவார்பொடி நீறுந்நல்ல துண்டப்பிறை கீளும்
கடமார்களி யானையுரி அணிந்தகறைக் கண்டன்
படஏரிடை மடவாளொடு பாலாவியின் கரைமேல்
திடமாவுறை கின்றான்திருக் கேதீச்சரத் தானே. உ

அங்கம்மொழி யன்னாரவர் அமரர்தொழு தேத்த
வங்கம்மலி கின்றகடல் மாதோட்டநன் னகரில்
பங்கஞ்செய்த பிறைசூடினன் பாலாவியின் கரைமேல்
செங்கண்ணர வசைத்தான்திருக் கேதீச்சரத் தானே. ங

கரியகறைக் கண்டன்நல்ல கண்மேலொரு கண்ணான்
வரியசிறை வண்(டு)யாழ்செயும் மாதோட்டநன் னகருள்
பரியதிரை எறியாவரு பாலாவியின் கரைமேல்
தெரியுமறை வல்லான்திருக் கேதீச்சரத் தானே. ச

---

(க) நத்தார் - பகைவர்களை. படைஞானன் - கொல்லும் தன்மையுள்ள ஞானமாகிய படையை (ஆயுதத்தை) யுடையவன். புடை என்றும் பாடம் உண்டு. பசு ஏறி - இடபவாகனன். நனைகவிழ்வாய் - மதநீரால் நனைந்த தொங்கும் வாயையுடைய. பத்தாகிய - பத்து ஆகிய - அன்பு மயமாகிய. பாலாவி-ஒரு ஆறு. (உ) சுடுவார்பொடி நீறும் - சுடப்பட்டவர்களின் சாம்பலையும். துண்டப்பிறை கீளும்-பிறைச்சந்திரனையும், கீளையும். கடம்ஆர் - மதத்தையுடைய. (ங) பங்கம்செய்த பிறை - துண்டப்பிறை. (ச) வரியசிறை - வரிகளோடு கூடிய சிறகு. பரிய திரை - பெரிய அலைகள்.

அங்கத்துறு நோய்கள்ளடி யார்மேலொழித் தருளி
வங்கம்மலி கின்றகடல் மாதோட்டநன் னகரில்
பங்கஞ்செய்த மடவாளொடு பாலாவியின் கரைமேல்
தெங்கம்பொழில் சூழ்ந்ததிருக் கேதீச்சரத் தானே. ௫

வெய்யவினை யாயஅடி யார்மேலொழித் தருளி
வையம்மலி கின்றகடல் மாதோட்டநன் னகரில்
பையேரிடை மடவாளொடு பாலாவியின் கரைமேல்
செய்யசடை முடியான்திருக் கேதீச்சரத் தானே. ௬

ஊனத்துறு நோய்கள்ளடி யார்மேலொழித் தருளி
வானத்துறு மலியுங்கடல் மாதோட்டநன் னகரில்
பால்நத்துறு மொழியாளொடு பாலாவியின் கரைமேல்
ஏனத்(து)எயி றணிந்தான்திருக் கேதீச்சரத் தானே. ௭

அட்டன்அழ காகஅரை தன்மேலர(வு) ஆர்த்து
மட்டுண்டுவண் டாலும்பொழில் மாதோட்டநன் னகரில்
பட்டவரி நுதலாளொடு பாலாவியின் கரைமேல்
சிட்டன்நமை யாள்வான்திருக் கேதீச்சரத் தானே. ௮

மூவரென இருவரென முக்கண்ணுடை மூர்த்தி
மாவின்கனி தூங்கும்பொழில் மாதோட்டநன் னகரில்
பாவம்வினை யறுப்பார்பயில் பாலாவியின் கரைமேல்
தேவன்எனை யாள்வான்திருக் கேதீச்சரத் தானே. ௯

---

(௫) பங்கம் செய்த மடவாளொடு - திருமேனியைப் பகிர்ந்து கொண்ட உமாதேவியாரோடு. (௬) வையம் மலிகின்ற - பூமியைச் சூழ்ந்துள்ள. ஊனம் - உடம்பு. (௭) வால்நத்து உறமலியும் - வெண்சங்குகள் மிகவும் நிறைந்த. பால்நத்துறு மொழியாள் - பாலைப் போன்ற இனிய மொழியையுடையவளான உமாதேவியார். நத்துதல் - விரும்புதல். ஏனத்து எயிறு - பன்றியின் கொம்பு. (௮) அட்டன் - அஷ்டமூர்த்தத்தை உடையவன். பட்டவரி நுதலாள் - பட்டத்தை அணிந்த நீண்ட நெற்றியையுடைய உமாதேவியார். சிட்டன் - மேலானவன். (௯) தூங்கும் - தொங்குகின்ற.

கறையார்கடல் சூழ்ந்தகழி மாதோட்டநன் னகருள்
சிறையார்பொழில் வண்(டு)யாழ்செயுங் கேதீச்சரத் தானை
மறையார்புக ழூரன்னடித் தொண்டனுரை செய்த
குறையாத்தமிழ் பத்துஞ்சொலக் கூடாகோடு வினையே. ௧0

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடினார். பிறகு ஆரூரர் சேரருடன் **திருச்சுழி** யல் சேர்ந்து,

திருச்சுழிய விடங்கொண்ட செம்பொன்மலைச் சிலையாரைக்
**கருச்சுழியில் வீழாமைக் காப்பாரைக்** கடல்விடத்தின்
இருட்சுழியும் மிடற்றாரை இறைஞ்சிஎதிர் இதழிமலர்ப்
பருச்[1]சுழியத் துடன்"ஊனாய் உயிர்" எனும்பா மலர்புனைந்தார்.
—பெ. கழ. 111.

## 82. திருச்சுழியல்

**பண் - நட்டராகம்**

திருச்சிற்றம்பலம்

**ஊ**னாய்உயிர் புகலாய்அக லிடமாய்முகில் பொழியும்
வானாய்வரு மதியாய்விதி வருவானிடம் பொழிலின்
தேனாதரித்(து) இசைவண்டினம் மிழற்றுந்திருச் சுழியல்
நானாவிதம் நினைவார்தமை நலியார்நமன் தமரே. க

(௧0) கறைஆர் - கறுமை நிறம் பொருந்திய. சிறையார் பொழில் வண்டு யாழ் செயும் - சிறகுகளையுடைய வண்டுகள் பண் பாடுகின்ற சோலை சூழ்ந்த.

(க) உயிர் புகலாய் - உயிர்களுக்குப் புகலிடமாகி (அடைக்கலம் புகும் இடம்.) விதிவருவான் - உண்மைப்பொருளாய் இருப்பவன். தேன் ஆதரித்து - தேனைவிரும்பி. வண்டினம் இசை மிழற்றும் - வண்டின் கூட்டங்கள் இராகங்களைப் பாடுகின்ற.

[1]சுழியம் - உச்சிக்கொண்டை.

தண்(டு)ஏர்மழுப் படையான்மழ விடையான்எழு கடல்நஞ்
சுண்டேபுர மெரியச்சிலை வளைத்தானிமை யவர்க்காத்
திண்டேர்மிசை நின்றானவன் உறையுந்திருச் சுழியல்
தொண்டேசெய வல்லாரவர் நல்லார்துய ரிலரே. உ

கவ்வைக்கடல் கதறிக்கொணர் முத்தங்கரைக் கேற்றக்
கொவ்வைத்துவர் வாயார்குடைந் தாடுந்திருச் சுழியல்
தெய்வத்தினை வழிபாடுசெய் தெழுவாரடி தொழுவார்
அவ்வத்திசைக் கரசாகுவர் அலராள்பிரி யாளே. ங

மலையான்மகள் மடமா(து)இடம் ஆகத்தவள் மற்றுக்
கொலையானையின் உரிபோர்த்தஎம் பெருமான்திருச் சுழியல்
அலையார்சடை யுடையானடி தொழுவார்பழு துள்ளம்
நிலையார்திகழ் புகழால்நெடு வானத்துயர் வாரே. ச

உற்றான்நமக் குயரும்மதிச் சடையான்புல னைந்தும்
செற்றார்திரு மேனிப்பெரு மானூர்திருச் சுழியல்
பெற்றான்இனி(து) உறையத்திறம் பாமைத்திரு நாமம்
கற்றாரவர் கதியுட் செல்வர் ஏத்தும்மது கடனே. ரு

மலந்தாங்கிய பாசப்பிறப் பறுப்பீர்துறைக் கங்கைச்
சலந்தாங்கிய முடியானமர்ந் திடமாந்திருச் சுழியல்
நிலந்தாங்கிய மலராற்கொழும் புகையால்நினைந் தேத்தும்
தலந்தாங்கிய புகழான்மிகு தவமாஞ் சதுராமே. சு

---

(உ) தண்டு - தண்டாயுதத்தையும். ஏர்-அழகிய. (ங) கவ்வை - ஓசையையுடைய. அலராள் - இலக்குமி (ச) பழுது உள்ளம் நிலையார் - குற்றமுள்ள மனத்துடன் நிலைத்திருக்க மாட்டார். அதாவது, அவர்கள் மனதில் இருக்கும் குற்றம் நீங்கிவிடும். (ரு) 1-வது வரி. உயரும் மதிச்சடையான் நமக்கு உற்றான் (உறவினன்.) 3, 4 வது வரி. திருச்சுழியல் இனிது உறையப்பெற்றான். திருநாமம் திறம் பாமை (தவறாமல்) கற்றாரவர் கதியுட் செல்வர் (ஆதலால்) அவனைத் துதிப்பது நமக்குக் கடமை ஆகும்—உரைநடை. (சு) மலம் தாங்கிய பாசப்பிறப்பறுப்பீர் - மும்மலங்களாகிய கட்டுகளோடு கூடிய பிறப்பை அறுக்கவேண்டுபவர்களே! 3-வது வரி. நிலப்பூவினாலும், நல்ல தூபங்களாலும் அன்போடு நினைந்து துதியுங்கள். 4 வது வரி. (அப்படிச் செய்வது) உலகில் நிலைபெற்ற புகழுடன் மிக்க தவமாகும், புத்தி மதியுமாகும்.

சைவத்தசெவ் வுருவன்திரு நீற்றன்னுரு(மு) ஏற்றன்
கைவைத்தொரு சிலையால்அரண் மூன்றும்எரி செய்தான்
தெய்வத்தவர் தொழுதேத்திய குழகன்திருச் சுழியல்
மெய்வைத்தடி நினைவார்வினை தீர்தல்எளி தன்றே. எ

பூவேந்திய பீடத்தவன் தானும்அட லரியுங்
கோவேந்திய வினயத்தொடு குறுகப்புக லறியார்
சேவேந்திய கொடியானவ னுறையுந்திருச் சுழியல்
மாவேந்திய கரத்தானெம சிரத்தான்தன தடியே. அ

கொண்டாடுதல் புரியாவரு தக்கன்பெரு வேள்வி
செண்டாடுதல் புரிந்தான்திருச் சுழியற்பெரு மானைக்
குண்டாடிய சமண்ஆதர்கள் குடைச்சாக்கியர் அறியா
மிண்டாடிய அதுசெய்தது வானால்வரு விதியே. கூ

நீரூர்தரு நிமலன்திரு மலையார்க்கய லருகே
தேரூர்தரும் அரக்கன்சிரம் நெரித்தான்திருச் சுழியல்
பேரூரென உறைவானடி பெயர்நாவலர் கோமான்
ஆரூரன தமிழ்மாலைபத் தறிவார்துய ரிலரே. க0

திருச்சிற்றம்பலம்

---

(எ) சைவத்த - சிவத்துவம் விளங்கும்படியான. உரும் ஏற்றன் - இடியைப்போன்ற குரலை உடைய இடபத்தை வாகனமாக உடையவன். தெய்வத்தவர்-தெய்வீகம் அமைந்த தவத்தினர். எளிது அன்றே - எளிது அல்லவா? (அ) கோ ஏந்திய வினயத்தொடு - அரசனுக்குச் செய்யவேண்டிய வணக்கத்துடன். குறுகப் புகல் அறியார் - புகல் குறுக அறியார், அடைக்கலமாக அடைய அறியமாட்டார். தனது அடியே...புகல் அறியார் என்று கூட்டுக. மா-மான். (கூ) 1,2·வது வரி. சிவபெருமானைக் கொண்டாடுதல் செய்யாமல் (மதிக்காமல்) தக்கன் செய்த பெரிய யாகத்தை அழித்தவனை. ஆதர் - அறிவில்லாதவர். குடைச்சாக்கியர் - மனதை வருந்தச்செய்யும் சாக்கியர். அறியா...... விதியே - அறியாமல் மிண்டுசெய்வதானால் அது விதியின் பயனே. மிண்டு - மதத்தால் பிழைத்தல். (க0) நீர் ஊர்தரு - அருவிகள் ஊர்வதுபோல் பாயும்படியான.

அங்கணரைப் பணிந்துறையும் ஆரூரர்க் கவ்வூரில்
கங்குலிடைக் கனவின்கட் [1]காளையாம் திருவடிவால்
செங்கையினிற் பொற்செண்டுந் திருமுடியிற் [2]சுழியமுடன்
எங்குமிலாத் திருவேடம் என்புருக முன்காட்டி.

"கானப்பேர் யாம்இருப்ப" தெனக்கழறிக் கங்கையெனும்
வானப்பே ராறலவும் மாமுடியார் தாமகல
ஞானப்பே ரானர்உணர்ந் ததிசயித்து "நாகமுடன்
ஏனப்பேர் எயி(று)அணிந்தார் அருளிருந்த பரி"சென்பார்.
—பெ. கழ. 112, 113.

நம்பி ஆரூரர் காளையாம் திருவேடத்தைத் தரிசித்துத் தாம் கண்ட கனவைச் சேரர்பெருமானுக்கு மொழிந்து, திருச்சுழியலை நீங்கித் திருக்கானப்பேரைச் சாரும்போது,

## 84. திருக்கானப்பேர்

### பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

தொண்ட ரடித்தொழலுஞ் சோதி இளம்பிறையுஞ்
சூதன மென்முலையாள் பாகமு மாகிவரும்
புண்ட ரிகப்பரிசாம் மேனியும் வானவர்கள்
பூச லிடக்கடல்நஞ்(சு) உண்ட கருத்தமரும்
கொண்ட லெனத்திகழுங் கண்டமும் எண்தோளுங்
கோல நறுஞ்சடைமேல் வண்ணமுங் கண்குளிரக்
கண்டு தொழப்பெறுவ தென்றுகொ லோஅடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. க

[1]காளையாம் - இளம் பருவத்துடன் கூடிய.

[2]சுழியம் - உச்சிக் கொண்டை.

(க) சூது அ(ன்)ன-சூதாடு கருவி (சொக்கட்டான் காய்)போன்ற. பூசல் இட - முறையிட. வண்ணம்-அழகு, வடிவு. காளை - யௌவனப் பருவமுள்ளவன்.

கூத லிடுஞ்சடையுங் கோளர வும்விரவுங்
கொக்கிற குங்குளிர்மா மத்தமும் ஒத்துனதாள்
ஓத லுணர்ந்தடியார் உன்பெரு மைக்குநினைந்
துள்ளுரு காவிரசும் ஓசையைப் பாடலுநீ
ஆத லுணர்ந்தவரோ(டு) அன்பு பெருத்தடியேன்
அங்கையின் மாமலர்கொண்(டு) என்கண(து)அல்லல்கெடக்
காத லுறத்தொழுவ தென்றுகொ லோஅடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. உ

நானுடை மாடெனவே நன்மை தரும்பரனை
நற்பத மென்றுணர்வார் சொற்பத மார்சிவனைத்
தேனிடை இன்னமுதை மற்றத னிற்தெளிவைத்
தேவர்கள் நாயகனைப் பூவுயர் சென்னியனை
வானிடை மாமதியை மாசறு சோதியனை
மாருத மும்அன லும் மண்டல மும்மாய
கானிடை மாநடனென்(று) எய்துவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. ௩

---

(உ) கூதலிடும் - (கங்காநதி பாய்வதால்) குளிர்ச்சி பொருந்திய. கோள் அரவு - கொல்லும் தன்மை உடைய பாம்பு. ஒத்து விரவும் - வேறுபாடு இன்றிக் கலந்து. 1, 2-வது வரி. கூதலிடும் சடையும், கோளரவும், கொக்கிறகும், குளிர்மாமத்தமும் ஒத்துவிரவும் (சடையும்) என்று கூட்டிப் பொருள் உரைக்க. ஓதல் - புகழ்தல். உள் உருகா விரசும் - மனம் உருகிக் கலத்தலும். ஓசையைப் பாடலும் - இசையோடு பாடுதலும். நீ ஆதல் உணர்ந்து - அடியவர்களுக்கும் உனக்கும் பேதம் இன்மையை அறிந்து. என்கணது அல்லல் - என்னிடத்துள்ள துன்பம். (௩) நான்உடை மாடு - என் கையில் உள்ள செல்வம். நற்பதமென்று உணர்வார் சொற்பதமார் சிவனை - சிவபெருமானே நல்ல பதவி (அடையத்தக்க இடம்) என்று உணரும் அடியவர்களின் தோத்திரங்களில் நிறைந்திருக்கும் சிவபெருமானை. மண்டலமும் மாய - பூமி முதலிய உலகங்கள் எல்லாம் அழிந்த காலத்து. கான் இடை - மயானத்தில். மண்டலமும் ஆ(கி)ய என்றும் பொருள் கொள்ளலாம்.

செற்றவர் முப்புரமன் றட்ட சிலைத்தொழிலார்
சேவக முந்நினைவார் பாவக மும்நெறியும்
குற்றமில் தன்னடியார் கூறும் இசைப்பரிசுங்
கோசிக மும்அரையிற் கோவண மும்அதளும்
மல்திகழ் திண்புயமும் மார்பிடை நீறுதுதை
மாமலை மங்கையுமை சேர்சுவ டும்புகழக்
கற்றன வும்பரவிக் கைத்தொழ லென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. ௪

கொல்லை விடைக்குழகுங் கோல நறுஞ்சடையிற்
கொத்தல ரும்மிதழித் தொத்து மதனருகே
முல்லை படைத்தநகை மெல்லிய லாளொருபால்
மோக மிகுத்திலகுங் கூறுசெ யெப்பரிசுந்
தில்லை நகர்ப்பொதுவுற் றாடிய சீர்நடமுந்
திண்மழு வுங்கைமிசைக் கூரெரி யும்மடியார்
கல்ல வடப்பரிசுங் காணுவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. ௫

பண்ணுத லைப்பயனார் பாடலும் நீடுதலும்
பங்கய மாதனையார் பத்தியும் முத்தியளித்
தெண்ணுத லைப்பெருமா னென்றெழு வாரவர்தம்
ஏசற வும்இறையாம் எந்தையை யும்விரவி

---

(௪) அட்ட - நீறாக்கின. சிலைத் தொழில் ஆர் சேவகம் - வில் வித்தையில் பயிற்சி மிக்க வீரம். பாவகமும்-தியானமும். இசைப்பரிசும் - இசைப்பாட்டுகளால் புகழும் விதமும். கோசிகம் - வெண்பட்டு. மல்திகழ்-மல்யுத்தத்தில் பயிற்சி விளங்கும். (௫) கொத்து அலரும் இதழித் தொத்தும் - கொத்தாய் மலர்கின்ற கொன்றைப் பூங்கொத்துகளும். மோகம் மிகுத்து இலகும் - அன்பு மிகுதியை விளக்கும். கூறுசெய் எப்பரிசும் - ஒரு பாகத்தில் கொண்ட தன்மையும். பொது - அம்பலம். கல்லவடம் - வாத்தியம். (௬) பண்ணுதலைப் பயனார் - பண்ணை உடையதும் (இசை அமைப்பையும்) முதன்மையான பயனைக் கொடுக்கக்கூடியதும் ஆன. பங்கயமாது அனையார் - தாமரை மலரின்மேல் இருக்கும் இலக்குமியைப்போன்ற மகளிர். முத்தி அளித்து எண்ணுதலைப் பெருமான் - முத்தி அளித்தலையே எண்ணமாகக் கொண்டுள்ள முதன்மையான பெருமான்.

நண்ணுதலைப்படுமா றெங்ஙன மென்றயலே
    நைகிற என்னைமதித் துய்யும்வ(ண்) ணம்அருளும்
கண்ணுதலைக்கனியைக் காண்பது மென்றுகொலோ
    கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. ௬

மாவை யுரித்(து)அதள்கொண் டங்கம் அணிந்தவனை
    வஞ்சர் மனத்திறையும் நெஞ்சணு காதவனை
மூவ ருருத்தனதாம் மூல முதற்கருவை
    மூசிடு மால்விடையின் பாகனை ஆகமுறப்
பாவக மின்றிமெய்யே பற்று மவர்க்கமுதைப்
    பால்நறு நெய்தயிரைந் தாடு பரம்பரனைக்
காவ லெனக்கிறையென் றெய்துவ தென்றுகொலோ
    கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. ௭

தொண்டர் தமக்கெளிய சோதியை வேதியனைத்
    தூய மறைப்பொருளாம் நீதியை வார்கடல்நஞ்(சு)
உண்டத னுக்கிறவா தென்று மிருந்தவனை
    ஊழி படைத்தவனோ(டு) ஒள்ளரி யும்முணரா
அண்டனை அண்டர்தமக்(கு) ஆகம நூல்மொழியும்
    ஆதியை மேதகுசீ ரோதியை வானவர்தம்
கண்டனை அன்பொடுசென் றெய்துவ தென்றுகொலோ
    கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. ௮

நாதனை நாத(ம்)மிகுத் தோசைய தானவனை
    ஞான விளக்கொளியாம் ஊனுயி ரைப்பயிரை
மாதனை மேதகுதன் பத்தர் மனத்திறையும்
    பற்றுவி டாதவனைக் குற்றமில் கொள்கையனைத்

---

(௬) நண்ணுதலைப்படுமாறு - கூடும்வண்ணம். (௭) மா - யானை 2-வது வரி. கபடமுள்ள மனத்தில் சிறிதும் சேராதவனை. மூல முதற்கருவை - எல்லாவற்றிற்கும் மூலகாரணமாய் இருப்பவனை. மூசிடும் - பெருமூச்சுவிடும். பாவகம் - பாசாங்கு. (௮) மேதகுசீர் ஓதியை - மேம்பட்ட சீர்கள் உடையவனென்று புகழப்பட்டவனை (௯) நாதம் மிகுத்து ஓசையது ஆனவனை - நாததத்துவத்திற்கு அப்பால் நுண்ணிய ஓசை சொரூபமாயுள்ளவனை. ஊன் உயிரை - ஊனால் ஆகிய சரீரத்தில் உயிராயிருப்பவனை. மாதனை - பெண் பாகனை.

தூதனை யென்றனைஆள் தோழனை நாயகனைத்
தாழ்மக ரக்குழையுந் தோடும் அணிந்ததிருக்
காதனை நாயடியே னெய்துவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. ௯

கன்னலை இன்னமுதைக் கார்வயல் சூழ்கானப்
பேருறை காளையையொண் சீருறை தண்தமிழால்
உன்னி மனத்தயரா உள்ளுரு கிப்பரவும்
ஒண்பொழில் நாவலர்கோ னாகிய ஆரூரன்
பன்னும் இசைக்கிளவி பத்திவை பாடவல்லார்
பத்தர் குணத்தினராய் எத்திசை யும்புகழ
மன்னி யிருப்பவர்கள் வானி னிழிந்திடினும்
மண்டல நாயகராய் வாழ்வது நிச்சயமே. ௧௦

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகத்தில் "காளையார் தமைக் கண்டு தொழப் பெறுவதென்று" என்று பாடிக் கோயிலினுள் சென்று முதல்வரை வணங்கித் தமிழ்மாலை பாடினர். ஆரூரரும் சேரரும் சிலநாள் அங்கிருந்து பிறகு திருப்புனவாயிலை அடைந்து பெருமானைத் தொழுதனர். ஆரூரர்,

(௯) 5-வது வரி. எனக்குத் தூதனாகி வந்து பரவையின் ஊடலைத் தணித்தவனை, எனக்குத் தோழனைப்போல் எளிவந்து என்னை ஆட்கொண்டவனை, எனக்குத் தலைவனை. 6-வது வரி. தொங்குகிற மகரகுண்டலம் ஒரு காதிலும் தோடு மற்றொரு காதிலும் அணிந்தவனை. குண்டலம்-ஆண் காதணி. தோடு - பெண் காதணி. (௧௦) ஒண் சீர் உறை - மேலான சிறப்புகள் பொருந்திய. மனத்து அயரா உள் உருகிப் பரவும் - மனம் தளர்ச்சி அடையாது நெகிழ்ந்து உருகித் துதிக்கும். ஒண் பொழில் - அழகிய சோலை. கிளவி - பாடல்.

# 50. திருப்புனவாயில்

**பண் - பழம்பஞ்சுரம்**

*திருச்சிற்றம்பலம்*

சித்த(ம்) நீநினை யென்னொடு சூளறும் வைகலும்
மத்த யானையின் ஈருரி போர்த்த மணாளனூர்
பத்தர் தாம்பலர் பாடிநின் றாடும் பழம்பதி
பொத்தி லாந்தைகள் பாட்ட றாப்புன வாயிலே. க

கருது நீமன மென்னொடு சூளறும் வைகலும்
எருது மேற்கொளு மெம்பெரு மாற்கிட மாவது
மருத வானவர் வைகு மிடம்மற வேடுவர்
பொருது சாத்தொடு பூசல றாப்புன வாயிலே. உ

தொக்கா யமன மென்னொடு சூளறும் வைகலும்
நக்கான் நமையா ளுடை யான்நவி லும்மிடம்
அக்கோ டரவார்த்த பிரானடிக் கன்பராய்ப்
புக்கார வர்போற் றொழு யாப்புன வாயிலே. ங

வற்கென் றிருத்திகண் டாய்மன மென்னொடு சூளறும்வைகலும்
பொற்குன் றஞ்சேர்ந்த தோர்காக்கை பொன்னுமது வேபுகல்
கற்குன் றுந் தூறுங் கடுவெளி யுங்கடற் கானல்வாய்ப்
புற்கென்று தோன்றிடு மெம்பெரு மான்புன வாயிலே. ச

---

(க) 1-வது வரி. சித்தம் நீ வைகலும் நினை என்னொடு சூள் அறும் - மனமே! நீ தினந்தோறும் (திருப்புனவாயிலை) நினைவாயாக. அப்படி நினைவாயானால் என்னோடு கூடியிருக்கும்படியான குற்றங்கள் யாவையும் என்னைவிட்டு ஒழியும். பொத்து - பொந்து. ஒவ்வொரு பாட்டின் இறுதியில் உள்ள புனவாயிலே என்பதைப் பாட்டின் முதலில் உள்ள நினை கருது முதலிய சொற்களோடு கூட்டுக. (உ) மருத வானவர் - அமிர்தத்தை உண்ட தேவர்கள். வடமொழி அம்ருதம், மருதம் என மருவிற்று. சாத்தொடு பூசல் அறா - ஒருவரை ஒருவர் அடித்தலோடு சண்டை நீங்காத. (ங) தொக்காய மனம் - அற்பமாகிய மனம். நக்கான் - நிர்வாணி. அக்கு - உருத்திராக்க மாலை. (ச) வற்கென்று - சும்மா. தூறு - புதர். கடுவெளி - கொடுமையான பாலைநிலம். கடல்கானல் - கடற்கரைச் சோலை. புற்கென்று - அந்திப்பொழுதின் தோற்றத்தோடு.

நில்லாய்மன மென்றொடு சூளறும் வைகலும்
நல்லான்நமை யாளுடை யான்நவி லும்மிடம்
வில்வாய்க்கணை வேட்டுவ ராட்டவெ ருண்டுபோய்ப்
புல்வாய்க்கணம் புக்கொளிக் கும்புன வாயிலே. ரு

மறவல் நீமன மென்றொடு சூளறும் வைகலும்
உறவும் ஊழியு மாயபெம் மாற்கிட மாவது
பிறவு கள்ளியின் நீள்கவட் டேறித்தன் பேடையைப்
புறவங் கூப்பிடப் பொன்புனஞ் சூழ்புன வாயிலே. சு

ஏசற்று நீநினை யென்றொடு சூளறும் வைகலும்
பாசற்றவர் பாடிநின் றாடும் பழம்பதி
தேசத் தடியவர் வந்திரு போதும் வணங்கிடப்
பூசற் றுடிப்பூச லறும்புன வாயிலே. எ

கொள்ளி வாயின கூரெயிற்(று) ஏனங் கிழிக்கவே
தெள்ளி மாமணி தீவிழிக் கும்மிடஞ் செந்தறை
கள்ளி வற்றிப்புற் றீந்துவெங் கானங் கழிக்கவே
புள்ளி மானினம் புக்கொளிக் கும்புன வாயிலே. அ

எற்றே நினை யென்றொடு சூளறும் வைகலும்
மற்றேதும் வேண்டா வல்வினை யாயின மாய்ந்தறக்
கற்றூறு கார்க்காட் டிடைமேய்ந்தகார்க் கோழிபோய்ப்
புற்(று)ஏறிக் கூகூ வெனவழைக் கும்புன வாயிலே. கூ

(ரு) நில்லாய் - (ஒருவழிப்பட்டு) நிற்பாயாக. 3-வது வரி. வேடுவர்கள் வில்லினிடத்து அம்பைத் தொடுக்க. புல்வாய்க் கணம் - மான் கூட்டம். (சு) பிறவுகள்ளி-முளைத்து வளர்ந்த கள்ளி மரம். கவடு-கிளை. புறவம் - புறா. (எ) ஏசற்று - துன்பம் அற்று. பாசம் அற்றவர்-பற்று அற்றவர். பூசல் துடிப்பூசல் - வாத்திய முழக்கமும், உடுக்கை முழக்கமும். (அ) கொள்ளிவாயின - சிவந்த வாயினை உடைய. செந்தறை - சிவந்த நிறத்தையுடைய நிலத்தில். (கூ) எற்றே நினை - எவ்விதத்தாலாவது நினை. "அஞ்சியாகிலும் அன்புபட்டாகிலும், நெஞ்சம்வாழி நினைநின்றி யூரை நீ"—அப்பர். (கூ) 2-வது வரி. வலிய வினைகள் கெட்டு ஒழிய வேறு உபாயம் ஒன்றும் வேண்டியதில்லை. கல்தூறு கார்க்காட்டிடை மேய்ந்த கார்க்கோழி - கல்லோடு கூடிய புதர்களும் மேகங்கள் தவழும் மரங்களும் உள்ள காட்டினிடத்து இரை எடுக்கும் கரிய கோழி.

பொடியாடு மேனியன் பொன்புனஞ் சூழ்புன வாயிலை
அடியா ரடியன் நாவல வூர னுரைத்தன
மடியாது கற்றிவை யேத்தவல் லார்வினை மாய்ந்துபோய்க்
குடியாகப் பாடிநின் றாடவல் லார்க்கில்லை குற்றமே. கo

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடி, பாம்பணிமாநகரில் திருப்பாதாளீச்சரம் என்னுங்கோயிலை வணங்கித் திருவாரூரை அடைந்து பெருமானை வணங்கி,

## 8. திருவாரூர்

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

இறைகளோ டிசைந்த இன்பம் இன்பத்தோ டிசைந்தவாழ்வு
பறைகிழித் தனைய போர்வை பற்றியான் நோக்கி னேற்குத்
திறைகொணர்ந் தீண்டித் தேவர் செம்பொனும் மணியுந்
அறைகழ லிறைஞ்சும் ஆரூ ரப்பனே அஞ்சி னேனே. [ தூவி

(கo) பொன் புனம் - அழகிய வயல், வளப்பம் மிகுதியால் மிக்க பொன்னை (செல்வத்தை)க் கொடுக்கும் வயல். "விளை செந்நெல் துன்னி வளர் செம்பொன் எங்கும் நிகழ"—சம்பந்தர். (தேனமர்). மடியாது - சோம்பல் இல்லாமல்.

(க)1-4-வது வரி. துன்பங்களோடு சேர்ந்துள்ள இவ்வுலக இன்பங்களையும், அவ்வகைய இன்பத்தோடு கூடிய உலகவாழ்வையும், பறையை மூடிய கிழிந்து போகும் தன்மையுள்ள தோலைப் போன்றுள்ள போர்வையாகிய தோலினால் மூடப்பட்டுள்ள சரீரத்தினிடத்து அபிமானித்த நான், கருதிப்பார்த்தபோது எனக்கு அச்சம் உண்டாயிற்று. ஆகையால் ஆரூர்ப் பெருமானே! அடியேனுக்குத் துன்பம் கலவாத பேரின்பத்தை அருள்செய்ய வேண்டும். இறை - துன்பம். இறைகள் என்பதற்கு இறைவன் என்று பொருள்கொண்டால், 'இறைவனோடு கலந்து அனுபவிக்கும் பேரின்பத்தையும், அந்தப் பேரின்பத்தை அனுபவிக்கும்படியான பெருவாழ்வையும் கருதிப் பார்த்தபோது எனக்கு அது எப்படிக் கைகூடும் என்று அச்சம் உண்டாயிற்று' என்று உரை செய்யவேண்டும். திறை - கப்பம். அறைகழல் - சப்திக்கின்ற வீரக்கழல் அணிந்த திருவடியை.

ஊன்மிசை உதிரக் குப்பை யொருபோரு ளிலாதமாயம்
மான்மறித் தனைய நோக்கி மடந்தைமார் மதிக்கும் இந்த
மானுடப் பிறவி வாழ்வு வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்
ஆன்நல்வெள் ளேற்ற ஆரு ரப்பனே அஞ்சி னேனே. உ

அறுபதும் பத்து மெட்டும் ஆறினோ டஞ்சு நான்கும்
துறுபறித் தனைய நோக்கிச் சொல்விற்றோன் றுகச்சொல்லார்
நறுமலர்ப் பூவும் நீரும் நாடோறும் வணங்கு வார்க்கு
அறிவினைக் கொடுக்கும் ஆரு ரப்பனே அஞ்சி னேனே. ௩

சொல்லிடில் எல்லை யில்லை சுவையிலாப் பேதை வாழ்வு
நல்லதோர் கூரை புக்கு நலம்மிக அறிந்தேன் அல்லேன்
மல்லிகை மாடம் நீடு மருங்கொடு நெருங்கி எங்கும்
அல்லிவண்(டு) இயங்கும் ஆரு ரப்பனே அஞ்சி னேனே. ச

நரம்பினோ டெலும்பு கட்டி நசையினோ டிசைவொன் றில்லாக்
குரம்பைவாய்க் குடியிருந்து குலத்தினால் வாழ மாட்டேன்
விரும்பிய கமழும் புன்னை மாதவித் தொகுதி யென்றும்
அரும்புவாய் மலரும் ஆரு ரப்பனே அஞ்சி னேனே. ரு

(உ) 1-வது வரி. (சரீரமானது) தசையோடு உதிரமும் சேர்ந்த குவியல், ஒருபொருள் என்று கருதக்கூடாதபடி நிலையில்லாத தன்மை வாய்ந்தது. மான் மறித்தனைய நோக்கம் - தடைபட்ட மானின் பார்வையைப் போன்ற மருண்ட பார்வை உடைய. (௩) 1-வது வரி. 96 தத்துவங்கள். எட்டும் - சேரும். துறுபறித்தனைய நோக்கிச் சொல் விற்றோன்றுகச் சொல்லார் - தத்துவங்களோடு கூடிய இவ்வுடல் இறக்கும் தன்மையது என்று கருதுவோமானால், பேசுவதற்குப் பொருளாக எவரும் சொல்ல மாட்டார்கள். "பேசப் பொருளலாப் பிறவி தன்னை"—அப்பர். அறிவு - மெய் உணர்வு, ஞானம். (ச) 1-வது வரி. சொல்லுமிடத்து இன்பமில்லாத அறியாமையோடு கூடிய உலக வாழ்விற்கு (பிறவிக்கு) முடிவு இல்லை. 2-வது வரி. நன்மை பயக்கும் (முத்தியை அடைவதற்கு ஏதுவாகிய) மானுட சரீரத்தைப் பெற்று அதனால் அடையும் (முத்திப்)பயனை அறியாதவனானேன். (ரு) நசை - விருப்பம். இசைவு - பொருத்தம். குரம்பை - உடல். குலத்தினால் - மேன்மையோடு. விரும்பிய கமழும் - விரும்பும்படியாக மணம் வீசும்.

மணமென மகிழ்வர் முன்னே மக்கள்தாய் தந்தை சுற்றம்[ன்
பிணமெனச் சுடுவர் பேர்த்தே பிறவியை வேண்டேன் நாயே
பணையிடைச் சோலை தோறும் பைம்பொழில் விளாகத் தெங்கள்
அணைவினைக் கொடுக்கும் ஆரூ ரப்பனே அஞ்சி னேனே. சு

தாழ்வெனுந் தன்மைவிட்டுத் தனத்தையே மனத்தில் வைத்து
வாழ்வதே கருதித் தொண்டர் மறுமைக்கொன் றீய கில்லார்
ஆழ்குழிப் பட்டபோது அலக்கணி லொருவர்க் காவர்
யாழ்முயன் றிருக்கும் ஆரூ ரப்பனே அஞ்சி னேனே. எ

உதிரநீ ரிறைச்சிக் குப்பை எடுத்தது மலக்கு கைம்மேல்
வருவதோர் மாயக் கூரை வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்
கரியமா லயனுந் தேடிக் கழலடி காண மாட்டா
அரியனாய் நின்ற ஆரூ ரப்பனே அஞ்சி னேனே. அ

பொய்த்தன்மைத் தாயமாயப் போர்வையை மெய்யென்றெண்
ணும்
வித்தகத் தாய வாழ்வு வேண்டிநான் விரும்ப கில்லேன்[
முத்தினைத் தொழுது நாளும் முடிகளால் வணங்கு வார்க்கு
அத்தன்மைத் தாகும் ஆரூ ரப்பனே அஞ்சி னேனே. கூ

---

(சு) பணை - மருத நிலம். விளாகம் - இடம். எங்கள் அணைவினை - எங்களுக்குச் சேரும் இடமாகிய திருவடியை. (எ) தாழ்வு - பணிவு; அகங்காரம் இல்லாத தன்மை. தாழ்வு என்பது சைவத்திற்கு அடிப்படையான கொள்கை. "தாழ்வெனும் தன்மையோடு சைவமாம் சமயம் சாரும் ஊழ்பெறல் அரிது."—**சிவஞான சித்தியார்.** (வாழ்வெனும்.) தொண்டர் மறுமைக்கு ஒன்று ஈயகில்லார் - மறுமையைக் கருதி அடியார்களுக்கு ஒன்றும் கொடுக்கமாட்டார். ஆழ்குழிப் பட்ட போது அலக்கணில் ஒருவருக்கு ஆவர் - நரகத்தில் வீழ்ந்து வருந்தினால் ஒருவருக்குத் துணையாயிருந்து உதவி செய்யக்கூடியவர் யாவர்? யாழ்முயன்றிருக்கும் - யாழ் வாசிக்கும். (அ) 1, 2-வது வரி. இரத்தத்தோடு கூடிய தசைக்குவியலையும், மலம் தங்கிய குகையையும் ஒரு கூரையினால் மூடப்பட்டுள்ளது போன்ற நிலையில்லாத சரீரத்தோடு வாழும்படியான உலக வாழ்வை நான் விரும்ப மாட்டேன். (கூ) மாயப் போர்வை - நிலையில்லாத சரீரம். வித்தகம் - சாமர்த்தியம், இங்கே மூடத்தனம் என்னும் எதிர்மறைப் பொருளில் வந்தது. வித்தகம் என்பதற்கு அதிசயம் என்றும் பொருள் கொள்ளலாம்.

தஞ்சொலா ரருள்ப யக்கும் தமியனேன் தடமு லைக்கண்
அஞ்சொலார் பயிலும் ஆரூ ரப்பனை யூரன் அஞ்சிச்
செஞ்சொலால் நயந்த பாடல் சிந்தியா ஏத்த வல்லார்
நஞ்சுலாங் கண்டத் தெங்கள் நாதனை நணுகு வாரே. ௧0

திருச்சிற்றம்பலம்

என்னுந் திருப்பதிகம் பாடிப் பரவையார் மாளிகையுள் சேரர் பெருமானுடனே சென்று, பரவையார் மங்கலமாம் பூசனைகள் செய்ய மகிழ்ந்து திருவாரூரில் சிலநாள் தங்கி யிருந்தார். அப்போது சேரர் பெருமான் நம்பிஆரூரரை மலைநாட்டிற்கு வரும்படி வேண்டிக் கொள்ள, ஆரூரரும் அதற்கு இசைந்தார்.

## திருவையாற்றில் காவிரி விலகல்

பிறகு ஆரூரரும் சேரரும் திருவாரூரைவிட்டு, மலைநாட்டிற்குப் புறப்பட்டு, வழியிலுள்ள தலங்களை வணங்கிக்கொண்டு **திருக்கண்டியூரைத்** தொழுது வெளியே வரும்போது, "வடகரையில் திருவையாறு எதிர்தோன்ற, மலர்க்கரங்கள், உடலுருக உள்ளுருக உச்சியின்மேற் குவித்தருளி," ஐயாற்றுப் பெருமானைத் தொழ நினைந்தார்கள். அப்போது காவேரி ஆறு பெருக்கெடுத்து ஓடங்கள் செல்லமுடியாத நிலைமையில் இருக்க, நம்பிஆரூரர்,

---

(௧0) தடம் முலைக்கண் அம்சொலார் பயிலும் ஆரூர் அப்பனைத் தம்சொல் ஆர் அருள் பயக்கும் தமியனேன் ஊரன் அஞ்சிச் செம்சொலால் நயந்த பாடல்—உரைநடை. பருத்த தனங்களையும் விசாலமான கண்களையும் அழகிய சொல்லையும் உடைய மாதர்கள் வாழும் திருவாரூரில் வீற்றிருக்கும் தந்தையாகிய சிவபெருமானைத் தாழ்வாகிய சொல்லினால் மிக்கஅருளைக்கொடுக்கும்பொருட்டு துணையற்றவனான ஆரூரன் (பிறவித்துன்பத்திற்கு) அஞ்சி, செம்மையான சொற்களால் இரந்து கூறிய பாடல்.

# 77. திருவையாறு

## பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

பரவும்பரிசொன் றறியேன்நான் பண்டே யும்மைப் பயிலாதேன்
இரவும் பகலும் நினைந்தாலும் எய்த நினைய மாட்டேன்நான்
கரவில் அருவி கமுகுண்ணத் தெங்கங் குலைக்கீழ்க் கருப்பாலை
அரவந் திரைக்கா விரிக்கோட்டத்(து)ஐயா றுடையஅடிகளோ.

எங்கே போவே னாயிடினும் அங்கே வந்தென் மனத்தீராய்ச்
சங்கை யொன்றும் இன்றியே தலைநாள் கடைநா ளொக்கவே
கங்கை சடைமேற் கரந்தானே கலைமான் மறியும் கனல்மழுவும்
தங்குந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ.

மருவிப் பிரிய மாட்டேன்நான் வழிநின் றொழிந்தே னொழிகிலேன்
பருவி விச்சி மலைச்சாரற் பட்டை கொண்டு பகடாடிக்
குருவி யோப்பிக் கிளிகடிவார் குழல்மேல் மாலைகொண்டோட்டம்
தரவந்(து) இரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ.

---

(க) பரவும் பரிசு - உன்னைத் துதிக்கும் வகை. பண்டே உம்மைப் பயிலாதேன் - முன்காலம் தொட்டே உம்மோடு பழகி உம்முடைய தன்மையைத் தெரிந்து கொள்ளாதவன். எய்த நினையமாட்டேன் நான் - நான் (இருவகைப் பற்றுக்களையும் விட்டு) உன்னோடு கலக்க நினைக்கமாட்டேன். 3,4-வது வரி. பொய்யாது அளிக்கும் காவிரி ஆறு பாக்குக்குலைகளை அடித்துக் கொண்டு செல்ல, குலைகள் நிறைந்துள்ள தென்னை மரங்களின் கீழ் உள்ள கரும்பு ஆலைகள் ஒலிக்கக் காவிரியின் அலைகள் மோதும்படியான கரையின்மேல் வீற்றிருக்கும் சிவபெருமானே! கோடு - கரை. (உ) 1,2-வது வரி. எங்கே போவேனாயிடினும் அங்கே வந்து சங்கை (சந்தேகம்) ஒன்றும் இன்றியே தலைநாள் கடைநாள் ஒக்கவே (எக்காலத்திலும்) வந்து என் மனத்தீராய். (மனமே கோயிலாக் கொண்டுள்ளீர்)—உரை நடை. (ங) மருவி- உன்னோடுகூடி. வழிநின்று ஒழிந்தேன் ஒழிகிலேன் - திருவருள் வழி நின்று ஒழுகலானேன்; அதனினின்றும் விலக மாட்டேன். பருவி விச்சி - இல்லை மரங்கள் ஓங்கி வளர்ந்துள்ள. பட்டை கொண்டு பகடாடி - மரப்பட்டையினூற் செய்யப்பட்ட கருவியைக் கொண்டு பகடை (சூது) ஆடி. குருவி ஓப்பிக்கிளி கடிவார் - குருவிகளை அதட்டிக் கிளிகளை ஓட்டுவார்.

பழகா நின்று பணிசெய்வார் பெற்ற பயனென் றறிகிலேன்
இகழா துமக்காட் பட்டோர்க்கு வேக படமொன் றரைச்சார்த்தி
குழகா வாழைக் குலைத்தெங்கு கொணர்ந்து கரைமேலெறியவே
அழகார் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ.

மிழைத்த பிழையொன் றறியேன்நான் பிழையைத் தீரப் பணியாயே
மழைக்கண் நல்லார் குடைந்தாடமலையும்நிலனுங்கொள்ளாமைக்
கழைக்கொள் பிரசங் கலந்தெங்குங் கழனிமண்டிக் கையேறி
அழைக்குந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ.

கார்க்கொள் கொன்றை சடைமேலொன் றுடையாய் விடையாய் நகையினால், மூர்க்கர் புரமூன் றெரிசெய்தாய் முன்நீ பின்நீ முதல்வன்நீ, வார்க்கொ ளருவி பலவாரி மணியும் முத்தும் பொன்னுங் கொண், டார்க்குந் திரைக்கா விரிக்கோட் டத் தையா றுடைய அடிகளோ. ௬

மலைக்கண் மடவாள் ஒருபாலாய்ப் பற்றி யுலகம் பலிதேர்வாய், சிலைக்கொள் கணையால் எயிலெய்த செங்கண் விடையாய் தீர்த்தன்நீ, மலைக்கொ ளருவி பலவாரி மணியும் முத்தும் பொன்னுங்கொண், டலைக்குந் திரைக்கா விரிக்கோட் டத் தையா றுடைய அடிகளோ. ௭

போழும் மதியம் புனக்கொன்றைப் புனல்சேர் சென்னிப் புண்ணியா, சூழும் அரவச் சுடர்ச்சோதீ யுன்னைத் தொழுவார் துயர்போக, வாழு மவர்க ளங்கங்கே வைத்த சிந்தை உய்த் தாட்ட, ஆழுந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ. ௮

---

(௪) பழகாநின்று பணிசெய்வார் - பழக்கமாக உமக்குத் தொண்டு செய்வார். இகழாது உமக்கு ஆட்பட்டோர்க்கு - உமக்கு ஆட்படுவதே மேலான பாக்கியம் என்று கருதுபவர்களுக்கு. வேகபடம் - சீறும் பாம்பு. (௫) மழைக்கண் - குளிர்ந்த பார்வையுடைய; மேகம்போல் கரிய கண்ணையுடைய. குடைந்தாட - நீரில் மூழ்கி ஆட. கழைக்கொள் பிரசம் - கருப்பஞ்சாறு. கழனி மண்டிக் கையேறி அழைக்கும் திரை - வயல்களில் மிகுந்து, கையைத் தூக்கி அழைப்பதுபோல் அலைகளை வீசும் படியான. (௬) கார்க்கொள் - கார்காலத்தில் பூக்கின்ற. (௭) தீர்த்தன் - பரிசுத்தன். பலவாரி-பலவகைப்பட்ட. (௮) போழும் மதியம் - பிளந்த சந்திரன், இளம்பிறை. சிந்தை உய்த்தாட்ட - மனத்தில் நிலைபெறச்செய்து தொழ.

கதிர்க்கொள் பசியை யொத்தேநான் கண்டேன் உம்மைக் காணாதேன், எதிர்த்து நீந்த மாட்டேன் நான் எம்மான் தம் மான் தம்மானே, விதிர்த்து மேகம் மழைபொழிய வெள்ளம் பரந்து நுரைசிதறி, அதிர்க்குந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ. ௯

கூசி அடியா ரிருந்தாலுங் குணமொன் றில்லீர் குறிப்பில் லீர், தேச வேந்தன் திருமாலும் மலர்மேல் அயனுங் காண கிலாத், தேச மெங்குந் தெளிந்தாடத் தெண்ணீர் அருவி கொணர்ந்தெங்கும், வாசந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ. ௧0

கூடி அடியா ரிருந்தாலுங் குணமொன் றில்லீர் குறிப் பில்லீர், ஊடியிருந்தும் உணர்கிலேன் உம்மைத் தொண்டன் ஊரனேன், தேடி எங்குங் காண்கிலேன் திருவா ரூரே சிந் திப்பன், ஆடுந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ. ௧௧

திருச்சிற்றம்பலம்

"பரவும் பரிசேன்" றெடுத்தருளிப் பாடுந் திருப்பாட்டின் முடிவில்
அரவம் புனைவார் தமை"ஐயா றுடைய அடிக ளோ"என்று
விரவும் வேட்கை யுடனழைத்து விளங்கும் பெருமைத் திருப்பதிகம்
நிரவும் இசையில் வன்தொண்டர் நின்று தொழுது பாடுதலும்.

---

(௯) 1-வது வரி. வெப்பத்தையுடைய (மிகுந்த) பசியை உடைய வனைப்போல உம்முடைய திருக்கோயிலைத் தரிசித்தும் (காவிரி ஆறு பெருகித் தடை செய்வதால்) உம்மை நேரில்தரிசிக்க முடியாதவ னாய் வருந்துகின்றேன். விதிர்த்து - அச்சம் உண்டாகும்படி. அதிர்க்கும் - அதிரும்படிச் செய்யும். (௧0) 1-வது வரி. அடியார்கள் நாணி இருந்தாலும், குணம் ஒன்றும் இல்லாதவரும் அவர்கள் குறி ப்பு அறிந்து நடக்கமாட்டாதவருமாய் இருக்கின்றீர். தேசவேந்தன் திருமாலும் - உலகத்துக்கு அரசனாயிருக்கின்ற விஷ்ணுவும். தேசம் எங்கும் தெளிந்துஆட - தேசத்திலுள்ளவர்கள் எல்லாம் மனக்கலக்கம் ஒழிந்து நீராடும் பொருட்டு. (௧௧) ஊடி இருந்தும் உணர்கிலேன் - உம்மோடு பிணங்கி இருந்தும் உணரமாட்டேன்.

மன்றில் நிறைந்து நடமாட வல்லார் தொல்லை ஐயாற்றில் [ல்
**கன்று தடையுண் டேதிரழைக்கக் கதறிக் கனைக்கும் புனிற்றுப்போ**
**ஒன்றும் உணர்வால் சராசரங்கள் எல்லாங் கேட்க** [1]"ஓலம்" என
நின்று மொழிந்தார் பொன்னிமா நதியும் நீங்கி நெறிகாட்ட.

—பே. கழ. 134, 135.

ஆகாயத்தை முட்டுவதுபோல் பெருகி ஓடிய காவிரி, மேற்குத் திசையில் பளிங்குமலைபோல் நிற்கக், கீழ்ப்பக்கத்தில் நீர் வடிந்து மணற்பரப்பு தோன்றக் கண்ட தொண்டர்கள் கண்ணீர் சொரிய, மயிர்க்கூச்செறிய, கைகளை அஞ்சலி கூப்பித் தொழுதார்கள். ஆரூரரும் சேரரும் பரிசனங்களும் ஆற்றின் நடுவே உண்டான மணல் வழியிற் சென்று பஞ்சநதி வாணரைத் தொழுது மீண்டும் வந்தவழிசென்று கரையேறியவுடன் மலைபோல் நின்ற நீர், முன்புபோல் தொடர்ந்து ஓடியது. ஆரூரர் சேரருடன் பிற தலங்களை வணங்கிக்கொண்டு கொங்குநாட்டு வழியாக மலைநாட்டைச் சேர்ந்தார். மலைநாட்டவர்கள், தங்கள் அரசர் தம்பிரான் தோழருடன் வருவதைக் கேள்வியுற்று, ஊர்கள்தோறும் அலங்கரித்து எதிர்கொண் டழைக்க, இருவரும் சேரர் தலைநகராகிய கொடுங்கோளூரைச் சேர்ந்தார்கள். சேரர்பெருமான் வன்தொண்டரைத் திருவஞ்சைக்களத்திற்கு அழைத்துச் சென்று இறைவரைத் தொழுதார். ஆரூரரும் நிறையுங் காதலுடன் வீழ்ந்து பணிந்து,

## 44. முடிப்பது கங்கை

### (திருவஞ்சைக்களம்)

### பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

முடிப்பது கங்கையுந் திங்களுஞ் செற்றது மூவெயில்
நொடிப்பது மாத்திரை நீறெழக் கணை நூறினார்

---

[1]ஓலம் - அபயம்.

(க) நொடிப்பது மாத்திரை - கைநொடிப்பதாகிய மாத்திரைப் பொழுதில். நூறினார் - விடுத்து அழித்தார்.

கடிப்பது மேறுமென் றஞ்சு வன்திருக் கைகளால்
பிடிப்பது பாம்பன்றி இல்லை யோஎம் பிரானுக்கே. க

தூறன்றி ஆடரங் கில்லை யோசுட லைப்பொடி
நீறன்றிச் சாந்தம்மற் றில்லை யோஇம வான்மகள்
கூறன்றிக் கூறுவ தில்லை யோகொல்லைச் சில்லைவெள்
ஏறன்றி ஏறுவ தில்லை யோஎம் பிரானுக்கே. உ

தட்டெனுந் தட்டெனுந் தொண்டர் காள்தடு மாற்றத்தை
ஒட்டெனும் ஒட்டெனும் மாநி லத்துயிர் கோறலைச்
சிட்டன் திரிபுரஞ் சுட்ட தேவர்கள் தேவனை
வெட்டெனப் பேசன்மின் தொண்டர் காள்எம் பிரானையே. ங

நரிதலை கவ்வநின் றோரி கூப்பிட நள்ளிருள்
எரிதலைப் பேய்புடை சூழ ஆரிருட் காட்டிடைச்
சிரிதலை மாலை சடைக்கணிந் தானஞ் செல்வனைப்
பிரிதலைப் பேசன்மின் தொண்டர் காள்எம் பிரானையே. ச

வேயன தோளி மலைமக ளைவி ரும்பிய
மாயமில் மாமலை நாட னாகிய மாண்பனை

---

(க) கடிப்பதும் ஏறுமென்று அஞ்சுவன் - உம்மிடம் இருக்கும் பாம்பு கடித்தவுடன் விஷம் ஏறிவிடும் என்று பயப்படுகிறேன். (உ) தூறுஅன்றி - புதர் அடர்ந்த மயானம் அல்லாமல். இமவான்.........கூறுவதில்லையோ - உமா தேவியின் பாகம் அல்லாமல் சொல்லுவதற்கு வேறு ஒன்றும் இல்லையோ? கொல்லைச்சில்லை - கொல்லைகளில் மேயும் இளம் பருவத்துடுக்குள்ள. (ங) தடுமாற்றத்தைத் தட்டு எனும் - மனக்கலக்கத்தை அழியச் செய்வர். உயிர் கோறலை ஒட்டெனும் - உயிர்களைக் கொல்லுவதைக் கூடாதென்று தடுப்பர். வெட்டென - கடுமையாக. (ச) ஓரி கூப்பிட - கிழநரி ஊளையிட. எரிதலைப்பேய் - நெருப்பைப்போல் சிவந்த தலைமயிரை உடைய பேய்கள். பிரிதலைப் பேசன்மின் - பிரிந்து போவதைப்பற்றிப் பேசாதீர்கள், பிரியக்கூடாது. (ரு) வேய் அன்ன - மூங்கில் போன்ற. 2-வது வரி - தீமை இல்லாத பெரிய கயிலைமலையில் வீற்றிருக்கும் பெருமையுடைய சிவபெருமானை.

ஆயன சொல்லிநின் றார்கள் அல்லல் அறுக்கிலும்
பேயனே பித்தனே என்பரால் எம்பி ரானையே. ௫

இறைவ னென்றெம் பெருமானை வானவ ரேத்தப்போய்த்
துறையொன் றித்தூ மலரிட்(டு) அடியிணை போற்றுவார்
மறையன் றிப் பாடுவ தில்லை யோமல்கு வானிளம்
பிறையன் றிச் சூடுவ தில்லை யோஎம் பிரானுக்கே. ௬

தாருந் தண் கொன்றையுங் கூவி ளந்தனி மத்தமும்
ஆரு மளவறி யாத ஆதியும் அந்தமும்
ஊருமொன் றில்லை உலகெ லாம்உகப் பார்தொழப்
பேருமோ ராயிரம் என்பரால் எம்பி ரானுக்கே. ௭

அரியொடு பூமிசை யானும் ஆதியும் அறிகிலார்
வரிதரு பாம்பொடு வன்னி திங்களும் மத்தமும்
புரிதரு புன்சடை வைத்த எம்புனி தற்கினி
எரியன் றி அங்கைக் கொன்றில்லை யோஎம் பிரானுக்கே. ௮

கரிய மனச்சமண் காடி யாடு கழுக்களால்
எரிய வசவுணுந் தன்மை யோஇம வான்மகள்
பெரிய மனந்தடு மாற வேண்டிப்பெம் மான்மதக்
கரியி னுரியல்ல தில்லை யோஎம் பிரானுக்கே. ௯

காய்சின மால்விடை மாணிக் கத்தெங் கறைக்கண்டத்(து)
ஈசனை யூரனெட் டோடி ரண்டு விரும்பிய
வாயின சீர்ப்பகை ஞானி யப்பனடித் தொண்டன்தான்
ஏசின பேசுமின் தொண்டர் காள்எம் பிரானையே. ௧௦

திருச்சிற்றம்பலம்

(௫) ஆயன - தம்மால் இயன்ற துதிகளை. அல்லல் அறுக்கிலும் - துன்பத்தைப் போக்குவதைக் கண்டும். என்பர் - அறியாதவர் சொல்லுவர். (௬) துறை ஒன்றி - நல்வழியிற் பொருந்தி. (௭) கூவிளம் - வில்வம். மத்தம் - ஊமத்தமலர். அளவு - எல்லை. (௮) வரிதரு - வரியோடு கூடிய. (௯) காடிஆடு கழுக்களால் எரிய - செய் பூசிய கழுமரங்களில் வருந்த. (௧௦) 1-வது வரி. கடுஞ்சினத்தையுடைய திருமாலாகிய விடையின்மீது செல்வோனாகிய மாணிக்கம் போன்ற எம் காள கண்டத்தையுடைய. விரும்பியவாயின சீர்ப்பகை ஞானி அப்பன் அடித்தொண்டன் ஊரன் தான் ஏசின எட்டோடிரண்டு, தொண்டர்காள் எம்பிரானையே பேசுமின்—உரை நடை.

என்னும் திருப்பதிகம் ஓதிப் பெருமானைத் தொழுதார். பிறகு யானைமேல் ஆரூரரை முன்பு ஏற்றிப், பின்பு தாம் ஏறிச் சாமரை வீசிக்கொண்டு தம் அரண்மனைக்கு அழைத்துச் சென்றார். அப்போது அந்நகரிலுள்ளவர்கள் நம்பிஆரூரரைப் பலவாறாகப் புகழ்ந்து தொழுதார்கள். கழறிற்றறிவாரும் நாவலர் பெருமானைச் சிங்காதனத்தில் இருத்தி, தேவிமார்கள் வாசநீர் எடுத்தேந்த, அவருடைய பாதங்களைத் தாம் விளக்கிப் பூசனைகள் எல்லாம் செய்தபின், அவரோடு திருவமுது செய்து உவந்தார். சில நாட்கள் நம்பிஆரூரர் சேரமானுடன் கொடுங்கோளூரில் இன்பமாய்க் காலம் கழிக்கும்போது திருவாரூர்ப் பெருமானுடைய நினைவுவர, உடனே

## 59. திருவாரூர்

### பண் - தக்கேசி

*திருச்சிற்றம்பலம்*

பொன்னும் மெய்ப்பொரு ளுந்தரு வானைப் போகமுந்திரு வும்புணர்ப் பானைப், பின்னை என்பிழை யைப்பொறுப் பானைப் பிழையெ லாந்தவி ரப்பணிப் பானை, இன்ன தன்மைய னென்றறி யொண்ணா எம்மா னையெளி வந்த பிரானை, அன்னம் வைகும் வயற்பழ னத்தணி ஆரூ ரானை மறக்கலு மாமே. க

கட்ட மும்பிணி யுங்களை வானைக் காலற் சீறிய காலுடையானை, விட்ட வேட்கைவெந் நோய்களை வானை விரவி னால்

---

(க) பொன்னும் - இம்மைக்கு வேண்டிய நிலையில்லாத பொன்னையும். மெய்ப்பொருளும் - உண்மைப் பொருளானதும் என்றும் அழிவில்லாததுமான திருவருளையும். போகமும் திருவும் புணர்ப்பானை - உலக போகத்தையும் மோட்சத்தையும் சேர்ப்பிப்பவனை. பணிப்பானை - நியமிப்பவனை. எளிவந்த - எனக்கு எளிதாகக் கிடைத்த. மறக்கலும் ஆமே - மறக்கலாமோ? மறக்கக்கூடாது. (உ) கட்டம்-துன்பம். விட்டவேட்கை வெந்நோய் களைவானை - அநுபவியாமல் விடப்பட்ட ஆசையினால் விளைகின்ற கொடிய பிறவிநோயை ஒழிப்பவனை.

விடு தற்கரி யானைப், பட்ட வார்த்தை படநின்ற வார்த்தை வாரா மேதவி ரப்பணிப் பானை, அட்ட மூர்த்தியை மட்டவிழ் சோலை ஆரூ ரானை மறக்கலு மாமே. உ

கார்க்குன் றமழை யாய்ப்பொழி வானைக் கலைக்கெ லாம்பொரு ளாயுடன் கூடிப், பார்க்கின் றவுயிர்க் குப்பரிந் தானைப் பகலுங் கங்குலு மாகிநின் றானை, ஓர்க்கின் றசெவி யைச்சுவை தன்னை உணரும் நாவினைக் காண்கின்ற கண்ணை, ஆர்க்கின் றகட லைமலை தன்னை ஆரூ ரானை மறக்கலு மாமே. ௩

செத்த போதினில் முன்னின்று நம்மைச் சிலர்கள் கூடிச் சிரிப்பதன் முன்னம், வைத்த சிந்தையுண் டேமன முண்டே மதியுண் டேவிதி யின்பய னுண்டே, முத்த னெங்கள் பிரானென்று வானோர் தொழநின் றதிமி லேறுடை யானை, அத்த னெந்தை பிரானெம் பிரானை ஆரூ ரானை மறக்கலு மாமே. ௪

செறிவுண் டேல்மனத் தாற்றெளி வுண்டேல் தேற்றத் தால்வருஞ் சிக்கன வுண்டேல், மறிவுண் டேல்மறு மைப்பிறப் புண்டேல் வாணாள் மேற்செல்லும் வஞ்சனை யுண்டேல், பொறிவண்(டு) யாழ்செயும் பொன்மலர்க் கொன்றைப் பொன்

(உ) விரவினால் விடுதற்கு அரியானை - மனம் கலந்தவர் விடுவதற்குக் கூடாமல் இருப்பவனை. பட்டவார்த்தை படநின்ற வார்த்தை - வந்தனவும் இனிமேல் வருவனவுமான பழிச்சொற்கள். "வரும்பழி வாராமே தவிர்த்தென்னை ஆட்கொண்டாய்."—சுந்தரர். (௩) கார்க்குன்ற - மேகங்கள் குறையும்படி. கங்குல் - இரவு. ஓர்க்கின்ற - சத்தத்தை அறிகிற. (௪) உண்டே-இருக்குமானால். விதியின் - ஊழ்வினையின். திமில்ஏறு-திமிலோடு கூடிய இடபம். முத்தன்-அநாதிமல முத்தன். அநாதியே மலங்களினின்றும் நீங்கியவன். (௫) செறிவு...... உண்டேல் - சேர்தல் (அன்பு) இருக்குமானால் மனத்தில் தெளிவு இருக்குமானால், தெளிவினால் உண்டாகும் மனஉறுதி இருக்குமானால், இறப்பு இருக்குமானால், இறந்த பின் மறுபிறப்பு இருக்குமானால், வாழ்நாளை இறுதி செய்யும் வஞ்சகத்தன்மை ஒன்று இருக்குமானால், அறிவு இருக்குமானால், உடலில் உயிர் இருக்குமானால், புள்ளிகளை உடைய வண்டுகள் யாழ்போன்று ஒலிக்கும் பொன்போல ஒளிவிடும் கொன்றை மலரைப், பொன்போன்ற சடையின்மேல் தரித்தவனை. ஆரூரானை மறக்கலாமோ?

போ லுஞ்சடை மேற்புனைந் தானை, அறிவுண் டேஉட லத்துயி ருண்டே ஆரூ ரானை மறக்கலு மாமே. ரு

பொள்ள லிவ்வுட லைப்பொரு ளென்று பொருளுஞ் சுற்றமும் போகமு மாகி, மெள்ள நின்றவர் செய்வன வெல்லாம் வாரா மேதவிர்க் கும்விதி யானை, வள்ளல் எந்தமக் கேதுணை யென்று நாள்நா ளும்அம ரர்தொழு தேத்தும், அள்ள லங்கழ னிப்பழ னத்தணி ஆரூரானை மறக்கலு மாமே.

கரியா னையுரி கொண்டகை யானைக் கண்ணின் மேலொரு கண்ணுடை யானை, வரியா னைவருத் தங்களை வானை மறையானைக்குறை மாமதி சூடற், குரியா னையுல கத்துயிர்க் கெல்லாம் ஒளியா னைஉகந் துள்கிநண் ணுதார்க்(கு), அரியா னையடி யேற்கெளி யானை ஆரூரானை மறக்கலு மாமே. எ

வாளா நின்று தொழும்அடி யார்கள் வான் ஆளப்பெறும் வார்த்தையைக் கேட்டே, நாள்நா ளும்மல ரிட்டு வணங்கார் நம்மை ஆள்கின்ற தன்மையை யோரார், கேளா நான்கிடந் தேயுழைக் கின்றேன் கிளைக்கெ லாந்துணை யாமெனக் கருதி,

---

(சு) பொள்ளல் - நவத்துவாரங்களை யுடைய. பொருள் என்று - நிலையான பொருள் என்று கருதி. பொருளும்......விதியானை - பொருளை ஈட்டுவதும், உறவினரோடு உலக இன்பம் அனுபவிப்பதுமே மனிதப் பிறப்பின் இலட்சியமென்று கருதி உலகத்தவர் நிதானத்துடன் செய்வதுபோன்று செய்யும் காரியங்களெல்லாம் எனக்குப் பொருந்தாமல் தவிரும்படிச் செய்யும் நியதி உடையவனை. வள்ளல்-வரையாது கொடுப்பவனாகிய நீயே. நாள்நாளும்-தினந்தோறும். அள்ளல்-சேறு. (எ) கரியானை-துதிக்கையை உடைய யானையினது. வரியானை - அக்கினியைக் கையில் உடையவனை, உயர்ந்தவனை. ஒளியானை......அரியானை - ஞான ஒளியாய் இருப்பவனை, விரும்பி நினைத்து (அடைக்கலமாக) அடுக்காதவர்களுக்கு அரியவனை. (அ) வாளா நின்று - தம்முடைய செயல் அற்று (தற்போதம் ஒழிந்து). நம்மை ஆள்கின்ற தன்மையை ஓரார் - அவன் ஆண்டவன் என்றும் நாம் அடிமை என்றும் இருக்கும்படியான உண்மையை உணரமாட்டார். கேளா - 1. கேள் ஆக, சினேகிதனாகக் கருதி. 2. (உன்னுடைய தன்மையைக்) கேட்டு.

ஆளா வான்பலர் முன்(பு)அழைக் கின்றேன் ஆரு ராளே மறக் கலு மாமே. அ

விடக்கை யேபெருக் கிப்பல நாளும் வேட்கை யாற் பட்ட வேதனே தன்னைக், கடக்கி லேன்நெறி காணவு மாட் டேன் கண்கு ழிந்திரப் பார்கையி லொன்றும், இடக்கி லேன் பர வைத்திரைக் கங்கைச் சடையா னேயுமை யாளோயோர் பாகத், தடக்கி ஞனைஅந் தாமரைப் பொய்கை ஆரு ரானே மறக்கலு மாமே. க

ஒட்டி யாட்கொண்டு போயொளித் திட்ட உச்சிப் போதனை நச்சர வார்த்த, பட்டி யைப்பக லையிருள் தன்னைப் பாவிப் பார்மனத் தூறுமத் தேனைக், கட்டி யைக்கரும் பின் றெளி தன்னைக் காத லாற்கடற் சூர்தடிந் திட்ட, செட்டி யப் பனைப் பட்டனைச் செல்வ ஆரு ரானே மறக்கலு மாமே. கo

ஒரு ரென்றுல கங்களுக் கெல்லாம் உரைக்க லாம் பொரு ளாயுடன் கூடிக், காரு ருங்கமழ் கொன்றைநன் மாலை

---

(அ) ஆளாவான் பலர் முன்பு அழைக்கின்றேன் - இறைவனுக்கு அடிமைப்படும் பொருட்டு, எல்லாரையும் என்முன்னே வரும்படி கூப்பிடுகின்றேன். (க) விடக்கையே பெருக்கி......காணவும் மாட் டேன் - மாமிச சரீரத்தையே பெருகச்செய்து, பல காலங்களாக ஆசை காரணமாக உண்டாகிற துன்பங்களை நீக்கமுடியாதவனும் இருக்கிறேன். உன்னை அடைந்து என் துன்பங்களைப் போக்கிக் கொள்ளும் வழியைத் தெரிந்துகொள்ளவும் மாட்டேன். "ஊனைப் பெருக்கி உன்னை நினையா தொழிந்தேன்"—சுந்தரர். பரவைத் திரை - கடல்போலும் அலைகளை உடைய. (கo) ஒட்டி - இறைவன் ஆண்டவனும் நான் அடிமையாயும் இருக்கும் தொடர்பைத் தெரி வித்து. உச்சிப் போதனை - சிரத்தில் பூக்களை அணிந்தவனை. பட்டி யை - (உள்ளம் கவர்) கள்வனை. கரும்பின் தெளி - கருப்பஞ்சாற்றின் தெளிவு. செட்டி - முருகன். பட்டன் - ஞானி. (கக) ஓர் ஊர் - ஒப் பற்ற ஊர்.

முடியன் காரிகை காரண மாக, ஆரூ ரைம்மறத் தற்கரி யானை யம்மான் றன்றிருப் பேர்கொண்ட தொண்டன், ஆரூ ரன் னடி நாயுரை வல்லார் அமர லோகத் திருப்பவர் தாமே. கக

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகத்தில் "ஆரூரானை மறக்கலுமாமே" என்னும் சொற்றொடரை வைத்துப் பாடித் திருவாரூருக்குச் செல்ல எழுந் தார். அது கண்ட சேரர்பெருமான் உடன்சென்று அவருடைய பிரிவாற்றாமையைத் தெரிவிக்க, ஆரூரர் "நீர் ஒன்றும் வருந்தாதீர். உமது பதியின்கண் இருந்து அரசாண்டுகொண்டு இரும்" என்று கூறச், சேரரும் "தேவரீர் திருவடிகளே எனக்கு அரசாட்சி, ஆகை யால் தேவரீரை விட்டுப் பிரியேன்; ஆயினும் திருவாரூருக்குச் செல்ல எழுந்த மனக் காதலை நீக்கவும் அஞ்சுகிறேன்" என்று மொழிந்தார். அதற்கு வன்தொண்டர் "என்னுயிருக்கு இன்னுயி ராம் எழிலாரூர்ப் பெருமானை வன்னெஞ்சக் கள்வனேன் மறந்திரேன், மதியணிந்தார் இன்னருளால் அரசளிப்பீர் நீர் இருப்பீர்" என்று எதிர் மொழிந்தார். சேரமான் பெருமானும் அதற்கு இசைந்து, தன் அரண்மனையிலுள்ள செல்வங்களையெல்லாம் ஆட்கள்மீது ஏற்றி, வன் தொண்டர்முன் செல்லவிட்டு, ஆரூரரை வணங்க, ஆரூரரும் சேரரை எதிர் வணங்கித் தழுவி விடைகொடுத்தார். வன்தொண்டர் திருவா ரூருக்குப் புறப்பட்டுத் திருமுருகன்பூண்டி வழிச் செல்லும்போது, சிவனருளால் சிவபூதங்கள் வேடர்களாக வந்து, சேரமான் கொடுத்த பொருள்களையெல்லாம் கவர்ந்து சென்றன. ஆரூரர் திருமுருகன் பூண்டிக் கோயிலுக்குச் சென்று சிவபெருமான் திருமுன்பு நின்று,

> உருகியஅன் பொடுகைகள் குவித்துவிழுந் தமைபாகம்
> மருவியதம் பெருமான்முன் வன்தொண்டர் பாடினார்
> "வெருவுறவே டுவர்பறிக்கும் வெஞ்சுரத்தில் எத்துக்கிங்
> கருகிருந்தீர்?" எனக்"கொடுகு வெஞ்சிலை"அஞ் சொற்பதிகம்.
>
> —பெ. கழ. 170.

# 49. திருமுருகன்பூண்டி

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

கொடுகுவெஞ்சிலை வடுகவேடுவர் விரவலாமை சொல்லித், திடுகுமொட்டெனக் குத்திக்கூறைகொண்(டு) ஆறலைக்குமிடம், முடுகுநாறிய வடுகர்வாழ்முருகன் பூண்டிமாநகர்வாய், இடுகுநுண்ணிடை மங்கைதன்னொடும் எத்துக்கிங்கிருந்தீரெம்பிரானிரே. க

வில்லைக்காட்டிவெருட்டிவேடுவர்விரவலாமை சொல்லிக், கல்லினாலெறிந் திட்டுமோதியுங் கூறைகொள்ளுமிடம், முல்லைத்தாது மணங்கமழ்முருகன் பூண்டிமாநகர்வாய், எல்லைக்காப்பதொன் றில்லையாகில் நீரெத்துக் கிங்கிருந்தீ ரெம்பிரானிரே. உ

பசுக்களேகொன்று தின்றுபாவிகள் பாவமொன்றறியார், உசிர்க்கொலைபல நேர்ந்துநாடொறுங் கூறைகொள்ளுமிடம், முசுக்கள்போற்பல வேடர்வாழ்முருகன் பூண்டிமாநகர்வாய், இசுக்கழியப் பயிக்கங் கொண்டுநீர் எத்துக்கிங்கிருந்தீரெம்பிரானிரே. ௩

பீறற்கூறை யுடுத்தோர்பத்திரங் கட்டிவெட்டனராய்ச்
சூறைப்பங்கிய ராகிநாடொறுங் கூறைகொள்ளுமிடம்

---

(க) கொடுகு - வளைந்த. விரவலாமை - கடுஞ்சொற்கள். திடுகுமொட்டு - ஒலிக்குறிப்புகள். கூறைகொண்டு ஆறலைக்குமிடம் - (வழிப்போக்கர்களுடைய) ஆடைகளைக் கொள்ளைகொண்டு வழிபறிக்குமிடம். முடுகு நாறிய - பலத்தோடு கூடிய. இடுகு நுண் இடை - சுருங்கிய சிற்றிடை. (௩) பாவம்......கொள்ளும் இடம் - பாவம் என்பது இன்னதென்று அறியாதவராய், நாள்தோறும் பல உயிர்க்கொலைகளைச் செய்து ஆடைகளைப் பறிக்கும் இடம். முசு - குரங்கு. இசுக்கு அழிய - இழுக்கு (குற்றம்) நீங்க. பயிக்கம் - பிச்சை.

மோறை வேடுவர் கூடிவாழ்முருகன் பூண்டிமாநகர்வாய்
ஏறுகாலிற்ற தில்லையாய்விடில் எத்துக்கிங் கிருந்தீரெம்பிரானிரே.

தயங்குதோலை யுடுத்தசங்கர சாமவேதமோதீ, மயங்கி யூரிடு பிச்சைக்கொண்டுணும் மார்க்கமொன்றறியீர், முயங்கு பூண்முலை மங்கையாளொடுமுருகன் பூண்டிமாநகர்வாய், இயங் கவும் மிடுக்குடையராய்விடில் எத்துக்கிங் கிருந்தீ ரெம்பிரா னிரே. ரு

விட்டிசைப்பன கொக்கரைகொடு கொட்டிதத்தளகம், கொட்டிப்பாடுமித் துந்துமியொடு குடமுழாநீர்மகிழ்வீர், மொட்டலர்ந்து மணங்கமழ்முருகன் பூண்டிமாநகர்வாய், இட்டபிச்சைகொண் டுண்பதாகில்நீர் எத்துக்கிங்கிருந்தீரெம் பிரானிரே. சு

வேதமோதிவெண் ணீறுபூசிவெண் கோவணந்தற் றயலே, ஓதம்மேவிய ஒற்றியூரையு முத்திநீர் மகிழ்வீர், மோதிவேடுவர் கூறைகொள்ளுமுருகன் பூண்டிமாநகர்வாய், ஏதுகாரணம் ஏதுகாவல்கொண்(டு) எத்துக்கிங்கிருந்தீரெம் பிரானிரே. எ

---

(ச) பீற்றல் (கிழிந்த) ஆடையைத் தரித்து ஒரு உடைவாளைக் கட்டிக்கொண்டு, கொலை செய்வோராய்க் கொள்ளை அடித்து, கொள்ளையிட்ட பொருளைப் பங்கிட்டுக்கொண்டு, நாள்தோறும் ஆடைகளைப் பறித்து முரடர்களாகிய வேடர்கள் சேர்ந்து வாழ் கின்ற திருமுருகன்பூண்டியிடத்து உம்முடைய வாகனமாகிய எருது கால் ஒடியாமல் இருந்தால் (எருதின்மேல் ஏறிக்கொண்டு இவ்வூரை விட்டுப் போகாமல்) எதற்காக இருந்தீர். (ரு) தயங்கு - விளங்குகிற. 2-வது வரி. நீர் மயக்கங்கொண்டு ஊரார் இடும் பிச்சையை ஏற்று உண்ணும்படியான வழியை அறியமாட்டீர். இயங்கவும் மிடுக்கு உடையராய் விடில் - சஞ்சரிக்கவும் வலிமையுடையராய் இருப்பீ ரானல். (சு) விட்டு இசைப்பன - வாய்விட்டுச் சப்திப்பனவாகிய. கொக்கரை......குடமுழா - வாத்திய விசேடங்கள். (எ) தற்று - தரித்து. ஓதம்-கடல். ஒற்றியூரையும் உத்தி - ஒற்றியூரையும் சேர்ந்து. வேடுவர் மோதி - வேடர்கள் (வழிப்போக்கர்களை) அடித்து. 4-வது வரி. என்ன காரணமாக, எதைக் காவலாகக் கொண்டு என்ன எண் ணத்துடன் இங்கே இருந்தீர்.

படவரவு நுண்ணேரிடைப் பணைத்தோள் வரிநெடுங்கண்
மடவரல் உமைநங்கை தன்னையோர்பாகம் வைத்துகந்தீர்
முடவரல்லீர் இடரிலீர்முருகன் பூண்டிமா நகர்வாய்
இடவமேறியும் போவதாகில்நீர் எத்துக்கிங்கிருந்தீரெம்பிரானிரே.

சாந்த மாகவெண் ணீறுபூசிவெண் பல்தலைகலனு
வேய்ந்த வெண்பிறைக் கண்ணி தன்னையோர் பாகம்வைத்துகந்தீர்
மோந்தை யோடுமுழக்கறு முருகன் பூண்டிமாநகர்வாய்
ஏந்துபூண்முலை மங்கைதன்னொடும் எத்துக்கிங்கிருந்தீரெம்பிரானிரே.

முந்திவானவர் தாந்தொழும்முருகன் பூண்டிமாநகர்வாய்ப்
பந்தணைவிரற் பாவைதன்னையோர் பாகம் வைத்தவனைச்
சிந்தையிற்சிவ தொண்டனூரன் உரைத்தன பத்துங்கொண்(டு)
எந்தம் அடிகளை ஏத்துவாரிட ரொன்றுந்தாமிலரே. க0

திருச்சிற்றம்பலம்

என்னும் பதிகம் பாடிய அளவில், சிவபிரான் திருவருளால் வேடுவர் தாம் பறித்த பொருளையெல்லாம் திருவாயிலின்முன் குவித்திடலும், ஆரூரர் இறைவனைத் தொழுது அப்பொருள்களை யெல்லாம் வேலை ஆட்களை எடுத்துக்கொண்டு முன்னே போகச் சொல்லித் தாமும் **திருவாரூரை** அடைந்தார். இதுவரை நம்பிஆரூரருக்குச் சிவ பெருமான் தாமே பொருள் கொடுத்திருக்க, இப்போது ஆரூரர் வேறொருவர் கொடுப்பதைக் கொள்ளக்கூடாது என்று எண்ணியே, அதைக் கவர்ந்து தாமே கொடுத்தனர் போலும்!

---

(அ) முடவர் அல்லீர் இடரிலீர் - நீர் நொண்டி அல்ல; துன்பப் பட்டுத் தவிக்கின்றவரும் அல்ல. 4-வது வரி. உமக்கு ஏறிச் செல்வ தற்கு இடபம் இருந்தும் நீர் இவ்வூரைவிட்டுப் போகாமல் எதற்காக இருந்தீர். (கூ) சாந்தமாக - பூசிக்கொள்ளும் வாசனைச் சாந்தாக. 2-வது வரி. வெண்பிறைக்கீற்றை ஒருபாகத்தில் சூடிக்கொண்டு மகிழ்ந்தீர். மோந்தை - ஒரு வாத்தியம், மொந்தை என்பது எதுகை நோக்கி நீண்டது. ஏந்துபூண் - ஆபரணங்களை ஏந்திய. (க0) 1-வது வரி. வானவர் முந்தி (முற்பட்டு)த் தொழும்.

## முதலையுண்ட சிறுவனை அழைத்தல்

வன்றொண்டர் திருவாரூரில் இருக்கும்போது, சேரர்பிரானைக் காணவேண்டும் என்னும் நினைவு வர, ஆரூர்ப்பெருமான் அடி வணங்கி, மலைநாட்டுக்குப் புறப்பட்டார், சோழநாட்டுப் பதிகளை வணங்கிக் கொண்டு, கொங்குநாட்டில் உள்ள திருப்புக்கொளியூரில் மறையவர் வாழும் ஒரு வீதி வழியாய்ச் செல்லும்போது, ஒரு வீட்டில் மங்கல ஒலியும், அதற்கு எதிர்வீட்டில் அழுகை ஒலியும் கேட்டு, அருகிருந்த மறையோர்களை நோக்கி "மங்கல ஒலியும் அழுகை ஒலியும் ஒரே சமயத்தில் நிகழக் காரணம் என்ன?" என்று கேட்டார். அதற்கு அவர்கள், "சுவாமி! ஐந்து வயதுள்ள பிள்ளைகள் இருவர் ஒரு மடுவில் குளித்தனர். ஒருவனை முதலை விழுங்கிற்று. இம்மனையில் பிழைத்தவனுக்கு உபநயனம் செய்கின்றார்கள். அம்மனையில் இறந்த மகனை எண்ணி அழுகின்றார்கள்" என்றுரைத்தார்கள். இதைக் கேட்டு, இரங்கிய மனதோடு ஆரூரர் நின்றுகொண்டிருந்தபோது, மகனை இழந்த மறையோனும் அவன் மனைவியும், நெடுநாளாக ஆரூரரைக் கண்டு வணங்கவேண்டும் என்னும் எண்ணம் கொண்டிருந்தபடியால், அவரைக் கண்டவுடன் தங்கள் புத்திரசோகத்தையும் மறந்து, ஆரூரர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்கள். முகத்தில் துன்பக் குறிகள் நீங்கி, மலர்ந்த முகத்தோடு தொழுத மறையவனையும் அவன் மனைவியையும் நோக்கி, "இன்பமைந்தன்தனை இழந்தீர் நீரோ?" என்று வினவ, அவர்கள் "அது முன்னே நிகழ்ந்துபோனது, தேவரீரை வணங்க விரும்பி இருந்தோம். அந்த விருப்பம் பழுதாகாமல் தாங்கள் எழுந்தருளும் பேறு பெற்றோம்" என்று சொல்லி மகிழ்ந்தனர்.

"மைந்தன் தன்னை இழந்ததுயர் மறந்து நான்வந்(து) அணைந்ததற்கே
சிந்தை மகிழ்ந்தார் மறையோனும் மனைவி தானும் சிறுவனையான்
அந்த முதலை வாய்நின்றும் அழைத்துக் கொடுத்தே அவிநாசி [வார்
எந்தை பெருமான் கழல்பணிவேன்" என்றார் சென்றார் இடர்களை
—பெ. வெ. 9.

இவ்வாறு அருளிச்செய்து, அங்குநின்றும் மடுவின் கரையை அடைந்து,

## 92. திருப்புக்கொளியூர் அவிநாசி

### பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

எற்றான் மறக்கேன் எழுமைக்கும் எம்பெரு மானையே
உற்றாயென்(று) உன்னையே உள்குகின்றேனுணர்ந் துள்ளத்தால்
புற்றா டரவா புக்கொளி யூரவி நாசியே
பற்றாக வாழ்வேன் பசுபதி யேபர மேட்டியே. க

வழிபோவார் தம்மோடும் வந்துடன் கூடிய மாமணிநீ
ஒழிவ தழகோசொல் லாயரு ளோங்கு சடையானே
பொழிலாருஞ் சோலைப் புக்கொளி யூரிற் குளத்திடை
இழியாக் குளித்த மாணி எ(ன்)னைக்கிறி செய்ததே. உ

எங்கேனும் போகினும் எம்பெரு மானை நினைந்தக்கால்
கொங்கே புகினுங் கூறைகொண் டாறலைப் பாரிலை
பொங்(கு) ஆடரவா புக்கொளி யூரவி நாசியே
எங்கோ னேயுனை வேண்டிக்கொள் வேன்பிற வாமையே. ங

---

(க) 1,2-வது வரி. எழு பிறப்பிலும் எம்பிரானாகிய நீயே எனக்கு உறவினன் என்று மனதினால் உணர்ந்து, உன்னையே எப்போதும் நினைத்துக்கொண்டிருக்கின்றேன். எற்றான் (எவ்விதத்தால்) நான் உன்னை மறப்பேன். புக்கொளியூர் அவிநாசியே - திருப்புக்கொளியூர் அவிநாசி என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமானே. (உ) 1-2வது வரி. வழிச்செல்வாருடன்கூடித் துணையாய்ப்போகும்படியான மாமணி நீ (பெரிய மாணிக்கம்போன்றவனாகிய நீ) நடுவில் விட்டுச் செல்வது அழகாகுமோ சொல்வாய். அருளைக் குறிக்கும்படியான சடையை உடையவனே. 4-வது வரி. இறங்கிக் குளித்த பிரமசாரியாகிய சிறுவன், கிறிசெய்தது எ(ன்)னை (குற்றம் செய்தது என்ன). (ங.) 2-வது வரி. கொங்குநாட்டிற் சென்றாலும், ஆடையைக் கவர்ந்து வழிபறிப்பார் இல்லை. பொங்கு - கோபிக்கின்ற, சீறுகின்ற. ஆடு - படமெடுத்து ஆடுகின்ற.

உரைப்பா ருரையுகந் துள்கவல் லார்தங்க ளுச்சியாய்
அரைக்கா டரவா ஆதியும் அந்தமு மாயினாய்
புரைக்காடு சோலைப் புக்கொளி யூரவி நாசியே
கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே. ௪

அரங்காவ தெல்லாம் ஆயிடு காடது அன்றியும்
சரங்கோலை வாங்கி வரிசிலை நாணியிற் சந்தித்துப்
புரங்கெட எய்தாய் புக்கொளி யூரவி நாசியே
குரங்காடு சோலைக் கோயில் கொண்ட குழைக் காதனே. ௫

நாத்தா னுமுனைப் பாடலன் றிநவி லாதேனாச்
சோத்தென்று தேவர் தொழுநின்ற சுந்தரச் சோதியாய்
பூத்தாழ் சடையாய் புக்கொளி யூரவி நாசியே
கூத்தா உனக்குநான் ஆட்பட்ட குற்றமுங் குற்றமே. ௬

மந்தி கடுவனுக் குணப்பழம் நாடி மலைப்புறஞ்
சந்திகள் தோறுஞ் சலபுட்ப மிட்டு வழிபடப்
புந்தி யுறைவாய் புக்கொளி யூரவி நாசியே
நந்தி யுனைவேண்டிக் கொள்வேன் நரகம் புகாமையே. ௭

---

(௪) 1-வது வரி. உன்னைப் புகழ்ந்து சொல்லுபவர்களது சொல்லை மகிழ்ந்து நினைப்பவர்களுடைய சிரத்தின்மேல் உள்ளவனே. அரைக்கு ஆடு அரவா - அரையிற் கட்டியுள்ள ஆடும் பாம்பை உடையவனே. 3-வது வரி. பெரிய சோலைகள் சூழ்ந்த திருப்புக்கொளியூர் அவிநாசியில் வீற்றிருக்கும் சிவபெருமானே. கரைக்கான்-கரையின் பக்கமாக. முதலையைப் பிள்ளைதரச் சொல்லு காலனையே - காலனை முதலை உண்ட பிள்ளையைத் தரச் சொல்லு. (௫) 1-வது வரி. உனக்கு நடனசாலையாய் இருப்பது எல்லா இடங்களிலும் தேர்ந்து எடுக்கப் பட்ட சுடுகாடு. 2-வது வரி. சரங்கோலை (அம்பை)க் கையில் எடுத்து, கட்டு அமைந்த வில்லின் நாணியிற் பூட்டி. (௬) 1, 2-வது வரி. நாவானது உன்னைப் பாடுதல் அல்லாமல் வேறு ஒன்றையும் சொல்லாது என்று சொல்லித் தேவர்கள் அஞ்சலிசெய்து தொழுநின்ற அழகிய ஒளி வடிவினனே. (௭) 1, 2-வது வரி. பெண் குரங்கு ஆண் குரங்கிற்கு உண்பதற்காகப் பழங்களைத் தேடிச்சென்று, மலைப்புறங்களில் சந்தியா காலங்களில் நாள்தோறும் நீரையும் மலரையும் கொண்டு வழிபட, அவற்றின் மனத்தில் வாழ்பவனே. நந்தி - சிவபெருமானுக்கு ஒரு பெயர்.

பேணு தொழிந்தே னுன்னை யல்லாற்பிற தேவரைக்
காணு தொழிந்தேன் காட்டுதி யேலின்னம் காண்பன்நான்
பூணு ணரவா புக்கொளி யூரவி நாசியே
காணுத கண்கள் காட்டவல் லகறைக் கண்டனே. அ

நள்ளா று தெள்ளா(று) அரத்துறை வாயெங்கள் நம்பனே
வெள்ளாடை வேண்டாய் வேங்கையின் தோலை விரும்பினாய்
புள்ளே று சோலைப் புக்கொளி யூரிற் குளத்திடை
உள்ளாடப் புக்க மாணி யெ(ன்)னைக்கிறி செய்ததே. கூ

நீரேற வேறுநிமிர் புன்சடை நின்மல மூர்த்தியைப்
போர்ஏற(து) ஏறியைப் புக்கொளி யூரவி நாசியைக்
காரேறு கண்டனைத் தொண்டன் ஆரூரன் கருதிய
சீரேறு பாடல்கள் சேப்பவல் லார்க்கில்லை துன்பமே. கഠ

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகத்தில் "உரைப்பார் உரை" என்னும் நான்காவது திருப்பாட்டு முடியுமுன், பெருவாய் முதலை ஒன்று பிள்ளையைக் கரையில் கொண்டுவந்து உமிழ்ந்தது. பிள்ளையைக் கண்ட தாய், ஓடிவந்து அவனை எடுத்து, தன் கணவனுடன் ஆரூரர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினாள். பிறகு ஆரூரர் அப்பிள்ளையை அழைத்துக்கொண்டு அவிநாசி அரனாரைப் பணிந்து, அவனுக்கு உபநயனஞ் செய்வித்து மலைநாட்டை அடைந்தார். அப்போது அந்நாட்டு அடியார்கள் ஓடிவந்து "முதலை விழுங்கிய மைந்தனை மீட்டு நம்பிஆரூரர்

(அ) 2-வது வரி. நீ காட்டாதபோது நானும் காணுமல் ஒழிந்தேன்; நீ காட்டினால் நானும் இனிக் காண்பேன். "காட்டுவித்தால் ஆரொருவர் காணாதாரே காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே"—அப்பர் (ஆட்டுவித்). 4-வது வரி. காணும் தன்மையில்லாத கண்களைக் காணும்படி செய்யவல்ல விஷம் பொருந்திய கண்டத்தை உடையவனே. (கூ) 1-வது வரி. நள்ளாறு, தெள்ளாறு, அரத்துறை என்னும் தலங்களில் திருக்கோயில் கொண்டிருப்பவனே எங்கள் கடவுளே. வெள் ஆடை - வெண்மையான உடை. 4-வது வரி. குளத்திலுள் நீராடப் புகுந்த பிரமசாரி குற்றம் செய்தது என்ன.

வருகின்றார்" என்று சேரர்பெருமானுக்கு அறிவிக்க, அவர்களுக்குக் காசும் தூசும் கலந்தளித்து,

> செய்வ தொன்றும் அறியாது சிந்தை மகிழ்ந்து களிகூர்ந்(து)
> என், ஐயன் அணைந்தான் எனஆரும் அண்ணல் அணைந்தான்
> ஆரூரிற், சைவன் அணைந்தான் என்துணையாம் தலைவன் அணைந்
> தான் தரணிஎலாம், உய்ய அணைந்தான் அணைந்தான்"என்(று)
> ஓகைமுரசஞ் சாற்றுவித்தார்.—பே. வே. 17.

சேரர்பெருமான் நகரை அலங்கரித்து, எதிர்கொண்டு ஆரூரரைப் பணிய, ஆரூரரும் அவரைப் பணிந்து தழுவி, ஒருவர் ஒருவரிற் கலந்த தன்மையராய் இன்புற்றார்கள். பிறகு ஆரூரரை யானைமேல் ஏற்றித் தாம் பின்னே வெண்கொற்றக் குடை பிடித்துக்கொண்டு, சேனைகளும் அடியவர்களும் சூழ்ந்து வரவும், அந்தணர்கள் வேதம் ஓதவும், மகளிர் வீதியில் நடனம் புரியவும் அரண்மனைக்கு அழைத்துச் சென்றார். அங்கே சேரர்பிரான் ஆரூரரைச் சிங்காதனத்தின்மேல் அமர்த்திப் பலவித உபசாரங்கள் செய்து வணங்கினார். இவ்வாறு இருவரும் மகிழ்ந்து கொடுங்கோளூரில் உறைந்திருக்கும்போது வன்றொண்டர் மலைநாட்டிலுள்ள பல தலங்களைப் பணிந்து ஏத்தி மகோதைக்கு வந்து சேர்ந்தனர்.

## களிறேறிக் கயிலைசேல்லல்

ஆரூரர் ஒருநாள் திருவஞ்சைக்களத்துக் கோயிலுக்குச்சென்று வலம்வந்து பெருகிய அன்புடன் இறைவரைப் பணிந்து அலைப்புறும் மனைவாழ்க்கையை நீத்திடவேண்டி,

## 4. திரு அஞ்சைக்களம்

**பண் - இந்தளம்**

திருச்சிற்றம்பலம்

தலைக்குத் தலைமாலை அணிந்த தென்னே சடைமேற் கங்கை வெள்ளம் தரித்த தென்னே, அலைக்கும் புலித்தோல்

கொண் டசைத்த தென்னே அதன்மேற் கதநாகம் கச்சார்த்த தென்னே, மலைக்கு நிகரொப் பனவன் திரைகள் வலித்தெற் றிமுழங் கிவலம் புரிகொண் டலைக்குங் கடலங் கரைமேல் மகோதை அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. ௧

பிடித்தாட்டி யோர்நாகத் தைப்பூண்ட தென்னே பிறங் கும் சடைமேற் பிறைசூடிற் றென்னே, பொடித்தான்கொண் டுமெய்முற் றும்பூசிற் றென்னே புகர்ஏறு கந்(து)ஏறல் புரிந்த தென்னே, மடித்(து)ஓட்டந் துவன்திரை யெற்றியிட வளர் சங்கம் அங்காந்து முத்தஞ் சோரிய, அடித்தார் கடலங் கரை மேல் மகோதை அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே.

சிந்தித் தெழுவார்க்கு நெல்லிக் கனியே சிறியார் பெரி யார் மனத்(து)ஏற லுற்றால், முந்தித் தொழுவா ரிறவார் பிற வார் முனிகள் முனியே அமரர்க் கமரா, சந்தித் தடமால் வரைபோல் திரைகள் தணியா(து)இடறுங் கடலங் கரை மேல், அந்தித் தலைச்செக்கர் வானே யொத்தியா லணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. ௩

---

(௧) கதம் நாகம் - கோபத்தை உடைய நாகம். மலைக்கு நிகர் ஒப்பன வல் திரைகள் - மலைக்குச் சமானமாக உயரக் கிளம்பும் வலிய அலைகள். மகோதை அணியார் பொழில் அஞ்சைக்களத்து - மகோதை என்னும் திருநகரின்கண் அழகுமிக்க சோலைகளால் சூழப்பெற்ற திரு அஞ்சைக்களம் என்னும் திருக்கோயிலில் வீற்றிருக்கும். (௨) பொடி- திருநீறு. புகர் ஏறு - அழகிய இடபம். வன்திரை மடித்து ஓட்டந்து எற்றியிட - வலிய அலைகள் மடங்கி ஓடி மோத. அங்காந்து - வாய் திறந்து. அடித்து ஆர்கடல் அம் கரைமேல் - அடித்துக்கொண்டு வந்து சேர்கிற (சப்திக்கின்ற) கடலின் அழகிய கரைமேல். (௩) நெல் லிக்கனியே - சுவைக்குந்தோறும் இனிக்கும்படியான நெல்லிக்கனி போன்றவனே. "நெல்லிக் கனியைத் தேனைப் பாலை"—திருவாசகம். (அல்லிக்). சிறியார் பெரியார் மனத்து ஏறலுற்றால் முந்தித் தொழு வார் இறவார் பிறவார் - சிறியார் பெரியார் யாவராயினும் மனத்தின் கண் உன்னைத் தியானம்செய்து தொழ முந்துபவர்கள் இறப்பு பிறப்புக் களை நீக்குவார்கள். சந்தித் தடமால் வரை - மூங்கில்களையுடைய பெரிய மலை. சந்தி - மூங்கில்.

இழைக்கும் எழுத்துக் குயிரே யொத்தியால் இலையே யொத்தியா லுனையே யொத்தியால், குழைக்கும் பயிர்க்கோர் புயலே ஒத்தியால் அடியார் தமக்கோர் குடியே யொத்தியால், மழைக்கு நிகரொப் பனவன் திரைகள் வலித்தெற் றிமுழங் கிவலம் புரிகொண், டழைக்குங் கடலங் கரைமேல் மகோதை அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. ௪

வீடின் பயனென் பிறப்பின் பயனென் விடையே றுவ தென் மதயானை நிற்கக், கூடும் மலைமங்கை யொருத்தியுடன் சடைமேற் கங்கையாளை நீசூடிற் றென்னே, பாடும் புலவர்க் கருளும் பொருளென் நிதியம் பலசெய் தகலச் செலவில், ஆடுங் கடலங் கரைமேல் மகோதை அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. ௫

இரவத் திடுகாட் டெரிஆடிற் றென்னே இறந்தார் தலை யிற் பலிகோட லென்னே, பரவித் தொழுவார் பெறுபண்ட மென்னே பரமா பரமேட்டி பணித்தருளாய், உரவத் தொடு சங்க மோடிப்பி முத்தம் கொணர்ந்தெற்றி முழங்கி வலம்புரி கொண்(டு), அரவக் கடலங் கரைமேல் மகோதை அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. ௬

ஆக்கும் அழிவும் அமைவுந்நீ என்பன்நான் சொல்லு வார் சொற்பொரு ளவைநீ யென்பன்நான், நாக்கும் செவியும் கண்ணும்நீ என்பன்நான்நலனே இனிநா னுனைநன் குணர்ந் தேன், நோக்கும் நிதியம் பலவெத் தனையுங் கலத்திற் புகப்

(௪) 1-வது வரி. எழுதப்படும் சித்திரத்திற்கு உயிர்போன் றிருக்கின்றாய், மரத்திற்கு இலையை ஒத்திருக்கின்றாய். உனக்கு ஒப்பு வேறு எவரும் இல்லாதபடி உனக்கு நீயே சமானமாய் இருக் கின்றாய். 2-வது வரி. வாடும் பயிருக்கு ஒரு மேகத்தை ஒத்திருக் கின்றாய், அடியார்களுக்குப் புகலிடமாய் இருக்கின்றாய். (௫) நிதியம் பல செய்து - பல திரவியங்களைச் சேகரித்துக்கொண்டு. அகலச் செல வில் - விஸ்தாரமாகிய போக்கினால். (௬) இரவத்து - இராக்காலத் தில். உரவத்தொடு - வலிமையோடு. இப்பி - முத்துச்சிப்பி. அரவம் - சப்திக்கின்ற. (எ) ஆக்கும் - படைப்பும். அமைவும் - காத்தலும். கலம் - மரக்கலம். நோக்கும் - காணப்படும்.

பெய்து கொண்(டு)ஏற நூந்தி, ஆர்க்கும் கடலங் கரைமேல்
மகோதை அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. ௭

வெறுத்தேன் மனைவாழ்க் கையைவிட் டொழிந்தேன்
விளங்குங் குழைக் காதுடை வேதியனே, இறுத்தாய் இலங்
கைக் கிறையா யவனைத் தலைபத்தொடு தோள்பல இற்று
விழக், கறுத்தாய் கடல்நஞ் சமுதுண்டு கண்டம் கடுகப் பிர
மன் தலைஐந் திலுமொன், றறுத்தாய் கடலங் கரைமேல்
மகோதை அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. ௮

பிடிக்குக் களிறே யொத்தியா லெம்பிரான் பிரமற்கும்
பிரான்மற்றை மாற்கும்பிரான், நொடிக்கும் அளவிற் புரமூன்
றெரியச் சிலைதொட் டவனே உனைநான் மறவேன், வடிக்கின்
றனபோற் சிலவன் திரைகள் வலித்தெற்றி முழங்கி வலம்
புரிகொண், டடிக்குங் கடலங் கரைமேல் மகோதை அணியார்
பொழிலஞ் சைக்களத் தப்பனே. ௯

எந்தம் அடிகளிமையோர் பெருமா னெனக்கென் றும்
அளிக் கும்மணி மிடற்றன், அந்தண் கடலங் கரைமேல்
மகோதை அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனை, மந்தம்
முழவுங் குழலும் இயம்பும் வளர்நாவ லர்கோன் நம்பியூ ரன்
சொன்ன, சந்தம் மிகுதண் தமிழ்மாலை கள்கொண் டடிவீழ
வல்லார் தமோற் றிலரே. ௧0

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகத்தைப் பாசத்தாற் கட்டப்பட்ட இவ்வுலக வாழ்க்கையை அறுத்திடவேண்டும் என்னும் உட்குறிப்புத்தோன்ற அருளிச்

---

(௭) ஏற நூந்தி - ஏறும்படித் தள்ளி. (௮) இறுத்தாய் - நசுக்கினாய். இற்று விழ - முரிந்து விழும்படி. கடுக - விரைவாக. (௯) பிடி - பெண் யானை. களிறு - ஆண் யானை. வடிக்கின்றனபோல் - (கரையின் மீது மோதிக் கரைத்து) மட்டமாக்கிவிடுவதுபோல். (௧0) அளிக்கும் - அருள் செய்கின்ற. மணி - நீலமணி. மந்தம் முழவும் - மந்தமான ஓசையையுடைய மத்தளமும். இயம்பும் - ஒலிக்கின்ற. சந்தம் - அழகு. தடுமாற்று - கலக்கம்.

செய்ய, அப்போது கயிலையில் கணநாதர்கள் சூழப் பார்வதிதேவியா ரொடு வீற்றிருந்த சிவபெருமான் பிரமன் முதலிய தேவர்களை நோக்கி "ஒன்றிய சிந்தையையுடைய ஆரூரனை வெள்ளையானையின் மேல் ஏற்றி அழைத்துவாருங்கள்" என்று அருள் செய்தார். உடனே அந்தத் தேவர்கள் இறைவனைப் பணிந்து, வெள்ளையானையோடு திரு வஞ்சைக்களக் கோயிலை அடைந்து, திருநாவலூரரை எதிர்கொண்டு இறைவன் கட்டளையைத் தெரிவித்தார்கள். அதுகேட்ட ஆரூரர் மகிழ்ந்து சிவபெருமானை வணங்கி, தம் பெருந்துணைவரான சேர மானை மனத்தினில் நினைந்து வெள்ளையானையின் மீது ஏறினார். சேரர்பிரானும் தம் தோழர் செயலை அறிந்து, உடனே அருகிலிருந்த ஒரு குதிரையின் மேல் ஏறிக்கொண்டு திருவஞ்சைக்களம் சேர்ந்து யானையின்மீது ஆகாயமார்க்கமாய்ச் செல்லும் வன்றொண்டரைப் பார்த்தார். சேரர்பிரான் குதிரையின் செவியில் சிவமந்திரமாகிய பஞ்சாட்சரத்தைச் சொல்ல, உடனே அது ஆகாயத்திற் பாய்ந்து வன்றொண்டர் யானையைக் கிட்டி, அதனை வலம் செய்து, அதன் முன்னே சென்றது. யானைமேற் சென்ற வன்றொண்டர்,

## 100. திருநொடித்தான்மலை

### (திருக்கைலாய மலை)

**பண் - பஞ்சமம்**

*தி ரு ச் சி ற் ற ம் ப ல ம்*

தானெனை முன்படைத்தா னதறிந்துதன் பொன்னடிக்கே
நானென பாடலந்தோ நாயினேனைப் பொருட்படுத்து
வானெனை வந்தெதிர்கொள்ள மத்தயானை யருள்புரிந்து
ஊனுயிர் வேறுசெய்தான் நொடித்தான்மலை யுத்தமனே. க

(க) தான் எனை......அந்தோ - சிவபெருமான் (என்னைக் கட்டியிருக்கும் பாசங்களின் நின்றும் விடுவிக்கும்பொருட்டு) முன்னே எனக்குத் தநுகரணங்களைக் கூட்டுவித்தான். அதை நான் தெரிந்து கொண்டு, ஐயோ! உன்னை எவ்வாறு பாடித் துதிப்பேன். ஊன் உயிர் வேறு செய்தான் - ஊனின் தன்மையும் உயிரின் தன்மையும் வேறாகச் செய்தான். நொடித்தான்மலை - கயிலைமலை.

ஆனை யுரித்தபகை யடியேனொடு மீளக்கொலோ
ஊனை யுயிர்வெருட்டி யொள்ளியானை நினைந்திருந்தேன்
வானை மதித்(து) அமரர் வலஞ்செய்தெனை ஏறவைக்க
ஆனை யருள்புரிந்தான் நொடித்தான்மலை யுத்தமனே. ௨

மந்திர மொன்றறியேன் மனைவாழ்க்கை மகிழ்ந்தடியேன்
சுந்தர வேடங்களால் துரிசேசெயுந் தொண்டனேனை
அந்தர மால்விசும்பில் அழகானை யருள்புரிந்த
துந்தர மோநெஞ்சமே நொடித்தான்மலை யுத்தமனே. ௩

வாழ்வை உகந்தநெஞ்சே மடவார்தங்கள் வல்வினைப்பட்(டு)
ஆழ முகந்தஎன்னை யதுமாற்றி அமரரெல்லாம்
சூழ அருள்புரிந்து தொண்ட னேன்பர மல்லதொரு
வேழ மருள்புரிந்தான் நொடித்தான்மலை யுத்தமனே. ௪

மண்ணுல கிற்பிறந்து நும்மை வாழ்த்தும் வழியடியார்[தேன்
பொன்னுல கம்பெறுதல் தொண்டனேன் இன்றுகண்டொழிந்
விண்ணுல கத்தவர்கள் விரும்பவெள்ளை யானையின்மேல்
என்னுடல் காட்டுவித்தான் நொடித்தான்மலை யுத்தமனே. ௫

அஞ்சினை ஒன்றிநின்று அலர்கொண்டடி சேர்வறியா
வஞ்சனை என்மனமே வைகிவானநன் னுடர்முன்னே

---

(௨) 1, 3-வது வரி. யானையை உரித்த பகை அடியேனொடு முடிவடையும்படிதானோ தேவலோகத்தை மதித்த தேவர்கள் என்னை வலம்வந்து நான் ஏறும்படி யானை ஒன்றைச் சிவபெருமான் அனுப்பி வைத்தார். 2-வது வரி. சரீரத்தினுள்ளே சுவாசத்தை அடக்கி உள்ளொளியாய் விளங்கும் சிவபெருமானைத் தியானித்துக்கொண்டிருந்தேன், “ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர், ஞான விளக்கினை ஏற்றிநன் புலத்து, ஏனைவழி திறந்து ஏத்துவார்க் கிடரானகெடுப்பன அஞ்செழுத்துமே”—சம்பந்தர். (௩) 2-வது வரி. அழகிய வேடங்களுடன் குற்றங்களையே செய்யும்படியான தொண்டனாகிய என்னை. 4-வது வரி. நொடித்தான்மலை உத்தமன் அருள்புரிந்தது நெஞ்சமே, உன்தரமோ (உனக்குத் தகுதியோ). (௪) வாழ்வு - உலகபோகம். ஆழமுகந்த - அழுந்தித் துன்பங்களில் உழன்ற. பரம் - தகுதி. (௬) அஞ்சினை ஒன்றி நின்று - பஞ்சேந்திரியங்களும் ஒற்றுமைப்பட்டுநின்று அல்லது பஞ்சாக்கரம் செபித்தலில் மனம் ஒருமுகப்பட்டு நின்று.

துஞ்சுதல் மாற்றுவித்துத் தொண்டனேன்பர மல்லதொரு
வெஞ்சின ஆனைதந்தான் நொடித்தான்மலை யுத்தமனே. ௬

நிலைகெட விண்அதிர நிலமெங்கும் அதிர்ந்தசைய
மலையிடை யானையேறி வழியேவரு வேனெதிரே
அலைகட லாலரையன் அலர்கொண்டுமுன் வந்திறைஞ்ச
உலையணை யாதவண்ணம் நொடித்தான்மலை யுத்தமனே. ௭

அரவொலி ஆகமங்கள் அறிவாரறி தோத்திரங்கள்
விரவிய வேதவொலி விண்ணெலாம்வந் தெதிர்ந்திசைப்ப
வரமலி வாணன்வந்து வழிதந்தெனக் கேறுவதோர்
சிரமலி யானைதந்தான் நொடித்தான்மலை யுத்தமனே. ௮

இந்திரன் மால்பிரமன் எழிலார்மிகு தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ளஎன்னை மத்தயானை யருள்புரிந்து
மந்திர மாமுனிவ ரிவனாரென எம்பெருமான்
நந்தமர் ஊரனென்றான் நொடித்தான்மலை யுத்தமனே. ௯

ஊழிதோ றூழிமுற்றும் உயர்பொன்நொடித் தான்மலையைச்
சூழிசை யின்கரும்பின் சுவைநாவல வூரன்சொன்ன
ஏழிசை யின்தமிழால் இசைந்தேத்திய பத்தினையும்
ஆழி கடலரையா அஞ்சையப்பர்க் கறிவிப்பதே. ௧0

திருச்சிற்றம்பலம்

என்னும் திருப்பதிகம் பாடிக் கயிலைமலையின் தென்திருவாயிலை

(௬) துஞ்சுதல் மாற்றுவித்து - இறப்பை ஒழித்து. (௭) நிலை கெட - நிலைமாறி. மலை இடை - மலை தோற்கும்படியான. அலைகட லால் அரையன் - சமுத்திர ராஜன், வருணன். உலையணையாதவண் ணம் - கேடு அடையாதபடி (அருள்செய்தான்). (௮) அரவொலி - அர கர என்னும் ஒலி. விண் எலாம் வந்து எதிர்ந்து இசைப்ப - விண் ணுலகத்தவரெல்லாம் எதிர் கொண்டுவந்து பாட, அல்லது ஆகாயத்தி னிடத்து எதிரொலி உண்டாகும்படி முழங்க. வரம்மலி வாணன் - வரங்களை மிகுதியாய்க் கொடுப்பவன். வழிதந்து - திருவருள் நெறி யைக் காட்டி. சிரம்மலி - தலைமை பெற்ற. (௯) நம் தமர் ஊரன் - நம் உறவினனாகிய ஆரூரன். (௧0) சூழ் இசையின் - புகழோடு கூடிய. ஏழ் இசை இன் தமிழால் - ஏழிசையோடு கூடிய இனிய தமிழினால். இசைந்து - விருப்பத்தோடு. அஞ்சை அப்பர்க்கு - திருவஞ்சைக்களத் துக் கோயில்கொண்ட சிவபெருமானுக்கு.

அடைந்தார். அங்கே சேரர்பிரானும் ஆரூரரும் ஒருங்கு சேர்ந்து பல வாயில்களையும் கடந்து சென்று திருஅணுக்கன் திருவாயிலை அடைந் தனர். அவ்வாயிலில் சேரர்கோன் தடையுண்டு நிற்கத் திருநாவ லூரார் மாத்திரம் இறைவன் திருவருளால் அண்ணலார் திருமுன்பு சென்றார்.

> சென்று கண்ணுதல் திருமுன்பு தாழ்ந்துவீழ்ந் தெழுந்துசே ணிடைவிட்ட, கன்று கோவினைக் கண்டணைந் ததெனக் காத லின் விரைந்தெய்தி, நின்று போற்றிய தனிப்பெருந் தொண் டரை நேரிழை வலப்பாகத்(து), ஒன்றும் மேனியர் "ஊரனே வந்தனை" என்றனர் உலகுய்ய.

> "அடியனேன்பிழை பொறுத்தெனை ஆண்டுகொண்(டு) அத் [1]தொடக் கினைநீக்கி, முடிவி லாநெறி தரும்பெருங் கருணைஎன் தரத்ததோ" எனமுன்னர்ப், படியும் நெஞ்சொடு பன்முறை பணிந்தெழும் பரம்பரை ஆனந்த, வடிவு நின்றது போன்றின்ப வெள்ளத்து மலர்ந்தனர் வன்தொண்டர்.—பெ. வெ. 42, 43.

இவ்வாறு பேரின்ப வெள்ளத்துள் அழுந்திய வன்தொண்டர் சிவபெருமானை நோக்கி "நீரணி வேணிய! நின் மலர்க்கழல் சாரும் பொருட்டு வந்து சேரர்கோன் தடைப்பட்டு வாயிலின்புறத்து நிற் கின்றார்" என்று விண்ணப்பிக்கச், சிவபெருமான் பெரியதேவரை விட்டு அவரை அழைத்துவரச் செய்தார். சேரர்பெருமானும் சிவ பிரானைக் கண்டு வணங்கி, மகிழ்வெய்திப் பேரன்பினுல் போற்றி நிற்கக், கயிலைநாயகர் புன்முறுவல்செய்து "நாம் உன்னை அழையாமல் இருக்க, நீ ஏன் வந்தாய்" என்றார். அப்போது சேரர்கோன் அஞ் சலி கூப்பி "அடியனேன் ஆரூரர் திருவடிகளைப் போற்றிக்கொண்டு கயிலைக்கு வந்தேன். தேவரீர் கருணைவெள்ளம் என்னைத் திருமுன்பு கொண்டுவந்து சேர்த்தது" என்று மொழிந்து, தாம் பாடிய ஞான உலாவைக்கேட்கும்படி விண்ணப்பம்செய்து அதனையும் கேட்பித்தார். பிறகு நாரிபாகனார் சுந்தரரையும் அவர் தோழரையும் சிவகணங்களுக் குத் தலைவராய் இருக்கும்படித் திருஅருள் சுரந்தார். அவ்வாறே இருவரும் பணிந்தெழுந்து திருவருள் தலைமேற் கொண்டு வன்தொண் டர் ஆலாலசுந்தரராகித் தாம் முன்னைச் செய்துவந்த தொண்டை

[1]தொடக்கு - பாசம்.

வழுவாமல் செய்தும், சேரர்பெருமான் கணநாதராய் ஏற்ற தொண்டுகள் செய்தும் பேரின்பம் நுகர்ந்திருந்தனர். மண்ணுலகினில் முன் அவதரித்த பரவையாரும் சங்கிலியாரும் கயிலையில் முறையே கமலினியாரும் அனிந்திதையாருமாகி உமாதேவியாருக்கு முன்பு போல் திருத்தொண்டு செய்யும் திருஅருட்பேறு பெற்றார்கள்.



அடியிற்கண்ட 3 திருப்பதிகங்களும் சுவாமிகள் எந்த சந்தர்ப்பத்தில் பாடினார் என்ற விபரம் கிடைக்காதபடியால் கடைசியாக அச்சிடப்பட்டிருக்கின்றன.

## 12. திருநாட்டுத் தொகை

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

வீழக் காலனைக் கால்கொடு பாய்ந்த விலங்கலான்
கூழை ஏறுகந் தானிடங் கொண்டதுங் கோவலூர்
தாழை யூர்தக டூர்தக்க ளூர்தரு மபுரம்
வாழை காய்க்கும் வளர்மரு கல்நாட்டு மருகலே. க

அண்டத் தண்டத்தின் அப்புறத் தாடும் அமுதனூர்
தண்டந் தோட்டந்தண் டங்குறை தண்டலை ஆலங்காடு
கண்டல் முண்டல்கள் சூழ்கழிப் பாலை கடற்கரை
கொண்டல் நாட்டுக்கொண் டல்குறுக் கைநாட்டுக் குறுக்கையே.

மூல னூர்முத லாயமுக் கண்ணன் முதல்வனூர்
நால னூர்நரை யேறுகந் தேறிய நம்பனூர்
கோல நீற்றன்குற் றாலம் குரங்கணின் முட்டமும்
வேல னூர்வெற்றி யூர்வெண் ணிக் கூற்றத்து வெண்ணியே.

தேங்கூ ருந்திருச் சிற்றம்ப லமுஞ் சிராப்பள்ளி
பாங்கூ ரெங்கள் பிரானுறை யுங்கடம் பந்துறை

(க) பாய்ந்த - உதைத்த. விலங்கலான் - (கயிலை) மலையையுடையவன். கூழை - மந்தநடையையுடைய. மருகல் என்னும் தலத்திற்குத் தலவிருக்ஷம் வாழைமரம். மருகல் நாட்டு மருகலே - மருகல் நாட்டில் இருக்கும் திருமருகல் என்னும் தலம். (உ) அமுதன் - இன்பவடிவாய் இருப்பவன். கண்டல் - தாழை. முண்டல் - முட்செடி. (௩) மூலன் - மூலகாரணனாய் இருப்பவன். நாலன்-நான்குவேதங்களை அருளியவன்.

பூங்கூ ரும்பர மன்பரஞ் சோதி பயிலுமூர்
நாங்கூர் நாட்டுநாங் கூர்நறை யூர்நாட்டு நறையூரே. ௪

குழலை வென்ற மொழிமட வாளையோர் கூறனும்
மழலை யேற்று மணாள னிடம்தட மால்வரைக்
கிழவன் கீழை வழிப்பழை யாறு கிழையமும்
மிழலை நாட்டு மிழலைவெண் ணிநாட்டு மிழலையே. ௫

தென்னூர் கைம்மைத் திருச்சுழி யல்திருக் கானப்பேர்
பன்னூர் புக்குறை யும்பர மர்க்கிடம் பாய்நலம்
என்னூ ரெங்கள் பிரானுறை யுந்திருத் தேவனூர்
பொன்னூர் நாட்டுப்பொன் னூர்புரி சைநாட்டுப் புரிசையே.

ஈழ நாட்டுமாந் தோட்டம்தென் னாட்டிரா மேச்சுரம்
சோழ நாட்டுத் துருத்திநெய்த் தானம் திருமலை
ஆழி யூரன நாட்டுக்கெல் லாமணி யாகிய
கீழை யில்லர னார்க்கிடங் கிள்ளி குடியதே. ௭

நாளு நன்னிலம் தென்பனை யூர்வட கஞ்சனூர்
நீள நீள்சடை யான்நெல்லிக் காவு நெடுங்களம்
காள கண்ட னுறையுங் கடைமுடி கண்டியூர்
வேளார் நாட்டுவே ளூர்விளத் தூர்நாட்டு விளத்தூரே. ௮

தழலு மேனியன் தையலோர் பாகம் அமர்ந்தவன்
தொழலுந் தொல்வினை தீர்க்கின்ற சோதிசோற் றுத்துறை
கழலுங் கோவை யுடையவன் காதலிக் கும்மிடம்
பழனம் பாம்பணி பாம்புரந் தஞ்சைதஞ் சாக்கையே. ௯

மைகொள் கண்டனெண் தோளன்முக் கண்ணன் வலஞ்சுழி
பைகொள் வாளர வாட்டித் திரியும் பரமனூர்
செய்யில் வாளைகள் பாய்ந்(து) உகளுந்திருப் புன்கூர்நன்
றையன் மேயபொ ழிலணி யாவடு துறையதே. ௧0

---

(௫) மழலை ஏற்று மணாளன் - இள எருதினைஉடைய மணவாளன். தடம் மால்வரைக் கிழவன் - பெரிய கயிலைமலைக்கு உரியவன். (௬) கைம்மை - அழகிய. பன் ஊர் - (பெருமையோடு) சொல்லப்படும் ஊர். (௭) ஆழி ஊரன நாடு - கடலினால் சூழப்பட்டுள்ள பூமிக்கு. (௯) தழலும் மேனியன் - நெருப்பைப் போன்ற திருமேனி உடையவன். கழலும் கோவை - வீரக்கழலும், மணிவடமும்.

பேணி நாடத னிற்றிரி யும்பெரு மான்றனை
ஆணை யாமடி யார்கள் தொழப்படும் ஆதியை
நாணி யூரன் வனப்பகை யப்பன்வன் தொண்டன்சொல்
பாணி யாலிவை யேத்துவார் சேர்பர லோகமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## 31. திரு இடையாற்றுத்தொகை

### பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

முந்தையூர் முதுகுன்றம் குரங்கணில் முட்டம்
சிந்தையூர் நன்றுசென் றடைவான் திருவாரூர்
பந்தையூர் பழையாறு பழனம் பைஞ்ஞீலி
எந்தையூ ரெய்தமான் இடையா றிடைமருதே. ௧

சுற்றுமூர் சுழியல்திருச் சோபுரந் தொண்டர்
ஒற்றுமூ ரொற்றியூர் திருவூற லொழியாப்
பெற்றமேறி பெண்பாதி யிடம்பெண்ணைத் தெண்ணீர்
எற்றுமூ ரெய்தமான் இடையா றிடைமருதே. ௨

---

(௧௧) ஆணையாம் - சத்தியத்தை மேற்கொண்டு ஒழுகும். பாணியால் - இசையுடன்.

(௧) சிந்தைஊர் நன்றுசென்று அடைவான்-(அன்பர்களுடைய) மனமாகிய ஊரில் மகிழ்வுடன் சென்று சேர்ந்திருப்பவன். எய்தமான் (எய்து அம்மான்) எந்தை ஊர் இடையாறு இடைமருதே - இவைகளை எய்தி இருக்கும் அம்மானாகிய எமது தந்தை வீற்றிருக்கும் இடமானது திரு இடையாறு என்னும் தலத்தில் உள்ள இடைமருது என்னும் திருக்கோயில் ஆகும். இடைமருது என்பது திரு இடையாற்றில் இருக்கும் திருக்கோயிலுக்குப் பெயர். திருவெண்ணெய்நல்லூர் திருக்கோயிலுக்குப் பெயர் 'திருஅருட்டுறை'போல. கல்வெட்டு ஒன்றில் திருஇடையாற்றுத் திருக்கோயிலுக்கு 'திருமருதந்துறை' என்னும் பெயர் காணப்படுகிறது. (௨) 3, 4-வது வரி. இடபத்தை ஊர்பவரும் உமாதேவியாரை ஒருபாகத்தில் கொண்டவருமான சிவபெருமான் வீற்றிருக்கும் இடமானது பெண்ணை ஆற்றின் தெளிந்த நீரால் மோதப்படுகிற ஊராகிய எம்பெருமான் எய்தியிருக்கும்படியான திரு இடையாற்றில் உள்ள இடைமருது ஆகும்.

கடங்களூர் திருக்காரிக் கரைகயி லாயம்
விடங்களூர் திருவெண்ணி அண்ணாமலை வெய்ய
படங்களூர் கின்றபாம் பரையான் பரஞ்சோதி
இடங்கொள்ளூர் எய்தமான் இடையா றிடைமருதே. ௩

கச்சையூர் காவங் கழுக்குன்றங் காரோணம்
பிச்சையூர் திரிவான் கடவூர் வடபேறூர்
கச்சியூர் கச்சி சிக்கல்நெய்த் தான(ம்)மிழலை
இச்சையூ ரெய்தமான் இடையா றிடைமருதே. ௪

நிறையனூர் நின்றியூர் கொடுங்குன்றம் அமர்ந்த
பிறையனூர் பெருமூர் பெரும்பற்றப் புலியூர்
மறையனூர் மறைக்காடு வலஞ்சுழி வாய்த்த
இறைவனூ ரெய்தமான் இடையா றிடைமருதே. ௫

திங்களூர் திருவாதிரை யான்பட் டினமூர்
நங்களூர் நறையூர் நனிநாலிசை நாலூர்
தங்களூர் தமிழா னென்றுபா விக்கவல்ல
எங்களூ ரெய்தமான் இடையா றிடைமருதே. ௬

கருக்கநஞ் சமுதுண்ட கல்லாலன் கொல்லேற்றன்
தருக்(கு)அருக் கனைச்செற் றுகந்தான்தன் முடிமேல்
எருக்கநாண் மலரிண்டை ய(ம்)மத்த முஞ்சூடி
இருக்குமூ ரெய்தமான் இடையா றிடைமருதே. ௭

தேசனூர் வினைதேய நின்றான் திருஆக்கூர்
பாசனூர் பரமேட்டி பவித்திர பாவ
நாசனூர் நனிபள்ளி நள்ளாற்றை யமர்ந்த
ஈசனூ ரெய்தமான் இடையா றிடைமருதே. ௮

(௩) வெய்ய...........பாம்பரையான் - கொடிய படங்களை உடைய ஊர்கின்ற பாம்பை அரையில் தரித்தவன். (௭) கருக்க - கண்டம் கருமையாகும்படி. கல்லாலன் - கல்லாலின் கீழிருப்பவன். கொல் ஏற்றன் - கொல்லும்படியான இடபத்தை உடையவன். தருக்கு அருக்கனை - செருக்கோடு கூடிய சூரியனை. (௮) தேசன் - ஒளி உருவானவன். வினைதேய நின்றான் - தொழுவார்களுடைய வினைகள் கெட்டொழியத் திருக்கோயில்கொண்டு எழுந்தருளியுள்ளவனுடைய. பவித்திர பாவநாசன் ஊர் - பரிசுத்தமானவனும் பாவங்களை நாசம் செய்பவனும் ஆன சிவபெருமானூர்.

பேறனூர் பிறைச்சென் னியினன் பெருவேளூர்
தேறனூர் திருமா மகள்கோன் திருமாலோர்
கூறனூர் குரங்காடு துறைதிருக் கோவல்
ஏறனூ ரெய்தமான் இடையா றிடைமருதே. ௯

ஊறிவா யினநாடிய வன்றொண்ட னூரன்
தேறுவார் சிந்தைதே றுமிடம்செங் கண்வெள்ளே(று)
ஏறுவா ரெய்தமான் இடையா றிடைமருதைக்
கூறுவார் வினையெவ் விடமேய் குளிர்வாரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## 47. ஊர்த்தொகை

### பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

காட்டூர்க் கடலே கடம்பூர் மலையே கானப் பேரூராய்
கோட்டூர்க் கொழுந்தே யழுந்தூ ரரசே கொழுநற் கொல்லே
பாட்டூர் பலரும் பரவப் படுவாய் பனங்காட் டூரானே [றே
மாட்டூ ரறவா மறவா துன்னைப் பாடப் பணியாயே. ௧

(௧௦) தேறுவார் சிந்தை தேறுமிடம் செங்கண் வெள்ளேறு ஏறுவார் எய்து அம்மான் இடையாறு இடைமருதை ஊறிவாயின நாடிய வன்றொண்டன் ஊரன் (கூறிய பாடல்களைக்) கூறுவார் வினை எவ்விட மெய்குளிர்வாரே—உரைநடை. தெளிவடைய விரும்பி வருவார்களுடைய சித்தம் தெளிவடையும்படியான இடமாகிய, செங்கண் வெள்ளேற்றின்மேல் ஏறுபவரும் இடையாறு இடைமருதில் வீற்றிருப்பவருமான, சிவபெருமானைத் தியானிப்பதால் அமுதம் சுவைப்பதுபோல் இனிக்கும்படியான வாயுடன் விருப்பத்தோடு வன்றொண்டன் ஊரன் பாடிய பாடல்களைக் கூறுவார் வினை தேய்ந்தொழிய உடல் முழுவதும் குளிர்வார்கள். "நாவில் ஊறும் நள்ளாறனை அமுதை, நாயினேன் மறந்து என்நினைக் கேனே"—சுந்தரர். (பூவில் வாசத்தை).

(௧) கடலே - கருணைக் கடலே. மலையே - குணக்குன்றே. கொழுந்தே-கொழுந்தீசரே. பாட்டூர் - பாட்டுகளினுற் புகழ்ந்துபேசப் படும் ஊர். மாட்டூர் அறவா - இடபத்தை ஊர்கின்ற தருமசொரூபரே.

கொங்கிற் குறும்பிற் குரக்குத் தளியாய் குழகா குற்றாலா
மங்குல் திரிவாய் வானோர் தலைவா வாய்மூர் மணவாளா
சங்கக் குழையார் செவியா அழகா அவியா அனலேந்திக்
கங்குல் புறங்காட் டாடீ அடியார் கவலை களையாயே. ௨

நிறைக்காட் டானே நெஞ்சத் தானே நின்றி யூரானே [னே
மிறைக்காட் டானே புனல்சேர் சடையாய்அனல்சேர் கையா
மறைக்காட் டானே திருமாந் துறையாய் மாகோ ணத்தானே
இறைக்காட் டாயே எங்கட் குன்னை எம்மான் தம்மானே. ௩

ஆரூ ரத்தா ஐயாற் றமுதே அளப்பூ ரம்மானே
காரூர் பொழில்கள் புடைசூழ் புறவில் கருகா வூரானே
பேரூ ருறைவாய் பட்டிப் பெருமான் பிறவா நெறியானே
பாரூர் பலரும் பரவப் படுவாய் பாரூ ரம்மானே. ௪

மருக லுறைவாய் மாகா ளத்தாய் மதியஞ் சடையானே
அருகற் பிணிநின் னடியார் மேல அகல அருளாயே
கருகற் குரலாய் வெண்ணிக் கரும்பே கானூர்க் கட்டியே
பருகப் பணியாய் அடியார்க் குன்னைப் பவளப் படியானே. ௫

தாங்கூர் பிணிநின் னடியார் மேல அகல அருளாயே
வேங்கூ ருறைவாய் விளமர் நகராய் விடையார் கொடியானே
நாங்கூ ருறைவாய் தேங்கூர் நகராய் நல்லூர் நம்பானே
பாங்கூர் பலிதேர் பரனே பரமா பழனப் பதியானே. ௬

---

(௨) மங்குல் - மேகம். கங்குல் - இரவு. (௩) மாகோணத்தானே - கோணமாமலையை யுடையவரே. இறைக் காட்டாயே - சிறிதேனும் காட்டியருள்வீராக. (௪) கார் ஊர் பொழில்கள் புடைசூழ் - மேகங்கள் தவழ்கின்ற சோலைகளால் சூழப்பெற்ற. பேரூர் உறைவாய் பட்டிப் பெருமான் - திருப்பேரூரில் உறைபவரான பட்டீச்சுரரே (காமதேனுவால் பூசிக்கப்பெற்றவரே). (௫) அருகற் பிணி - வருத்துகின்ற. கருகற்குரலாய் - கரிய கண்டத்தை உடையவரே. பருகப்பணியாய் - உன்னைப் பருகும்படி (ஆர அனுபவிக்கும்படி) கட்டளையிடுவீராக. பவளப் படியானே - பவளம்போல் சிவந்த திருமேனி உடையவரே. (௬) தாங்கு ஊர் பிணி - மேல் எழுகின்ற நோய். பாங்கு ஊர் பலி தேர் பரனே - அழகிய ஊர்களில் வீடுகள்தோறும் சென்று பிச்சை ஏற்கின்ற மேலானவனே.

தேனைக் காவல் கொண்டு விண்ட கொன்றைச் செழுந்தாராய்
வானைக் காவல் கொண்டு நின்றார் அறியா நெறியானே
ஆனைக் காவில் அரனே பரனே அண்ணா மலையானே
ஊனைக் காவல் கைவிட் டுன்னை யுகப்பா ருணர்வாரே. ௭

துருத்திச் சுடரே நெய்த்தா னத்தாய் சொல்லாய் கல்லாலா
பருத்தி நியமத்(து) உறைவாய் வெயிலாய்ப் பலவாய்க் காற்றாய்
திருத்தித் திருத்தி வந்தென் சிந்தை யிடங்கொள் கயிலாயா [னாய்
அருத்தித்(து) உன்னை அடைந்தார் வினைகள் அகல அருளாயே. ௮

புலியூர்ச் சிற்றம் பலத்தாய் புகலூர்ப் போதா மூதூரா
பொலிசேர் புரமூன் றெரியச் செற்ற புரிபுன் சடையானே
வலிசேர் அரக்கன் தடக்கை ஐஞ்ஞான்(கு) அடர்த்த மதிசூடி
கலிசேர் புறவிற் கடவூ ராளீ காண அருளாயே. ௯

கைம்மா வுரிவை யம்மான் காக்கும் பலவூர் கருத்துன்னி
மைம்மாந் தடங்கண் மதுரம் அன்ன மொழியாள் மடச்சிங்க
தம்மா னூரன் சடையன் சிறுவ னடியன் தமிழ்மாலை [டி
செம்மாந் திருந்து திருவாய் திறப்பார் சிவலோ கத்தாரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

(௭) தேனைக்காவல் கொண்டு விண்ட - தேனைத் தன்னிடத்தே பொதிந்து வைத்துக்கொண்டு மலர்ந்த. வானைக்காவல் கொண்டு நின்றார்-விண்ணுலகைக் காத்து வாழ்கின்ற தேவர்கள். நெறியானே-திருவருள்நெறியை உடையவரே. 4-வது வரி. ஊனால் ஆகிய சரீரத்தைக் காப்பதைக்கைவிட்டு உன்னை விரும்புபவர்கள் உன்னை உணரும் தன்மை உடையவராவார். (௮) சுடரே-சோதி வடிவினரே. பருதி நியமம், எதுகை நோக்கிப் பருத்தி நியமம் என்று திரிந்தது. 3-வது வரி. பலமுறையும் அறியாமையை நீக்கித் திருத்தம் செய்து, என் சித்தத்தை இடமாகக்கொண்ட கயிலாய மலையினரே. அருத்தித்து - உன்னிடம் அன்பு பூண்டு. (௯) போதா - ஞான உருவானவனே. கலிசேர் புறவில்-ஒலி சேர்ந்துள்ள முல்லை நிலத்தில் உள்ள. (௧௦) கைம்மா - யானை. காக்கும் - எழுந்தருளியுள்ள. கருத்து உன்னி - கருத்தில் வைத்து. மைம்மாந் தடம் கண் - மை தீட்டிய மாவடுப் பிளப்புபோன்றதும் விசாலமுமான கண். மதுரம் - தேன். தம்மான்-அபிமான பிதா. செம்மாந்திருந்து - இறுமாந்து, திருவருட்பேற்றிற்கு மகிழ்ந்து. "இறுமாந் திருப்பன்கொலோ ஈசன்பல்கணத்து எண்ணப்பட்டுச் சிறுமான் ஏந்தி தன்சேவடிக்கீழ்ச்சென்றங்கு இறுமாந்திருப்பன்கொலோ."—அப்பர்.

# பாட்டு முதற்குறிப்பகராதி

## (தேவாரம்)

## இதில் வந்துள்ள பேரியபுராணப் பாட்டு முதற்குறிப்பகராதி



குறிப்பு :—ஏ—ஏயர்கோன்கலிக்காம நாயனார் புராணம். க—கழறிற்றறிவார் நாயனார் புராணம். த—தடுத்தாட்கொண்ட புராணம். வெ—வெள்ளானைச் சருக்கம்.